# சங்ககால மக்கள் வாழ்வியலில் விலங்குகள்

அழகப்பா பல்கலைக்கழக முனைவர் (பிஎச்.டி.,) பட்டத்திற்காக

அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**இராம. தேவணன்**

பதிவு எண் : 983

நெறியாளர்

முனைவர் **சே. செந்தமிழ்ப்பாவை** எம்.ஏ., எம்.ஃபில்., பி.எட்., பிஎச்.டி.,

இணைப் பேராசிரியர்






தமிழ்த்துறை

**அழகப்பா பல்கலைக் கழகம்**

(தேசிய தர மதிப்பீட்டுக்குழுவால் ‘ஏ’ மதிப்புப் பெற்றது)

காரைக்குடி - 630 003


**பிப்ரவரி - 2008.**

முனைவர்.சே. செந்தமிழ்ப்பாவை, எம்.ஏ.,எம்.ஃ.பில்,பி.எட்.பி.எச்.டி.
இணைப்பேராசிரியர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி – 630003.

நாள் : 2.3.09

## நெறியாளர் சான்றிதழ்

“சங்ககால மக்கள் வாழ்வியலில் விலங்குகள்” என்னும் தலைப்பில் செல்வன்.இராம.தேவணன் அவர்கள் முனைவர் பட்டத்திற்காகச் (பிஎச்.டி) செய்த இந்த ஆய்வு அழகப்பா பல்கலைக் கழகத் தமிழ்த்துறையில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பட்டது என்றும், இந்த ஆய்விற்காக வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப்படவில்லை என்றும் உறுதி அளிக்கின்றேன்.

(சே.செந்தமிழ்ப்பாவை)
நெறியாளர்

துறைத்தலைவர்
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம
காரைக்குடி-630 003
2/3/2009

முனைவர் சே. செந்தமிழ்ப்பாவை
இணைப் பேராசிரியர்
தமிழ்த்துறை
அழகப்பா பல்கலைக்கழகம்
காரைக்குடி-630 003

இராம.தேவணன்,
முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி – 630003.

நாள் : 2.3.09

## ஆய்வாளர் உறுதிமொழி

"சங்ககால மக்கள் வாழ்வியலில் விலங்குகள்" என்னும் தலைப்பில் முனைவர் பட்டத்திற்காக (பிஎச்.டி) எழுதப்பெற்ற இவ்ஆய்வு எனது சொந்த முயற்சியால் உருவானது என்றும், இதற்குமுன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்ஆய்வேடு அளிக்கப்படவில்லை என்றும் உறுதி அளிக்கின்றேன்.

**(இராம. தேவணன்)**
**ஆய்வாளர்**

உறுதிக் கையொப்பம்

நெறியாளர்,
முனைவர்.சே. செந்தமிழ்ப்பாவை, எம்.ஏ.,எம்.ஃ.பில்,பி.எட்.பி.எச்.டி,
இணைப்பேராசிரியர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி – 630003.

# நன்றியுரை

"சங்ககால மக்கள் வாழ்வியலில் விலங்குகள்" என்னும் தலைப்பில் முனைவர்பட்டத்திற்கு ஆய்வு மேற்கொள்ள அனுமதி வழங்கிய அழகப்பா பல்கலைக் கழகத் துணைவேந்தர், ஆட்சிக்குழு உறுப்பினர்கள் ஆகியோருக்கு என் உளம் நிறைந்த நன்றியை உரித்தாக்கிகொள்கின்றேன்.

ஆய்வு நெறியாளராக இருந்து ஆய்வுத் தொடக்கம் முதல் இறுதி வரை எல்லா நிலைகளிலும் ஆய்வினை நெறிப்படுத்தி, இவ்வாய்வு சிறப்புற அமைய பல்லாற்றானும் உறுதுணை புரிந்த எனது நெறியாளராகிய முனைவர்.சே.செந்தமிழ்ப்பாவை அவர்கட்கு இதயங் கனிந்த நன்றியைக் காணிக்கையாக்குகின்றேன்.

ஆய்வு மேற்கொண்ட காலத்தில் ஆக்கமும், ஊக்கமும் தந்து உற்சாகப்படுத்திய பேராசிரியர் முனைவர். இரா.பாலசுப்பிரமணியன் (தேர்வாணையர், பாரதிதாசன் பல்கலைக்கழகம்) அவர்கட்கும் அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் மு.பாண்டி அவர்கட்கும், ஆசிரியப் பெருமக்கள் முனைவர்.சு.இராசாராம், முனைவர்.இரா.தாமோதரன் ஆகியோருக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

முனைவர்பட்டம் வரை எனைப் படிக்க வைத்த பெற்றோருக்கும், குடும்பத்தாருக்கும் என் நன்றி உரியது.

ஆய்வு செய்த காலத்தில் நிதியுதவி நல்கி தொய்வுற்றபொழுதெல்லாம் ஊக்கமளித்த அண்ணன் முனைவர்.வை.இராமராஜபாண்டியன்(விரிவுரையாளர், தமிழ்த்துறை, பெரியார்

பல்கலைக்கழகம்) மற்றும குடும்பத்தினர், திரு.காளைராஜன் (உதவிப்பதிவாளர், அழகப்பா பல்கலைக்கழகம்) மற்றும குடும்பத்தினர், மருத்துவர்.இராமநாதன் (நிருவாகி, ஓம்சக்தி கோவில், அழகாபுரி), சபரிநாத், கீதாஞ்சலி ஆகியோருக்கும் என் நன்றி உரியது. முனைவர்.க.சந்திரசேகரன் (விரிவுரையாளர், மேலாண்மைத்துறை, மத்திய தொழில்முறை ஆசிரியர் பயிற்சி மற்றும் ஆராய்ச்சிப் பல்கலைக்கழகம்), முனைவர்.ச.பிரேம்குமார் (இணைப்பேராசிரியர், மேலாண்மைத்துறை, விளையாட்டுப் பல்கலைக்கழகம்), வி.ரமேஷ்குமார் (விரிவுரையாளர், மேலாண்மைத்துறை, எஸ்.ஆர்.எம். பல்கலைக்கழகம்), டி.விஜயராஜ்குமார் (விரிவுரையாளர், மேலாண்மைத்துறை, மீனாட்சி பொறியியல் கல்லூரி), ஜி.நாகராஜன் (விரிவுரையாளர், மேலாண்மைத்துறை, அழகப்பா பல்கலைக்கழகம்), கே.மோகன்ராஜ் (இயக்குநர், விளையாட்டுத்துறை, எஸ்.எஸ்.வி. மேல்நிலைப்பள்ளி, கொடுமுடி), க.வெங்கடாசலம் (விரிவுரையாளர், வரலாற்றுத்துறை, கே.எஸ்.ஆர். ஆசிரியர் பயிற்சி நிறுவனம்), முனைவர்.பசு.செல்வமீனா (கௌரவ விரிவுரையாளர், அழகப்பா அரசுக் கலைக்கல்லூரி) மற்றும் குடும்பத்தினர், உ.இளஞ்செழியன் (தொலைபேசி நிருவாகி, அழகப்பா பல்கலைக்கழகம்) மற்றும் குடும்பத்தினர், வீ.ஆர்.பாண்டி (கிளை மேலாளர், சிட்டி யூனியன் வங்கி, புதுக்கோட்டை) மற்றும் குடும்பத்தினர், செந்தில்குமார் (கிளை மேலாளர், ஆயுள் காப்பீட்டுக் கழகம், வத்தலக்குண்டு) மற்றும் குடும்பத்தினர், முனைவர் பட்ட ஆய்வாளர் த.கண்ணன், இரா.தாமரைச்செல்வி ஆகிய அனைவருக்கும் எனது நெஞ்சார்நத நன்றியைத் தெரிவித்துக்

கொள்கிறேன். நணபர்கள் ரவிசங்கர்பாபு, பார்த்திபன், செந்தில்குமார், பாலு, பால்வண்ணன், கணேஷ்குமார, குணசீலன், மாணவர் விடுதி நண்பர்கள் ஆகிய அனைவருக்கும் என நன்றி உரியது.

ஆய்வின்பொழுது பல்வகையிலும் உதவிபுரிந்த அழகப்பா பலகலைக் கழக ஊழியர்கள் மற்றும் ஆய்வுக்கு வேண்டிய தரவுகளைச் சேகரிக்க உறுதுணைபுரிந்த அழகப்பா பல்கலைக்கழக மைய நூலகருக்கும், அலுவலகர்களுக்கும் உளம்கனிந்த நன்றி.

ஆய்வேட்டை நன்முறையில் கணிணியில் தட்டச்சுச் செய்த ஸ்ரீராம்நகர் பாஸ் கம்ப்யூட்டர் சென்டர் சி.சந்திரசேகரன் அவர்களுக்கும், சிறந்த முறையில் கட்டமைப்புச் செய்து கொடுத்த ரவி அச்சகத்தாருக்கும் நன்றி.

நன்றியுடன்,

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகநா. | - | அகநானூறு |
| இளம். | - | இளம்பூரணர் |
| உரை.ஆ. | - | உரை ஆசிரியர் |
| உ.வே.சா. | - | உ.வே.சாமிநாதையர் |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| கட். | - | கட்டுரை |
| கலித். | - | கலித்தொகை |
| குறிஞ்சிப். | - | குறிஞ்சிப்பாட்டு |
| குறுந். | - | குறுந்தொகை |
| சிலப். | - | சிலப்பதிகாரம் |
| சிறுபாண். | - | சிறுபாணாற்றுப்படை |
| தெ.உரை. | - | தெளிவுரை |
| தொ. | - | தொகுதி |
| தொல். | - | தொல்காப்பியம் |
| நம்பி. | - | நம்பியகப்பொருள் |
| நற். | - | நற்றிணை |
| நெடுநல். | - | நெடுநல்வாடை |
| நூற். | - | நூற்பா |
| ப. | - | பக்கம் |
| ப.ஆ. | - | பதிப்பு ஆசிரியர் |
| பக். | - | பக்கங்கள் |

| | | |
|---|---|---|
| பட்டினப் . | - | பட்டினப்பாலை |
| பதிற். | - | பதிற்றுப்பத்து |
| பரி. | - | பரிபாடல் |
| புறநா. | - | புறநானூறு |
| பெரும்பாண். | - | பெரும்பாணாற்றுப்படை |
| பொருந. | - | பொருநராற்றுப்படை |
| பொருள். | - | பொருளதிகாரம் |
| மதுரைக். | - | மதுரைக்காஞ்சி |
| மலைபடு. | - | மலைபடுகடாம் |
| முருகு. | - | திருமுருகாற்றுப்படை |
| முல்லைப் . | - | முல்லைப்பாட்டு |
| மு.வ. | - | மு.வரதராசன் |
| மேலது. | - | மேற்சுட்டிய நூல் |
| வெ.ஆ. | - | வெளியீட்டு ஆசிரியர் |
| p. | - | page |

# பொருளடக்கம்

# முன்னுரை

இலக்கியங்கள் அவ்வக்காலகட்டத்தில் வாழ்ந்த மக்களின் வாழ்க்கையை வெளிப்படுத்தும் கருவிகளாகும். சங்க இலக்கியம் சங்ககால மக்களின் வாழ்க்கையைப் பிரதிபலிக்கும் காலக்கண்ணாடியாகத் திகழ்கின்றது. சங்கத் தமிழர் இயற்கையோடு இரண்டறக் கலந்து வாழ்ந்தனர். திணை அடிப்படையில் வாழ்ந்த அம்மக்கள் அந்நிலத்தில் வாழும் உயிரினங்களைச் சார்ந்தே வாழ்ந்துள்ளனர். அவற்றில் அஃறிணை உயிரினமாகிய விலங்கும் ஒன்றாகும். சங்கத் தமிழர்தம் வாழ்க்கையின் அனைத்து நிலைகளிலும் விலங்குகள் முக்கியப் பங்கு பெற்றுள்ளன.

## ஆய்வுத்தலைப்பு

"சங்ககால மக்கள் வாழ்வியலில் விலங்குகள்" என்பது ஆய்வுத் தலைப்பாகும்.

## ஆய்வுநோக்கம்

சங்கப் புலவர்கள் தாம் வாழ்ந்த காலத்தில் கண்ணால் கண்ட, காதால் கேட்ட விலங்குகளைத் தத்தம் பாடல்களில் பதிவு செய்துள்ளனர். அவற்றில் விலங்குகளின் வாழ்க்கை முறை, மக்களின் வாழ்க்கை முறை, மக்கள் வாழ்க்கை நிகழ்ச்சியை விலங்குகளுக்கு ஏற்றிக் கூறுதல் என்பன போன்றவை மிகுந்து காணப்படுகின்றன. எனவே சங்க மக்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்ட விலங்குகளை ஆராய்வது சாலச்சிறந்தது. மேலும் இவ்விலங்குகள் அனைத்தையும் வகைப்படுத்தி செய்து, அவை

மக்கள்தம் உணவிலும், தொழிலிலும், பண்பாட்டிலும் பிற வாழ்வியல் நிலைகளிலும் பெற்ற இடத்தை விளக்குவது இவ்வாய்வின் நோக்கமாகும்.

**ஆய்வு முன்னோடிகள்**

சங்ககால விலங்குகள் பற்றிப் பற்பல நூல்களும், கட்டுரைகளும் வெளிவந்துள்ளன. அவற்றில் பி.எல்.சாமியின் "சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம்," இரா.வசந்தகுமாரின் "அறிவியல் கண்ணோட்டத்தில் சங்க இலக்கிய விலங்குகள்," அ.திருமலை முத்துச்சுவாமியின், "இலக்கியத்தில் விலங்குகளும் பறவைகளும்," செ.வேங்கடராமச் செட்டியாரின் "பழந்தமிழ் நூல்களில் உயிர்வகைகள்," மு.வரதராசனின் "பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை," சே.நமச்சிவாயத்தின் "தமிழர் உணவு," வி.சி.சசிவல்லியின் "பண்டைத் தமிழர் தொழில்கள்," இராம.பெரிய கருப்பனின் "பரிசில் வாழ்க்கை," எஸ்.எம்.நாயரின் "அழிவுக்கு இலக்காகி இருக்கும் இந்திய விலங்குகளும் அவற்றைப் பாதுகாக்கும் முறைகளும்" போன்ற நூல்கள் முன்னோடி ஆய்வுகளாகத் திகழ்கின்றன.

மேற்சுட்டிய ஆய்வுகள், ஒரு சில விலங்குகளின் தோற்றம், வகை, வாழும் சூழ்நிலை ஆகியவற்றை மட்டுமே விளக்குகின்றன. இவ்ஆய்வு சங்ககாலத்தில் வாழ்ந்த விலங்குகள் முழுவதையும் எடுத்தரைத்து, அவை மக்கள் வாழ்வியலில் பயனளித்தமை பற்றி விரிவாக விளக்குகின்றது.

ஆய்வு எல்லை

சங்க இலக்கியங்களாகிய எட்டுத்தொகையும், பத்துப்பாட்டும் இவ்வாய்விற்கு எல்லையாக அமைகின்றன.

**சான்றாதாரங்கள்**

எட்டுத்தொகையும், பத்துப்பாட்டுமாகிய சங்க இலக்கியங்கள் இவ்ஆய்விற்கு முதன்மைச் சான்றாதாரங்களாக(Primary Sources) அமைகின்றன. தொல்காப்பியம் முதலான இலக்கண நூல்களும், சங்க இலக்கியங்கள் தொடர்பாக வெளிவந்துள்ள திறனாய்வு நூல்கள், கருத்தரங்கக் கட்டுரைகள், ஆய்வேடுகள போன்றவையும், கலைக்களஞ்சியம், வாழ்வியற்களஞ்சியம், அகராதிகள், நிகண்டுகள், இதழ்கள், நாளேடுகள் போன்றவை துணைமைச் சான்றாதாரங்களாக (Secondary Sources) அமைகின்றன.

**ஆய்வு அணுகுமுறை**

சங்ககால விலங்குகளைத் தொகுத்தும், பகுத்தும் ஆய்வதால இவ்வாய்வில், பகுப்பாய்வு அணுகுமுறையும் (Analytical Method), விளக்கவியல் அணுகுமுறையும் (Discriptive Method), பயன்படுத்தப்பட்டுள்ளது. சங்க மக்களின் அனைத்து வாழ்வியல் கூறுகளிலும் விலங்குகள் இடம்பெற்றுள்ளதை ஆயும் நிலையில் சமுதாயவியல் அணுகுமுறை (Sociological Method) பின்பற்றப்பட்டுள்ளது. தொல்காப்பியர் கால விலங்குகள் சங்ககால விலங்குகளுடன் ஒப்பிட்டுக்

கூறப்பெறுவதால் ஒப்பியல் அணுகுமுறையும் (Comparative Method) கையாளப்பட்டுள்ளது.

**இயல் விளக்கங்கள்**

முதலாமியல், 'சங்ககால விலங்குகள் - விளக்கமும் வரையறையும்' என்பதாகும். இதில் சான்றாதாரங்களின் அடிப்படையில் 'விலங்கு' என்பதற்கு வரையறை கூறப்பட்டுள்ளது. தொல்காப்பியர்கால விலங்குகளும், சங்ககால விலங்குகளும் அகரவரிசைப்படுத்தி எடுத்துரைக்கப்பட்டுள்ளன. அவை, நிலவாழ் விலங்குகள், நீர்வாழ் விலங்குகள், நீர்நில வாழ்வன, பறக்கும் விலங்குகள் என வகைப்படுத்தப்பட்டுள்ளன. இவ்விலங்குகளின் தோற்ற அமைப்பு, வாழ்வியல் முறை, வகை போன்றவை உரையாசிரியர்கள், திறனாய்வாளர்கள், அகராதிகள், களஞ்சியங்கள் வழி விளக்கம் பெறுகின்றன.

இரண்டாமியல், 'சங்ககால மக்கள் உணவில் விலங்குகள்' என்பதாகும். இவ்வியலில் உணவு என்பதற்கு விளக்கம் கூறப்பட்டுள்ளது. சங்க இலக்கியத்தில் உணவு தொடர்பான சொல்லாட்சிகள் வகைப்படுத்தப்பட்டுள்ளன. விலங்குகளின்வழிக் கிடைத்த உணவுப் பொருட்களில் பால், தயிர், மோர், வெண்ணெய், நெய் முதன்மையாக விளக்கப்பட்டுள்ளன. இவற்றுடன் பிற உணவுப் பொருட்களும் கலந்து உண்டமை சுட்டப்பட்டுள்ளது. இறைச்சிக்காகப் பயன்படுத்தப்பட்ட விலங்குகள் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. அரசர் முதல் கடைநிலை மக்கள்

வரை அனைவரும் இறைச்சி உணவு உண்டமை இவ்வியலில் ஆராய்ந்துரைக்கப்பட்டுள்ளது.

மூன்றாமியல், 'சங்ககால மக்கள் தொழிலில் விலங்குகள்' என்பதாகும். இவ்வியலில் தொழிலும், தொழிலுக்காகப் பயன்படுத்தப்பட்ட விலங்குகளும் விளக்கம் பெறுகின்றன. குறிஞ்சி நிலத்தில் நாயின் உதவியுடன் பிறவிலங்குகள் வேட்டையாடப்பட்டன. முல்லைநிலத்தில் ஆநிரைகள் மிகுதியால் அவை வளர்ப்பு விலங்குகளாகக் கருதி மேய்க்கப்பட்டன. மருதநிலத்தில் விலங்குகள் உழவுத்தொழிலுக்குப் பயன்பட்டன. நெய்தல் நிலத்தில் விலங்குகள் வணிகத்தொழிலில் ஈடுபடுத்தப்பட்டன. பாலை நிலத்தில் விலங்குகள் கவர்ந்து செல்லப்பட்டுள்ளன. நாடுபிடிக்கும் கொள்கை காரணமாக விலங்குகள் கவரப்பட்டமையும், அந்நிலையில் போரிடும்பொழுது போர்க்கருவிகளாக விலங்குகள் பயன்பட்டமையும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. மேலும், விலங்குகளின் இறைச்சி, கோடு போன்றவை விற்பனைப் பொருள்களாகப் பயன்பட்டமை இவ்வியலில் விளக்கப்பட்டுள்ளன.

நான்காமியல், 'சங்ககால மக்கள் பண்பாட்டில் விலங்குகள்' என்பதாகும். இதில் 'பண்பாடு' என்பதற்கு விளக்கம் கூறப்பட்டுள்ளது. ஏறுதழுவுதலின் சிறப்பும், அவ்வேறுகளை வீரர்கள் தொழுவத்தில் தழுவிய முறையும் கூறப்பட்டுள்ளன. ஏறுதழுவி வென்ற தலைவனுக்குத் தலைவியைத் திருமணம் செய்யும் வழக்கமும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. சங்ககால மக்கள் நீராடச் செல்வதற்கும், தெய்வங்களை வழிபடச் செல்வதற்கும் விலங்குகள் ஊர்தியாகப் பயன்பட்டமையும், நம்பிக்கையின்

அடிப்படையில் விலங்குகளைத் தெய்வங்களுக்குப் பலியிட்டமையும் இவ்வியலில் விளக்கம்பெறுகின்றன.

ஐந்தாமியல், 'சங்ககால மக்கள் பிறவாழ்வியல் கூறுகளில் விலங்குகள்' என்பதாகும். அரசர்கள் விலங்குகளைப் பரிசாகக் கொடுத்தமை, அவற்றைப் புலவர்கள், கலைஞர்கள், இரவலர்கள் போன்றோர் பெற்றமை விளக்கப்பட்டுள்ளன. அவ்அரசர்களுக்கு மக்கள் விலங்குகளைச் சிறப்புப் பரிசாகவும் கொடுத்துள்ளனர். சங்ககால மக்கள் பெண்வேண்டிச் செல்லுதல், வரைய வருதல், பிரிந்தாரைச் சேரல், தலைவியைக் காண வருதல், வினைமேற்கொள்ளுதல் போன்ற வாழ்க்கை நிகழ்வுகளுக்குப் போக்குவரத்து ஊர்திகளாக விலங்குகள் பயன்பட்டுள்ளன. பொழுதுபோக்கிற்காகவும், விளையாட்டிற்காகவும் விலங்குகள் பயன்பட்டமை இவ்வியலில் விளக்கப்பட்டுள்ளன.

ஆய்வில் கண்ட முடிவுகள் முடிவுரையில் சுட்டப்பட்டுள்ளன. முடிவுரைக்குப் பின்னர் துணைநூற்பட்டியல், பின்னிணைப்பு, வரைபடங்கள் ஆகியவை இடம்பெற்றுள்ளன.

**1.1. விலங்கு - விளக்கம்**

**1.2. தொல்காப்பியத்தில் விலங்கு - சொல்லாட்சி**

1.2.1. தொல்காப்பியர் கால விலங்குகள்

**1.3. சங்ககால விலங்குகள்**

1.3.1. நிலவாழ்விலங்குகள்

1.3.2. நீர்வாழ்விலங்குகள்

1.3.3. நீர்நிலவாழ்விலங்கு

1.3.4. பறக்கும் விலங்குகள்

**1.4. நிலவாழ்விலங்குகள்**

1.4.1. அணில்

1.4.1.1. மூவரி அணில்

1.4.1.2. வெளில்

1.4.2. அத்திரி

1.4.3. அரி

1.4.4. ஆடு

1.4.4.1. வெள்ளாடு

1.4.4.2. துருவையாடு

1.4.4.3 வருடை

1.4.4.3.1. வருடை - வரையாடு

1.4.5. ஆளி

1.4.5.1. ஆளி - யானையா

1.4.5.2. ஆளி - அரிமா

1.4.5.3. ஆளி பற்றி அறிஞர்கள் கருத்து

1.4.17.2. செந்நாய்

1.4.17.3. கோணாய்

1.4.18. புலி

1.4.18.1. வரிப்புலி

1.4.18.2. பொறிப்புலி

1.4.18.3. புள்ளிப்புலி

1.4.18.4. விலங்குகளின் வலப்பக்க இடப்பக்க வேட்டை

1.4.18.5. புலிபுலி என்ற குரல்

1.4.19. மான்

1.4.19.1. இரலை

1.4.19.2. நவ்வி

1.4.19.3. மரையான்

1.4.19.4. உழை

1.4.19.5. கடமா

1.4.20. முயல்

1.4.21. முளவுமா

1.4.22. யானை

1.4.23. வெருகு

**1.5. நீர்வாழ்விலங்குகள்**

1.5.1. பெருமீன்

1.5.2. பனைமீன்

**1.6. நீர்நிலவாழ்விலங்கு**

1.6.1. நீர்நாய்

**1.7. பறக்கும் விலங்குகள்**

1.7.1. அசுணம்

1.7.2. வாவல்

**1.8. அழிந்துபட்ட விலங்குகள்**

**1.9. அழிவுக்கு இலக்காகி இருக்கும் விலங்குகள்**

# சங்ககால விலங்குகள் - விளக்கமும் வரையறையும்

இலக்கியங்கள் மக்களின் வாழ்க்கையை விளக்கும் காலக்கண்ணாடியாகத் திகழ்கின்றன. சங்ககாலத்தில் தோன்றிய பாட்டும், தொகையும் சங்ககால மக்களின் வாழ்க்கை நிலையைப் பிரதிபலிப்பனவாக உள்ளன. சங்கமக்கள் தாம்வாழும் நிலப்பகுதிக்கேற்ப திணை வாழ்க்கை மேற்கொண்டனர். இவ்வாழ்க்கையில் விலங்குகள் முக்கிய இடம்பெறுகின்றன. இவ்விலங்குகள் மக்களின் பல்வேறு செயல்பாடுகளிலும் பயன்படுத்தப்பெற்றுள்ளன. இங்ஙனம் சங்ககால மக்களின் வாழ்வில் பங்குபெற்ற விலங்குகளையும், அவற்றின் வகைகளையும் விளக்குவது இவ்வியலின் நோக்கமாகும்.

## 1.1. விலங்கு - விளக்கம்

அஃறிணை உயிரினங்களில் 'விலங்கு' முதன்மைபெற்று விளங்குகின்றது. விலங்கு என்பதற்குக் கலைக்களஞ்சியம், "நாற்கால் பிராணிகளாகிய மயிர்ப்போர்வையுள்ள பாலூட்டிகள், இறகுப்போர்வையுள்ள பறவைகள், செதிற்போர்வையுள்ள ஊர்வன, நீர்நிலவாழும் தவளைகள் ஆகியவற்றை மட்டும் குறிக்கவில்லை. மீன்கள், பூச்சிகள், தேள், புழு, நத்தை, ஓரணுப் பிராணிகள் ஆகிய எல்லாவற்றையும் குறித்தது. ஆனால் இக்காலத்தில் விலங்கியலானது மிகப்பரந்ததோர் அறிவுத்துறையாக வளர்ந்துவிட்டது. இதனால் இது உயிரியலின் ஒரு கிளை என்றில்லாமல் இதில் பல பிரிவுகளே தனித்தனித் துறைகளாக ஆகிவிட்டன. உதாரணமாகப் பூச்சிகளைப் பற்றிய ஆராய்ச்சி பூச்சியியல்(Entomology) என்றும், ஓரணு

பிராணிகளைப் பற்றிய பிரிவு புரோட்டோசோவாவியல்(Protozoology) என்றும், பாலூட்டிகளைப் பற்றியது பாலூட்டியியல்(Mamalogy) என்றும், பறவைகளைப் பற்றியது பறவையியல்(Ornithology) என்றும், ஊர்வனவற்றைப் பற்றியது ஊர்வனவியல்(Herpetology) என்றும், மீன்களைப் பற்றியது மீனியல் (Ichthyology) என்றும் பல பிரிவுகளாக வளர்ந்துள்ளது"[1] என்று விளக்கம் தருகின்றது. எனவே, இங்கு விலங்குகள் என்பது குட்டி போட்டுப் பாலூட்டி வளர்ப்பனவற்றைப் பற்றியது என்பது புலனாகும். "மனித இனமும், தாவரமும் அல்லாத ஏனைய உயிரினம், குறிப்பாகக் குட்டி போட்டுப் பால் தரும் இனம்"[2] எனக் க்ரியாவின் தற்காலத் தமிழகராதியும் விலங்கு குறித்து விளக்குகின்றது. இவற்றால் விலங்கு என்பதற்கான வரையறையை அறியஇயலும்.

## 1.2. தொல்காப்பியத்தில் விலங்கு – சொல்லாட்சி

அகப்பொருள் மரபில் முதல், கரு, உரிப்பொருட்கள் முக்கியத்துவம் பெறுகின்றன. நிலமும், பொழுதும் முதற்பொருள்,[3] தெய்வம் உள்ளிட்ட எண்வகையும், பிறவும் கருப்பொருட்கள்[4] ஆகும். ஐந்திணை ஒழுக்கங்களையும், அவற்றின் நிமித்தங்களையும் உரிப்பொருள் என்று மொழிவர் தொல்காப்பியர்.[5] இவற்றில் கருப்பொருட்களில் ஒன்றாக விலங்கு இடம்பெற்றுள்ளது.[6]

தொல்காப்பியத்தில் விலங்கைக் குறிக்க 'மா' என்னும் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை எழுத்ததிகாரத்தில்,

"மா மரக்கிளவியும் ஆவும் மாவும்
ஆமுப்பெயரும் அவற்றோரன்ன
அகரம் வல்லெழுத்து அவை அவண் நிலையா
னகரம் ஒற்றும் ஆவும் மாவும்" (தொல்.231)

என்ற நூற்பா விளக்கும். தொல்காபபியப் பொருளதிகாரத்தில்,

"தெய்வம் உணாவே மாமரம் புள்பறை
செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ
அவ்வகை பிறவும் கருவென மொழிப" (தொல்.964)

என்ற அகத்திணையியல் நூற்பாவும்,

"மாவும் மாக்களும் ஐயறிவினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே" (தொல்.1531)

என்னும் மரபியல் நூற்பாவும் விலங்கை 'மா' எனக் குறிப்பிடும்.

தொல்காப்பியத்தில் விலங்கைக் குறிக்க 'மா' என்ற பொதுச் சொல் இடம்பெற்றிருந்தாலும், 'விலங்கு' என்ற சிறப்புச் சொல்லும் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை,

"ஒருசார் விலங்கும் உளவென மொழிப" (தொல்.பொருள்.இளம்.578)

"அவ்வவ மாக்களும் விலங்கும் அன்றி" (தொல்.1465)

என்னும் நூற்பாக்கள் விளக்கும். மேற்குறிப்பிட்ட முதற்நூற்பா இளம்பூரணா உரைப்பதிப்பில் இடம்பெற்றுள்ளது. ஆனால் ச.வே.சுப்பிரமணியன் உரைப்பதிப்பில் இடம்பெறாமை குறிப்பிடத்தக்கது. இவற்றால் தொல்காப்பியா காலத்தில் மா, விலங்கு என்னும் இரு சொற்களும் வழக்கில் இருநதமை புலனாகும்.

### 1.2.1. தொல்காப்பியா் கால விலங்குகள்

தொல்காப்பியத்தில் பதினெட்டு விலங்குகள் இடம்பெற்றுள்ளன. அவற்றில் ஆநிரை, குரங்கு, மான் ஆகிய மூன்று விலங்குகளையும் வகைப்படுத்த அவை இருபத்தைந்தாக விரிவடைகின்றன.

1. மூவரி அணில் (தொல்.1505)

2. ஆடு

3.




4. எருமை (1515, 1519)

5. எலி (1505)

6. ஒட்டகம் (1517)

7. கழுதை (1514)

8. குதிரை (1511, 1514, 1158)

9.




10. கேழல் (1507)

11. நரி (1508)

12. நாய் (1507)

13. புலி (1507)

14.



15. முயல் (1507)

16. மூங்கா (1505)

17. யானை (1514, 1158), குஞ்சரம் (1518)

18. வெருகு (1505)

தொல்காப்பியர், அவர் காலத்துக்கு முன்பும், அவர் காலத்தும் வாழ்ந்த விலங்குகளின் பெயர்களை இளமைப் பெயர்கள், ஆண்பாற்பெயர்கள், பெண்பாற்பெயர்கள் என மரபியலில் பட்டியலிட்டுக் காட்டுகின்றார். பார்ப்பு, பறழ், குட்டி, குருளை, கன்று, பிள்ளை, மகவு, மறி, குழவி என்ற ஒன்பதும் இளமைப் பெயர்களாகும். இவ்விளமைப் பண்பு பற்றிய மரபுப்பெயர்களை இருபத்தைந்து விலங்குகள் ஏற்கின்றன.[7] ஏறு, ஏற்றை, ஒருத்தல், களிறு, சே, சேவல், இரலை, கலை, மோத்தை, தகர், உதள், அப்பர், போத்து, கண்டி, கடுவன் போன்ற ஆண்பாற்பெயர்களில் சேவைத் தவிர்த்து பதினான்கு ஆண்பாற்பெயர்களைப் பதினான்கு விலங்குகள் ஏற்கின்றன.[8] பேடை, பெடை, பெட்டை, பெண், மூடு, நாகு, கடமை, அளகு, மந்தி, பாட்டி, பிணை, பிணவு, பிடி என்ற பதின்மூன்று பெண்பாற் மரபுப்பெயர்களில், பேடை, பெடை, பெண், அளகு என்ற நான்கையும் தவிர்த்து ஒன்பது பெயர்களைப் பதினெட்டு விலங்குகள் ஏற்கின்றன.[9] ‘மான்’ என்ற சொல் தொல்காப்பியத்தில் சுட்டப்படவில்லை. அதன் சிறப்புப் பெயர்களில் ஐந்து வகை மான்கள் குறிக்கப்பட்டுள்ளன. குரங்கினத்தில் குரங்கு (செம்முக மந்தி), முசு, ஊகம் என்ற மூவினம் குறிக்கப்பெறுகின்றது. ஆவினத்தில், ஆநிரைகளும், கவரியும் குறிக்கப்பெற்றுள்ளன.

தொல்காப்பியர் கருப்பொருட்களில் ஒன்றாக விலங்கைச் சுட்டுவர். அதில் இந்நிலத்திற்குரியது இவ்விலங்கு என்று எங்கும் குறிப்பிடவில்லை. பின் வந்த உரையாசிரியர்களே இதனைக் குறிப்பிடுகின்றனர். விலங்கினைப் பெரும்பான்மை கருதி அந்நிலத்திற்குரியதாக்கி உரைத்துள்ளனர்.

**1.3. சங்ககால விலங்குகள்**

தொல்காப்பியத்தில் சுட்டப்பட்ட இருபத்தைந்து விலங்குகளும் சங்கஇலக்கியத்திலும் சுட்டப்பட்டுள்ளன. தொல்காப்பியத்தில் சுட்டப்படாது சங்கஇலக்கியத்தில் அத்திரி, அரி, ஆளி, எண்கு, முளவுமா, நீர்நாய், அசுணம், வாவல், திமிங்கலத்தில் பெருமீன், பனைமீன் என்பன போன்று பத்து விலங்குகள் புதியனவாகச் சுட்டப்பட்டுள்ளன. இதனைப் போன்று அணிலில் வெளில், ஆட்டில் வெள்ளாடு, துருவை, வருடை, ஆநிரையில் ஆமா, எலியில் இல்லெலி, வெள்ளெலி, கருப்பைஎலி, குரங்கில் கருங்கலை, நாயில் செந்நாய், கோணாய், புலியில் வரிப்புலி, பொறிப்புலி, புள்ளிப்புலி என்ற ஏழு விலங்குகளின் வகைகளாகப் பதினாங்கு விலங்குகள் இடம்பெறுகின்றன. இவற்றில் தொல்காப்பியத்தில் சுட்டப்பட்ட ஆடு, எலி, புலி என்ற மூன்று விலங்குகளும் சங்க இலக்கியத்தில் சுட்டப்பட்ட அதன் வகைகளில் ஒன்றாகவே இருக்க இடமுண்டு. எனவே சங்க இலக்கியத்தில் (இருபத்தைந்து+ பத்து+பதினொன்று) நாற்பத்தாறு விலங்குகள் இடம்பெற்றுள்ளதை அறியஇயலும். இந்நாற்பத்தாறு விலங்குகளும் நிலவாழ்விலங்குகள் (நாறபத்தியொன்று), நீர்வாழ்விலங்குகள்(இரண்டு), நீர்நிலவாழ்விலங்கு(ஒன்று), பறக்கும் விலங்குகள்(இரண்டு) என்ற அடிப்படையில் பிரித்துக் கூறப்பட்டுள்ளன.

### 1.3.1. நிலவாழ் விலங்குகள்

1.




2. அத்திரி

3. அரி

4.




5. ஆளி

6.




7. எண்கு

8. எருமை

9.




10. ஒட்டகம்

11. கழுதை

12. குதிரை

13.




14. கேழல்

15. தீர்வை

16. நரி

17.




18.




19.




20. முயல்

21. முளவுமா

22. யானை

23. வெருகு

### 1.3.2. நீர்வாழ்விலங்குகள்

24.




### 1.3.3. நீர்நிலவாழ்விலங்கு

25. நீர்நாய்

### 1.3.4. பறக்கும் விலங்குகள்

26. அசுணம்

27. வாவல்

### 1.4. நிலவாழ்விலங்குகள்

சங்க இலக்கியத்தில் நாற்பத்தியொரு நிலவாழ்விலங்குகள் கூறப்பட்டுள்ளன. இவற்றில் அசுணம், ஆளி, கவரி, வருடை போன்ற விலங்குகள் வாழும் சூழ்நிலைக்கேற்ப மலையில் வாழ்வனவாகும்.

### 1.4.1. அணில்

அணில், குட்டி போட்டுப் பாலூட்டும் சிறிய விலங்காகும். சங்க இலக்கியத்தில் மூவரி அணில், வெளில் என இருவகையினம் காணப்படுகின்றன.

#### 1.4.1.1. மூவரி அணில்

தொல்காப்பியர் மூவரி அணிலை,

"மூங்கா வெரு கெலிமூவரி யணிலொடு

ஆங்கவை நான்கும் குட்டிக்குரிய" (தொல்.1505)

என்ற நூற்பாவில் குறிப்பிடுவர். அணிலின் முதுகில் வெள்ளரிக்காயின மேல உள்ள வரிகளபோல் மூன்று வரிகள் அமைந்திருக்கும்.[10] அதனாலேயே இது மூவரி அணில் என அழைக்கப்பட்டது. இலவ மரத்தின் முதிர்ந்த காய் வெடிக்கும்பொழுது பஞ்சுப்பிசிர் நீட்டிக்கொண்டிருப்பதைப் போல இதன் தோற்றம் விளங்கும்.[11] இதன் வால் வேனிற்காலத்தில் கழன்று விழும் ஊகம்புல்லின் பூவை ஒத்துக் காணப்படும்,[12] அணிலின் பற்கள் முள்ளிச்செடியின் முட்கள் போன்று விளங்கும்[13] என இதன் தோற்றம் சுட்டப்படுகின்றது. அணில் மனிதர்களைக் கண்டு அஞ்சும் இயல்பினது. அதனால் அது பாழடைந்த பகுதிகளில் வாழும்.[14]

#### 1.4.1.2. வெளில்

மூவரி அணில் எனத் தொல்காப்பியம் தனித்துக் குறிப்பிட்டுக் காட்டுவதால் 'வெளில்' அதனின்று வேறுபட்ட அணில் என்பதை அறியஇயலும்.

வெளில் என்பதற்கு அணில் எனப் பொருள்கூறுவர் ந.மு.வேங்கடசாமி நாட்டார்.[15] "மூவரியணிலைத் தவிர்த்து மற்றொரு அணிலையும் சங்க நூல்களில் இரண்டு பாடல்களில் கூறியுள்ளனர். இதை வெளில் என்று அழைக்கின்றனர். இதற்கு அணில் என்றே பொருள் கூறியிருப்பினும் இது மூவரியணில் அன்று என்றே தெரிகின்றது. இது உருவத்தில் பெரியது அடர்ந்த காடுகளில் உயர்ந்த கிளைகளின் உச்சியில் வாழ்வது. கருமை நிறமானது"[16] என்பர் பி.எல்.சாமி. கருமை நிறங்கொண்ட வெளிலை வெண்மை என்ற பெயரால் 'வெளில்' என அழைத்துள்ளனர்.

வெளில் மரத்திற்கு மரம் வெகுதூரம் தாவிக் குதிக்கும் இயல்பினது.[17] சிறிய ஓசையைக் கேட்டாலும் பயந்து ஓயாது கத்தும் தன்மையுடையது.[18] இவற்றால் வெளிலின் தோற்றமும், இயல்பும் புலனாகும்.

### 1.4.2. அத்திரி

அத்திரி என்பது கழுதையின் ஒரு வகையாகும். அத்திரியை, "ஆண் கழுதைக்கும் பெண் குதிரைக்கும் பிறந்த கலப்பு விலங்காகும்"[19] என்பர் பி.எல்.சாமி. இதற்குக் 'கோவேறு கழுதை' என்ற பெயரும் உண்டு. இதனை, "கழுதைமேல் ஏறுவது இழிவு என்றும், கோவேறு கழுதையின் மேல் ஏறுவது சிறப்பு என்றும் கருதினர். கோ ஏறும் கழுதை என்றதனால் அரசர்கள் ஏறும் கழுதை என்பது பெறப்படும். இந்தக் கழுதையை அத்திரி என்று சங்க காலத்தில் அழைத்தனர்"[20] என்பர். "கோவலன் இராசவாகனமாகிய அத்திரி ஏறினான்"[21] என்ற அடியார்க்கு நல்லாரின் உரையிலிருந்து இதற்குக் கோவேறு கழுதை என்ற பெயர் விளங்கியதை அறிய இயலும். "கோவேறு

கழுதைகளுக்கு அத்திரி என்று பெயர் வழங்கப்பட்டது. நாகரிகமுள்ள செல்வ நம்பிகள் அக்காலத்தில் கோவேறு கழுதைகளை ஊர்தியாப் பயன்படுத்தினார்கள்”[22] என்பதும் இதனை விளக்கும்.

“அரசர்கள் ஏறுவதற்கும் போக்குவரத்திற்கும் பயன்படுத்தப்பட்ட அத்திரி வெளிநாடுகளிலிருந்து கொண்டுவரப்பட்டது”[23] எனவும், “சங்ககாலத்தில் அத்திரி கடல் வழியாக இறக்குமதியாகியிருக்கலாம்”[24] எனவும் குறிப்பிடுவர். எனவே, அத்திரி என்னும் விலங்கு வெளிநாடுகளிலிருந்து இறக்குமதியானது என்று கருத இடமுண்டு.

சங்ககால மக்கள் அத்திரியைத் தேரில் பூட்டிப் போக்குவரத்திற்காகப் பயன்படுத்தியுள்ளனர்.[25] தற்காலத்தில் மக்கள் இமயமலைப் பகுதியில் உள்ள பனிலிங்கத்தை வணங்கக் கோவேறு கழுதையில் ஏறிச்செல்வது இவ்விடத்தில் சுட்டத்தக்கது.

### 1.4.3. அரி

விலங்கினத்தில் ஆளிக்கு அடுத்து மிகவும் வலிமையுடையது அரி என அழைக்கப்படும் சிங்கமாகும். இது விலங்கின அரசன் எனவும் வழங்கப்படுகின்றது. சங்க காலத்தில் சிங்கம் வாழ்ந்தது எனவும் இது தமிழ்நாட்டுக் காடுகளில் காணப்படவில்லை எனவும் அறிஞர்களிடேய இரு வேறுபட்ட கருத்துக்கள் உள்ளன. சங்க இலக்கியத்தில்,

“உரும்பில் உள்ளத்து அரிமா வழங்கும்” (நற்.112:4)

“வயமான் றோன்றனீ வந்த மாறே” (ஐங்.500:5)

“உளைமான் துப்பின் ஓங்குதினைப் பெரும்புனத்து” (அகநா.102:1)

என்ற பாடலடிகளில் உள்ள அரிமா, வயமான், உளைமான் என்ற சொற்களுக்கு உரையாசிரியர்கள் ‘சிங்கம்’ என்று பொருள் கூறியுள்ளனர்.[26]

சங்க இலக்கியத்தில் சிங்கம் என்ற சொல் இடம்பெறவில்லை. அதனால், “சிங்கம் தமிழ்நாட்டில் எங்கும் வாழவில்லையாதலால் தமிழில் சிங்கத்திற்குரிய பெயர் கூடக் கிடையாது”[27] எனப் பி.எல்.சாமி குறிப்பிடுவர். சிங்கத்திற்கும், புலிக்கும் தனித்தனிப் பெயர்ப்பட்டியலிட்டுச் சிங்கத்திற்கு, வயமா, அரி, சிங்கம் எனப் பல்வேறு பெயர்களை நிகண்டுகள் சுட்டிக்காட்டுகின்றன.[28] ஆனால், “நிகண்டுகளில் சிங்கத்தின் பெயர்களாகத் தூயதமிழ்ப்பெயர், தனிப்பெயர் எதுவுமில்லை. புலியின் பெயரையே சிங்கத்திற்குச் சேர்த்துக் கூறக் காண்கிறோம்”[29] என்றும், “சங்க இலக்கியத்தில் சில பாடல்களில் வயமான் என்பதற்குச் சிங்கம் எனச் சிலர் உரை கூறினர். இது தவறு. புலியெனப் பொருள் கொள்ளவேண்டிய இடத்தில் சிங்கமெனப் பொருள் கொண்டமை பொருந்தாது”[30] என மறுப்புத் தெரிவிப்பாருமுண்டு. சிங்கம், புலி என்ற இரு விலங்குகளுக்கும் நிகண்டுகள் வயமா, அரி என்ற ஒரே பெயர்களைக் கூறியுள்ளதும் இக்கருத்து வேறுபாட்டிற்கு முக்கிய காரணமாகும்.

தொல்காப்பியம் வலிமையானதை,

“வய வலி யாகும்” (தொல்.849)

என்ற நூற்பாவில் சுட்டுகின்றது. வயம் என்ற சொல்லுக்கு, வலி, வெற்றி எனப் பொருள் கூறுகின்றது கழகத் தமிழகராதி.[31] சிங்கத்துடன் புலியை ஒப்பிடும்பொழுது சிங்கமே வலிமையானது என்பதை உணரமுடிகின்றது. வயம்+மா = வயமா, வலிமையான விலங்கு சிங்கம் எனப் பொருள்கொண்டு

'வயமா' என்பது சங்க இலக்கியத்தில் ஒருசில இடங்களில் சிங்கத்தைக் குறித்து வந்துள்ளதை அறியஇயலும்.

கழகத் தமிழகராதி, உளை என்பதற்குச் சிங்கம், குதிரை முதலியனவற்றின் பிடரி மயிர் எனவும், உளைமான் என்பதற்குச் சிங்கம் எனவும் பொருள் கூறுகின்றது.[32] இக்கருத்து சிங்கத்திற்குப் பிடரி மயிர் இருப்பதைக் குறிப்பிட்டுக் காட்டுகின்றது. 'உளைமான்'[33] என்ற சொல் சிங்கத்தை மட்டும் குறித்து வந்ததை உரையாசிரியர்கள் சுட்டுகின்றனர். எனவே உளைமான் என்ற சொல் வழக்கு சங்க இலக்கியத்தில் சிங்கத்தை மட்டும் குறித்துவந்தமை குறிப்பிடத்தக்கது.

தமிழ்நாட்டுக் காடுகளில் சிங்கமும், புலியும் இணைந்து காணப்படவில்லை என்பதை, "சிங்கமும் புலியும் இயற்கையில் ஒரே சூழ்நிலையில் இந்தியாவில் எங்கும் காணப்படவில்லை. ஆதலால் சிங்கமும் புலியும் போரிடுவது காணக்கிடைக்காத செய்தியாகும்"[34] எனச் சுட்டுவர் பி.எல்.சாமி. ஆனால் சிங்கம் உலாவும் மலைப் பக்கத்தில் பிற விலங்குகளாகிய புலி, யானை, மான் போன்ற நிரையைக் கொண்ட தொகுதிகள் இன நிரையாக வாழ்ந்துவந்தன. எனினும் அதனை வெல்லும் ஆற்றலின்மையால் அஞ்சி நெஞ்சு நடுங்கி வாழ்ந்துவந்தன என்பதை,

> "தாரணி யெருத்தின் வாரல் வள்ளுகிர்
> அரிமா வழங்குஞ் சாரற் பிறமான்
> தோடுகொ ளினநிரை நெஞ்சதிர்ந் தாங்கு" (பதிற்.12:4-6)

என்ற பாடல் விளக்கும். பெரிய புலியைக் கொன்று அதனாலும் சோர்வடையாது, உடன்சென்று பெரிய யானையைக் கொல்லுகின்ற வலிமையையுமுடையது வயமா என்பதை,

"இரும்புலி கொன்று பெருங்களி றடூஉம்

அரும்பொறி வயமா" (பதிற்.75:1-2)

என்ற அடிகள் புலப்படுத்தும். இதில் இரும்புலி, வயமா என்ற இருவேறு சொற்கள் ஒருங்கே கூறப்பட்டுள்ளன. இப்பெயர்கள் புலியைக் குறித்தே வழங்கப்பட்டது எனக் கொண்டாலும், இவ்விடத்தில் ஒரு பொருளைக் குறிக்க இரண்டு பெயர்கள் எடுத்தாளப்பட வேண்டிய அவசியம் எழவில்லை. சிங்கத்தையும் புலியையும் வேறுபடுத்திக் காட்டவே இச்சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பது புலனாகும். எனவே, சங்ககாலத்தில் சிங்கம் 'அரி' என்ற பெயரால் அழைக்கப்பட்டு வாழ்ந்துவந்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

ஆண் சிங்கம், 'ஏறு'[35] என்னும் பொதுப்பெயரால் சுட்டப்பட்டுள்ளது. மேலும் சிங்கத்தின் வலிமையை,

"அரிமா வன்ன வணங்குடைத் துப்பிற்" (பட்டினப்..298)

"கொடிபிணங் கரிய இருள்கொள் நாகம்

மடிபதம் பார்க்கும் வயமான் துப்பின்

ஏனலஞ் சிறுதினைச் சேணோன் கையதை" (அகநா.73:13-14)

"வியலுளை யரிமான் மறங்கெழு குரிசில்" (பதிற்.88:15)

என்ற பாடலடிகளும் குறிப்பிடுகின்றன. அரிமா விரைந்து பாய்தலை,

"குன்ற இறுவரைக் கோண்மா இவர்ந்தாங்கு" (கலித். 86:32)

என்ற அடி விளக்கும். சிங்கத்தின் குருளையும் யானையின் புகர்முகத்தின் மீது பாயும் ஆற்றல் கொண்டதாக விளங்கியது.[36] சங்க கால மக்கள் சிங்கத்தின் குரலைக் காட்டில் கேட்டாலே அஞ்சியிருக்கின்றனர்.[37] அரிமா, போவார் யாருமில்லாத சிறிய நெறியில் வாழ்ந்து வந்ததை,

"இயங்குநர் மடிந்த வயந்திகழ் சிறுநெறிக்

கடுமா வழங்குதல் அறிந்து" (நற்.257:8-9)

என்பதால் அறிய இயலும். இதன் திறனை, "சிங்கம் பெருந்தன்மையான விலங்கு. பசித்தாலன்றி வேறு எந்த விலங்கையும் கொல்லாது. வயிறு நிரம்ப உண்ட சிங்கத்தின் அருகே மற்ற விலங்குகள் பயமின்றிச் செல்லலாம்,"[38] "பசியுள்ள சமயத்தில்தான் சிங்கம் மற்ற விலங்குகளை வேட்டையாடிக் கொல்லும். பசியில்லாதபோது மற்ற விலங்குகளை வேட்டையாடுவதில்லை"[39] என்பனபோன்ற கருத்துக்கள் விளக்கும். எனவே, சிங்கம் பிற விலங்குகளைக் காட்டிலும் வலிமை கொண்டு விளங்கியதும், பிற விலங்குகளுக்குத் தலைமையாக விளங்கியதும் புலப்படும்.

### 1.4.4. ஆடு

தொல்காப்பியத்தில் 'ஆடு' என்ற சொல் இடம்பெற்றிருந்தாலும் சங்க இலக்கியத்தில்தான் வெள்ளாடு, செம்மறியாடு, வருடை என்று அதன் வகைகளை அறியமுடிகின்றது. ஆடு வளர்ப்பு விலங்காகும். இது உணவுக்காகப் பயன்படுத்தப்பட்டது. முல்லைநிலமக்கள் ஆடு மேய்த்தலை தொழிலாகக் கொண்டனர். தற்காலத்தில் ஆடுகள் வளர்ப்புப் பற்றி, "பொதுவாக ஆடுகள் பத்திலிருந்து பன்னிரண்டு ஆண்டுகள் வரை உயிர்வாழும் இயல்புடையவை. ஆடுகள் பண்ணையில் வளர்க்கப்பட்டு ஏழாண்டுகள் வரைக்கும் உயிர் வாழும். ஒரு ஆட்டை வளர்க்கப் பன்னிரண்டிலிருந்து பதின்மூன்று அடிகள் உள்ள இடம் அவசியம் தேவை. பெண் ஆடுகள் பத்தாவது மாதத்திலிருந்து குட்டிபோடத் தயாராகிவிடும். ஆடுகளின் கர்ப்ப காலம் நூற்றைம்பது நாட்கள். ஒரு ஈற்றில் ஓரிரு குட்டிகள் போடும்

இயல்புடையவை"[40] என்று அ.மணாளன் குறிப்பிடுவர். ஆட்டினைப் 'புல்லினம்'[41] என்றும் அழைப்பர்.

### 1.4.4.1. வெள்ளாடு

ஆட்டின் வகையில் ஒன்று வெள்ளாடு. இது இறைச்சிக்காகவும் பாலுக்காகவும் மக்களால் வளர்க்கப்படுகின்றது. சங்ககால மக்கள் இதனைப் பலியிடவும் பயன்படுத்தினர். சங்க நூல்களில்,

"சிறுதலை வெள்ளைத் தோடுபரந் தன்ன" (குறுந்.163:2)

"உள்ளில் வயிற்ற வெள்ளை வெண்மறி" (அகநா.104:9)

"நிலைக்கோட்டு வெள்ளை நால்செவிக் கிடாஅய்" (அகநா.156:14)

போன்ற பாடலடிகளில் இவ்வெள்ளாடு குறிக்கப்பெற்றுள்ளது. இதனையே, "வெள்ளை நிறத்தின் காரணமாக வெள்ளாடு என்ற பெயர் வழங்கிற்று"[42] என்று விளக்குவர் பி.எல்.சாமி. கருமைநிறமான வெள்ளாடுகளும் காணப்படுவதுண்டு.[43]

ஒரு சில பாடலடிகளில் மட்டும் வெள்ளாடு தனித்துக் கூறப்பட்டுள்ளது. ஆடு, மை, தகர் போன்ற பொதுச் சொல்லால் பல பாடலடிகளில் 'துருவை' என்ற செம்மறியாட்டுடன் இணைத்து இவ்வாடு சுட்டப்பட்டுள்ளது. இதனால் வெள்ளாட்டையும், துருவையாட்டையும் தெளிவாக வகை பிரித்து உணரமுடியவில்லை. பொதுவாக இணைசேர்ந்தபின் பிரிந்த தகர், பிற ஆடுகளை விரும்பிச் சென்றாலும் பெண்ணாட்டை மீண்டும் தேடிவரும் இயல்பினையுடையதாய் விளங்கும் என இதன் இயல்பைச் சுட்டுவர் கபிலர்.[44]

### 1.4.4.2. துருவையாடு

துரு, துருவை, துருவாடு என்ற சொற்கள் செம்மறியாட்டைக் குறித்து வழங்கின. சங்க இலக்கியத்துள்,

"ஆடுதலைத் துருவின் தோடுதலைப் பெயர்க்கும்" (நற்.169:6)

"ஆடுதலைத் துருவின் தோடே மார்பக" (அகநா. 274:4)

"சிறுதலைத் துருவின் பழுப்புறு விளைதயிர்" (அகநா.394:2)

என்ற அடிகளில் வரும் துருவை என்ற சொற்கள் செம்மறியாட்டினைக் குறிப்பதாக உரையாசிரியர்கள் சுட்டுவர்.[45] இதனை, "துருவை என்ற செம்மறியாட்டின் பெயர் அதன் செம்மை கலந்த நிறத்தைக் குறித்து வழங்கிற்று"[46] என்று வழிமொழிவர் பி.எல்.சாமி.

துருவை ஆடுகள் உணவிற்காகவும், பலியிடவும் பயன்படுத்தப்பட்டன. சங்ககாலத்தில் முல்லைநிலததில் மிகுதியான ஆடுகள் காணப்பட்டன. அதனால் ஆடுகளை மேய்ப்பது முல்லைநிலத்தாயர்களின் தொழிலாக இருந்தது. செம்மறியாட்டின் கொம்புகள் உறுதியானவை. அவை சுருண்டு, திருகிக் காணப்படும். இதனைக் கண்ட மழவர்கள் தமது கூந்தலையும் சுருட்டிக் கொம்பைப் போன்று ஒப்பனை செய்து கொண்டனர்.[47] விழாக்காலங்களில் செம்மறியாட்டினை இல்லங்கள் தோறும் அறுத்துண்பர்.[48] இவற்றால் துருவையின் பயன்பாடு விளங்கும்.

### 1.4.4.3. வருடை

மலையில் வாழும் ஆட்டினத்தைச் சார்ந்த விலங்கு 'வருடை' ஆகும். இவ்வருடை மிக உயர்ந்த மலைச் சிகரங்களில் வாழ்வதை,

"போருடை வருடையும் பாயாச்

சூருடை அடுக்கத்த கொயற்கருந் தழையே" (நற்.359:8-9)

என்ற அடிகள் விளக்கும். இருள் செறிந்தது போன்ற சோலையில் வருடையின் மறி துயிலும்,[49] வருடையின் குட்டி, தன் தாயின் பாலை உண்டு மலைப்பக்க நிழலில் துள்ளி ஆடும்,[50] பிற உயிர்களுக்கு இன்னல் செய்யாத வருடை காரணமின்றி அஞ்சும்,[51] பாறையிலிருந்து ஊகக்குரங்கைப் பார்த்ததும் வெருண்டு இருள் செறிந்த பக்க மலையில் ஏறி இறங்கி ஓடும்,[52] மலையில் வாழும் வருடைகளின் கடாக்களுக்குக் கொம்புகள் முற்றிக் காணப்படும்,[53] என்பன போன்றவை மலையில் வாழும் வருடை பற்றிய செய்திகளாகும். மேலும், "மலைவாழ் உயிரினமாகிய வருடை என்பது நீலகிரி போன்ற உயர்ந்த மலைச் சிகரங்களில் வாழும் ஓர் விலங்காகும்"[54] என்று திறனாய்வாளரும் குறிப்பிடுவர்.

தொல்காப்பிய மரபியலிலுள்ள,

"மாவும் மாக்களும் ஐயறி வினவே

பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே" (தொல்.1531)

என்ற நூற்பாவிற்கு, "கிளையென்பன எண்கால் வருடையும் குரங்கும் போல்வன"[55] என உரைவரைவர் பேராசிரியர்.

"மீமிசைக் கொண்ட கவர்பரிக் கொடுந்தாள்

வரைவாழ் வருடை வன்றலை மாத்தக" (மலைபடு.502–503)

என்ற மலைபடுகடாம் அடிகளுக்கு, "முதுகிடத்தே கொண்ட நிலத்தைக் கைக்கொள்ளும் செலவினையுடைய வளைந்த கால்களையுடைய வரையிடத்தே வாழும் எண்கால் வருடையில் வலிய தலையினையுடைய

பெரியகிடாய்"[56] என்று பொருள் கூறுவர் நச்சினார்க்கினியர். உரையாசிரியர்கள் வருடைக்கு எண்கால்கள் இருப்பதாகக் குறிப்பிடுவது பொருத்தமாகத் தோன்றவில்லை. "வருடை விலங்கினத்தில் வெள்ளாட்டினைச் சார்ந்தது"[57] என்பர் பி.எல்.சாமி. யாருமறியா உயர்ந்த மலைச் சிகரத்தில் வாழ்கின்ற வருடை மிகவும் அஞ்சும் தன்மையுடையது. ஒரு சிகரத்திலிருந்து அருகிலிருக்கும் சிகரத்திற்கு பாயும்பொழுது கீழே விழாதபடி தன் வளைந்த கால்களால் பாறையை நன்கு பிடித்துக்கொள்ளும். இவ்வாறு வருடை நன்கு குதித்துப் பாறைக்குப் பாறை வேகமாக எளிதில் பாய்ந்து மலையுச்சியிலும் மலைச்சரிவிலும் மறைந்துவிடும். இத்தன்மையைக் கருத்தில் கொண்டும், நிகண்டுகள் 'எண்காற்புள்'[58] என்று குறிப்பிடுவதாலும் வருடைக்கு எண்கால்கள் இருப்பதாக உரையாசிரியர்கள் கருதினர் என்று கூற இடமுண்டு.

சங்க இலக்கியத்தில் இவ்வாடு 'வருடை' என்ற பெயரால் குறிக்கப்பட்டுள்ளதால் இதனை மற்ற இரு ஆடுகளிலிருந்து பிரித்துணர முடிகின்றது. வருடையாடுகள் இன்றும் வாழ்ந்து வருவதைப்பற்றி, "இந்தியாவில் எங்குமே காணப்படாமல் மூணாறு இராஜமலைப் பகுதியில் மட்டும் உள்ள அதிசய வருடையாடுகள் இந்த ஆண்டு நாற்பதுக்கும் அதிகமான குட்டிகளை ஈன்றுள்ளது"[59] என்ற தினத்தந்தி நாளேட்டுச் செய்தியும் நன்கு விளக்கும். இவற்றால் இன்றும் வாழ்ந்து வருகின்ற வருடை ஆட்டினத்தைச் சார்ந்த விலங்காகும் என்பது புலனாகும்.

#### 1.4.4.3.1. வருடை – வரையாடு

வரை என்பது மலையைக் குறிக்கும். பட்டினப்பாலையில்,

"வரையாடு வருடைத் தோற்றம் போல்" (பட்டினப்..139)

என்று வரும் தொடருக்கு, "மழையுலாவும் சிகரத்தையுடையவாகிய பெரிய மூங்கிலையும் பக்க மலையினையுமுடைய மலையிடத்தேயுலாவும் வருடை மானின் தோற்றரவு போல"[60] எனப் பொருள் உரைப்பர் நச்சினாக்கினியர். இதனைப்போன்று,

"வரையாடு வருடையும் மடமான் மறியும்" (சிலப்.25:50)

என்ற சிலப்பதிகாரத் தொடருக்கு, "மலையில் துள்ளி விளையாடும் வருடைமான்"[61] எனப் பொருள் கூறுவர் ந.மு.வேங்கடசாமிநாட்டார். இவ்விரண்டு பாடலடிகளிலும் வரையில் பாயும் வருடை என்று பொருள் கூறப்பட்டுள்ளன. வருடை மலையில் மட்டும் வாழும் ஒருவகை ஆடாகும். இதனாலேயே 'வருடை' என்பது 'மலையாடு' என்ற பொருளில், 'வரையாப் பாயும் வருடை' என உரையாசிரியர்கள் கூறியுள்ளனர். "வருடை என்பதும் வரையாடு என்பதும் ஒரே விலங்கு"[62] எனச் சுட்டுவர் பி.எல்.சாமி. எனவே, 'வரையாடு' என்பது வருடையின் மாற்றுப் பெயராகும் என்பதை நன்குணர்த்தும். மிகவும் பயந்த இயல்புடையதாகையால் யாருமறியாமல் மலையில் மட்டும் வாழ்ந்திருக்க இடமுண்டு.

### 1.4.5. ஆளி

சங்கப்புலவர்கள் சில அரிய உயிரினங்களைப் பற்றிக் குறிப்பிட்டுக் காட்டுகின்றனர். அவற்றில் அன்னப்பறவை, அன்றில்பறவை போல ஆளியும் ஒன்றாகும். நற்றிணை, அகநானூறு, பொருநராற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, குறிஞ்சிப்பாட்டு ஆகிய ஐந்து நூல்களில் இவ்ஆளி பற்றிய செய்திகள் இடம்பெற்றுள்ளன.

"ஆளி நன்மான் வேட்டெழு கோளுகிர்ப்" (நற்.205:2)

"நனந்தலைக் கானத் தாளி யஞ்சி" (அகநா.78:1)

"வாள்வரி நடுங்கப் புகல்வந்து ஆளி" (அகநா.252:2)

"ஆளி நன்மான் அணங்குடை யொருத்தல்" (அகநா.381:1)

"ஆளி நன்மா னணங்குடைக் குருளை" (பொருந.139)

"தணங்குடை யாளி தாக்கலிற் பலவுடன்" (பெரும்பாண்.258)

"அளைச்செறி யுழுவையு மாளியு முளியமும்" (குறிஞ்சிப்.252)

என்னும் ஏழு இடங்களில் ஆளி எனும் உயிரினம் கூறப்பட்டுள்ளது. ஆளி, குறிஞ்சி நிலத்திற்குரிய மலைப்பகுதிகளில் மட்டும் வாழ்ந்த விலங்காகும்.

### 1.4.5.1. ஆளி – யானையா

சங்க காலத்தில் ஆளி என்பது யானையுடன் அதிக அளவு தொடர்புபடுத்திக் கூறப்பட்டுள்ளதாலும் நிகண்டுகள், 'யானையாளி'[63] எனக் குறிப்பிடுவதாலும் இதனை யானையின் இனமாகக் கருத இடமுண்டு. ஆனால்,

"ஆளிநன்மான் அணங்குடை யொருத்தல்
மீளி வேழத்து நெடுந்தகை புலம்ப
ஏந்தல் வெண்கோடு வாங்கிக் குருத்தருந்தும்" (அகநா.381:1-3)

என்ற அடிகளில் யானையைத் தாக்கிக் கொன்று அதன் கொம்பைப் பறித்துக் குருத்தைத் தின்னும் விலங்காக ஆளி கூறப்பட்டுள்ளது. யானை தாவர உண்ணி இனத்தைச் சார்ந்தது. ஆளியோ கோடுடைய வலிய களிற்றை இரையாகக் கொண்டு இழுத்துச் செல்லும் விலங்காகக் கூறப்பட்டுள்ளது.[64] இதனால் ஆளியானது விலங்குண்ணி இனத்தைச் சார்ந்தது என்பது நன்கு

விளங்கும். இவ்வுணவு வேறுபாட்டினாலும், யானையும் ஆ கூறப்பட்டுள்ளதாலும் யானையினின்று வேறுபட்ட உயிரினம் ஆெ. புலனாகும்.

### 1.4.5.2. ஆளி – அரியா

சிங்கத்தின் பெயரை ஆசிரிய நிகண்டு,[65] உரிச்சொல் நிகண்டு[66] போன்றவை ஆளியென்று குறிப்பிடுகின்றன. ஆனால்,

"ஆளியி ணங்கும் அரியின் குருளையும்
வாள்வரிப் பறழும் மதகரிக் களபமும்" (சிலப்.25:48-49)

என்ற சிலப்பதிகார அடிகளுக்கு, "ஆளி, சிங்கம், புலி, யானை என்பவற்றின் குட்டிகள்"[67] எனப் பொருள் கூறுவர் ந.மு.வேங்கடசாமிநாட்டார். இதனால் ஆளி, சிங்கம், புலி, யானை என்பவைத் தனித்தனி விலங்குகள் என்பது புலனாகும். இக்கருத்தை அடியொற்றியே, "ஆளி என்பது சிங்கமன்று"[68] எனவும், "ஆளி- சிங்கத்தின் வேறுபட்டது"[69] எனவும் அறிஞர்கள் குறிப்பிடுவர். இவற்றால் ஆளி என்பதனைச் சிங்கத்தின் பெயராக நிகண்டுகள் சுட்டிக் காட்டினாலும், ஆளியும், சிங்கமும் வெவ்வேறானவை என்பதை உணரமுடியும்.

### 1.4.5.3. ஆளி பற்றி அறிஞர்கள் கருத்து

ஆளியின் உடலமைப்புப் பற்றி, "ஆளி என்ற சொல் சிங்க உடலும் ஆனைத் துதிக்கையும் கொண்ட விலங்கைக் குறிக்கின்றது"[70] என மு.வ.வும், "யானையினுடைய கையும் சிங்கத்தினுடைய உருவும் கலந்த விலங்கு"[71] எனப் பி.எல்.சாமியும், "ஆளி என்பது சிங்கத்தின் இனத்தைச் சேர்ந்த சற்றே

மாறுபட்ட விலங்காக இருத்தல் வேண்டும் அல்லது சிங்கத்தின் வீரமிக்க ஒரு சிற்றினமாக இருத்தல் வேண்டும்"[72] என இரா.வசந்தக்குமாரும், "இது சிங்கத்தைப் போன்ற ஒரு விலங்கு"[73] என மா.இராசமாணிக்கனாரும் விளக்கிக் கூறுவர். ஆளி என்பதற்கு, "யானையின் தந்தமும் துதிக்கையும் சிங்கத்தின் முகமும் உடையதாகக் கருதப்படும் மிருகம்"[74] எனக் கழகத் தமிழகராதியும் பொருள் உரைக்கின்றது. இச்செய்திகளைப்போன்று நிகண்டுகள் சிங்கத்திற்கு, 'யாளி'[75] எனப் பொருள் மயங்கப் பெயர் சுட்டுகின்றன. இது சிங்கம் போன்ற தோற்றமும், சிங்கத்தைவிடப் பாய்ந்து செல்லும் வலிமையையும் கொண்டு இருந்தது. அறிஞர்களும், திறனாய்வாளர்களும், அகராதிகளும் இந்த ஆளி எனும் விலங்கை மாறுபட்ட விலங்காகக் கருதுகின்றனர். எனவே, பெரும்பான்மையான கருத்துக்கள் ஆளி என்பதைச் சிங்கத்துடன் தொடர்புபடுத்திக் கூறுவதால் இதனைச் சிங்கத்தின் சிற்றினமாகவும் குறிப்பிட இடமுண்டு.

### 1.4.6. நிரைகள்

ஓரின விலங்குகள் கூட்டமாகக் கூடுவதை நிரை என்று அழைப்பர். எருதும், பசுவும் சேர்ந்த கூட்டம் ஆநிரை எனப்படும். ஆநிரை, ஆமா, கவரி என்ற மூன்று விலங்குகளும் இதன் வகைகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன.

#### 1.4.6.1. ஆநிரை

சங்க இலக்கியத்தில் 'மாடு' என்ற சொல்இடம்பெறவில்லை. எனினும் ஆ, பசு, எருது, ஏற்றை, ஆநிரை, நாகு, காளை என்ற சொற்கள் இடம்பெற்றுள்ளன. சங்க காலத்தில் ஐந்திணை மக்களும் ஆநிரைகளை

விரும்பி வளர்த்தனர். இவை செல்வமாகப் போற்றப்பட்டன. வெள்ளி மீன் தோன்ற, பறவைகள் ஒலிக்க, விடியலில் எருதுகளான செல்வங்களை வாழ்த்தி இரவலர் செல்வந்தர் பெருமனைக்குச் சென்றனர்[76] என்னும் செய்தி இதனை விளக்கும். "செல்வக் கவர்ச்சியே வெட்சிப் போருக்கு மூலம். அக்காலச் செல்வம் மாடுகளே"[77] என்பர் க.ப.அறவாணன். "மாடு என்றாலே செல்வம் என்று பொருள். எருதுகள் செல்வமாகக் கருதப்பட்டன. பரிசிலர் பரிசாக எருதுக் கூட்டங்களை விருமபிப் பெற்றனர்"[78] என இரா.வசந்தகுமாரும் இதனை வழிமொழிவர்.

சங்ககாலத்தில் ஆநிரைகள் கொங்கு நாட்டுக் கொங்கரிடத்தில் பெருமளவு காணப்பட்டதை,

"கயிறுகுறு முகவை மூயின மொய்க்கும்
ஆகெழு கொங்கர் நாடகப் படுத்த" (பதிற்.22:14-15)

"சேண்பரன் முரம்பி னீர்ம்படைக் கொங்கர்
ஆபரந் தன்னபல் செலவின்" (பதிற்.77:10-11)

என்பன போன்ற அடிகள் உணர்த்துகின்றன.

ஆநிரைகளின் தோற்றத்தை, வெள்ளைநிறக் கால்களை உடைய காரி, கபிலை நிறமுடைய குரால், செம்மறுவுடைய வெள்ளை, காலில் வெள்ளை நிறமும் மேனியில் சிவந்த நிறமுடையது என்று கலித்தொகை சுட்டுகின்றது.[79] ஆனால், "காரியைத் தவிர மற்ற நிறமுடைய மாடுகளைத் தனித்த இனமாகக் கருதமுடியாது. மற்றவையெல்லாம் கலப்பினமாகவே கருதவேண்டும்"[80] என்பர் பி.எல்.சாமி. இதனால் சங்க காலத்தில் காரி என்னும் மாடுகள் சிறப்பிடம் பெற்று விளங்கியதை அறியஇயலும். இதன் தோற்றத்தை, "ஒழுங்காக நீண்டு

வளர்ந்த கொம்புகளும், முதுகின்மேல் விளங்கும் பருத்த திமிலும், கழுத்தின் கீழ்த்தொங்கும் அலைத்தாடியும் காண்போர் கருத்தைக் கலங்கச் செய்யும்"[81] என அ.திருமலைமுத்துச்சாமி விளக்குவர்.

ஆநிரைகளின் இயல்பினை, உயர்ந்த ஆனேற்றினைக் கண்டு சிறந்த பசுக்கள் பெரிதும் விரும்பித் தொடர்தல் இயல்பு,[82] ஒரு ஏறு பல பசுக்களோடு கூடுவதுண்டு,[83] ஈனும் தொழிலையுடைய பசு தனது கன்றுக்குப் பால் சுரந்து கொடுக்கவேண்டுமென்னும் விருப்பமுடையது; அதனால் அப்பசு கன்றைத் தேடிச் சென்றது,[84] கனமழை பெய்கின்ற பொழுது ஏறானது தலையைச் சாய்த்து நிற்கும் இயல்பினது[85] என்பன போன்ற செய்திகள் விளக்கும்.

### 1.4.6.2. ஆமா

ஆமா என்பது காட்டில் வாழும் பசு வகையைச் சார்ந்த ஒரு விலங்காகும். சங்கப்பாக்களில்,

"தடங்கோட் டாமான் மடங்கல் மாநிரை" (நற்.57:1)

"மடக்கண் வரையா நோக்கி வெய்துற்று" (குறுந்.363:3)

"ஆமா நல்லேறு சிலைப்பச் சேணின்" (முருகு.315)

என்ற பாடலடிகளில் ஆமான், வரையா, ஆமா என்ற சொற்கள் மலைப்பசுவாகிய ஆமாவைக் குறித்துப் பயின்றுவந்துள்ளது. ஆ போலும் விலங்கு என்ற பொருளில் ஆமா என்ற சொல் தோன்றிற்று. இதனை, "காட்டில் வாழும் ஆமான் பசுவைப் போலக் காணப்பட்டதால் ஆவைப் போன்ற விலங்கு என்ற பொருளில் ஆமா என்று பெயர் பெற்றது"[86] என்பர். ஆமா என்ற சொல் 'ன்' ஒற்றுப் பெற்று ஆமான் என்றாயிற்று. 'வரையா'[87] என்ற

குறுந்தொகைச் சொல்லுக்கு மலைப்பசு எனப் பொருளுரைப்பர் உ.வே.சா. இதனை, "வரையாடு என்பது போல வரையா என்றொரு விலங்கும் சங்க நூல்களில் கூறப்படுவதை இது சார்பாக நினைக்க வேண்டும்"[88] எனக் குறிப்பிடுவர் பி.எல்.சாமி. இதனால் வரையா என்பதும் ஆமாவைக் குறித்து வந்தது என்பதை அறியஇயலும்.

தற்காலத்தில் ஆமாவைக் காட்டெருமை என்றும் அழைக்கின்றனர். ஆனால், "எருமை இனத்திற்கும் ஆமானினத்திற்கும் நெருங்கிய தொடர்பு இல்லை. மாட்டினமே ஆமானிற்கு நெருங்கிய தொடர்புடையது. இன்று காணப்படும் மாடு ஆமானின் இரத்தக் கலப்புடன் கூடியது"[89] எனச் சுட்டுவர். உரையாசிரியர்களும் காட்டுப்பசு, காட்டுஎருது, காட்டா, மலைப்பசு என்று பொருள் கூறியிருப்பதால் ஆமா என்பது ஆநிரைகளில் ஒருவகையாகக் கருதப்பட்டது என்பது நன்கு விளங்கும்.

### 1.4.6.3. கவரி

தொல்காப்பியத்திலும், சங்க இலக்கியத்திலும் கவரி என்ற விலங்கு குறிக்கப்படுகின்றது. தொல்காப்பியத்தில், இளமைப்பெயர், ஆண்பாற்பெயர், பெண்பாற்பெயர் போன்றவற்றைக் குறிப்பிட 'கவரி'[90] என்ற சொல் நான்கு இடங்களில் சுட்டப்பட்டுள்ளது. இந்நான்கிடங்களிலும் 'கவரி' என்றே உள்ளது. 'மான்' என்ற சிறப்புப்பெயர் இணைத்துக் கூறப்படவில்லை. இதனால் தொல்காப்பியர் கவரியைத் தனி விலங்காகக் கருதினர் என்று கூற இடமுண்டு.

சங்க இலக்கியத்தில்,

"கவிர்ததை சிலம்பிற் றுஞ்சுங் கவரி" (பதிற்.11:21)

"கவரி முச்சிக் கார்விரி கூந்தல்" (பதிற்.43:1)

"ஆய்மயிர்க் கவரிப் பாய்மா மேல்கொண்டு" (பதிற்.90:36)

"நரந்தை நறும்புன் மேய்ந்த கவரி" (புறநா.132:4)

என்ற நான்கு பாடலடிகளில் 'கவரி' என்ற சொல் இடம்பெற்றுள்ளது.

"நெடுமயி ரெகினத் தூநிற வேற்றை" (நெடுநல்.91)

என்பதில் 'எகினம்' என்ற சொல்லால் கவரி குறிக்கப்பெற்றுள்ளது. சங்ககாலத்திலும், கவரிக்கு மான் என்ற ஒற்று இணைக்கப்படாதது குறிப்பிடத்தக்கது. ஆனால், இவ்விலங்கு பற்றி, "இது மானின் ஒரு வகை என்றும், இவ்விலங்கு தன் உடலில் உள்ள ஒரு மயிரை இழந்தாலும் உயிர் வாழாது,"[91] "மான்களில் ஒன்றான கவரிமான் மானத்திற் சிறந்ததாகப் பேசப்படுகின்றது,"[92] "கவரிமான் என்ற ஒரு வகை மானின் இயல்பான வாழ்க்கை பற்றி உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் குறிப்பிடுகிறார்"[93] என்று உரைப்பர். இச்செய்திகள் அனைத்தும் கவரியை 'மான்' என்று பறைசாற்றுகின்றன.

கவரிமாவின் முடியைக் கலந்து சங்ககால மகளிர் இழந்த மயிர்க்கற்றையை நிறைத்ததையும், வீரர்கள் கவரி மயிரால் குதிரையின் தலையை ஒப்பனை செய்ததையும்,

"கவரிமுச்சிக் கார்விரி கூந்தல்
ஊசன் மேவற் சேயிழை மகளிர்" (பதிற்.43:1-2)

"ஆய் மயிர்க் கவரிப் பாய்மா மேல்கொண்டு" (பதிற்.90:36)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இதனை, "இயற்கையில் நீளமான முடியில்லாதபோது செயற்கை முடியை வைத்துக் கொள்ளுதல் இக்காலத்திய

கூந்தல் ஒப்பனை முறைகளில் ஒன்று. பண்டைக் காலத்திலும் இம்முறை இருந்திருக்கின்றது. கவரிமான் மயிரைக் கலந்து முடித்துக்கொண்டனர்"[94] என்னும் கூற்றும் விளக்கும். இதன்வழி, கவரியின் மயிர்ப்பயன்பாடு விளங்கும்.

சங்ககாலத்தில், "இரலை, நவ்வி, மரையான், உழை, கடமா"[95] என்ற ஐவகை மான்களைத் தவிர பிற மான் வகைகள் காணப்படவில்லை. இவைகளில் எந்த மானிற்கும் மகளிரின் கூந்தலுக்கு மயிர்க்கற்றையைத் தரும் அளவிற்கு நீளமான தடித்த மயிர்க்கற்றை இருந்ததாகக் கூறப்படவில்லை. எனவே, 'கவரி' என்பது தனித்த ஒரு விலங்காகும். மானினத்தைச் சார்ந்ததில்லை என்பதை அறியஇயலும்.

நிகண்டுகளில் கவரிமாவின் பெயர் மான்கள் என்ற பட்டியலில் இடம்பெறாமல் கவரிமான் எனத் தனித்தலைப்பிட்டுக் கூறப்பட்டுள்ளது.[96] மான்களின் பட்டியலில் 'கவரி,' 'எகினம்' என்ற சொற்களும் இடம்பெறவில்லை. எனவே நிகண்டாசிரியர்களும் கவரியைத் தனி இனமாகக் கருதியமை புலனாகும். இவற்றால் தொல்காப்பியம், சங்கஇலக்கியம், நிகண்டுகள், அகராதிகள், களஞ்சியங்கள் போன்றவை கவரியைத் தனிவிலங்காகக் கருதியமையை அறியஇயலும்.

சங்கப்பாடல்கள் கவரியை இமயமலைப் பிரதேசத்தில் வாழ்ந்ததாகக் குறிப்பிடுகின்றன. கவரி, அங்குள்ள நரந்தம் புல்லை மேய்ந்து, சுனை நீரை நுகர்ந்து, தகர மரத்தின் நிழலில் தங்கியிருந்தமை,[97] அவ்விமயச் சூழ்நிலையைக் கனவில் கண்டமை[98] போன்றவை கவரியின் வாழ்விடத்தை விளக்கும்.

கவரி உயர்ந்த இடத்தில் குளிர்ந்த சூழ்நிலையில் வாழ்வதால், கடுங்குளிரைத் தாங்கத் தடித்த மயிர்க்கற்றைகளாலான உடற்போர்வை

இருந்திருக்கின்றது. இம்மயிர்க்கற்றைகளையே மக்களும் பயன்படுத்தியுள்ளனர். இமய மலையில் பெரும்பாலும் 'யாக்' எனப்படும் விலங்கு மயிர்க்கற்றையுடன் காணப்படுகின்றது. "நீண்ட மயிர்க்கற்றைகளையுடையதால் கவரியைச் சடைமாடு எனவும் அழைப்பர்."[99] இதனை, "இமய மலையில் வாழும் விலங்குகளில் மனிதரோடு பழகி வாழும் விலங்கு யாக் எனப்படும் விலங்காகும். இதையே கவரிமா என்று சங்கப்பாடல்கள் கூறுகின்றன,"[100] "கவரிமா என்பது இயற்கையில் இமய மலையில் வாழும் விலங்காகும். இதை யாக்(Yak) என்று அழைப்பர்"[101] என்பன போன்ற கருத்துகளும் விளக்கும். எனவே, கவரி என்பது நீண்ட மயிருடன் கூடிய மாட்டினத்தில் ஒன்றான 'யாக்' எனப்படும் விலங்கு என்பது நன்கு விளங்கும். இது மலையில் மட்டும் வாழும் விலங்காகக் குறிக்கப்படுகின்றது.

### 1.4.7. எண்கு

'எண்கு' என்ற சொல் கரடியைக் குறிக்கும். சங்க இலக்கியத்தில் 'கரடி' என்ற சொல் இடம்பெறவில்லை. 'எண்கு,'[102] 'உளியம்,'[103] 'பெருங்கை எண்கு'[104] என்ற சொற்களால் இது அழைக்கப்பட்டுள்ளது. எண்கின் ஆணினைப் 'பெருங்கை ஏற்றை'[105] என்றும், பெண்ணினத்தைப் 'பிணவு'[106] என்றும், குட்டியைப் 'பிள்ளை எண்கு'[107] என்றும் அழைப்பர். எண்கின் நிறம் மிகவும் கருமையுடையதாக விளங்கும். ஆண்கரடி இருளைத் துணித்து வைத்தாற்போன்ற திரண்ட மயிரையுடைய குட்டியுடனும், பெண் கரடியுடனும் மகிழ்ந்திருந்ததை,

"வான்புகு தலைய குன்றத்துக் கவாஅன்

பெருங்கை எண்கின் பேழ்வாய் ஏற்றை

இருள்துணிந் தன்ன குவவுமயிர்க் குருளை

தோன்முலைப் பிணவொடு திளைக்கும்" (அகநா.201:15-18)

என்ற அடிகள் புலப்படுத்துகின்றன.

எண்குக் கூட்டத்திற்கு, பாலை நிலத்தில் உள்ள இருப்பைப் பூக்களும், கொன்றைப் பழங்களும் விருப்ப உணவாகும்.[108] இருப்பையின் பூக்களைக் கவர்ந்துண்ணும்.[109] இவை கரையான் புற்றுச் சோற்றை வெறுத்த பொழுது இருப்பை மரத்தின் பூவையும்,[110] இருப்பையின் பூவையும், பழத்தையும் வெறுத்தபொழுது கரையான் புற்றின் சோற்றையும் விரும்பி உண்ணும்.[111] நடு இரவில்கூட புற்றாஞ் சோற்றை உடைத்துத் தின்னும் தன்மை வாய்ந்தவை.[112] மின்மினிப்பூச்சிகள் மொய்த்திருக்கும் புற்றினை இடிக்கும் இக்காட்சியானது, இரும்பு வேலை செய்யும் கொல்லன் இரும்பினைக் காய்ச்சி அடிக்கும்பொழுது சிதறும் தீப்பொறி சிதறுவதை ஒத்திருக்கும்.[113] எண்கு இரையைத் தேடிப் புற்றை இடிக்கும்பொழுது அதன் கையில் பாம்பு அகப்படுவதுமுண்டு.[114] புற்றிலே கிடந்த பாம்பு நடுங்கும்படி அகழ்வதும் உண்டு என்று எண்குவின் உணவுமுறை சுட்டப்படுகிறது.[115]

இங்ஙனம் காட்டு விளைபொருட்களை மட்டும் உணவாகக் கொள்ளும் எண்குகள், சில சமயம் மனிதர்கள் எதிர்ப்பட்டால் அவர்களைத் தாக்கிக் காயப்படுத்துவதும் உண்டு. தற்காலத்தில் எண்கு மனிதர்களால் பழக்கப்படுத்தப்பட்டு வித்தை காட்டும் விலங்காக உள்ளமை குறிப்பிடத்தக்கது.

### 1.4.8. எருமை

சங்ககாலத்தில் எருமை, 'காரான்'[116] என வழங்கப்பட்டது. சங்க இலக்கியத்தில் காட்டெருமை, வீட்டெருமை ஆகிய இரண்டையும் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. எருமைகள் நீர் நிறைந்த பகுதியான மருதநிலத்தூரில் வசிக்கும் இயல்பின. மருதநிலத்தூரில் குளிர்ந்த நீரில் ஆடுகின்ற எருமை கட்டப்பட்ட தோணி போலத் தோன்றியது.[117] இதன் தோற்றத்தை, "கார் என்றழைக்கப்படும் இந்தியக் காட்டெருமை மிகப்பெரியதும் கரிய நிறமுடையதுமாகும்"[118] என விளக்குவர் எஸ்.எம்.நாயர்.

சங்க இலக்கியத்துள், 'எருமை வெளியனார்,'[119] 'எருமை வெளியனார் மகனார் கடலனார்'[120] போன்ற புலவர்களின் பெயர்கள் காணப்படுகின்றன. பெயரின்முன் 'எருமை'[121] என்னும் அடைமொழியுடையோர் சங்கப்புலவர்களால் பாடப்பட்டிருக்கின்றனர். 'எருமைப்பத்து' என்ற தலைப்பின்கீழ் ஐங்குறுநூற்றில் பத்துப்பாடல்கள் பாடப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது. இச்சங்க இலக்கியப் பெயர் வழக்குகள் எருமை, தமிழரோடு ஒன்றியிருந்த உயர்வைக் காட்டுகின்றன. தற்காலத்தில்கூட எருமைகளின் எண்ணிக்கை உலகிலேயே இந்திய நாட்டில்தான் அதிகம் என்பதை, "எருமையின் பயன் கருதியே பண்டைக்காலந்தொட்டு நம்நாட்டில் வளர்க்கப்பட்டு வந்துள்ளன. எருமைகள் தென்கிழக்காசிய நாடுகளில் மட்டும்தான் உள்ளன என்பது குறிப்பிடத்தக்கது. இந்தியாவில் தற்பொழுது எண்பது மில்லியனுக்கும் மேல் எருமைகள் உள்ளன. இது உலகின் மொத்த எருமைகளின் எண்ணிக்கையில் ஐம்பத்தியொரு சதவிகிதம் என்பதுடன் எருமைகள் எண்ணிக்கையில் நம்நாடு முதலிடம் வகிக்கின்றது"[122] என்னும் கூற்று நன்கு விளக்கும்.

சேறுநிறைந்த பகுதியில் எருமை வாழும் இயல்பின. ஆம்பல் மலரைத் துறையில் மேய்ந்த எருமைக்கடா, சேற்றின் குழம்பில் இரவெல்லாம் துயின்று விடியலில் வரால்மீன்கள் மிதிபட வெளிவந்தது என்று அகநானூறு குறிப்பிடுகின்றது.[123] ஒடுங்காடு எனும் ஊருக்கு அப்பால் உள்ள மருதநிலத்தூரில் தாமரையை வெறுத்த எருமை பலாவின் நிழலின்கண் தங்கியது.[124] மீன்கள் மிதிபட நடந்து செங்கழுநீர்ப் பூவைத் தின்ற எருமை, பசிய மிளகுக்கொடி படர்ந்த பலாவின் நிழலில் மஞ்சளின் இலை முதுகைத் தடவக் காட்டு மல்லிகையாகிய படுக்கையில் துயில் கொண்டிருந்ததை சிறுபாணாற்றுப்படை குறிப்பிடும்.[125] எருமைக்கடாக்கள் இணைசேரும் காலத்தில் தன் பெண் எருமைகளுடன் நிழல்மிக்க நீரோடையுடைய சோலையில் கூடும்.[126]

ஒரு நாட்டில் பால்வளம் பெருக, பசுக்களோடு எருமைகளும் வேண்டும். இதனால் தமிழர்கள் சங்ககாலந்தொட்டுத் தற்காலம்வரை எருமையை விரும்பித் வளர்த்து வருவது குறிப்பிடத்தக்கது. காய்ந்த செந்நெல்லின் கதிரைத் தின்ற எருமை தான் ஈன்ற கன்றுடன் நெற்கூடுகளின் நிழலில் உறங்கியதை பட்டினப்பாலை விளக்கும்.[127] இவற்றால் எருமைகளின் இயல்பையும், தன்மையையும், உணவு முறைகளையும் உணர்ந்துகொள்ள முடிகின்றது.

### 1.4.9. எலிகள்

குட்டி போட்டுப் பாலூட்டும் சிறிய விலங்குகளில் எலியும் ஒன்றாகும். தொல்காப்பியத்தில் ‘எலி’ என்ற சொல் இடம்பெற்றிருந்தாலும் சங்க இலக்கியத்தில்தான் இல்லெலி, கருப்பைஎலி, வெள்ளெலி என்ற மூன்று வகைகளைக் காணமுடிகின்றது. இவ்வெலிகள் வீடுகளிலும் காடுகளிலும் வாழ்ந்து வந்திருக்கின்றன.

### 1.4.9.1. இல்லெலி

தற்காலத்தில் வீட்டில் வாழும் எலிகள் போல சங்க காலத்திலும் இல்லெலிகள் இல்லத்தில் இருந்ததை இதன்பெயர் விளக்கிக் காட்டுகின்றது. வீட்டில் வறுமை காரணமாக உணவின்றி எலிகள் கூட்டமாகச் சுவர்களில் மடிந்திருக்கும் காட்சியை,

"வல்சி யின்மையின் வயின்வயின் மாறி

இல்லெலி மடிந்த தொல்சுவர் வரைப்பிற்" (புறநா.211:18-19)

என்ற அடிகள் விளக்கும். இவ்வெலிகளைக் கூகைச்சேவல் நள்ளிரவில் உணவாகக் கொண்டமை,[128] காட்டுப்பூனைகள் இல்லெலிகளை இரவில் தேடியமை[129] போன்ற குறிப்புகள் இவ்எலிகள் வாழும் சூழ்நிலையையும், அது பிற உயிரினங்களுக்கு உணவாகிய தன்மையும் புலப்படுத்தும்.

### 1.4.9.2. கருப்பை எலி

கருப்பை எலி காடுகளில் வாழக்கூடியது. இதனால் இதனைக் 'காட்டெலி' என்றும் அழைப்பர். இதன் பெயர்க்காரணத்தை, "கருநிறமானதால் கருப்பை என்றழைத்ததாகத் தெரிகின்றது"[130] என்பர் பி.எல்.சாமி. இது கருங்கால் வரகு விளையும் வன்பாலிலும், கவை முட்களை உடைய கள்ளி மரத்தடியிலும் வாழும் இயல்புடையது.[131] இது பருத்தி வேலியில் வாழ்வதை,

"பருத்தி வேலிக் கருப்பை பார்க்கும்

புன்புலந் தழீஇய வங்குடிச் சீறூர்" (புறநா.324:7-8)

என்ற அடிகள் விளக்கும். வன்புலமாகிய கொல்லையின் வரப்பில் காணப்பட்டதால் இது 'கோட்டெலி' என்றும் அழைக்கப்பட்டது. இவ்வெலிகள் வேளாண்மைத் தொழிலுக்குச் சேதம் விளைவித்ததை,

"வேனிற் கோங்கின் பூம்பொகுட் டன்ன
குடந்தையஞ் செவிய கோட்டெலி யாட்டக்
கலியார் வரகின் பிறங்குபீ ளொளிக்கும்
வன்புல வைப்பி னதுவே" (புறநா.321:4-7)

என்ற அடிகள் விளக்கும். குறும்பூழ் பறவையெனும் காடை இதனை வேட்டையாடியமை பற்றிப் புறநானூறு குறிப்பிடுகின்றது.[132]

### 1.4.9.3. வெள்ளெலி

எலியின் மற்றொரு வகை வெள்ளெலியாகும். இது வறட்சியான நிலங்களில், பாலைப் பகுதிகளில் வெண்மை கலந்த பழுப்பு நிறமாகக் காணப்படும். வளைக்குப் பக்கத்தில் குவித்துள்ள புதுமண்ணால் இதன் இடத்தைத் தெரிந்துகொள்ளமுடியும். இது குன்றுமணி போன்ற கண்களையுடையது. மெல்லிய கால்களையும், தாடியினையுமுடையது. இதன் ஆணினை ஏற்றை என்பர். இவ்வெலியின் அகன்ற வாயை மோவாய் என்று அழைப்பர்.[133] இவ்வெள்ளெலி தோட்டங்களிலும் விளைச்சல் நிலங்களின் அருகிலும் வாழும். உழவரின் விளைச்சலைச் சேதப்படுத்தும். முற்றிய கதிர்களைக் கொண்டுவந்து வளைக்குள் உள்ள அறைகளில் சேர்த்துவைக்கும் இயல்புடையது. இத்தகைய வெள்ளெலியின் உணவு சேகரிக்கும் முயற்சி பற்றி,

"விளைபதச் சீறிய நோக்கி வளைகதிர்

வல்சி கொண்டளை மல்க வைக்கும்

எலிமுயன் றனைய ராகி யுள்ளதம்

வளன்வலி யுறுக்கு முளமி லாளரொடு" (புறநா.190:1-4)

என்று சோழன் நல்லுருத்திரன் விளக்குவர்.

சங்ககாலந்தொட்டுத் தற்காலம்வரை, எலி வேளாண்மைக்கு மிகுந்த பாதிப்பை ஏற்படுத்தி வருகின்றது. இந்தியாவில் பல இடங்களில் மூங்கில் பரவலாகக் காணப்படுகின்றது. இம்மூங்கில் முப்பது ஆண்டுகளுக்கு ஒருமுறை பூக்கும் தன்மை கொண்டவை. இப்பூக்களையும், இதில் உருவாகும் மூங்கில் அரிசியையும் உண்ண எலிகள் வரும். மூங்கில் பூக்கள் பெண் எலிகளின் இனப்பெருக்கத்தினை அதிகரிப்பதால் அவை விரைவாகக் குட்டிகளை ஈனும். மூங்கில் அரிசி கிடைப்பது நின்றவுடன் இந்த எலிகள் வயல்வெளிகளுக்குள் புகுந்துவிடும். அவ்விடத்தில் அறுவடைக்குத் தயாராக இருக்கும் தானியங்களை அழித்துவிடும். எனவே இவ்வெலிகளைக் கண்டஞ்சிய, அருணாசல அரசு, ஒரு எலி வாலைக் கொண்டுவரும் நபருக்கு உருபாய் இரண்டு அளிக்க முடிவுசெய்துள்ளமை இவ்விடத்தில் சுட்டத்தக்கது.[134]

### 1.4.10. ஒட்டகம்

விலங்குகளில் மிகவும் உயரமானது ஒட்டகமாகும்.தொல்காப்பியர்,

"ஒட்டக மவற்றோ டொருவழி நிலையும்" (தொல்.1517)

"ஒட்டகம் குதிரை கழுதை மரையிவை

பெட்டை யென்னும் பெயர்க் கொடைக் குரிய" (தொல்.1552)

என்ற நூற்பாக்களில் 'ஒட்டகம்' என்ற பெயரைச் சுட்டிக் காட்டுவர். சங்க இலக்கியத்தில் அகநானூறு, சிறுபாணாற்றுப்படை ஆகிய இரு நூல்களில் ஈரிடங்களில் மட்டும் ஒட்டகம் பற்றிய குறிப்பு காணப்படுகின்றது. ஒட்டகம் படுத்துறங்குவதை சிறுபாணாற்றுப்படை விளக்குகின்றது.[135] பாலைநிலத்துப் பாறைகளில் காய்ந்து கிடக்கும் எலும்புகள் ஒட்டகத்தின் மிக்க பசியினைப் போக்கியமையை,

"குறும்பொறை யுணங்குந் தகர்வெள் ளென்பு
கருங்கால் ஒட்டகத் தல்குபசி தீர்க்கும்
கல்நெடுங் கவலைய கானம் நீந்தி" (அகநா.145:17-19)

என்ற அடிகள் விளக்கும். சங்ககாலத்தில் பாலைநிலத்தில் ஒட்டகம் காணப்படுவதால் போக்குவரத்திற்குப் பயன்படுத்தியிருக்க இடமுண்டு. அதனால்தான் இன்றும் இது 'பாலைவனக்கப்பல்' என்று போற்றப்படுகின்றது.

### 1.4.11. கழுதை

சங்ககால மக்கள் தம் வேலைகளுக்காகப் பழக்கப்படுத்தப்பட்ட விலங்குகளில் கழுதையும் ஒன்று. இக்கழுதையைச் சுமை தூக்கவும், பகைவர் நிலத்தை உழுவதற்கும் பயன்படுத்தியுள்ளனர். கழுதையின் தோற்றத்தை, "கழுதையின் உடலின் நிறம் சாம்பல் அல்லது மஞ்சள் பழுப்பு நிறமாகவும், வயிற்றின் அடிப்பாகத்தில் வெண்பட்டையும் இருக்கும். இதற்குக் கருப்பு முனையுடன் கூடிய நீண்ட கூர்மையான காதுகள் உண்டு. திண்ணிய பழுப்பு நிறம் கொண்ட பிடரி மயிரும் இதனைத் தொடர்ந்து வரும் கருப்புக்கோடு முதுகில் சென்று வால் முனை வரை காணப்படும்"[136] என்று விளக்குவர் எஸ்.எம்.நாயர். கழுதையின் நிறத்தை, வெண்மை நிறமுடையது என்று

அகநானூறு குறிப்பிடுகின்றது.[137] இதன் வாயை, 'வெள்வாய்'[138] என்றும், செவியை, 'நெடுஞ்செவி,'[139] 'அணர்ச்செவி'[140] என்றும், கால்களைக் 'குறுங்கால்'[141] என்றும் இதன் தோற்றம் குறிப்பிடப்படுகின்றது.

### 1.4.12. குதிரை

சங்ககால மக்கள் குதிரையைப் போற்றி வளர்த்து வந்தனர். ஒவ்வொரு அரசரிடமும் குதிரைப்படை இருந்தது. போர்க்களத்தில் போரிட அப்படை பயன்படுத்தப்பட்டது. பழங்காலத்தில் பயணம் மேற்கொள்ளத் தேர் பயன்படுத்தப்பட்டதால் அதை இழுக்கக் குதிரை பயன்பட்டது. குதிரை, 'இவுளி,'[142] 'வயமா,'[143] 'பரிப்புரவி,'[144] 'நன்மா,'[145] 'கலிமா'[146] என்ற பெயர்களால் அழைக்கப்பட்டது. சங்க காலத்தில் குதிரைகளின் இலக்கணங்களைக் கூறும் நூல்கள் இருந்தமையை,

"நூனெறி நுணங்கிய கானவில் புரவிக்

கல்லெனக் கறங்குமணி யியம்ப வல்லோன்" (அகநா.314:8-9)

என்ற அடிகள் விளக்கும். புரவி நூல் கூறும் இலக்கணம் அமைந்த நான்கு குதிரைகள் தேரில் பூட்டப்பட்டன; நீலமணி நெற்றிச்சுட்டியும் அணியப்பட்டது; கழுத்து மயிரும் அழகாக வெட்டப்பட்டது; நெய்கலந்த சோற்றையும் குதிரைக்கு அளித்தனர் என்று குதிரைகள் அலங்கரி[redacted]க்கப்பட்டதையும் அவற்றின் உணவு முறைகளையும் அகநானூறு குறிப்பிடும்.[147] "குதிரையின் உடல் இலக்கணத்தைக் குறித்த நூல் சங்க காலத்தில் இருந்துள்ளது. அந்நூலின்படி அமைந்த குதிரைகளின் வேகம் பற்றிச் சில பாடல்கள்

கூறுகின்றன"[148] எனக் குறிப்பிடுவர் இரா.வசந்தகுமார். இவற்றால் சங்ககாலத்தில் குதிரைகளின் இலக்கணம் கூறும் நூல்கள் இருந்தமை புலப்படும்.

சங்ககாலத் தமிழகத்தில் குதிரைகள் வாழ்ந்து வந்தபொழுதும் வெளிநாடுகளிலிருந்து கடல்வழியாக இறக்குமதி செய்யப்பட்டன. இதனை,

"நீரின் வந்த நிமிர்பரிப் புரவி" (பட்டினப் .185)

என்ற தொடர் விளக்கும். மேற்திசையில் உள்ள பால் போன்ற வெள்ளிய குதிரைகளை மரக்கலத்தின் வழி இறக்குமதி செய்தும்,[149] யவன தேசத்திலிருந்து குதிரைகள் இறக்குமதி செய்யப்பட்டதும்[150] குறிப்பிடத்தக்கது.

குதிரைகள் பல நிறமுடையனவாய்த் திகழ்ந்தன. அதில் வெள்ளைநிறக் குதிரைகளைச் சிறப்பாகக் கருதினர். இதனை,

"பால்புரை புரவி நால்குடன் பூட்டி" (பொருந.165)

என்ற அடி விளக்கும். காரி எனும் குதிரையையுடைய காரியும், பிடரி மயிருடன் கூடிய குதிரையையுடைய ஓரியும் போர் செய்தனர் என்றவழி போர்க்களத்தில் பல்வேறு குதிரைகளின் பயன்பாட்டை அறிய முடிகின்றது.[151] எனினும் அவற்றை வகைபிரித்து உணரமுடியவில்லை.

### 1.4.13. குரங்குகள்

தொல்காப்பியத்தில் மூன்று வகைக் குரங்குகள் கூறப்பெற்றுள்ளன. சங்க இலக்கியத்தில் கருங்கலையைச் சேர்த்து நான்கு வகைக் குரங்குகள் இடம்பெற்றுள்ளன. அவை செம்முகமந்தி, முசு, நரைமுகஊகம், கருங்கலை என்பவையாகும்.

### 1.4.13.1. செம்முகமந்தி

தொல்காப்பியத்தில்,

"குரங்கும் முசுவும் ஊகமும் மூன்றும்

நிரம்ப நாடின் அப்பெயர்க் குரிய" (தொல்.1521)

"குரங்கும் முசுவும் ஊகமும் மந்தி" (தொல்.1567)

என்ற நூற்பாக்களில் 'குரங்கு' என்ற சொல் ஒரு தனிப்பட்ட இனத்தைக் குறித்து வந்தது. இக்குரங்கு எனும் சொல்லே சங்க இலக்கியத்தில் 'குரங்கு' இனத்திற்குப் பொதுப்பெயராகவும், ஒரு தனிப்பட்ட வகைக்குச் சிறப்புப்பெயராகவும் பயின்று வந்துள்ளது. "தமிழ்நாட்டில் எங்கும் எளிதாகக் காணப்படும், மக்களிடம் பெரிதும் பழகும் ஒருவகைக் குரங்குண்டு. அதே பெயர் பின்னர் பொதுப்பெயராகப் பிற குரங்கு வகைகளையும் குறித்ததெனலாம்"[152] என்பர் பி.எல்.சாமி. "தமிழ்நாட்டில் அன்றும் இன்றும் பொதுவாக எங்கும் எளிதில் காணப்படும் குரங்குவகை மக்களிடம் நெருங்கிப் பழகும் குரங்கு வகை சங்க இலக்கியத்தில் செம்முகமந்தி என்றும் செம்முகப் பெருங்கிளை என்றும் அழைக்கப்பட்டது"[153] எனவும் சுட்டுவர். எனவே, 'குரங்கு' என்ற சிறப்புப்பெயரைப் பெறும் குரங்கு 'செம்முகமந்தி' என்பதை அறியஇயலும். இந்தவகைக் குரங்கிற்கு முகம் சிவந்து காணப்படும். இதனை,

"செம்முக மந்தி ஆரும் நாட" (நற்.355:5)

என்ற அடி விளக்கும். இக்குரங்கிற்குத் தலையில் வளையமான விளிம்பில் குறுமயிர் பல திக்குகளிலும நீட்டிக் கொண்டிருக்கும். நெற்றியின் நடுவில் வகிடு எடுத்தாற்போன்று பிரிந்திருக்கும். இத்தலைமயிரொழுங்கை, கடுவனொடு

களவியில் ஈடுபட்ட மந்தி கலைத்த மயிரை சுனை நீரில் கண்டு திருத்தியதாக நற்றிணை விளக்கும்.[154]

செம்முக மந்திக்கு வாயின் இருபக்கத்திலும் பைகள் உண்டு. இப்பைகள் உணவை விரைவில் உண்டு அடக்கிவைத்துப் பின்னர் ஓய்வாக உண்ணப் பயன்பட்டன. அவரைக்காயை வாய்நிறைய அடக்கிக் கொண்டு இருந்த மந்தியின் வாய், பண்ட வாணிகருடைய பையைப் போல இருந்தமை,[155] காவலை அஞ்சித் தினைக் கதிரைப் பறித்துக் கையால் நிமிட்டித் திரைத்துத் தன்னுடைய வளைந்த கவுளில் வாய்நிறைய அடக்கிக்கொண்டமை[156]போன்ற செய்திகள் இதனை விளக்கும்.

குறிஞ்சி நில வேட்டுவர் பாறையில் காய வைத்த தினையை மகளிர் நீராடும்பொழுது கவர்ந்து சென்று உண்டமை,[157] வாழைப்பூவின் மடலில் பெருகிவரும் நீரைப் பருகியமை,[158] காவலையும் மீறி வாழைக்கனிகளைச் செம்முக மந்திகள் கவர்ந்துண்டமை[159] போன்ற கருத்துக்களின் வழி மக்கள் வாழும் இடத்தில் இவை பரவலாகக் காணப்பட்டதை அறியமுடிகின்றது. ஆனால் மக்களிடம் நெருங்கிப் பழகாது மரங்கள் செறிந்த காட்டில் மட்டும் வாழும் செம்முகமந்திகளும் உண்டு. இதனை,

"மந்தியும் அறியா மரம்பயில் இறும்பில்" (அகநா.92:8)

"குரங்கறி வாரா மரம்பயில் இறும்பில்" (அகநா.368:9)

என்ற அடிகள் குறிப்பிடுகின்றன. இவற்றால் செம்முகமந்தி வாழும் சூழ்நிலையும், அதன் உணவு முறைகளும் விளங்கும்.

### 1.4.13.2. முசு

மை பூசியது போல முகம் கருத்துக் காணப்படும் குரங்கை 'முசு' என்றழைப்பர். இக்கருமையான முகம் கொண்டு, முசுவினத்தைப் பிறவகைக் குரங்குகளிலிருந்து பிரித்துணர முடிகின்றது. சங்க இலக்கியத்தில்,

"மைபட் டன்ன மாமுக முசுக்கலை" (குறுந்.121:2)

"கருமுக முசுவின் கானத் தானே" (அகநா.121:15)

என்ற அடிகள் இதனைப் புலப்படுத்துகின்றன. இதன் ஆண் 'கலை'[160] என்றழைக்கப்படும். 'கணக்கலை,'[161] 'இனக்கலை'[162] என்பன இதனை விளக்கும். முசுக்குரங்குகள் காடுகளிலும் ஊர்க்கருகாமையிலும் காணப்படுகின்றன. சில பகுதிகளில் குன்றுகளிலும் மலை உச்சியிலும் பாறைகளிலும் வாழ்வதுண்டு. மரக்கிளைகளில், மூங்கிலில் பாய்ந்து ஆடுவதுமுண்டு.[163] இம்முசுக்குரங்குகள் மூங்கிலில் பாயும்பொழுது அதில் விளைந்த வெள்ளிய நெற்கள் வெப்பம் மிக்க பாறையில் உதிர்ந்து, நகத்தை நெரிப்பது போன்ற ஓசையுடன் பொங்கியமை பற்றி அகநானூறு குறிப்பிடுகின்றது.[164]

ஆண் முசுக்குரங்குகள் மகிழ்ச்சியால் வெளியிடும் ஓசையைத் 'தூம்பு' என்பர். இவ்வொலியுடன் அருவியோசையையும் கேட்டுப் பெண்முசு மருண்டமையை,

"கணக்கலை இகுக்கும் கடுங்குரல் தூம்பொடு
மலைப்பூஞ் சாரல் வண்டியா ழாக
இன்பல் இமிழிசை கேட்டுக் கலிசிறந்து
மந்தி நல்லவை மருள்வன நோக்க" (அகநா.82:5-8)

என்ற அடிகள் புலப்படுத்தும் கடிய ஓசைக்கும், திடீர் ஒலிக்கும் இக்குரங்குகள் மிகவும் அஞ்சும். இதனை, வழிப்போக்கர்கள் போட்ட சோற்றுப் பொதிகளின் வெறும் ஓலைக் கூடைகள் சூறாவளிக் காற்றில் அடித்துச் செல்லும் ஓசையைக் கேட்டு மானும், முசுவும் அஞ்சியது என்று அகநானூறு எடுத்துரைக்கின்றது.[165] இதனால் முசுக்குரங்கள் வெருளும் தன்மை கொண்டவை என்பது புலனாகும். முசுக்குரங்குகள் நீர்நிலைகளுக்கு அருகில் வாழ்ந்ததை பெருங்குன்றூர்கிழார் குறிப்பிடுவர்.[166]

### 1.4.13.3. நரைமுகஊகம்

கருமையான உடலுடன் முகத்தில் பிடரிமயிர் போன்று நீண்ட நரைத்த மயிர்க்கற்றைகளையுடைய ஒருவகைக் குரங்கும் உண்டு. “இதன் முகத்தைச் சுற்றி நரைமயிர்க்கற்றை தொங்குவதால் இதை நரைமுக ஊகம”[167] என்பர். ஊகக் குரங்குகள் உயர்ந்த மலைகளிலும் குன்றுச்சிகளிலும் அடர்ந்த காடுகளிலும் காணப்படும்.[168] மழையில் நனைந்த விலங்குகள் பொதுவாக நடுங்கும் இயல்பினது. மழையில் நனைந்த குட்டிகளோடு நரைமுக ஊகம் காட்டில் நடுங்கியதை,

“இனமயி லகவு மரம்பயில் கானத்து
நரைமுக வூகம் பார்ப்பொடு பனிப்பப்
படுமழை பொழிந்த சார லவர்நாட்டுக்
குன்ற நோக்கினென் றோழி” (குறுந்.249:1-4)

என்ற அடிகள் விளக்கும்.

பொதுவாகக் குரங்குகள் பாம்பைக் கண்டால் மிகவும் அஞ்சும். பாம்புகள் மரங்களில் விழுதுகள் போலத் தொங்கிக்கொண்டு குரங்குகளைப்

பிடித்து விழுங்குவதே இதற்குக் காரணம். ஊகக் குரங்கு பாம்பிற்கு அஞ்சி அதனை இறுகப் பிடித்துக் கொண்டதை,

"பைங்கண் ஊகம் பாம்புபிடித் தன்ன

அங்கோட்டுச் செறிந்த அவிழ்ந்துவீங்கு திவவின்" (சிறுபாண்.221-222)

என்ற அடிகள் விளக்கும். பாம்பைக் கண்டு பயந்த குரங்கு பலாச் சுளையைத் தோண்டினும் பாம்பென்று அஞ்சித் துன்புற்றமையும்,[169] ஊகக் குரங்கினால் தோண்டப்பட்ட பலாவின் மணம் ஊரெங்கும் வீசியமையும்[170] ஊகம் பற்றிச் சங்க இலக்கியங்கள் கூறும் செய்தியாகும்.

### 1.4.13.4. கருங்கலை

சிவந்த முகத்தை உடைய குரங்கு செம்முகமந்தி. மைபூசியது போன்று முகம் மட்டும் கருமையானது முசு. உடல் முழுவதும் கருமையுடன் ஆனால் முகத்தில் நரைத்த மயிர்க்கற்றையுடன் காணப்படுவது நரைமுகஊகம். இவ்வகையில் உடல் முழுவதும் கருமையானது கருங்கலை எனப்படும். நற்றிணையில்,

"....    ...    ...    ...    படப்பை

இன்முசுப் பெருங்கலை நன்மேயல் ஆரும்

பன்மலர் கான்யாற்று உம்பர்க் கருங்கலை

கடும்பாட்டு வருடையொடு தாவன உகளும்

பெருவரை நீழல் வருகுவன் குழவியொடு

கூவிளந் ததைந்த கண்ணியன் யாவதும்" (நற்.119:4-9)

என்ற பாடலடிகளில் முசுப்பெருங்கலையும், கருங்கலையும், வருடையும் கூறப்பட்டுள்ளன. வருடை வாழும் சூழ்நிலையில் கருங்கலையும்

வாழ்ந்திருக்கின்றது. கருங்கலை என்று குறிக்கப்படுவதால் மற்ற குரங்கு வகைகளிலிருந்து வேறானது என்பதை உணரமுடிகின்றது. கருங்கலையைப் பற்றி, "நீலகிரி மலையிலும் பிற உயர்ந்த மலைகளிலும் அரிதாகக் காணப்படும் வேறொரு வகைக் குரங்கு கருங்குரங்கு என்று தற்காலத்தில் அழைக்கப்படும் நீலகிரிக் கருங்குரங்கேயாகும். இக்குரங்கின் உடல் முழுவதும் கருமையானது. முசுவின் முகச்சாதிக்கு உருவிலும் தோற்றத்திலும் நெருங்கிய கருங்குரங்கின் ஆணை முசுவின் ஆணிற்கு உரிய கலை என்ற பெயரோடு கருமையைக் குறிக்கும் அடைமொழி கொடுத்துக் கருங்கலையென்று சங்கப்புலவர்கள் நுட்பமாகக் கூறினர்"[171] எனக் குறிப்பிடுவர் பி.எல்.சாமி. இதனால் முசுவின் தோற்றத்தில் ஒத்துக் காணப்பட்டாலும் அதனின்று வேறானது 'கருங்கலை' என்பதை அறியஇயலும்.

கருங்கலைக்கு 'ஓரி' என்ற பெயரும் உண்டு. இதனை,

"நான்கே அணிநிற வோரி பாய்தலின் மீதழிந்து
திணிநெடுங் குன்றந் தேன்சொரி யும்மே" (புறநா.109:7-8)

"நீனிற வோரி பாய்ந்தென நெடுவரை
நேமியிற் செல்லு நெய்க்க ணிறாஅ" (மலைபடு.524-525)

என்ற பாடலடிகள் விளக்கும். இவற்றில் வரும் ஓரி என்ற சொல்லுக்கு கருங்கலை என்று ஒளவை.சு.துரைசாமிப்பிள்ளையும்,[172] நச்சினார்க்கினியரும்[173] உரைவரைவர். நீலநிறமென்பது கருங்கலையின் பளபளப்பான கருநிறத்தைக் குறிக்கின்றது. "நீலத்தைக் கருநிறமென்றும் கருநிறத்தை நீலநிறமென்றும் குறிப்பிடுவது சங்க நூல் வழக்கு."[174] எனவே கருங்கலையின் நிறத்தை உணர்ந்து கொள்ள முடிகின்றது.

சங்கஇலக்கியத்தில் குரங்குகளின் பொதுவான இயல்புகளும் சுட்டப்பட்டுள்ளது. மந்திக்கு முள் போன்ற எயிறு இருக்கும். மலையில் மேகத்தினூடே மறைந்து கொள்ளும் அளவிற்கு உயர்ந்த இடங்களில் வாழும்.[175] குரங்குகளால் நாற்றத்தைத் தாங்கிக் கொள்ள இயலாது. பலா மரத்தின்மீது கொக்கு, மீனைக் கொணர்ந்து குடைந்து தின்னும் பொழுது ஏற்பட்ட புலவு நாற்றத்தைப் பொறுக்கவியலாது மந்தி தும்மியது.[176] எப்பொழுதும் தன் குட்டியைத் தழுவிக்கொண்டே ஒரு சிகரத்தினின்று மற்றொரு சிகரத்திற்குப் பாயும் வல்லமை கொண்டது.[177] இவ்வாறு பாயும்பொழுது மந்தி தன் பார்ப்பைத் தழுவ மறந்துவிட்டது. அதனால் அந்தக் குட்டி எடுக்க முடியாத ஆழ்ந்த மலைமுழையில் விழுந்துவிட்டது. துன்பமுற்ற மந்தித் தன் சுற்றத்துடன் சேர்ந்து அழுது ஆரவாரம் செய்தது.[178] இவற்றால் மனித இயல்புடைய குரங்கின் உணர்வுகளை அறிய இயலும்.

மந்தி தன் கடுவனுடன் இணைசேரும் முன் மிகவும் சுறுசுறுப்பாகக் காணப்படும். கழியில் மூழ்கும்.[179] அருவியில் நீராடும்; மூங்கிலை ஊசலாகக் கொண்டு ஆடும்; பின் வேங்கை மலர்கள் சுனையில் உதிரும் அளவிற்கு அதன் கிளையில் ஏறிப் புணரும்.[180] நாரத்தை மரத்தின் மலர்கள் உதிரக் கலை பாயும் தன்மையினது.[181] இவற்றால் குரங்குகள் யாருமறியாமல் உயர்ந்த மரக்கிளையில் ஏறிப்புணரும் இயல்பு கொண்டவை என்பதை அறிய இயலும்.

குரங்குகள் எப்பொழுதும் விளையாட்டுத் தன்மை கொண்டவையாக விளங்கும். விலங்குகள் உராயும் பொற்றைக் கல்லின்மீது மந்தி கடுவனுடன் துள்ளியாடியமை,[182] பாறையின் மேல் கிடந்த மயிலின் முட்டையை உருட்டி விளையாடியமை,[183] குரங்குக்குட்டி மூங்கிலில் ஆடும்பொழுது அது மீனெறி தூண்டில்போல நிமிர்ந்தமை,[184] மல்லிகையும், தளிரும் தின்ற மந்தியும்,

கடுவனும் துள்ளித் திரிந்தமை,[185] மழைநீர்க் குமிழிகளை உடைத்தமை,[186] முகிலை நறைக்கொடி கொண்டு அடித்தமை,[187] நெல்லிக்காயை உருட்டி விளையாடியமை[188] போன்ற செய்திகள் இதனை விளக்கும்.

குரங்குகள் எவ்வளவு விளையாட்டுத் தன்மை கொண்டதோ அதனைப்போலவே எளிதில் துயரம் கொள்ளும் இயல்பும் உடையது. கடுவன் இறந்துவிட்டதால் வருந்தி, தன் குட்டியைச் சுற்றத்தினிடத்துக் கையடையாக ஒப்படைத்து மலையில் பாய்ந்து உயிரை விட்ட குரங்கினை,

"கருங்கட் டாக்கலை பெரும்பிறி துற்றெனக்
கைம்மை யுய்யாக் காமர் மந்தி
கல்லா வன்பறழ் கிளைமுதற் சேர்த்தி
ஓங்குவரை யடுக்கத்துப் பாய்ந்துயிர் செகுக்கும்" (குறுந்.69:1-4)

என்ற பாடல் விளக்கும்.

குரங்குகளின் உணவுமுறை பல்வேறு திறத்தன. குரங்குகள் மலையில் உள்ள இலையின் தளிரை உண்ணும்.[189] மந்தியின் பசிக்குக் கடுவன் பலாச்சுளையைத் தோண்டித் தந்ததுமுண்டு.[190] மந்தியும் கவர்ந்த பலாச்சுளையுடன் ஆண் குரங்கோடு துள்ளித் திரிந்தது.[191] அருவியில் பாய்ந்த மந்தி பலாப்பழத்தைத் தெப்பமாகக் கொண்டு துறைக்கண் வந்திறங்கியது.[192] மலையில் காய்த்த பலாவினைக் குறவர்கள் பாதுகாப்பர். அக்காவலையும் மீறிப் பலாவின் கனியைக் கடுவன் கவர்ந்ததுள்ளது.[193] தான் பெற்ற முதிர்ந்த பலாப்பழத்தை உண்ணக் கடுவன் மந்தியைக் கையால் குறி செய்து அழைத்தது.[194] பலாப்பழத்தையே கண்டு உண்டுவந்த மந்தி, ஊர்ப்பொதுவில் வைக்கப்பட்ட முழவினையும் பலாக்கனி என்று கருதி அதனைத் தட்டியது. அவ்வோசை கேட்டு அன்னச் சேவல் மாறாக எழுந்து ஒலித்தது.[195] கடுவன்

இனிய பழங்களை மரத்தின்மேல் இருந்து உதிர்க்க தேவையானவற்றைக் குட்டிகள் எடுத்துத் தின்றது.[196]

தேனடையில் தேனீக்கள் மொய்த்தலால் கசிந்து கல்லின் குழிகளில் வடிந்தது. அந்த இனிய தேனைக் குறவரின் இளமக்கள் வழித்துண்டனர். எஞ்சியதை மெல்லிய தலையையுடைய மந்தியின் வலிய குட்டிகள் உண்டன.[197] கடுவன் நீர் வேட்கையால் தேனை நீர் என்று கருதி அதிகமாக உண்டது. மயக்கத்தால் சந்தன மரநிழலில் உறங்கியது.[198] மிளகின் தளிரையும்,[199] அசோகந் தளிரையும்[200] விரும்பி உண்டது. இத்தகைய செய்திகளால் குரங்குகளின் பொதுவான இயல்பும், உணவு முறைகளும் தெளிவாகும்.

## 1.4.14. கேழல்

'கேழல்' என்பது பன்றியைக் குறிக்கும் சொல்லாகும். தொல்காப்பியர்,

"கேழல் கண்ணும் கடிவரை இன்றே" (தொல்.1534)

என்ற நூற்பாவில் கேழலைக் களிறு என்று குறிப்பிடுவர். சங்க இலக்கியத்தில் 'கேழல்,'[201] 'ஏனம்,'[202] 'பன்றி'[203] என்ற சொற்கள் காணப்படுகின்றன. இதன் நிறம் பொன்னுரைக்கும் கட்டளைக்கல் போன்று கரியதாக இருக்கும்.[204] இதன் கண்கள் நெருப்பைப் போன்று காணப்படும்.[205] பன்றியின் கடைவாய்ப் பற்கள் 'கோடு,'[206] 'மருப்பு'[207] என்று அழைக்கப்படும். பன்றியின் மருப்பு முருக்கமரத்தின் பூப்போல வளைந்து காட்சியளிக்கும்.[208] இளம்பிறை போன்ற வடிவமும் வண்ணமும் கொண்ட மருப்புக்களையுடைய ஆண்பன்றி, களாப்பழம் போன்ற கருநிறமமைந்த தனது பிணவுப் பன்றியை அருவியின் அருகில் கூடிக் களித்ததாக ஐங்குறுநூறு குறிப்பிடுகின்றது.[209]

பன்றி தினைக்கதிரைக் கவர்ந்து உண்ணும்.[210] தினைப்பயிரை மேய்ந்து பசி தீர்ந்தவுடன் மலையில் சென்று உறங்குவதுமுண்டு.[211] சில நேரங்களில் தினை உண்ணக் கருதிய கேழல் தனது குட்டிகளையும் பிரிந்துசென்று தினையை உண்டு, குவட்டின்கண் துயில்கொள்ளும்.[212] தினை உண்ட பன்றி தன் காதற் துணையுடனும் உறங்கியிருக்கின்றது.[213] இப்பன்றிகளைத் தினைப்புனம் காப்போர், பரண்மேலிருந்து சுடரைக் கொளுத்தியும்,[214] எரிவெட்டியைக் கொளுத்தியும், கற்பொறி வைத்தும்,[215] கொம்பு ஊதியும்,[216] பறையைக் கொட்டியும்[217] விரட்டியுள்ளனர். வில்லேந்திக் காவல் புரியும் குறவரைச் சோர்வடையச் செய்து அவர்களுக்குரிய ஐவன நெல்லைத் திருடும் வலிமையுடையனவாய் பன்றிகள் விளங்கியுள்ளன.[218]

சங்ககால மக்கள் பன்றியின் மீது ஏறுவதைத் தீயது என்று கருதினர். இதனால் கனவில்கூடப் பன்றியின்மீது ஏறும் காட்சியைக் காணுதலை வெறுத்தனர். இதனை,

"களிறுமேல் கொள்ளவுங் …… ……

…… ………. ……… ……….

கனவி னரியன காணா நனவிற்" (புறநா.41:9-11)

என்ற அடிகள் விளக்கும். இதில் பன்றி, களிறு என்ற சொல்லால் குறிப்பிடப்பெற்றுள்ளது. பன்றிமீது ஏறுதல் அழிவுக்குக் காரணம் என்று கருதினர். தற்காலத்திலும் சாலைகளில் வாகனம் சென்றுகொண்டிருக்கும் பொழுது பன்றி மோதிவிட்டால் வாகனத்தை விற்றுவிடும் வழக்கம் இருப்பது இவ்விடத்தில் சுட்டத்தக்கது.

காட்டுப்பன்றியைப் பற்றிய குறிப்புகள் அதிக அளவு காணப்பட்டாலும் வீட்டுப்பன்றியைப் பற்றிய சில செய்திகளும் காணப்படுகின்றன. வீட்டில்

பன்றிகளை வளர்த்து வந்தனர். இழிகுலத்தோர் இருக்கும் தெருக்களில் கிணறு போன்ற அளவு குழிவெட்டி அதில் பன்றிகளை வளர்த்து வந்தனர்.[219] இப்பன்றிகளுக்குத் தொட்டிகளை வைத்து உணவிட்டு வந்தனர்.[220] இவற்றால் காட்டுப்பன்றி, வீட்டுப்பன்றி பற்றிய செய்திகளையும், அதன் வாழ்க்கை முறைகளையும் அறியஇயலும்.

**1.4.15. தீர்வை**

சங்கஇலக்கியத்தில் 'தீர்வை' என்பது கீரியைக் குறிக்கும் சொல்லாகும். தொல்காப்பியத்தில்,

"மூங்கா வெருகெலி மூவரி அணிலோ

டாங்கவை நான்குங் குட்டிக் குரிய" (தொல்.1505)

என்ற நூற்பாவில் வரும் மூங்கா என்ற சொல்லுக்குக் கீரி எனப் பொருள் உரைப்பர் இளம்பூரணர்.[221] மூங்கா என்ற கீரியை, "தோட்டந்துரவுகளில் எளிதில் காணப்படும் கீரிவகையைத் தமிழில் மூங்கா என்றழைத்தனர். இந்தக் கீரியை வீட்டில் வளர்க்கும் பழக்கமும் இருந்தது"[222] எனச் சுட்டுவர் பி.எல்.சாமி. மலைபடுகடாமில் தீர்வையைப் பற்றி,

"வரைவாழ் வருடை வன்றலை மாத்தக

அரவுக் குறும்பெறிந்த சிறுகட் டீர்வை" (மலைபடு.503-504)

என்ற குறிப்பு உள்ளது. இதில் மலையில் வாழும் வருடையோடு பாம்பினை அடக்கிய சிறிய கண்ணையுடையதாய் தீர்வை கூறப்பட்டுள்ளது. வருடையோடு மலையுயரத்தில் காணப்படும் கீரி வகை வீட்டில் வளர்க்கும் கீரியாக இருக்க இடமில்லை. இதனால் தொல்காப்பியர் காலத்தில் வழங்கப்பட்ட மூங்கா என்ற சொல்லும், மலைபடுகடாமில் சுட்டப்பட்ட தீர்வை

என்ற சொல்லும் கீரி என்பதைக் குறித்து வழங்கி வந்தாலும், இரண்டும் வெவ்வேறு வகையானது என்பதை உணர முடிகின்றது.

மலைபடு கடாமில் கூறப்பட்ட தீர்வை தனிப்பட்ட மலைவாழ் கீரியாகும். இதனை, "மலையிலே வாழும் தனித்த ஒருவகைக் கீரியை விலங்கு நூலார் கூறியுள்ளனர். இந்தக் கீரி இளஞ்சிவப்பாகக் காணப்படும். வாயிலிருந்து ஒரு கருப்புக் கோடு கழுத்துவரை இரு பக்கங்களிலும் காணப்படும். இதைச் செங்கீரி என்று மலையாளத்தில் வழங்குவர். இந்தச் செங்கீரியே தீர்வை என்று சங்க நூல் குறிப்பிடும் கீரியாகும்"[223] என விளக்குவர். எனவே மலைபடுகடாமில் மட்டும் ஓர் இடத்தில் குறிப்பிடப்படும் தீர்வை, மலைவாழ் கீரியைக் குறித்து வந்தது என்பது புலப்படும்.

### 1.4.16. நரி

காட்டில் வாழும் ஊன் தின்னும் விலங்குகளில் நரியும் ஒன்று. நரிகள் கூட்டமாக வாழும் தன்மையின.[224] 'ஓரி' என்ற பெயர் நரிக்கு வழங்கியதை,

"அழல்வாய் ஓரி அஞ்சுவரக் கதிர்ப்பவும்" (பட்டினப்..257)

என்ற அடி விளக்கும். இவ்வடியில் வரும் ஓரி என்ற சொல்லிற்கு நரி எனப்பொருள் கூறுவர் நச்சினார்க்கினியர்.[225] குரங்கினத்தில் கருங்கலையையும் 'ஓரி' எனக் குறிப்பிடுவது இவ்விடத்தில் சுட்டத்தக்கது.

நரிகள் பிணத்தைத் தின்னும் பழக்கம் உடையன. இறந்த விலங்குகளின் தசையோ, எலும்போ கிடைத்தால் அதை உண்டு உயிர்வாழும் இயல்பின. நரிகள் கூட்டமாகப் பிணத்தை உண்பதை,

"கணநரி திரிதரு மாங்க ணிணனருந்து" (புறநா.373:37)

என்ற அடி விளக்கும். அவ்வேளையில் பிணங்களைத் தின்னவரும் கழுகுகளை விரட்டும் தன்மை கொண்டது.[226] இவை நன்னிலையில் உள்ள பிணத்தசைகளையே உண்ணும். அழுகி முடைநாற்றம் வீசும் தசைகளைத் தின்னாது.[227] போர்க்களத்தில் இறந்தவர்களின் உடலைத் தின்னக் குறுநரிகள் ஓடிவந்ததைப் புறநானூறு குறிப்பிடுகின்றது.[228] படைக்களத்தில் யானையுடன் போரிட்டுப் புண்பட்டுக் கிடந்த வீரனின் உயிர் போகுமளவு, அவனது உடலை நரி இழுத்துச் செல்வதுமுண்டு.[229] உணவின்றி வருந்தும் குறுநரிகள் முழவொலி போல ஊளையிட்டுக் கூவுதலை,

"கவலை வெண்ணரி கூஉமுறை பயிற்றி" (பதிற்.22:35)

என்னும் அடி குறிப்பிடுகின்றது. பாலைநிலத்தில் உணவின்றி வருந்திய முதுநரிக்கு பறவையின் வாயினின்று தவறிய ஊன் துண்டு உணவாகியிருக்கின்றது.[230] இவற்றால் நரியின் வாழ்க்கை முறையை அறிந்துகொள்ள முடியும்.

### 1.4.17. நாய்கள்

சங்க இலக்கியத்தில் ஞமலி, செந்நாய், கோணாய் என்ற மூவகை நாய்கள் சுட்டப்பட்டுள்ளன. இவற்றின் வாழ்விடம், உணவுமுறை, வேட்டையாடும் தன்மை போன்றவை சிறப்பிடம் பெறுகின்றன. இவற்றில் மனிதனுடன் நெருங்கிய தொடர்பு கொண்டு வாழ்ந்த நாயினம் ஞமலியாகும். இதனை 'நாய்' என்று குறிப்பிடினும் ஒக்கும். இந்நாயின் உதவியுடன் மனிதன் பிற விலங்குகளை வேட்டையாடி உணவைப் பெற்று வந்தமை குறிப்பிடத்தக்கது.

### 1.4.17.1. ஞமலி

'ஞமலி' என்பது வளர்ப்பு நாயைக் குறிக்கும். மனிதன் முதன்முதலில் பழக்கப்படுத்திய விலங்கு நாயாகும். செந்நாய், கோணாய் போன்றவையும் நாயினத்தைச் சார்ந்தவையாகும். சங்க இலக்கியத்தில் 'ஞமலி,'[231] 'எகினம்'[232] என்று நாய் அழைக்கப்பட்டுள்ளது. நாயின் நாக்கு விறலியின் அடியைப் போன்றும்,[233] நன்னனைக் காணவந்த பாடுபவர்களின் அடியைப் போன்றும்[234] காட்சியளித்தது. வீட்டில் வளர்க்கப்பட்ட நாய், அவ்வீட்டு அட்டிலில் குட்டியை ஈன்றமையை,

"திறவாக் கண்ண சாய்செவிக் குருளை
கறவாப் பான்முலை கவர்த னோனாது
புனிற்றுநாய் குரைக்கும் புல்லெ னட்டில்
காழ்சோர் முதுசுவர்க் கணச்சித லரித்த
பூழி பூத்த புழற்கா ளாம்பி" (சிறுபாண்.130-134)

என்ற அடிகள் விளக்கும்.

நாய், வேட்டையாடவும், வீட்டில் காவலுக்கும் பயன்படுத்தப்பட்டது. பதுங்கியுள்ள விலங்குகளை விரட்டி வெளியில் கொண்டுவரவும், சிறு விலங்குகளைப் பிடிக்கவும் உதவுகின்றது. வேட்டுவர், வேட்டை நாயை வைத்திருந்ததை,

"கானுறை வாழ்க்கைக் கதநாய் வேட்டுவன்" (புறநா.33:1)

என்ற அடி விளக்கும்.

### 1.4.17.2. செந்நாய்

செந்நாயின் மேல் தோல் சிவப்பு நிறமாகக் காணப்படும். இதனால் இதற்குச் 'செந்நாய்' என்ற பெயர் வழங்கப்பட்டது. பொதுவாக இது காடுகளில்

காணப்படும். அதனால் இதனைக் 'காட்டுநாய்'[235] என்றும் அழைப்பர். இது தோற்றத்தில் வீட்டு நாயை ஒத்து விளங்கும். உடலமைப்புச் சிறியதாக இருப்பதால் ஒரு கூட்டமாகச் சேர்ந்து ஒற்றுமையாகப் பிற விலங்குகளை வேட்டையாடும் இயல்பினது. இதனை,

"செந்நா யன்ன கருவிற் சுற்றமொடு
கேளா மன்னர் கடிபுலம் புக்கு
நாளா தந்து நறவுநொடை தொலைச்சி" (பெரும்பாண்.139-141)

என்ற அடிகள் விளக்குகின்றன.

செந்நாய்கள் பசியெடுக்கும்பொழுது மட்டுமே வேட்டையாடும். பிறநிலைகளில் அது வேட்டையாடாது. இதற்கு, ஆண் செந்நாய் ஒன்று குட்டிகளையுடைய பெண்மானை இரையாக வேட்டங்கொள்ளாமல் அவ்விடத்திலிருந்து போகவிட்டமையும்,[236] குட்டியை ஈன்ற பன்றியைக் கொல்லாமல் விட்டமையும்[237] சான்றாகக் கருத இயலும்.

செந்நாய்கள் மான்களை விரும்பி வேட்டையாடி உண்ணும். பெண்நாயின் பசியைத் தீர்க்க மான்களை வேட்டையாடியதை அகநானூறு சுட்டுகின்றது.[238] கூட்டமாக இருந்த கலைமான்களைச் செந்நாய் தாக்கியது. அதனால் மான்கள் அலறி அங்குமிங்குமாகச் சிதறி ஓடின. சிதறிய மந்தையைக் கூட்டுவதற்காக ஆண்மான் குரல் விளித்து அழைக்கும் காட்சியை,

"சிலம்பி வலந்த வறுஞ்சினை வற்றல்
அலங்கல் உலவை அரிநிழல் அசைஇத்
திரங்குமரல் கவ்விய கையறு தொகுநிலை
அரந்தின் ஊசித் திரள்நுதி அன்ன

திண்நிலை எயிற்ற செந்நாய் எடுத்தலின்

வளிமுனைப் பூளையின் ஒய்யென்று அலறிய

கெடுமான் இனநிரை தரீஇய கலையே

கதிர்மாய் மாலை ஆண்குரல் விளிக்குங்

கடல்போல் கானம் பிறபடப் பிறர்போல்" (அகநா.199:5-13)

என்னும் பாடல் விளக்கும்.

செந்நாய்கள் பன்றிகளையும் விரும்பியுண்ணும் இயல்பின. செந்நாய் ஆண் பன்றியினைக் கொன்று இழுத்துச் சென்றது. அவ்வழியில் ஒழுகிய குருதியினைப் பருந்தினம் பருகியதை அகநானூறு குறிப்பிடுகின்றது.[239] பெண்நாயின் வயா நோயைக் கருதியும் ஆண் செந்நாய், பன்றியை வேட்டையாடியிருக்கின்றது.[240]

செந்நாய்கள் வெயிலைத் தாங்க முடியாதவை. இதனால் தண்ணீரில் தன் வயிற்றைப் பொருத்தி ஓய்வெடுக்கும். வெம்மையான பாலை நிலக்காட்டில் தண்ணீர் இல்லாததால் செந்நாயின் பெண் துணை, யானை கழித்த இழிந்த நீரின் ஈரத்தில் தன்னுடைய வயிற்றைப் பொருத்தி ஆண் துணையை நினைந்து இருந்ததைக் காணமுடிகின்றது.[241]

### 1.4.17.3. கோணாய்

சங்க இலக்கியத்தில் நாயையும், செந்நாயையும் தவிர பிறிதொரு நாயும் சுட்டப்படுகின்றது. நற்றிணையில் ஒரு பாடலில் மட்டும் இந்நாயைப் பற்றியகுறிப்பு இடம்பெற்றுள்ளது. 'கோள்நாய்'[242] என்று பின்னத்தூர் நாராயணசாமிஜயரும், 'கோணாய்'[243] என்று ஔவை.சு.துரைசாமிப்பிள்ளையும் தங்களது உரைப்பதிப்பில் குறிப்பிடுவர். கோள்+நாய் = கோணாய் என்பதும்

பொருந்தும். காலப்போக்கில் கோணாய் என்பது மாறி 'ஓநாய்' எனத் திரிந்திருக்கக் கூடும். "சங்க இலக்கியத்தில் ஓநாயைக் கோணாய் என்று கூறப்பட்டுள்ளது"[244] என்பர் பி.எல்.சாமி. எனவே கோணாய் என்பது ஓநாயாக இருக்க இடமுண்டு. வீட்டுநாயையும், செந்நாயையும் விட ஓநாய் வலிமையானதால் கோணாய் என்று வழங்கியிருப்பர். இக்கோணாய்கள் கூட்டமாகச் சென்று வேட்டையாடும் இயல்புடையவை. இதன் கூட்டத்திற்கு காட்டில் உள்ள மான் முதலிய விலங்குகள் மிகவும் அஞ்சும். இந்நாய், வேட்டையாடி கொன்று தின்ற மீதியைக் காட்டில் வாழும் மக்கள் கவர்ந்துண்பது வழக்கம். காட்டுப்பன்றியைக் கோணாய்கள் தாக்கிச் சேற்றில் புரட்டி, அதன் தசைகளைப் பிளந்து கவ்விக் கொன்றதைக் கண்ட கானவர், அந்த நாய்களை விரட்டி அப்பன்றியின் தசைகளைக் கைக்கொண்டதை நற்றிணை விளக்கும்.[245]

சங்க கால மக்கள் கோணாயெனும் ஓநாயை நன்கு தெரிந்திருந்தனர். செந்நாயைப் பற்றிப் பல செய்திகள் காணப்படுகின்றபொழுது ஓநாயைப் பற்றி மிக அரிதாக ஒரு செய்தி மட்டும் காணப்படுவது பண்டைத் தமிழகத்தில் ஓநாய்கள் அதிகம் இல்லை என்பதைச் சுட்டிக்காட்டுகின்றது.

### 1.4.18. புலி

சங்க இலக்கியத்தில்,

1. வரிப்புலி
2. பொறிப்புலி (அல்லது) பெருஞ்சிறுத்தைப்புலி
3. புள்ளிப்புலி (அல்லது) சிறிய சிறுத்தைப்புலி

என மூன்று புலியினங்கள் கூறப்பட்டுள்ளன. இதில், "வரிப்புலியைப் பற்றி மிகுதியான செய்திகள் உள்ளன. அடர்ந்த காட்டில் வாழும் பெருஞ்சிறுத்தைப் புலியைப் பற்றியும் செய்திகள் காணப்படுகின்றன. ஆனால் குறுங்காடுகளிலும், பாறைகளிலும், குன்றுகளிலும், காட்டுச் சார்பான ஊர்க்கருகாமையிலும் வாழும் சிறிய சிறுத்தைப்புலியைப் பற்றிய செய்திகள் மிகுதியாகக் காணப்படவில்லை"[246] என்பர் பி.எல்.சாமி. இவற்றால் சங்ககாலத்தில் மூன்று புலியினங்கள் இருந்தமை பற்றித் திறனாய்வாளரும் விளக்குவது குறிப்பிடத்தக்கது.

### 1.4.18.1. வரிப்புலி

வரிப்புலிக்கு உடலில் வளைந்த வரிகள் உண்டு. வரிப்புலியின் இவ்வரிகளைச் சங்கப் புலவர்கள் 'வாள்வரி வயப்புலி,'[247] 'வாள்வரி வயமான்,'[248] 'கொடுவரி'[249] எனக் குறிப்பிடுவர். வரிப்புலிகள் எப்பொழுதும் ஈரமாக இருக்கும் அடர்ந்த காடுகளிலும், திறந்த காடுகளிலும், சேறும் நீரும் கலந்த சூழ்நிலையிலும் வாழும் தன்மை கொண்டவை.[250]

### 1.4.18.2. பொறிப்புலி

பொறிப்புலி, பெருஞ்சிறுத்தைப்புலி எனவும் வழங்கப்படும். இதன் உடலில் பூப்போன்ற புள்ளிகள் வரிசையாகக் காணப்படும். இதனால் இது வரியா அல்லது புள்ளியா என்பதைக் கண்டுபிடிப்பது எளிதன்று. இதன் காரணமாகவே, "சங்கப் புலவர்கள் வரிப்புலியையும், பெருஞ்சிறுத்தைப் புலியையும் அதாவது பொறிப்புலியையும் இரும்புலி என்ற பெயரில் பெரிய புலி என்ற பொருளில் கூறினர்"[251] எனக் குறிப்பிடுவர். பொறிப்புலியின் தோற்றம்,

'பொறிகிளர் உழுவை,'[252] 'பூம்பொறி உழுவை'[253] என்று சித்திரிக்கப்பட்டுள்ளது.

**1.4.18.3. புள்ளிப்புலி**

இது சிறிய சிறுத்தைப்புலி எனவும் அழைக்கப்படும். வரிப்புலியையும், பொறிப்புலியையும் பெரியபுலி, வலியபுலி என்று கூறக் காரணம் புள்ளிகளையுடைய சிறிய சிறுத்தைப்புலியிலிருந்து பிரித்துணரவேயாகும். சிறிய சிறுத்தைப்புலி அடர்ந்த காட்டில் வாழ்வதில்லை. ஊர்களின் அருகில் அடிக்கடி காணப்படும். "புலி என்ற சொல் முதலில் புள்ளி என்ற சொல்லிலிருந்து தோன்றி, புள்ளியையுடைய புலியை அதாவது சிறிய சிறுத்தைப்புலியைக் குறித்து வழங்கியிருக்க வேண்டும். புள்ளிப்புலியைக் குறித்த புலியென்ற சொல் பின்னர்ப் புலியான விலங்குகளுக்குப் பொதுவாக வழங்கலாயிற்று"[254] என்பர். சிறுத்தைப் புலியின் புள்ளிகள் நிறைந்த உடலை நன்கு உணர்ந்து,

"புலிப்பொறி அன்ன புள்ளியம் பொதும்பில்" (நற்.391:2)

என்று பெருங்கடுங்கோ பாடியுள்ளார். இதன்வழிப் புள்ளிப்புலியின் தோற்றத்தை அறிந்துகொள்ள முடியும்.

சங்க இலக்கியத்தில் வரிப்புலி, பொறிப்புலி, புள்ளிப்புலி என்ற மூன்று புலிகள் சுட்டப்படினும், ஒருசில பாடலடிகளில் மட்டுமே தனித்தனியாகப் பிரித்துணர முடிகின்றது. மற்ற பாடலடிகளில் புலி, ஏற்றை, பிணவு, குருளை, இரும்புலி, வயப்புலி, வல்லியம், உழுவை என்ற பெயர்களால் அழைக்கப்படுவதால் எவ்வகை இனம் என வகைப்படுத்த இயலவில்லை.

பொதுவாகப் புலி வாழும் சூழலைப் ‘புலிதுஞ்சு நெடுவரை’[255] என்பர். புலிகள் மலையின் முழையிலும்,[256] மூங்கில் செறிந்த காடுகளிலும்,[257] கல்லளையிலும்[258] வாழும் இயல்புடையவை.

புலியின் தோல் மஞ்சள் நிறமானதும் கரிய வரிகளுடையதுமாகும். வேங்கை மலர்கள் விழுந்த கற்பாறையும்,[259] துறுகல்லும்[260] புலியைப் போன்று தோன்றும். புலியின் பார்வை மிகவும் கூர்மையானது.[261] புலியின் அடி வாழைக்காயை ஒத்துக் காணப்படும்.[262] இதன் நகமும் முருக்க மலர் போன்று காட்சியளிக்கும்.[263] புலியின் குரல் கடைவது போல இருக்கும்.[264] சிலவேளைகளில் பறவையின் குரலுக்கு எதிர்க்குரல் கொடுப்பதுமுண்டு.[265]

புலி, புணர்வுக் காலத்தில் புன்செய் நிலத்தில் குறவர்கள் இயற்றி வைத்த பொய்ம்மைப் புலியையும் நாடிச்செல்லும் இயல்பு கொண்டது.[266] புலிகள் மறைவான இடத்தைத் தேர்ந்தெடுத்து அங்கு தன் குட்டிகளை ஈனும். கொடிய முள்ளுடைய ஈங்கையும், இண்டும் சூரலும் நிறைந்த இடத்திலும்,[267] வறண்ட பாலைநிலச் சுனையிலும்[268] குட்டியை ஈன்றுள்ளன.

புலி, காட்டில் வாழும் விலங்குகளைக் கொன்று உண்ணும் இயல்புடையது. வயிறு நிறைந்தாலும் கண்ணில் படுகின்ற விலங்குகளைக் கொன்றுவிடும் மூர்க்கத் தன்மை கொண்டது. ‘செந்நாய்’[269] இதன் விருப்ப உணவாகும். ‘பன்றி,’[270] ‘குரங்கு,’[271] ‘மான்’[272] ஆகியவற்றையும் இரையாகக் கொள்ளும் தன்மையினது. யானைகளையும் அடித்து உண்ணும் வலிமை வாய்ந்தது.[273] இந்தப் போராட்டத்தில் புலி யானையையும்,[274] யானை புலியையும்[275] தாக்குவதுண்டு. சில நேரங்களில் இரண்டும் போரிட்டு வலியிழந்து போவதுமுண்டு.[276] மனிதர்களைக் கொன்று உண்ட புலிகளும் இருந்தன. இதனை ‘ஆட்கொல்லிப்புலி’[277] என்றனர். புலி தனக்குரிய

உணவைச் சேகரித்து வைத்துப் பின் பசியெடுத்தபொழுது உண்ணும் வழக்கமுடையது. கற்குகையில் தனக்குரிய உணவைச் சேகரித்து வைத்திருந்ததால் அங்குப் புலால் நாற்றம் வீசியதைப் பூங்கண்ணன் விளக்குவர்.[278]

### 1.4.18.4. விலங்குகளின் வலப்பக்க இடப்பக்க வேட்டை

புலியும் ஆளியும் உணவுக்காகப் பிறவிலங்குகளை வேட்டையாடும்பொழுது வலப்பக்கம் வீழ்ந்ததையே உண்ணும், இடப்பக்கம் வீழ்ந்ததை உண்ணாது என்பர். இதற்கு, புலி தான் வேட்டையாடிய பன்றி இடப்பக்கம் வீழ்ந்ததால் அதனை உண்ண வெறுத்துப் பின்னர் வலப்பக்கம் பெரிய களிற்றை வீழ்த்தி உண்டிருப்பதையும்,[279] இடம் வீழ்தலையே அறியாத ஆளி, களிற்றை வலம் வீழ்த்திக் கொன்று, கோடு கவர்ந்து உண்டதையும்[280] சான்றாகக்கொள்ளஇயலும். ஆனால் விலங்குகள் ஐந்தறிவுடையன,[281] பகுத்தறிவுத்திறன் பெற்ற மனிதனே ஆறறிவு பெற்றவன்[282] என்பதால் புலியும் ஆளியும் இவ்வாறு சிந்தித்துப் பார்க்கும் திறனற்றது என்பதை அறிய முடிகின்றது.

பொதுவாக விலங்குகளுக்கு மான உணர்ச்சி கிடையாது. புலியும், ஆளியும் வலது காலால் இரையாகும் விலங்கை அடிக்கும்பொழுது இடதுபக்கம் வீழ்ந்தால் அஃது இயற்கையான நிகழ்ச்சி. ஆனால் வலதுகாலால் அடித்து வலதுபக்கமே வீழ்ந்தால் அது சிறந்த செய்தியாகும். இதனால் மனிதனின் குணங்களான உயர்வு, பெருமிதம், மானம் போன்றவற்றைப் புலிக்கும், ஆளிக்கும் புலவர்கள் ஏற்றிக்கூற முற்பட்டனர் என்று கூற

இடமுண்டு. இவ்விரு விலங்குகளின் வல்லமை கருதி இதுபோன்ற செயல்களை அதற்குக் கூறியுள்ளனர்.

### 1.4.18.5. புலிபுலி என்ற குரல்

குறமகளிர் வேங்கை மலர் பறிக்கச் செல்லும்பொழுது 'புலிபுலி' என்று கூறுவதுண்டு. இதனை,

"மலிபூஞ் சாரலென் தோழி மாரோ
டொலிசினை வேங்கை கொய்குவஞ் சென்றுழிப்
புலிபுலி என்னும் பூசல் தோன்ற" (அகநா.48:5-7)

என்ற அடிகள் சுட்டுகின்றன. இவ்வொலியைக் கேட்ட கானவர் பசுவைக் கவரப் புலி வந்துள்ளது என்று கருதி வில்லொடு வந்தனர்.[283] இக்காட்சியை, "வேங்கை மரத்திற் பூக்கொய்வார், புலிபுலி யென்று கூவின், அதன் கிளை தாழ்ந்து கொடுக்கும் என்பது வழக்கு"[284] என்று விளக்குவர் ந.மு.வேங்கடசாமிநாட்டார். புலிபுலி என்று கூவுவதால் வேங்கைமரம் பூப்பறிக்கத் தாழும் என்ற கருத்து ஒப்புவதாக இல்லை. இச்செய்தி இவ்வாறு இருக்க, பாறைகளில் கிடந்த வேங்கைப் பூக்களைக் காட்டி மகளிரின் அழுகையைத் தீர்த்தற் பொருட்டு, 'புலிபுலி' என்று கூறுவதைப் பரிபாடலும் விளக்கும்.[285] எனவே மக்களுக்குப் புலியின் மீதிருந்த அச்சத்தையே இது விளக்குகின்றது. இதனால் வேங்கை மலர் கொய்யச் சென்ற மகளிர், பூவுடன் காட்சியளிக்கும் அம்மரத்தின் தோற்றம் புலி போன்று இருந்ததைக் கண்டு, அச்சம் காரணமாகப் புலிபுலி எனக் கூறியிருக்க இடமுண்டு.

### 1.4.19. மான்

மானில் இரலை, கலை என்ற இரு இனம் உண்டு. மான்களின் இனவேறுபாடுகளை, "இரலை இன மான்களின் கொம்புகள் உள்துளை அற்றவை. உள்ளே கெட்டியாக இருக்கும். கொம்புகள் கீழே விழுந்து புதிய கொம்பு திரும்பவும் முளைப்பதில்லை. இதன் கொம்பில் கிளைகள் இல்லை. கலைமானினத்தின் கொம்புகள் உள்துளையுடையவை. கீழே விழுந்து புதிய கொம்புகள் திரும்பவும் முளைக்கும். கொம்புகளில் கிளைகள் உண்டு"[286] என விளக்குவர் பி.எல்.சாமி.

சங்க இலக்கியத்தில் இரலை என்ற மானினத்தில் இரலை, நவ்வி, மரையான் எனவும், கலை என்ற மானினத்தில் உழை, கடமா எனவும், ஐவகை மான்கள் கூறப்பட்டுள்ளன.

#### 1.4.19.1. இரலை

மானினத்தில் மிகவும் அழகிய மான்வகை இரலையாகும். இரலை மானின் சிறப்புக் கருதி இதற்குரிய பெயரை இதனைச் சேர்ந்த இரலை, நவ்வி, மரையான் போன்றவற்றிற்கும் பொதுப்பெயராகப் பயன்படுத்தியுள்ளனர். இரலையின் ஆண் 'இரலை' என்றும், பெண் 'பிணை' என்றும் அழைக்கப்படுகின்றது. ஆண்மானின் கொம்புகள் இம்மான்களின் வகையைப் பிரித்தறிய உதவுகின்றன. இரலையின் கொம்பு வலப்பக்கமாகத் திரிந்து காணப்படுவதால் 'திரிமருப்பு இரலை'[287] என்றும், புல்வெளியில் சிறப்பாக மிகுதியாகக் காணப்படுவதால் 'புல்வாய்'[288] என்றும் சுட்டப்படும். பொதுவாக இரலை நீரற்ற வாவிகளிலும், செய்களிலும்,[289] காடுகளிலும்[290] காணப்படும். இரலையின் கொம்பு போல மறவரின் தாடி முறுக்கி விடப்பட்டிருப்பதை,

"எருத்து வலிய எறுழ்நோக் கிரலை

மருப்பிற் றிரிந்து மறிந்துவீழ் தாடி

உருத்த கடுஞ்சினத் தோடா மறவர்" (கலித்.15:5-7)

என்ற அடிகள் விளக்கும்.

### 1.4.19.2. நவ்வி

நவ்வி மான்கள், "பாலையிலும், வறட்சியான நிலத்திலும், கானாற்றுப் படுகைகளிலும் காணப்படுகின்றது"[291] என்பர் பி.எல்.சாமி. இதற்குச் சிறிய தலையும், பெரிய கண்ணும் இருப்பதை,

"சிறுதலை நவ்விப் பெருங்கண் மாப்பிணை" (புறநா.21:8)

"பெருங்கவின் பெற்ற சிறுதலை நவ்வி

மடக்கண் பிணையொடு மறுகுவன வுகள" (மதுரைக்.275-276)

என்ற அடிகள் விளக்கும். நவ்வி மான்கள் மிகவும் பயந்த இயல்புடையவை. அதனால் ஏதாவது கண்டு பயந்தால் திடுமெனக் குதித்துப் பாய்ந்து மிக விரைவாக ஓடிச் சிறிது தொலைவு சென்று நின்று திரும்பிப் பார்க்கும் தன்மையுடையவை.[292] இவற்றால் நவ்வியின் இயல்பை அறியஇயலும்.

### 1.4.19.3. மரையான்

இரலை மானினத்தில் மரையானும் ஒன்றாகும். இது 'மரை,'[293] 'மரையா,'[294] 'மரையான்'[295] என்று அழைக்கப்படுகின்றது. தொல்காப்பியரும்,

"பெற்றமும் எருமையும் மரையும் ஆவே" (தொல்.1560)

என்று குறிப்பிடுவர். இவ்விடத்தில் தோற்றத்தில் பெரிய பெற்றம், எருமை, மரை போன்ற விலங்குகளை ஆ என அழைத்திருப்பது சுட்டத்தக்கது. மரையான் மானைவிட மாட்டின் உருவில் ஒத்துக் காணப்பட்டதால் இதனை ஆ என்று குறிப்பிட்டனர். 'ஆ போலும் மா ஆமா' என்றழைக்கப்பட்டதுபோல், ஆனின் தோற்றத்தைப் போன்று உருவில் பெரியதாகக் காணப்பட்டதால் இதனை 'மரையா,' 'மரையான்' என்று அழைத்துள்ளனர். "மரை என்பது மானினத்தில் ஒன்று"[296] என்பர் பி.எல்.சாமி. "மரத்தில் செய்யப்பட்ட மரைபோன்று புரிவுடன் கூடிய சிறிய கொம்பு இருப்பதால் இதற்கு மரையான் என்ற பெயர் வழங்கப்பட்டிருக்க வேண்டும்"[297] எனவும் குறிப்பிடுவர்.

மரையான் வெண்மை கலந்த கருமை நிறத்துடன் காணப்படும். இதனை,

"புரிமட மரையான் கருநரை நல்லேறு
தீம்புளி நெல்லி மாந்தி யயலது" (குறுந்.317:1-2)

என்ற அடிகள் உணர்த்தும். பெரும்பாலும் மரையான், மரங்கள் அடர்த்தியாக இல்லாத குன்றுகளில் காணப்படும்.[298] புல்லால் வேயப்பட்ட குடிசைகளின் அருகிலும் காணப்படுவதுண்டு.[299] இவற்றால் மானின் ஒருவகையான மரையானின் தோற்றமும், வாழ்க்கை முறையும் புலனாகும்.

### 1.4.19.4. உழை

கலைமானினத்தில் உழை, கடமா என்ற இருவகை மானினங்கள் கூறப்படுகின்றன. "உழை என்பது, ஆண்மானுக்கும் பெண்மானுக்கும் பொதுப்பெயராக வழங்கி வந்தபோதிலும் கலையென்ற பெயர் உழையில் ஆண் மானிற்கு மட்டும் வழங்கப்பட்டது. ஆணிற்கு மட்டுமே அழகிய

கிளைவிட்ட கொம்புகள் இருப்பதால் கலை என்ற பெயர் வழங்கப்பட்டது”[300] எனக் குறிப்பிடுவர். இதன் கொம்புகள் கிளைகளுடன் காட்சியளிக்கும். இதனை,

“புலிக்கோட் பிழைத்த கவைக்கோட்டு முதுகலை” (ஐங்.373:2)

“வறன்மரத் தன்ன கவைமருப் பெழிற்கலை” (அகநா.395:8)

“கவைத்தலை முதுகலை காலி னொற்றி” (குறுந்.213:2)

என்ற அடிகள் விளக்குகின்றன.

உழைமானைப் பிற மான் வகைகளிலிருந்து எளிதில் பிரித்துணர இதன் புள்ளிகள் நிறைந்த உடல் உதவுகின்றது. இதன் தோற்றத்தை, ‘புகருழையொருத்தல்,’[301] ‘புகர்க்கலை,’[302] ‘புள்ளியம்பிணை,’[303] ‘புள்ளி வரிக்கலை,’[304] ‘புள்ளியம் பொறிக்கலை’[305] என்ற பெயர்கள் உணர்த்துகின்றன.

மழை பெய்த காலத்தில் மான்கள் காட்டைக் கடந்து நாட்டில் வந்தியங்குவது இயல்பு. உழைமான் கூட்டம் வயல்வெளிகளில் எவ்வளவு தின்றழித்தாலும் குறைபாடின்றி விளையுமென நற்றிணை விளக்கும்.[306] புள்ளிகள் காணப்படுவதால் இதனைப் புள்ளிமான் எனவும் அழைத்தனர்.

**1.4.19.5. கடமா**

கலைமானினத்தில் மிகப்பெரியது கடமானாகும். கடமான் மலைப் பகுதியிலும் கானகத்திலும் வாழும். இது சிறுசிறு மந்தையாகக் காணப்படும். இதனை, “இனம் இனமாக ஐந்து முதல் பத்துவரை கடமை மான்கள் காணப்படும்”[307] என்பர் பி.எல்.சாமி. வேட்டுவர் கடமானை வேட்டையாட அலைப்பர். அப்பொழுது இம்மான் தனக்குப் புகலிடம் காணாது தவிப்பதை,

"வெட்சிக் கானத்து வேட்டுவ ராட்டக்

கட்சி காணாக் கடமா நல்லேறு" (புறநா.202:1-2)

என்ற அடிகள் உணர்த்தும். மாலை நேரத்தில் தன்இனத்தினின்றும் பிரிந்து தவித்த கடமாவும் உண்டு.[308] கடமா விளைநிலத்திற்கு அருகிலும் காணப்படும். இதனை,

"கடமை மிடைந்த துடவையஞ் சிறுதினைத்

துளரெறி நுண்டுகட் களைஞர் தங்கை" (குறுந்.392:4-5)

என்ற அடிகள் புலப்படுத்தும்.

சங்க இலக்கியம் ஐவகை மான்களைச் சுட்டியுள்ளது. எனினும் பல பாடல்களில் மான், ஏறு, பிணை, கலை, ஒருத்தல் போன்ற பொதுச்சொற்களால் இவை குறிக்கப்பட்டுள்ளன.

பொதுவாக, மான்கள் கூட்டமாகக் காணப்படும்.[309] இம்மான்களின் கண்கள் அழகுடையவை. அதனால்தான் அவை பெண்களின் கண்களுக்கு ஒப்பிட்டுரைக்கப்படுகின்றன.[310] முதன்முதலில் கிளைவிட்டு வளரும் மானின் கொம்பைப் பற்றி அகநானூறு குறிப்பிடுகின்றது.[311] மான்கள் நுட்பமாகக் கேட்கும் திறன் கொண்டவை. எனவே, இதன் செவியை, 'நுண்பொறி மான்செவி'[312] என்றனர். மானின் அடி, 'அடும்ப மலர்'[313] போன்று இருக்கும். இதனை, 'குளப்பு'[314] என்று கூறுவர். இது எளிதில் துயரமடையும் இயல்புடையது.[315] மருளும் தன்மையும் கொண்டது.[316] புல்வெளியில் தன் பிணையுடன் புணரும்.[317] பொதுவாக மரநிழலில் தங்கி ஓய்வெடுக்கும்.[318] மான்கள் 'குமிழங்கனி,'[319] 'நெல்லிக்காய்,'[320] 'மூங்கில்நெல்,'[321] 'இருப்பைப்பூ,'[322] 'அருகின் தண்டு,'[323] 'அருகங்கிழங்கு,'[324] 'தினை,'[325] 'வரகு,'[326]

'உழுந்து'[327] ஆகியவற்றை விரும்பியுண்ணும். பூக்கள் நிரம்பிய நீரைத் தன் மூச்செறிதலால் விலக்கியுண்ணும் தன்மையுடையது.[328] இவற்றால் மான்களின் இயல்பு புலப்படும்.

### 1.4.20. முயல்

தரைவாழ் விலங்குகளில் அழகான விலங்கு முயலாகும். சங்க இலக்கியங்களில் காட்டு முயல்களைப் பற்றிய செய்திகளே அதிகம் காணப்படுகின்றன. இது புன்புலத்தில் வாழும் தன்மை கொண்டது. இதனை,

"நறும்பூம் புறவி னொடுங்குமுய லிரியும்
புன்புல நாடன் மடமக" (ஐங்.421:2-3)

என்ற அடிகள் புலப்படுத்தும். ஊருக்கு அருகாமையிலும், மன்றங்களிலும் வாழும் முயல்கள் முல்லை நில ஊர்களில், வரகினைத் தின்று கொடிகளில் துயின்று எழுந்து, வீட்டு முற்றத்தே வைக்கப்பட்ட சிறிய சால்களிலுள்ள நீரைப் பருகியதை அகநானூறு குறிப்பிடுகின்றது.[329]

முயலின் நிறம், 'மறுநிறம்'[330] என்றும், இதன் கழுத்திலுள்ள கருப்புநிறப் பகுதி, 'கரும்பிடர்த்தலை'[331] என்றும் உரைக்கப்பட்டுள்ளது. இதன் காதுகள் நீளமாகக் காணப்படுவதால், 'நெடுஞ்செவிக் குறுமுயல்'[332] என்றனர். முயலின் கண்கள் நெல்லிக்கனியின் உருவை ஒத்துக் காணப்பட்டதை,

"சிறியிலை நெல்லிக் காய்கண் டன்ன
குறுவிழிக் கண்ண கூரலங் குறுமுயல்" (அகநா.284:1-2)

என்ற அடிகள் உணர்த்தும். இவற்றால் முயலின் தோற்றத்தை உணர்ந்துகொள்ள முடிகின்றது.

### 1.4.21. முளவுமா

இது காட்டில் வாழும் விலங்குகளில் ஒன்று. ‘முளவுமா’[333] என்பது முள்ளம் பன்றியைக் குறித்து வழங்கும் பெயராகும். முள்ளம் பன்றியின் கழுத்தில் அடர்த்தியாக முட்கள் காணப்படும்.[334] அதனால் இதனை, ‘எய்ம்மா’[335] என்றும் அழைப்பர். “இந்த விலங்கு காட்டுப்பன்றியை உருவிலும் தோற்றத்திலும் ஓரளவு ஒத்திருப்பதால் முள்ளம் பன்றி என்று தற்காலத்தில் அழைக்கின்றனர். ஆனால் பன்றி இனத்திற்கும் இதற்கும் யாதொரு தொடர்பும் கிடையாது.”[336] முள்ளையுடைய விலங்கு ஆதலால் ‘முளவுமா’ என்றும், எறியூசி போன்று மயிர்க்கற்றைகள் உடலில் நிறைய உடையதால் ‘எய்மான்’ என்றும் சங்ககாலத்தில் அழைக்கப்பட்டது. முள்ளம் பன்றி குகை, முழை போன்றவற்றை வாழ்விடமாகக் கொண்டது.[337] இவற்றால் இதன் வாழ்க்கை நிலையை அறியஇயலும்.

### 1.4.22. யானை

நிலவாழ் உயிரினங்களில் மிகவும் பெரியது யானையாகும். சங்கப் பாடல்களில் யானையைப் பற்றிய குறிப்புக்களே அதிகமாக இடம்பெற்றுள்ளன. பண்டைக்காலத்தில் அரசர்கள் யானைப் படைப்பிரிவு வைத்துப் பேணி வந்ததால், இது மிகவும் இன்றியமையாத விலங்காகக் கருதப்பட்டது. அரசர்கள் தம்மை நாடி வரும் இரவலர்களுக்கு யானைகளைப் பரிசாக அளிப்பதை வழக்கமாகவும் கொண்டிருந்தனர்.

யானை, தோற்றத்தில் மலையை ஒத்துக் காட்சியளிக்கும்.[338] யானைகள் கூட்டமாக வாழும். அக்கூட்டத்திற்குக் களிறு ஒன்று தலைமை வகித்துத் தன் கூட்டத்தைப் பாதுகாத்துச் செல்லும்.[339] இது, புழுதியைத் தானே தன்மீது

வாரிவீசிக் கொள்ளும் இயல்புடையது.[340] உண்ணாமல் வாடிய வயிறும், நீராடாத விரதத்தினையும் உடைய தவத்தினர் போலக் காட்டு யானைகள் மெலிந்து காணப்பட்டதுமுண்டு.[341] இவற்றால் காட்டு யானைகள் பற்றி அறிய முடிகின்றது.

யானையின் முகத்தில் மலையில் முத்துக்கள் சிதறியவை போன்று புள்ளிகள் காட்சியளிக்கும்.[342] இதன் முகத்திலுள்ள புள்ளியை, 'புகர்முகம்'[343] என்பர். இதனால் இது 'புகர்முக வேழம்' என அழைக்கப்பட்டது. இதன் பெரிய செவியை 'முறஞ்செவி'[344] என்று அழைப்பர்.

மனிதனின் கைபோல யானைக்குத் தும்பிக்கை செயல்படுகின்றது. இதனால் தும்பிக்கையை 'இரும்பிடித் தடக்கை'[345] என்று குறிப்பிடுவர். 'வரால்மீன்,'[346] 'பெருவங்கியம்'[347] போன்றும் தும்பிக்கை தோற்றமளிக்கும். மண்ணில் ஊன்றிய கொம்பினை அசைத்துப் பெயர்க்க இயலாத மதக்களிறு, தன் வாயில் நிறையுமாறு புகுத்திய வலி குன்றிய பெரிய கை, மலை முழைஞ்சினுள் நுழையும் பாம்பு போலத் தோன்றியது.[348] பாலை நிலத்தில் தன் கை வெந்தொழியும் என்று அஞ்சி நிலத்தைத் தீண்டாமல் சுருட்டிக் கொண்டது.[349] இதனால் யானைத் துதிக்கையின் நீளத்தை அறிந்துகொள்ள முடிகின்றது. துதிக்கையால் நீரைப் பருகி வீசுவதை,

"களிறுயிர்த் தன்ன கண்ணழி துவலை" (அகநா.163:7)

என்ற அடி விளக்கும்.

யானையின் கோரைப் பற்களே 'கோடு' என்று அழைக்கப்படுகின்றன. பாலை நிலத்து யானை வலியிழந்து காணப்பட்டாலும் அதன் கோடு மலையைக் குத்துமளவிற்கு உறுதியுடன் காணப்படும்.[350] தாழையின் அரும்பு போன்று கூர்மையாகத் தோன்றும்.[351] புலியைக் கொன்ற யானையின் கோடு

இரத்தம் தோய்ந்து காணப்படும்.[352] அதனால் இக்கோடு வாழைப்பூ போன்று காட்சியளிக்கும்.[353] இக்குருதி தோய்ந்த கோட்டினை மழைநீர் கழுவுவதுமுண்டு.[354] நன்கு முற்றிய கோட்டினுள்ளே முத்து இருக்கும் என்று நற்றிணை குறிப்பிடும்.[355] தன் கொம்புகளால் கலப்பையைப் போல ஊன்றித் தன் துதிக்கையை நிமிர்த்து நிலத்தே நிற்கும் வலிமையுடையது.[356]

யானையின் வாயினைக் 'கொடுங்கவுள் கயவாய்'[357] என்பர். இதன் காலை, 'நெடுந்தாள்'[358] என்று கூறுவர். அதனால்தான் ஓமைமரத்தின் சிவந்த அடிகூட ஆண்புலியோடு போர் செய்த யானையின் புண்ணையுடைய காலைப் போன்று காட்சியளித்ததாக நற்றிணை குறிப்பிடுகின்றது.[359] யானையின் வளைந்த கால், 'முடங்குதாள்'[360] எனப்படும். மனிதனைப் போன்று யானைக்கு மட்டுமே முழந்தாள் இருப்பதாகக் குறிப்பிடுவர். யானைக்கு முழந்தாள் இருப்பதனை,

"மூங்கில் மிசைந்த முழந்தா ளிரும்பிடி" (கலித்.50:2)

"முழந்தா ளிரும்பிடிக் கயந்தலைக் குழவி" (குறுந்.394:1)

"வயவுப்பிடி முழந்தாள் கடுப்பக் குழிதொறும்
விழுமிதின் வீழ்ந்தன கொழுங்கொடிக் கவலை" (மலைபடு.127-128)

என்ற அடிகள் விளக்கும். யானைக் காலின் அடிப்பகுதி, 'உரல்'[361] போன்றும், 'பறை'[362] போன்றும், 'வட்டமாகவும்'[363] காட்சியளிக்கும். சுரநெறிச் செல்லும் புதியர் சேற்றுநீரைக் கிண்டி அதில் ஊறிய நீரை உண்டு சென்ற கிணற்றைத் தன் பிடியின் அடிச்சுவடு எனத் தொட்டுப் பார்த்து களிறு சென்றது.[364]

யானையின் கால் நகங்கள் பெரியவை. ஆனால் உறுதியற்றவை. காட்டு நெறியிலுள்ள நடுகல்லை ஆள் என நினைத்து உதைத்ததால் சிதைவுற்ற

நகம், பெரிய பனை நுங்கின் தோடு போல ஒடிந்து கிடந்ததை அகநானூறு குறிப்பிடும்.[365]

காட்டில் காணப்படும் தனித்த ஆண் யானைகள் சில சூழ்நிலைகளில் மனிதர்களைக் கண்டால் கொல்லும் ஆட்கொல்லியாக மாறும் இயல்பினது. ஆட்கொல்லி யானை வழிச் செல்வோரை எதிர்பார்க்கும் தன்மையுடையது.[366] அவ்வாறு சுரநெறியில் காத்திருந்து அங்குவரும் அயலார் யாரையும் காணாது தான் கொண்டிருந்த சினத்தைப் பனை மரத்தின்மீது காட்டி மோதியது.[367] இதனால் ஆட்கொல்லி யானையின் சீற்றத்தை அறிந்துகொள்ள முடிகின்றது.

யானையின் முதுகு உராய்ந்ததால் செங்கல்லால் கட்டப்பட்ட அம்பலத்தின் விட்டமரம் வீழ்ந்து கூரையும் இடிந்து அழிந்ததை அகநானூறு குறிப்பிடுகின்றது.[368] இதன்வழி யானையின் உயரத்தை அறிய முடிகின்றது. யானையின் கண்கள் சிறியவை. ‘சிறுகண் யானை’[369] என்றும் அழைப்பர். யானைகளின் மதம் சில செடி கொடிகளின் இலைகளைத் தின்பதால் மிகுதியாகின்றது. குளகு என்ற செடியை மென்ற யானைக்கு மதம்மிகுந்ததாக மிளைப்பெருங்கந்தனும், பாலைபாடியபெருங்கங்கடுங்கோவும் குறிப்பிடுவர்.[370] யானையின் மதநீர் வண்டுகள் மொய்க்கும் தன்மை வாய்ந்தது.[371] யானைகள் மதம் உண்டாகும் காலத்தில் புணர்வு மேற்கொள்ளும்.[372] அதனால் துருகல்லைக் கூடப் பிடி என்று கருதிச் சேரநினைத்திருக்கின்றது.[373] இரு ஆண் களிறுகள் ஒரு பிடி யானைக்குச் சண்டையிடும்.[374] இவ்வகையில் இரு களிறுகள் ஒன்றோடொன்று பொருதலால் அடியில் பட்ட வேங்கை மரம் முறிந்தது. குறமகளிர் நின்றபடியே மலர் கொய்யத் தாழ்ந்தும் கிடந்தது.[375] யானை முறித்த யாம்பூவினை, வழிச் செல்லும் கூத்தரும் அணிந்து சென்றனர்.[376]

யானையின் தோல் கருமைநிறம் கலந்தது என்பதை,

"யிரும்பிடி மேஎந்தோ லன்ன விருள்சேர்பு" (மதுரைக்.634)

என்ற அடி உணர்த்தும். யானை, கீழே படுத்தும், நின்றுகொண்டும் தூங்கும். தூங்கும்பொழுது குறட்டை விடுவதை 'உயிர்ப்பு'[377] என்று குறிப்பிடுவர். யானை பெருமூச்சு விடுதலும் உண்டு.[378] தன் துதிக்கையைத் தூக்கிக் குரலிடுவது 'தூம்பு'[379] ஒலிப்பது போல இருக்கும். யானையின் ஓசையைப் 'பிளிறுதல்'[380] என்று கூறுவர். இது இடி போன்று கேட்கும்.

யானை தோற்றத்தில் பெரியதாக இருந்தாலும் நன்றாக நீந்தக் கூடியது.[381] இது மனிதனைப்போல வருத்தமடையும் தன்மை கொண்டது. காட்டில் பெண் யானையை இழந்த களிறு தழைகளை உண்ணாது வெறுத்து ஒதுக்கி வருத்தமடைந்ததையும் காணமுடிகின்றது.[382]

யானைகள் வெயிற்காலத்தில் வறட்சியினால் வெகுதொலைவு நீரைத்தேடி அலையும். கானல்நீரைக் கூடத் தண்ணீர் எனக் கருதி ஓடும்.[383] ஆண் யானை சிறு குளத்தில் தோண்டப்பட்ட குழியில் உண்ணற்காகாத கலங்கிய நீரால் கன்றினையும், பிடியையும் முதலில் கழுவிப் பின் எஞ்சிய சேற்றினைத் தன் உடம்பில் பூசியது. அதனால் களிறு நிறம் வேறுபட்டுத் தோன்றியது.[384] நீர்குடிக்கக் கருதிய யானை சுனையில் கைவிட்டது. நீரில்லாத அச்சுனை சுட்ட வெப்பத்தைத் தாங்கமுடியாமல் ஓடியது.[385] தான் நீர் உண்ணாவிட்டாலும் தன் பிணை உண்ணவேண்டும் என்று கருதிக் கல்லில் ஊறுகின்ற ஊற்று நீரை, நீண்ட துதிக்கையை நீட்டி முகந்து கொண்டு தன் பிடியானை முன்பு ஓடும் அன்பு உள்ளம் கொண்டதாகவும் விளங்குகின்றது.[386]

யானையை மரந்தூக்கவோ, விறகு பிளக்கவோ பயன்படுத்தும்பொழுது அதன் முதுகில் தழும்பு ஏற்படுவது இயற்கை. யானையின் முதுகில்

கயிற்றைக் கட்டியதால் அதற்குத் தழும்பு ஏற்பட்டது.[387] பிடி மிதித்ததால் ஏற்பட்ட தழும்பு வழுதுணங்காய் போன்று தோன்றியதால் 'வழுதுணைத் தழும்பன்'[388] என்ற பெயர் ஒரு தலைவனுக்கு ஏற்பட்டிருக்கின்றது.

கன்றுடன் இருக்கும் பிடியைக் களிறு காத்தல் இயல்பு. இதனைக் கண்ட புலி பயந்து செல்வதை அகநானூறு குறிப்பிடுகின்றது.[389] பிடியைத் தழுவி படுத்திருக்கும் களிற்றின்மீது கன்று ஏறி விளையாடும்.[390] யானையின் நெற்றியை 'மத்தகம்'[391] என்பர். ஆறலைக் கள்வர்களினால் கொல்லப்பட்டு, சுரநெறியில் இறந்த வழிப்போக்கர்களின் உடலைத் தழைகளை இட்டு மூடிவைப்பர். இதற்குப் 'பதுக்கை' எனப்பெயர். செயற்கையாய் இட்ட இப்பதுக்கை யானைக்கு நிழலைத் தந்தது.[392]

யானைகள் காட்டில் மரஞ்செடி கொடிகளின் தழைகளையும், இலைகளையும் பறித்துத் தின்னும். இதன் உணவினைக் 'கவளம்'[393] என்பர். 'ஓமைமரம்,'[394] 'எருவை,'[395] 'மூங்கில் முளை,'[396] 'பாசி,'[397] 'அதிரல் கொடி,'[398] 'பனங்குறுத்து,'[399] 'வேங்கைப் பூக்கள்,'[400] 'அரிசி,'[401] 'முல்லைக்கொடி'[402] போன்றவற்றை உணவாகக் கொள்ளும். யானை தினைப் பயிரை மேய்ந்த செய்திகளே மிகுதியான பாடல்களில் பாடப்பட்டுள்ளன.[403] யானை தன் கதுப்பின்கண் எறியும் கல்லை அடக்கியிருந்தது.[404] மூங்கில்காட்டில் தீப்பிடித்துச் சுட்டெரித்தபொழுது யானைகள் வேற்றிடங்களில் மேயச்சென்றதை மதுரைக்காஞ்சி விளக்குகின்றது.[405] அரண்மனை யானைகளைப் பொன்னாலாகிய ஆரங்களை அணிவித்து அழகுபடுத்துவர்.[406] காட்டில் உள்ள யானை பாடினியின் தாளத்துக்கேற்ப நாள்தோறும் உலவியதை முடத்தாமக்கண்ணியார் குறிப்பிடுவர்.[407] இவற்றால் யானையின் தோற்றத்தையும், அதன் வாழ்க்கை முறையையும் அறியஇயலும்.

### 1.4.23. வெருகு

'வெருகு' என்பது காட்டுப்பூனையைக் குறிக்கும். பிற விலங்குகளையும், மனிதர்களையும் வெருளச்செய்யும் பார்வையின் தோற்றத்தால் வெருகு என்ற பெயர் ஏற்பட்டிருக்கவேண்டும். இதனை,

"வெருக்குவிடை யன்ன வெருணோக்கு" (புறநா.324:1)

என்ற அடி விளக்கும். வெருகின் கண் இளம்பச்சை நிறமாகக் காணப்படுவதை,

"குவியடி வெருகின் பைங்கண் ஏற்றை" (அகநா.367:8)

என்ற அடி புலப்படுத்தும். இதன் கண்கள் இருளில் ஒளிரும் தன்மை கொண்டவை.[408] முல்லையும் மல்லிகையும் போன்று வெருகின் பற்கள் தோன்றும்.[409] இதன் குட்டிகள் தன் தாயினைச் சூழ்ந்து வாழும்.[410] வெருகு, கோழிகளை விரும்பி உண்ணும். முள் வேலிகளில் தங்கி, இருளில் வந்து கோழிகளைக் கவர்ந்து செல்லும்.[411] இதனால் கோழிகள் அஞ்சி, பாதுகாப்பாகப் புகுவதற்குரிய இடத்தை அறியாமல் தன் குஞ்சுகளைக் கூவி அழைக்கும் தன்மையைக் குறுந்தொகை குறிப்பிடுகின்றது.[412] சில வேளைகளில் இல்லில் உள்ள எலிகளையும் உண்ண ஆராயும்.[413] இவற்றால் வெருகின் வாழ்க்கை முறையினை அறிந்துகொள்ள முடிகின்றது.

## 1.5. நீர்வாழ்விலங்குகள்

நீர்வாழ்விலங்குகள் நீரில் வாழும் தன்மை கொண்டவை. பிறநிலங்களில் வாழ முடியாதவை. இவை வாழும் சூழ்நிலைக்கேற்ப நெய்தல்நிலமாகிய கடலில் மட்டும் வாழ்ந்து வந்தன.

### 1.5.1. பெருமீன்

'பெருமீன்' என்பது கடல்வாழ் விலங்காகும். இது திமிங்கிலத்தைக் குறித்துவந்தது. 'திமிங்கிலம்' என்ற சொல் சங்க இலக்கியத்தில் இடம்பெறவில்லை. எனினும், "விலங்கியலுக்கிணங்க திமிங்கிலம் கடல்வாழ் விலங்கு. ஆனால் அதனையும் தமிழர் பெருமீன், பனைமீன் என்றே குறித்தனர்"[414] என்ற க.ப.அறவாணன் கூற்றால் திமிங்கிலத்திற்குரிய வேறு சொற்களான பெருமீன், பனைமீன் இடம்பெற்றிருப்பதை அறியஇயலும். பெருமரம், பெருநாள், பெருஞ்சோறு, பெரும்பலி ஆகிய சங்கநூல் வழக்குகள் குறிப்பிட்ட தனிப்பட்ட ஒரு பொருளை விளக்குவதுபோல் பெருமீன், பனைமீன் என்பதும் ஒரு குறிப்பிட்ட பொருளைக் குறிக்கும் வகையில் திமிங்கிலத்தைக் குறித்துவந்தது எனக் கூற இடமுண்டு. அகநானூற்றில்,

"எறியுளி பொருத ஏமுறு பெருமீன்
புண்ணுமிழ் குருதி புலவுக்கடல் மறுப்பட
விசும்பணி வில்லிற் போகிப் பசும்பிசிர்த்
திரைபயில் அழுவம் உழக்கி உரனழிந்து
நிரைதிமில் மருங்கில் படர்தருந் துறைவன்" (அகநா.210:2-6)

என்ற பாடலடிகளில் பெருமீனைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. பரதவர் படகில் கயிற்றின் நுனியில் கட்டப்பட்ட எறியுளியையும் விளக்குகளையும் வைத்துக்கொண்டு கடலுக்குச் செல்வர். பெருமீனை வேட்டையாடுவர். எறியுளியால் தாக்கப்பட்ட பெருமீன், கடல் பரப்பெல்லாம் இரத்தம் மாறுபட வானவில் போலப் பாய்ந்து செல்லும். பாதுகாப்பைத் தேடும். இரத்தம் இழந்து துள்ளிக் குதித்துக் கடல் பரப்பை அலைக்கழிக்கும்.

அப்படி அலைக்கழிக்கும்பொழுது கடலில் மூழ்கி மூழ்கி எழும். தன்னுடைய மூடித்திறக்கக்கூடிய மூக்குவழியாக மூச்சுவிடும்பொழுது கடல்பரப்பின்மேல் நீரை வெகுஉயரத்திற்குப் பீச்சியடிக்கும். இறுதியில் உரனழிந்து மிதக்கும். இவ்வகையில், “எறியுளியால் தாக்கித் திமிங்கிலத்தையே பழைய காலத்திலும், சில காலத்திற்கு முன்னரும், வெளிநாடுகளிலும் வேட்டையாடி வந்தனர்.”[415] இவற்றால் எறியுளியால் வேட்டையாடப்படும் பெருமீன் திமிங்கிலம் ஆகும் என்பதை அறியஇயலும். எறியுளியால் தாக்கப்பட்ட திமிங்கிலம் சில நேரங்களில் தப்பியோடிப் பின் கடற்கரையில் இறந்து மிதக்கும். பரதவர் வேட்டையாடாமல் எளிதில் பெற்ற திமிங்கிலத்தை விற்றுக் கள் குடிப்பர் என்பதும் இவ்வகையில் வேட்டையாடப்பட்ட திமிங்கிலமாக இருக்க இடமுண்டு.[416]

### 1.5.2. பனைமீன்

பெருமீனைப் போல மற்றொரு வகைத் திமிங்கிலம் பனைமீன் ஆகும். மதுரைக் காஞ்சியில் ஓரிடத்தில் மட்டும் ‘பனைமீன்’[417] பற்றிய குறிப்பு உள்ளது. இப்பனைமீனைப்பற்றி, “இந்தியக் கடல்களில் நீலத்திமிங்கிலத்தைப் போன்று வேறு திமிங்கிலங்களும் உள்ளன. இவைகளில் ஒன்றாகப் பனைமீனைக் கொள்ளவேண்டும்”[418] என விளக்குவர். தினை என்ற சொல் சிறுமையையும், பனை என்ற சொல் பெரியதையும் குறிப்பது வள்ளுவர் கால வழக்கு.[419] எனவே பனை என்பது பெரியது எனக் கொண்டு பனைமீன் என்பதற்குத் திமிங்கிலம் என்று பொருள் கூற இடமுண்டு.

### 1.6. நீர்நிலவாழ்விலங்கு

நீரிலும் நிலத்திலும் வாழும் சில உயிரினங்கள் காணப்படுகின்றன. இவை இவ்விரண்டிலும் வாழ்வதற்கேற்ற தகவமைப்பைக் கொண்டுள்ளன. இந்நிலையில் வாழும் விலங்குகளை நீர்நிலவாழ் விலங்குகள் என்பர்.

#### 1.6.1. நீர்நாய்

சங்க இலக்கியத்தில் கூறப்பட்டுள்ள விலங்குகளில் நீரிலும், நிலத்திலும் வாழக்கூடிய ஒரே விலங்கு நீர்நாயாகும். அல்லியும், தாமரையும் நிறைந்த குளத்தில் மிகுதியாக வாழும்.[420] "இந்த நீர்நாய் பெரிய ஏரி, குளங்களின் கரைகளிலும், ஆறு, கால்வாய் அருகிலேயும் வாழ்வது. நீர் நிறைந்த வயல்களிலும், கடற்கழியிலும் வாழும் இயல்புடையது."[421] இதன் மூக்கிற்கு மேல் மயிர்க்கற்றை ஒரு கோடாக நீட்டிக் கொண்டிருப்பதால் 'வரிப்புறநீர்நாய்'[422] என்று குறிப்பிடப்படுகின்றது. நீர்நாய் என்று அழைக்கப்பட்டாலும் நாயினத்திற்கும் இதற்கும் யாதொரு தொடர்பும் இல்லை. "மீன்களை வேட்டையாடுவதன் காரணமாக நீர்நாய் எனப்பட்டதோ"[423] என ஐயம் தெரிவிப்பர் பி.எல்.சாமி. இதன் உடல் புலால் நாற்றம் வீசும் இயல்புடையது. வாளைமீனை இரையாகக் கொள்ளும்.[424] நீர்நாய், வாளைமீனை வேட்டையாடும்பொழுது கயத்தைக் கலக்கி அலைக்கழிப்பதை,

"ஒண்செங் குரலித் தண்கயங் கலங்கி
வாளை நீர்நாய் நாளிரை பெறூஉப்
பெறாஅ வுறையரா வராஅலின் மயங்கி" (புறநா.283:1-3)

என்ற அடிகள் உணர்த்தும். சில சமயங்களில் இது வாளைமீனை வேட்டையாடித் தின்னாமல் வெறுத்துப் பொய்கையில் துயில் கொள்வதும் உண்டு.[425] நெல்விளையும் வயல்களில் உள்ள வாளைமீன்களையும் உண்ணும்.[426] கழியிலுள்ள மீன்களைத் தின்று பொதும்பிற் பள்ளி கொள்வதை நற்றிணை குறிப்பிடுகின்றது.[427] இதனால் நிலத்திலும் வாழும் இயல்புடையது என்பதை அறியஇயலும். இதன் ஆண் ‘இரும்போத்து’ எனவும், பெண் ‘பிணவு’ எனவும், குட்டிகள் ‘பறழ்’ எனவும் பொதுப்பெயரால் குறிக்கப்பட்டுள்ளன. ஆண் நீர்நாய், பறழொடு தங்கியிருந்த தன் பிணவுக்கு இரை தேடியதை,

“குழற்காற் சேம்பின் கொழுமடல் அகலிலைப்
பாசிப் பரப்பிற் பறழொடு வதிந்த
உண்ணாப் பிணவின் உயக்கஞ் சொலிய
நாளிரை தரீஇய எழுந்த நீர்நாய்
வாளையோ டுழப்பத் துறைகலுழ்ந் தமையின்” (அகநா.336:1-5)

என்ற அடிகள் விளக்கும்.

## 1.7. பறக்கும் விலங்குகள்

குறுக்கே வளர்வதால் விலங்கு எனப் பெயர் பெற்றது. இவை, குறிப்பாகக் குட்டிபோட்டுப் பாலூட்டும் தன்மையன. பெரும்பான்மை விலங்குகள் கால்களால் நடந்து செல்பவை. ஆனால் சில விலங்குகள் தன் தோற்றத்திற்கேற்பச் சிறகுகளினால் பறந்துசெல்கின்றன. அதனால் இவற்றை ‘பறக்கும் விலங்குகள்’ எனக் குறிப்பிட இடமுண்டு.

### 1.7.1. அசுணம்

சங்க இலக்கியத்தில் இடம்பெறும் 'அசுணம்' என்பது ஒரு விந்தையான உயிரினமாகக் கருதப்படுகின்றது. இவ்உயிரினத்தைப் பறவை, விலங்கு என்று இருவகையாகக் குறிப்பிடுவர். இதனை, "அசுணம் ஒரு பறவையா அல்லது விலங்கா என்பதிலும் ஒரு மாறுபட்ட கருத்து இருந்தாலும், இந்த விலங்கு நல்ல இசையினைக் கூர்ந்து கேட்கும்"[428] என்பர் இரா.வசந்தகுமார்.

தொல்காப்பியர் காலத்தில் அசுணம் வாழ்ந்ததைப் பற்றிய குறிப்பு காணப்படவில்லை. சங்க இலக்கியத்தில் இது நான்கு பாடல்களில் குறிப்பிடப்படுகின்றது. இதனை,

"மணநாறு சிலம்பின் அசுணம் ஓர்க்கும்" (நற்.244:4)

"அசுணங் கொல்பவர் கைபோல் நன்றும்" (நற்.304:8)

"மறையிற்றன் யாழ்கேட்ட மானை யருளா" (கலித்.143:10)

"இருங்கல் விடரளை அசுணம் ஓர்க்கும்" (அகநா.88:12)

என்ற பாடலடிகள் விளக்கும். இதன் வாழிடமாக முழை என்ற மலைப் பிளவுகளை நற்றிணையும், அகநானூறும் குறிப்பிடுகின்றன.[429] இதனால் அசுணம் மக்கள் நடமாட்டமில்லாத இடங்களில் வாழும் தன்மையது என்பதை அறிய இயலும்.

சங்கப் பாடல்களில் அசுணம் என்ற சொல்தான் இடம் பெற்றிருக்கிறது. எனினும், நச்சினார்க்கினியரும், பின்னத்தூர் நாராயணசாமி ஐயரும் அசுணமா என்று விலங்காகக் காட்டுவர்.[430] இதனால் இவ்வசுணமா என்ற சொல் வழக்குச் சங்க காலத்திற்குப் பின்னர் ஏற்பட்டது என்று கூற இடமுண்டு. இதுவும்,

"மறையிற்றன் யாழ்கேட்ட மானை யருளா" (கலித்.143:19)

என்ற கலித்தொகையின் அடியில் உள்ள ‘மான்’ என்ற சொல்லின் அடியொற்றித் தோன்றியிருக்கக் கூடும். ஆனால் நற்றிணையில் வரும் அசுணம் என்ற சொல்லுக்குப் புள் என உரையெழுதுவர் ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை.[431] அகநானூற்றில் வரும் அசுணம் என்பதற்கு அசுணம் என அப்படியே பொருள் கூறுவர் ந.மு.வேங்கடசாமி நாட்டார்.[432] இதனால் உரையாசிரியர்களிடையே அசுணம் பற்றிக் கூறுவதில் ஒற்றுமை காணப்படவில்லை என்பதை உணரமுடிகின்றது.

உரையாசிரியர்கள் வழக்காகிய அசுணமாவில், “மா என்று இதன் பெயர் முடிவதால் விலங்கென்று கருதலாம்”[433] என்பர் பி.எல்.சாமி. நிலத்தில் வாழ்வன, நீரில் வாழ்வன, நிலத்திலும் நீரிலும் வாழ்வன, மரங்களில் வாழ்வன, விண்ணக வாழ்வன என உயிரினங்களை வகைப்படுத்திக் காட்டி, “இப்போது காணமுடியாத அசுணம் என்னும் பறவை இசை வேட்கை உடையதாகச் சுவைகெழுமக் குறிக்கும் செய்தி சங்க இலக்கியத்தில் உள்ளது”[434] எனக் கூறுவர் மு.வ. “சங்க இலக்கியத்தில் குறிப்பிடப்படும் ஒரு விந்தையான விலங்கு அசுணமா. இது விலங்கா? பறவையா? என்ற ஒரு ஐயம் இருந்தாலும் இதுபோன்ற ஒரு உயிரினம் இருந்ததா என்பதே ஐயத்திற்குரியது”[435] எனத் தன் ஐயத்தை வெளிப்படுத்திக் காட்டுவர் இரா.வசந்தகுமார். எனவே, அறிஞர்களிடையேயும் அசுணம் என்பது விலங்கு, பறவை என இருவேறுபட்ட கருத்து இருப்பதைக் காணமுடிகின்றது.

அசுணம் மலரின் தேனை வண்டுகள் உறிஞ்சும் ஓசையையும்,[436] யானையின் மதநீரில் ஒலிக்கும் வண்டின் ஓசையையும்[437] யாழிசை எனக் கேட்கும் தன்மை வாய்ந்தது. இதனை, “யாழொலியைக் கேட்டு மகிழ்தலும்,

பறையொலியைக் கேட்டுத் துன்புறுதலும் அசுணத்திற்கு இயல்பு"[438] என்று கலைக்களஞ்சியம் குறிப்பிடுகின்றது. யாழிசை கேட்ட அசுணத்தைப் பறையைத் தட்டி வேட்டையாடினர்.[439] "சங்க இலக்கியங்களில் அசுணமா என்ற பறவையைப் பற்றி எழுதுகிறார்கள். நல்ல இசைக்கு இது ஏங்குமாம். வேடுவர்கள் புல்லாங்குழல் இசைக்க அசுணமா பறந்துவரும். மேலேயே வட்டமடித்து வட்டமடித்து இசையை ரசிக்கும். கீழே வேடுவர்கள் தீ மூட்டுவார்கள். இசையை நிறுத்திப் பறைகளை அடித்ததும் தடுமாறி அவை நெருப்பில் விழும். செவிப்புலன் அவைகளின் மயானக் கதவு"[440] என்று விளக்குவர் சுகி.சிவம். "அசுணமா என்றதொரு பறவை உண்டு. அது யாழிசை கேட்டு இன்பமுறும். அதனைப் பிடிக்கவேண்டுமானால் இனிய யாழிசையால் அதனை இன்புறுத்தவேண்டும். திடுமென அவ் யாழிசையை நிறுத்திவிட்டுப் பறையைத் தட்டவேண்டும். ஓசை மாற்றத்தால் அதிர்ச்சியுற்ற அப்பறவை இறந்துவிடும்"[441] என இதனை வேட்டையாடிக் கையகப்படுத்தியதைச் சுட்டுவர் ச.சாம்பசிவனார். இவற்றால் மலைமுகடுகளில் வாழும் அசுணத்தை இறைச்சிக்காகவோ, வேறு காரணம் கருதியோ வேட்டையாடினர் என்று தெரிகின்றது. எனவே, மகுடிக்கு அடங்கும் பாம்பைப் போல மலைப்பிளப்புக் குகைகளில் வாழும் அசுணமும் யாழோசைக்குக் கட்டுப்பட்டு இன்பம் பெற்று பறையொலி கேட்டுத் துன்பமடைந்து இறந்துபட்டது என்பதை அறிய இயலும்.

சங்க இலக்கிய உரையாசிரியர்களும் அறிஞர்களும் அசுணத்தை அவரவர் பார்வையில் விலங்கு என்றும், பறவை என்றும் கூறிச் சென்றனரே தவிர, இது ஒரு குறிப்பிட்ட உயிரினம் என்று எவரும் வரையறுத்துக் கூறவில்லை. அசுணம் மலைப்பிளப்பில் வசித்தது. இது பறந்து செல்லும் இயல்புடையதாக விளங்கியது. இனிய இசையைக் கேட்டு மகிழ்ந்தும், பறை

போன்ற பெரும் ஓசையைக் கேட்டால் இறந்துபடுவதும் இதன் இயல்பாகக் காணப்படுகின்றது. உதாரணமாக மலைக்குகைகளில் மலைப்பிளப்பில் பெரும்பாலும் வாவல் என்ற வெளவால் தங்கியிருக்கும்.[442] இது விலங்கினத்தை சார்ந்தது. அசுணத்தை விலங்கு என்றும் பறவை என்றும் குறிப்பிடுவதாலும், மலைக்குகைகளில் தங்கியிருந்ததாலும் இதனை வாவலின் ஒருவகையாகக் கருத இடமுண்டு. எனவே அசுணம் என்பது ஒரு பறக்கும் விலங்கு என்பது நன்கு விளங்கும்.

### 1.7.2. வாவல்

சங்க இலக்கியத்தில் 'வாவல்' என அழைக்கப்படும் இவ்வுயிரினம் தற்காலத்தில் 'வெளவால்' என்று அழைக்கப்படுகின்றது. "பறவைகளைப் போல் இறகும், விலங்குகளைப்போல் பல்லும் உடையதால் வெளவால் பறக்கும் விலங்காகக் கருதப்படும்."[443] இவற்றுள் பழம் தின்னும் இனங்களும் வேட்டையாடி இறைச்சி உண்ணும் இனங்களும் உண்டு. மனித இரத்தத்தைக் குடிக்கும் வாம்பயர்(vampayer) எனப்படும் இரத்தக் காட்டேறி வெளவால்களும் காணப்படுகின்றன.[444] சங்க இலக்கியத்தில் பழந்தின்னி வாவல் பற்றிய செய்திகளே இடம்பெற்றுள்ளன. இது மரக்கிளைகளில் தலைகீழாகத் தொங்கிக் கொண்டிருக்கும்.

வாவல், பசை பொருந்திய தோலை நெய்யிற் தோய்த்தாற் போன்ற கரிய சிறகினையுடையது, இந்த வலிமையான சிறகே பறக்க உதவுகின்றது என்று அதன் தோற்றம் குறிப்பிடப்படுகின்றது.[445] மாலை நேரத்தில் இரை தேடச் செல்லும் இயல்புடையது. அதனால் மாலையின் வரவுக்காகத் தன் சிறகினை விரித்து வைத்திருப்பதை இரு பாடல்கள் சுட்டுகின்றன.[446] பகற்பொழுதில்

மாமரக் கிளையில் பற்றித் தொங்கிக் கொண்டிருக்கும்பொழுது நெல்லிக்கனியின் புளிச்சுவையைத் தான் பெற்றதாகக் கனவுகண்டது.[447] இது மா, பலா போன்ற பழங்களன்றி வேம்பின் பழத்தையும் விரும்பியுண்ணும்.[448] வேம்பின் பழத்தை வெறுத்த பொழுது இருப்பையின் பழத்தை விரும்பிக் கிளைகள் தோறும் பறக்கும்.[449] இது வாவலின் உணவு பற்றி அறியலாகும் செய்தியாகும்.

## 1.8. அழிந்துபட்ட விலங்குகள்

தமிழக நிலப்பரப்புக்களிலும் இந்திய அளவிலும் பலவித உயிரினங்கள் வாழ்ந்து வருகின்றன. இதனை, "பல்வேறு வகையான விலங்கினங்கள் இந்தியாவில் உள்ளன. ஏறக்குறைய 15,000 வகை விலங்கினங்கள் இங்குள்ளன. இவற்றில் 340 வகைப் பாலூட்டிகள், 1200 வகைப் பறவைகள், 420 வகை ஊர்வன, 140 வகை நீர்நில வாழ்வன, 2000 வகை மீன்கள், 5000 வகைப் பூச்சிகள், 4000 வகை மெல்லுடலிகள் மற்றும் முதுகெலும்பற்ற விலங்குகள் இந்த எண்ணிக்கையில் அடங்கும்"[450] என விளக்குவர் எஸ்.எம்.நாயர். இதனால் தற்காலத்தில் இந்தியாவில் 340 வகைப் பாலூட்டி விலங்குகள் வாழ்ந்துவருவதை உணர்ந்துகொள்ள முடிகின்றது. இவற்றில் இருபத்தைந்து வகைப் பாலூட்டிகள் தொல்காப்பியர் காலத்திலும், நாற்பத்தியாறு வகைப் பாலூட்டிகள் சங்க காலத்திலும் இடம்பெற்றுள்ளன.

சங்க இலக்கியத்தில் கூறப்பட்ட அசுணமும், ஆளியும் இன்று அழிந்துவிட்டன. அசுணத்தை இறைச்சிக்காகவும், வேறு காரணங்கருதியும் மக்கள் வேட்டையாடினர். மனிதர்களால் நெருங்கவும் வேட்டையாட முடியாத நிலையிலும் விளங்கிவந்த ஆளியும் எவ்விதத்திலோ அழிந்துபட்டது.

இனப்பெருக்கம் செய்ய இயலாமலும், இயற்கைச் சீற்றத்தாலும், உணவின்றியும் காலப்போக்கில் இவ்விலங்குகள் அழிந்திருக்க இடமுண்டு.

## 1.9. அழிவுக்கு இலக்காகியிருக்கும் விலங்குகள்

அசுணமும் ஆளியும் அழிந்துபட்டதைப் போன்று சங்க காலந்தொட்டு வாழ்ந்துவரும் பிற விலங்குகளும் அழிந்துபடும் நிலையில் உள்ளன. இந்தியாவில் முந்நூற்றி நாற்பது வகைப் பாலூட்டிகள் இருப்பதாகக் கூறப் பெற்றாலும், அதில் பல விலங்குகள் அழியும் நிலையில் உள்ளன. இவ்வழிவிற்கு முக்கியக் காரணம் காடுகள் அழிப்பாகும். மக்கட்தொகை பெருக்கத்தாலும், மனிதர்களின் தேவைகள் அதிகரித்ததாலும், வீடுகட்டவும், விவசாயம் செய்யவும், கால்நடைகளை மேய்க்கவும் இடம் தேவைப்பட்டதால் காடுகள் அழிக்கப்பட்டுவிட்டன. மேலும் தொழில்நுட்ப வளர்ச்சியும், மனித வளர்ச்சியும் இயற்கையின் வளங்கள் மீது நேரடித் தாக்குதல் தொடங்கியுள்ளன. இதனால் விலங்கினங்களின் உறைவிடங்கள் அழிக்கப்படுகின்றன. பொழுதுபோக்கு, உணவு, தோல், மயிர்க்கற்றை, கோடு மற்றும் இதர தேவைகளுக்காகக் காட்டு விலங்குகள் வரைமுறையற்ற அளவில் வேட்டையாடப்படுகின்றன.

தற்காலத்தில் பல்வேறு தொழிற்சாலைகளினால், நிலம், நீர், காற்று ஆகியவை மாசுபட்டு மனிதனின் உடல்நலத்தைப் பாதிப்பது மட்டுமன்றி விலங்குகளின் நலவாழ்வையும் பாதிக்கின்றன. தொழிற்சாலைக் கழிவுகள், ஏரிகள், ஆறுகள் மற்றும் கடலில் கலந்து நீர்நில வாழும் பல்வேறு உயிரினங்களை அழிக்கின்றன.

அழிவுக்குள்ளாகியுள்ள விலங்குகளை, "எண்ணிக்கையில் மிகவும் குறைந்து உறைவிடம் குறைக்கப்பட்டு அல்லது அழிக்கப்பட்டு அழிவினப் பாதையை நோக்கிச் செல்லும் விலங்கினங்கள் அனைத்தும் ஆபத்துக்கு இலக்கான விலங்குகள் ஆகும். அகில உலக இயற்கை மற்றும் இயற்கை வளங்கள் பாதுகாப்பு மையம் ஆபத்துக்குள்ளாகியிருக்கும் விலங்குகளின் பெயர்களைச் சிவப்புக் குறிப்புப் புத்தகத்தில்(Red data book) வெளியிட்டுள்ளது. இந்தியா தனது வன உயிர்கள் பாதுகாப்புச் சட்டம் 1972-ன்படி நான்கு அட்டவணைகளை வெளியிட்டு அதில் பாதுகாக்கப்படவேண்டிய இனங்களைக் குறிப்பிட்டுள்ளது. அட்டவணை 1-ல் சட்டப்படி பாதுகாக்கப்படவேண்டிய இனங்களின் பெயர்கள் தரப்பட்டுள்ளன. விலங்குகளின் வகைப்பிரிவுகளின் சரியான நிலையைக் குறிப்பிடும்பொருட்டு அவ்வப்போது இது திருத்தியமைக்கப்படுகின்றது. தற்போதைய நிலவரப்படி இந்தியாவில் 81 வகைப் பாலூட்டிகள், 38 வகைப் பறவைகள், 18 வகை நிலநீர் வாழ்வன மற்றும் ஊர்வன ஆபத்துக்குள்ளாகியிருக்கும் விலங்கினங்கள் ஆகும்"[451] என்று எஸ்.எம்.நாயர் சுட்டிக்காட்டுவர். இதனால் தற்பொழுது இந்தியாவில் எண்பத்தியொரு வகைப் பாலூட்டி விலங்குகள் அழிவுக்கு இலக்காகியிருப்பதை உணரமுடிகின்றது. இதில் சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ள விலங்குகளும் அடங்கும். எனவே விலங்குகளைப் பாதுகாப்பது இன்றியமையாதது.

**தொகுப்புரை**

தொல்காப்பியத்தில் மா, விலங்கு என்ற பொதுப்பெயர்கள் சுட்டப்பட்டுள்ளன. மூவரி அணில், கவரி, எருமை, ஒட்டகம், கழுதை, குதிரை, குரங்கு, முசு, ஊகம், கேழல், நரி, நாய், புல்வாய், நவ்வி, உழை, மரை, கடமை, முயல், மூங்கா, யானை, வெருகு போன்ற விலங்குகளின் சிறப்புப் பெயர்களும், ஆடு, ஆநிரை, எலி, புலி என்ற நான்கு விலங்குகளின் பொதுப்பெயர்களும் என இருபத்தைந்து விலங்குகளின் பெயர்கள் இடம்பெற்றுள்ளன.

தொல்காப்பியர் காலத்தில் வாழ்ந்த இருபத்தைந்து விலங்குகளும், சங்ககாலத்திலும் வாழந்திருக்கின்றன. இவை தவிர அத்திரி, அரி, ஆளி, எண்கு, முளவுமா, பெருமீன், பனைமீன், நீர்நாய், அசுணம், வாவல் என்பன போன்ற பத்து விலங்குகள் சங்கஇலக்கியத்தில் மட்டும் இடம்பெற்றுள்ளன. அணிலில் வெளில், ஆட்டில் வெள்ளாடு, செம்மறி, வருடை, ஆநிரையில் ஆமா, எலியில் இல்லெலி, வெள்ளெலி, கருப்பைஎலி, நாயில் செந்நாய், கோணாய், புலியில் வரிப்புலி, பொறிப்புலி, புள்ளிப்புலி என்ற ஏழு விலங்குகளின் வகைகளாகப் பதினான்கு விலங்குகள் சுட்டப்பட்டுள்ளன. தொல்காப்பியர் கால ஆடு, எலி, புலி போன்ற விலங்குகள், சங்ககாலத்தில் அதன் வகைகளில் ஒன்றாகவே சுட்டப்பட்டுள்ளன.

சங்ககால விலங்குகள் நிலவாழ் விலங்குகள் (நாற்பத்தொன்று), நீர்வாழ் விலங்குகள் (இரண்டு), நீர்நில வாழ்வன (ஒன்று), பறக்கும் விலங்குகள் (இரண்டு) என்ற அடிப்படையில் நாற்பத்தாறு விலங்குகள் உள்ளன. அவ்நாற்பத்தியாறு விலங்குகளின் இயல்பும், அவற்றின் வாழ்க்கை முறையும் விளக்கம் பெறுகின்றன.

ஆளி சிங்கத்தின் சிற்றினமாக விளங்கியது. கவரி என்பது மானல்ல, அது ஆநிரைகளில் ஒன்று என்னும் செய்தி கண்டறிந்துரைக்கப்பட்டுள்ளது.

அத்திரி வெளிநாட்டில் இருந்து இறக்குமதி செய்யப்பட்ட விலங்காகும். பண்டைத் தமிழகத்தில் குதிரைகள் மிகுதியாக இடம்பெற்றிருந்தபொழுதும், போரின் காரணமாகவும், போக்குவரத்தின் பயன் கருதியும் இவற்றை வெளிநாடுகளிலிருந்தும் இறக்குமதி செய்துள்ளனர்.

சங்ககால மக்கள் இறைச்சிக்காகப் பன்றிகளை இல்லத்தில் வளர்த்துள்ளனர். நாயினத்தில் மிகவும் வலிமைபெற்றதாக கோணாய் விளங்கியது. சங்கப்பாக்களில் யானையைப் பற்றிய செய்திகள் மிகுதியாகக் காணப்படுகின்றன.

அசுணம் வாவலின் இனமாகும். தற்காலத்தில் அசுணம், ஆளி இரண்டும் இறந்துபட்டன. பிற விலங்குகளும் அழிவுக்கு இலக்காகி உள்ளமை குறிப்பிடத்தக்கது.

## சான்றெண் விளக்கம்

1. ஆசிரியர் குழு, கலைக்களஞ்சியம் தொகுதி 1, ப.363
2. ஆசிரியர் குழு, க்ரியாவின் தற்காலத் தமிழகராதி, ப.943
3. தொல்.950
4. மேலது.964
5. மேலது.960
6. மேலது.964
7. பின்னிணைப்பு - 2
8. பின்னிணைப்பு - 3
9. பின்னிணைப்பு - 4
10. புறநா.246:4
11. பெரும்பாண்.83-85
12. புறநா.307:4-5
13. குறுந்.49:1
14. மேலது.41:3-4
15. ந.மு.வேங்கடசாமிநாட்டார்(உரை.ஆ), அகநானூறு, ப.37
16. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப.393
17. அகநா.109:5-6
18. மேலது.12:7-8
19. பி.எல்.சாமி, கம்பன் காவியத்தில் உயிரினங்கள் ஓர் அறிவியல் விளக்கம், ப.55

20. மேலது, ப.55

21. அடியாருக்கு நல்லார்(உரை.ஆ.), சிலப்பதிகாரம், ப.85

22. மயிலை.சீனி.வேங்கடசாமி, சங்ககாலத் தமிழர் வாணிகம், ப.26

23. மேலது, ப.26

24. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப.454

25. நற்.278:7, பரி.10:16, அகநா.120:10, 350:6

26. பின்னத்தூர் நாராயணசாமி(உரை.ஆ), நற்றிணை, ப.140

பொ.வே.சோமசுந்தரனார்(உரை.ஆ), ஐங்குறுநூறு, ப.628

ந.மு.வேங்கடசாமிநாட்டார்(உரை.ஆ), அகநானூறு, ப.238

27. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப.274

28. வீ.சொக்கலிங்கம்(ப.ஆ.), ஆசிரிய நிகண்டு, ப.198

29. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப.275

30. மேலது, ப.273

31. ஆசிரியர் குழு, கழகத் தமிழகராதி, ப.816

32. மேலது, ப.183

33. ந.மு.வேங்கடசாமிநாட்டார்(உரை.ஆ), அகநானூறு, ப.238

34. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப.274

35. பதிற்.38:10

36. பெரும்பாண்.448-449

37. கலித்.13:17

38. இரா.வசந்தகுமார், அறிவியல் கண்ணோட்டத்தில் சங்க இலக்கிய விலங்குகள், ப.385

39. வா.நா.சாமி, விலங்குகளின் பல்வகை வேறுபாடு, ப..183

40. அ.மணாளன், தினகரன் இணைப்பிதழ்(31.7.2005), ப.21

41. கலித்.103:47, 111:5, 113:7, 113:9, 115:4

42. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப.449

43. சிறுபாண்.197

44. ஐங்..238:1-2

45. பின்னத்தூர் நாராயணசாமி(உரை.ஆ), நற்றிணை, ப.213

ந.மு.வேங்கடசாமிநாட்டார்(உரை.ஆ), அகநானூறு, பக்.185, 323

46. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப.449

47. அகநா.101:4-5

48. புறநா.33:20-22

49. கலித்.50:4-5

50. குறுந்.187:1-3

51. ஐங்..287:1-2

52. கலித்.43:12-14

53. அகநா.378:6-7

54. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப.29

55. தொல்காப்பியம், பேராசிரியர்(உரை.ஆ), ப.182

56. நச்சினார்க்கினியர்(உரை.ஆ), பத்துப்பாட்டு மூலமும் உரையும், ப.654

57. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப.28

58. வீ.சொக்கலிங்கம்(ப.ஆ), ஆசிரிய நிகண்டு, ப.232

59. தினத்தந்தி நாளிதழ்(19.3.2005), ப.7

60. நச்சினார்க்கினியர்(உரை.ஆ), பத்துப்பாட்டுமூலமும் உரையும், ப.544
61. ந.மு.வேங்கடசாமிநாட்டார்(உரை.ஆ), சிலப்பதிகாரம், ப.516
62. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப.59
63. வீ.சொக்கலிங்கம்(ப.ஆ.), ஆசிரிய நிகண்டு, ப.210
64. நற்.205:1-5
65. வீ.சொக்கலிங்கம்(ப.ஆ.), ஆசிரிய நிகண்டு, ப.211
66. காங்கேயர், உரிச்சொல் நிகண்டு, ப.18
67. ந.மு.வேங்கடசாமிநாட்டார்(உரை.ஆ), சிலப்பதிகாரம், ப.516
68. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப.274
69. பின்னத்தூர் நாராயணசாமி(உரை.ஆ), நற்றிணை, ப.258
70. மு.வரதராசன், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, ப.420
71. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப.274
72. இரா.வசந்தகுமார், அறிவியல் கண்ணோட்டத்தில் சங்க இலக்கிய விலங்குகள், ப.440
73. மா.இராசமாணிக்கனார், பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப.690
74. ஆசிரியர் குழு, கழகத் தமிழகராதி, ப.803
75. வீ.சொக்கலிங்கம்(ப.ஆ.), ஆசிரிய நிகண்டு, ப.215
76. புறநா.385:1-3
77. க.ப.அறவாணன், அற்றைநாட் காதலும் வீரமும், ப.237
78. இரா.வசந்தகுமார், அறிவியல் கண்ணோட்டத்தில் சங்க இலக்கிய விலங்குகள், ப.14
79. கலித்.103:12, 105:10-19

80. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப.447

81. அ.திருமலை முத்துச்சாமி, இலக்கியத்தில் விலங்குகளும் பறவைகளும், ப.22

82. ஐங்..271:3, 445:3

83. கலித்.108:48-49

84. பொருந.150-152, கலித்.81:36-37

85. கலித்.116:14

86. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப.83

87. உ.வே.சா.(உரை.ஆ.), குறுந்தொகை, ப.655

88. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப.60

89. மேலது, ப.83

90. ச.வே.சுப்பிரமணியன்.(தெ.உரை.), தொல்காப்பியம், நூற்.1516, 1535, 1538, 1557

91. பரிமேலழகர்(உரை.ஆ.),திருக்குறள்(969), ப.297

92. அ.திருமலை முத்துச்சாமி, இலக்கியத்தில் விலங்குகளும் பறவைகளும், ப.19

93. இரா.வசந்தகுமார், அறிவியல் கண்ணோட்டத்தில் சங்க இலக்கிய விலங்குகள், ப.201

94. வெ.வரதராசன், தமிழரின் ஒப்பனைக் கலைத்திறன், ப.92

95. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப.85

96. வீ.சொக்கலிங்கம்(ப.ஆ.), ஆசிரிய நிகண்டு, ப.293

97. புறநா.132:4-9

98. பதிற்.11:20-23

99. எஸ்.எம்.நாயர், அழிவுக்கு இலக்காகி இருக்கும் இந்திய விலங்குகளும் அவற்றைப் பாதுகாக்கும் முறைகளும், ப.61

100. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப.460

101. பி.எல்.சாமி, கம்பன் காவியத்தில் உயிரினங்கள் ஓர் அறிவியல் விளக்கம், ப.67

102. நற்.192:5

103. அகநா.81:1

104. மேலது.149:4

105. மேலது.8:2

106. மேலது.201:18

107. மேலது.257:21

108. மேலது.15:13-14

109. மேலது.267:6-8, 275:11-15, 95:7-10

110. மேலது.149:1-6

111. மேலது.81:1-6, 247:4-8

112. மேலது.112:1-4

113. மேலது.72:2-7

114. மேலது.8:1-4

115. நற்.125:1-6, அகநா.88:13-15

116. நற்.391:4

117. ஐங்..98:1-2

118. எஸ்.எம்.நாயர், அழிவுக்கு இலக்காகி இருக்கும் இந்திய விலங்குகளும் அவற்றைப் பாதுகாக்கும் முறைகளும், ப.63

119. அகநா.73, புறநா.273, 303

120. அகநா.72

121. மேலது.36, 115, 253

122. இரா.வசந்தகுமார், அறிவியல் கண்ணோட்டத்தில் சங்க இலக்கிய விலங்குகள், ப.56

123. அகநா.316:1-7

124. மேலது.91:9-17

125. சிறுபாண்.41-50

126. ஐங்..94:1-3

127. பட்டினப்..13-15

128. அகநா.122:12-14

129. குறுந்.107:3-4

130. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப.383

131. புறநா.322:2-3

132. மேலது.384:4-5

133. அகநா.133:1-5

134. தினமலர் நாளிதழ் (18.8.2005), ப.8

135. சிறுபாண்.154-155

136. எஸ்.எம்.நாயர், அழிவுக்கு இலக்காகி இருக்கும் இந்திய விலங்குகளும் அவற்றைப் பாதுகாக்கும் முறைகளும், ப.60

137. அகநா.207:5

138. புறநா.392:9

139. அகநா.343:12

140. பெரும்பாண்.80

141. அகநா.343:12

142. நற்.63:9

143. ஐங்..449:2

144. பரி.9:51

145. கலித்.31:13

146. அகநா.360:11

147. மேலது.400:4-13

148. இரா.வசந்தகுமார், அறிவியல் கண்ணோட்டத்தில் சங்க இலக்கிய விலங்குகள், ப.78

149. பெரும்பாண்.319-321

150. மதுரைக்.321-323

151. சிறுபாண்.110-111

152. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப.2

153. மேலது, ப.2

154. நற்.151.5:11

155. ஐங்..271:1-2

156. நற்.22:1-7

157. குறுந்.335:1-4

158. நற்.355:3-5

159. மேலது.251:2-4

160. குறுந்.342:1

161. அகநா.82:5

162. குறுந்.385:1

163. மேலது.153:1-2, 385:1-5

164. அகநா.267:9-12

165. மேலது.121:11-15

166. நற்.119:4-6

167. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப.21

168. கலித்.43:12-13

169. அகநா.288:9-14

170. குறுந்.373:4-8

171. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப.30

172. ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை(உரை.ஆ), புறநானூறு, தொ.1. ப.244

173. நச்சினார்க்கினியர்(உரை.ஆ), பத்துப்பாட்டு மூலமும் உரையும், ப.656

174. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப.35

175. நற்.233:1-3

176. மேலது.326:1-4

177. பரி.15:38

178. மலைபடு.311-314

179. பொருந.224

180. நற்.334:1-5

181. அகநா.141:26-29

182. ஐங்..277:1-3

183. குறுந்.38:1-3

184. ஐங்..278:2-4

185. மேலது.279:1-3

186. மேலது.275:1-3

187. மேலது.276:1-3

188. அகநா.241:5-16

189. குறுந்.288:1-2, அகநா.182:14

190. அகநா.288:8-15

191. மேலது.378:19-24

192. மேலது.382:9-13

193. புறநா.200:1-5

194. புறநா.158:20-25, அகநா.352:1-7

195. புறநா.128:1-4

196. குறுந்.278:4-7

197. நற்.168:2-6

198. அகநா.2:4-9

199. மேலது.182:13-18

200. ஐங்..273:1-3

201. நற்.119:1

202. பெரும்பாண்.110

203. ஐங்..267:1

204. ஐங்.263:1-3, அகநா.178:1-13

205. அகநா.84:6

206. நற்.336:4

207. அகநா.178:1

208. மேலது.223:3-5

209. ஐங்..264:1-3

210. நற்.386:1-5

211. ஐங்..261:1-2

212. மேலது.268:1-4

213. மேலது.262:1-3

214. அகநா.88:1-6

215. மலைபடு.193-196

216. அகநா.94:9-12

217. மலைபடு.343-344

218. ஐங்..267:1-3

219 பட்டினப்..75-76

220. பரி.20:50-51

221. இளம்பூரணர்(உரை.ஆ), தொல்காப்பியம், ப.202

222. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், பக்.411-412

223. மேலது. ப.412

224. அகநா.375:3-6

225. நச்சினார்க்கினியர்(உரை.ஆ), பத்துப்பாட்டு மூலமும் உரையும், ப.558

226. நற்.352:2-9

227. மேலது.164:6-11

228. புறநா.291:1-4

229. நற்.349:7-8

230. அகநா.193:7-11

231. நற்.285:5

232. பெரும்பாண்.326

233. சிறுபாண்.16-21

234. மலைபடு.42-46

235. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப.181

236. ஐங்..354:1-3

237. மேலது.397:1-3

238. அகநா.285:3-14

239. மேலது.111:10-12

240. ஐங்..323:1-4

241. நற்.103:4-9

242. பின்னத்தூர் நாராயணசாமி(உரை.ஆ), நற்றிணை, ப.104

243. ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை(உரை.ஆ), நற்றிணை, ப.323

244. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப.172

245. நற்.82:7-11

246. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப.257

247. அகநா.168:12

248. மேலது.99:1

249. மேலது.322:11

250. அகநா.112:7, 251:18, குறுந்.253:5

251. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப.258

252. அகநா.147:6

253. நற்.205:3

254. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப.259

255. புறநா.170:7

256. மேலது.157:10-12

257. நற்.55:2-3

258. புறநா.398:10, 86:4

259. புறநா.202:18-20, ஐங்.396:1,

260. குறுந்.47:1-3

261. குறுந்.328:5-8, கலித்.4:1

262. கலித்.43:24-25

263 அகநா.99:1-2

264. மேலது.277:5-7

265. நற்.174:2-5

266. ஐங்..246:1-6

267. நற்.2:2-6

268. அகநா.329:9-13

269. குறுந்.141:3-8

270. அகநா.277:5-12, 8:5-8, 322:10-11, 72:12-17

271. ஐங்..274:1-3

272. அகநா.147:1-10, புறநா.90:3, 323:1-2, 23:18-22, மலைபடு.404-405

273. நற்.383:1-6

274. நற்.144:1-4, 36:1-4, 47:1-6, 85:4-7, 314:9-12, 148:6-12, 255:4-7, 158:5-9, ஐங்.216:1-4, கலித்.48:6-7, அகநா.39:11-12, 379:23-27, 221:10-14, 22:14-15, 45:3-6, 92:2-4, 261:12-13, 362:3-6, 228:10-13, 118:7-10, 112:5-7, 232:1-5, புறநா.52:1-4, 100:7-9, 237:16-17, மதுரைக்.643-644

275. நற்.151:1-4, 333:3-5, 192:1-7, 336:7-11, 217:2-5, 39:4-7, குறுந்.343:1-4, பதிற்.41:7-13, கலித்.38:69, 46:3-9, 52:1-4, 49:1-9, அகநா.308:1-6, 227:5-12, 12:6-13, 251:15-19, 291:1-7, 268:1-5, 332:1-9, 347:9-16, மலைபடு.307-310

276. அகநா.398:22-24

277. நற்.332:6-7, 2:1-6, 29:1-5, குறுந்.237:3-7, அகநா.218:9-13, புறநா.255:1, 73:6-11, மலைபடு.302-304

278. குறுந்.253:5-8

279. புறநா.190:6-12, அகநா.238:1-10, நற்.154:4-12, அகநா.389:15-24, 357:1-10, 29:1-5, 3:6-13

280. அகநா.252:1-4

281. ச.வே.சுப்பிரமணியன்(தெ.உரை.), தொல்காப்பியம், நூற்.1531

282. மேலது, நூற்.1532

283. அகநா.52:1-8, மலைபடு.305-306

284. ந.மு.வேங்கடசாமிநாட்டார்(உரை.ஆ), அகநானூறு, ப.119

285. பரி.14:11-22

286. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப.85

287. அகநா.304:6-10

288. மேலது.284:10

289. பட்டினப்..243-245

290. புறநா.374:1-2

291. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப.106

292. அகநா.39:14-16

293. மேலது.373:2

294. குறுந்.321:5

295. மேலது.317:1

296. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப.107

297. மேலது, ப.113

298. நற்.43:2-3

299. குறுந்.235:3-5

300. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப.114

301. அகநா.219:13

302. புறநா.152:3

303. அகநா.184:12

304. நற்.265:2

305. அகநா.97:1

306. நற்.311:1-2

307. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப.132

308. புறநா.157:9-10

309. பதிற்.89:1-5, அகநா.8:13-14, 395:8-12, 82:5-8, 121:12-15, 367:3-5, புறநா.374:6-7

310. நற்.101:8-9, ஐங்.394:4, கலித்.131:12, 69:4, 57:2, 30:9-12, 93:8-9, 58:2, 56:16, புறநா.354:9-10, முருகு.215-216, சிறுபாண்.30-31, குறிஞ்சிப்.25-26

311. அகநா.151:6-9, 283:4-5, 133:16-18

312. கலித்.43:16

313. குறுந்.243:1

314. பொருந.4, நற்.126:2-8, கலித்.56:31-33

315. புறநா.244:1-3, பரி.6:4-5, நற்.37:5-8, 61:1-4, ஐங்.326:1-2

316. அகநா.250:9, 32:13-16, 47:3-8, கலித்.108:46, 146:32-35, ஐங்.492:3

317. நற்.256:7-11, 69:4-12, 204:9-12, குறுந்.183:1-7, 65:1-3, பதிற்.23:11-15, புறநா.320:3-9

318. குறுந்.232:3-6, 213:2-7, அகநா.34:2-9, 353:10-15, 373:1-6, 287:4-5, புறநா.297:1-5

319. நற்.6:6-9

320. குறுந்.317:1-4, 235:3-5, அகநா.291:16-21, 69:6-8, 399:13-15, புறநா.170:1-2

321. அகநா.129:3-9

322. மேலது.321:4-6

323. குறுந்.256:1-8

324. அகநா.23:7-9

325. குறுந்.392:4-5

326. குறுந்.220:1-5, 282:1-3, மதுரைக்.272-276

327. குறுந்.68:1-4

328. அகநா.184:7-14

329. மேலது.284:1-7, 394:15-16

330. மேலது.141:7

331. புறநா.333:1-5

332. பெரும்பாண்.115

333. ஐங்..364:1

334. நற்.98:1

335. புறநா.177:13

336. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப.402

337. மலைபடு.300

338. குறுந்.36:1-2, 111:4-5, மலைபடு.347-348, 384-385

339. நற்.317:1-2, குறுந்.180:1-4, 255:1-5, 179:4-7, அகநா.323:8-9, 109:4-6

340. குறுந்.279:5-6

341. அகநா.123:1-5

342. நற்.176:3-6, குறுந்.284:1-3, அகநா.108:2-5

343. நற்.248:1-2

344. நற்.310:1-3, 376:1, குறுந்.76:4, 246:2, கலித்.42:2

345. குறுந்.360:5, பொருந.40

346. மலைபடு.456-458

347. ஐங்..377:1-2, புறநா.52:15, மலைபடு.61

348. அகநா.391:10-14

349. ஐங்..327:1-3

350. குறுந்.169:1

351. நற்.19:2-5

352. மேலது.294:5-7

353 மேலது.225:1-3

354. மேலது.246:1-5

355. மேலது.324:4

356. கலித்.8:1-5

357. நற்.141:1

358. அகநா.359:10

359. நற்.279:5-8

360. அகநா.63:5

361. கலித்.21:1-3

362. புறநா.263:1-2

363. மேலது.234:2

364. அகநா.137:1-4

365. மேலது.365-4-6

366. மேலது.325:17-21

367. நற்.126:2-8, கலித்.56:31-33

368. அகநா.167:17-20

369. மேலது.24:13

370. குறுந்.136:3-4, கலித்.43:20-23

371. கலித்.66:3-4

372. நற்.232:1-6, 194:2-8, குறுந்.215:3-7, 308:1-6, 332:4-6, 346:1-3, ஐங்.416:2-4, கலித்.54:13-14, அகநா.368:8-13

373. ஐங்..239:1-3

374. கலித்.53:2-4

375. குறுந்.208:1-4

376. மலைபடு.429

377. நற்.51:8-11, 222:7-10, குறுந்.247:4-6, அகநா.302:1-4, 301:16-17, 328:11-15, பெரும்பாண்.371-372

378. நற்.89:5-11, குறுந்.359:3-4, 142:3-5, அகநா.119:16-20

379. அகநா.111:9, பரி.8:17-21

380. நற்.318:2-9, குறிஞ்சிப்.162

381. அகநா.43:1-5

382. மேலது.392:1-3

383. கலித்.7:1-4, 24:10-14, அகநா.29:15-19, 179:3-6, 199:2-4

384. அகநா.121:3-9, 212:8-9

385. கலித்.12:3-6

386. நற்.186:1-4

387. அகநா.128:10-11

388. மேலது.227:16-17

389. மேலது.128:2-14

390. மேலது.197:13-18

391. கலித்.44:4-6

392. குறுந்.77:2-4

393. அகநா.157:8

394. நற்.137:5-9, குறுந்.79:1-2, 112:3-4, 307:4-9, 396:3-7, அகநா.59:7-9, 229:3-8, 335:4-8, 397:10-13

395. குறுந்.170:12

396. நற்.7:7-9, 116:3-6, குறுந்.179:4-7, கலித்.50:1-3, அகநா.85:5-9, 218:1-2, 148:12-14, புறநா.80:7

397. அகநா.91:3-9

398. மேலது.157:6-9

399. மேலது.87:16-18

400. மேலது.349:10-14

401. புறநா.337:13-16

402. குறுந்.348:1-3

403. நற்.108:1-5, 393:1-7, குறுந்.225:1-2, 333:1-4, 54:2-3, 357:5-8, கலித்.41:5-8, 52:13-14, அகநா.308:8-10, 309:12-15, 102:1-9, 292:7-14, 309:12-15, 392:11-18, 348:8-13, பெரும்பாண்.51-56, குறிஞ்சிப்.153-177, மலைபடு.203-210, 297-299

404. புறநா.30:8

405. மதுரைக்.302-305

406. கலித்.42:16-18

407. பொருந.47-49

408. அகநா.73:3-4

409. குறுந்.240:3, அகநா.391:1-2, புறநா.17:8-9

410. அகநா.297:12-16

411. மேலது.367:6-13, புறநா.326:1-6

412. குறுந்.139:1-4

413. மேலது.107:1-7//

414. க.ப.அறவாணன், அற்றைநாட் காதலும் வீரமும், ப.106

415. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப.431

416. நற்.239:1-3

417. மதுரைக்.375

418. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப.438

419. பரிமேலழகர்(உரை.ஆ), திருக்குறள்.104

420. அகநா.16:1-2

421. Srinivasa Rao.H, The Book of Indian Animals, P.235

(It lives by the margins of lakes land streams and in large tanks and canals. It hunts in flooded fields, cheks and estuaries and on the coast goes out after fish into the open sea.)

422. குறுந்.364:1

423. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப.379

424. ஐங்..63:1-2, அகநா.386:1-5

425. நற்.390:1-3

426. அகநா.6:16-20

427. நற்.195:1-3

428. இரா.வசந்தகுமார், அறிவியல் கண்ணோட்டத்தில் சங்க இலக்கிய விலங்குகள், ப.6

429. நற்.244:1-5, அகநா.88:8-13

430. நச்சினார்க்கினியர்(உரை.ஆ.), கலித்தொகை, ப.446

பின்னத்தூர் நாராயணசாமி(உரை.ஆ.), நற்றிணை, பக்.305,375

431. ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை(உரை.ஆ.), நற்றிணை, பக்.960,1172

432. ந.மு.வேங்கடசாமி நாட்டார்(உரை.ஆ.), அகநானூறு, ப.207

433. பி.எல்.சாமி, கம்பன் காவியத்தில் உயிரினங்கள் ஓர் அறிவியல் விளக்கம், ப.58

434. மு.வரதராசன், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, ப.420

435. இரா.வசந்தகுமார், அறிவியல் கண்ணோட்டத்தில் சங்க இலக்கிய விலங்குகள், ப.446

436. நற்.244:1-5

437. அகநா.88:8-13

438. ஆசிரியர் குழு, கலைக்களஞ்சியம், தொகுதி 1, ப.34

439. நற்.304:8-10, கலித்.143:10-12

440. சுகி.சிவம், ஞானமலர்கள், ப.55

441. ச.சாம்பசிவனார், தமிழ் இலக்கியத்தில் நெய்தல்திணை, ப.145

442. குறுந்.352:2

443. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப.442

444. இரா.வசந்தகுமார், அறிவியல் கண்ணோட்டத்தில் சங்க இலக்கிய விலங்குகள், ப.342

445. குறுந்.172:1-2, அகநா.244:1-3

446. நற்.218:3, ஐங்.378:1-2

447. நற்.87:1-4

448. ஐங்..339:1-4

449. நற்.279:1-4

450. எஸ்.எம்.நாயர், அழிவுக்கு இலக்காகி இருக்கும் இந்திய விலங்குகளும் அவற்றைப் பாதுகாக்கும் முறைகளும், ப.4

451. மேலது, ப.19

**2.1. உணவு – விளக்கம்**

**2.2. உணவு – சொல்லாட்சி**

**2.3. உணவில் விலங்குகள்**

**2.4. பால் கலந்த உணவு**

2.4.1. அடுபாலும், இனிமையும்

2.4.2. உலைநீராகப் பால்

2.4.3. பாலுடை அடிசில்

2.4.4. பாலை மீதமின்றி உண்ணும்படி உரைப்பது

2.4.5. வாலவிழ் மிதவை

2.4.6. பாலுடன் தேன் கலத்தல்

2.4.7. பால் பலகாரங்கள்

**2.5. தயிர் கலந்த உணவு**

2.5.1. உறையிடுதல்

2.5.2. தயிர் கடைதல்

2.5.3. தயிர்க்குழம்பு செய்தல்

2.5.4. அம்புளி மிதவை

2.5.5. இன்புளி வெஞ்சோறு

2.5.6. தயிரும், உடும்புத் தசையும்

**2.6. மோர் கலந்த உணவு**

2.6.1. வாலவிழ் வல்சி

2.6.2. மோரும், ஈயலும்

2.6.3. வறுமையுற்றோரும் மோர் அருந்துதல்

**2.7. நெய் கலந்த உணவு**

2.7.1. நெய்யுடை அடிசில்

2.7.2. நெய்யில் பொரித்த குறும்பூழ் இறைச்சி

2.7.3. நெய்வடகம்

2.7.4. நெய்யில் கடலை வறுத்தல்

**2.8. இறைச்சி உணவுகள்**

2.8.1. ஆவின் இறைச்சி

2.8.2. எருதின் இறைச்சி

2.8.3. கன்றின் இறைச்சி

2.8.4. ஆமான் இறைச்சி

2.8.5. களிற்றின் இறைச்சி

2.8.6. முயல் இறைச்சி

2.8.7. முளவுமா இறைச்சி

2.8.8. கேழல் இறைச்சி

2.8.9. மான் இறைச்சி

2.8.10. ஆட்டிறைச்சி

**2.9. பொதுவகை ஊன்**

2.9.1. வழிச்செல்வோர் ஊன் உணவு பெறுதல்

2.9.2. அரசர் அளித்த ஊன் உணவு

2.9.3. ஊன் துவையல்

2.9.4. பாசவல்

2.9.5. திருமணத்தில் ஊன் உணவு

2.9.6. ஊன் சமைத்தல்

2.9.7. இறைச்சியும் மீனும்

# சங்ககால மக்கள் உணவில் விலங்குகள்

சங்க காலத்தில் நிலத்தின் அடிப்படையிலும், ஒழுக்கத்தின் அடிப்படையிலும், தொழிலின் அடிப்படையிலும் மக்கள் தம் வாழ்க்கை அமைந்திருந்தது. முல்லை நிலத்தில் வாழ்ந்தோர் ஆயர், ஆய்ச்சியர் எனவும், குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்தோர் குறவர், குறத்தியர் எனவும், மருத நிலத்தில் வாழ்ந்தோர் உழவர், உழத்தியர் எனவும், நெய்தல் நிலத்தில் வாழ்ந்தவர்கள் பரதவர், பரத்தியர் எனவும் அழைக்கப்பட்டனர். இவரன்றி முல்லையும் குறிஞ்சியும் முறைமையின் திரிந்து ஏற்பட்ட பாலை நில மக்களுக்கு எயினர், எயிற்றியர் என்ற பெயர் ஏற்பட்டது. இதனால் நிலத்திற்குத் தகுந்தாற்போல் மக்களின் உணவுப் பழக்கம் பல்வேறு திறப்பட்டதாய் விளங்கியது. அவ்வகையில் விலங்குகள் சங்ககால மக்கள் தம் உணவில் பெற்ற இடத்தை விளக்குவது இவ்வியலின் நோக்கமாகும்.

## 2.1. உணவு - விளக்கம்

உணவு என்பது மக்கள் உயிர் வாழ்வதற்கு இன்றியமையாத ஒன்றாகும். உணவைப்பற்றி, “வாய்வழியாக உட்கொள்ளப்பட்டு உயிர் வாழ்வதற்கும் உடல் நலத்திற்கும் தீங்கு விளைவிக்காத இன்றியமையாத பொருளாக அமைவதை உணவென்று தெளியலாம்”[1] என்பர் சே.நமச்சிவாயம். உணவானது, “உடலுக்கு வலிமை கொடுப்பது, வளர்ச்சியை அளிப்பது, அங்கங்கள் அழிவுறாமல் பாதுகாப்பது, உடலாகிய பொறியை இயக்க ஆற்றலைக் கொடுப்பது, நோயைத் தீர்க்க

மருந்தாகப் பயன்படுவது"[2] ஆகும். எனவே மனித வாழ்க்கைக்கு அடிப்படைத் தேவையாக விளங்குவது உணவாகும்.

## 2.2. உணவு - சொல்லாட்சி

உணவைக் கருப்பொருட்களில் ஒன்றாகத் தொல்காப்பியம் சுட்டுகின்றது.

"தெய்வம் உணாவே மா மரம் புள் பறை
செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ
அவ்வகை பிறவும் கருவென மொழிப" (தொல்.964)

என்ற நூற்பாவில் 'உணாவே' என்பது உணவைக் குறிக்கும் சொல்லாகும். சங்க இலக்கியத்தில்,

"நீரின் றமையா யாக்கைக் கெல்லாம்
உண்டி கொடுத்தோ ருயிர்கொடுத் தோரே
உண்டி முதற்றே யுணவின் பிண்டம்
உணவெனப் படுவது நிலத்தொடு நீரே" (புறநா.18:18-21)

என்ற பாடலில் உணவு என்ற சொல்லாட்சி இடம் பெறுவதை அறிய இயலும். ஊன் கலந்த உணவு, 'அடிசில்,'[3] 'ஊன்துவை,'[4] 'ஊன்துவை அடிசில்,'[5] 'கொழுந்துவை அடிசில்,'[6] 'ஊன் புழுக்கு,'[7] 'ஊன்,'[8] 'வல்சி'[9] என்ற பல்வேறு பெயர்களால் அழைக்கப்பட்டுள்ளது.

## 2.3. உணவில் விலங்குகள்

ஐந்நிலமக்களும் தமது உணவில் இறைச்சியை முக்கிய உணவாகப் பயன்படுத்தியுள்ளனர். இதனை, "சங்ககாலத்தில் எல்லா நில

மக்கள் உணவிலும் இறைச்சி ஒரு பங்கை ஏற்று நிற்கின்றது”[10] என்னும் கூற்று விளக்கும். சங்கத் தமிழர் ஆ, எருமை, வெள்ளாடு, செம்மறியாடு, மரையான் போன்ற ஐந்து விலங்குகளின் பாலையும், எருமை தவிர்த்துப் பிற நான்கு விலங்குகளின் இறைச்சியையும் உணவுப் பொருளாகப் பயன்படுத்தினர். புல்வாய், உழை, நவ்வி, கடமா, களிறு, முயல், முளவுமா, கேழல், ஆமான், கன்று முதலியவற்றின் இறைச்சி மட்டும் உணவாகப் பயன்பட்டுள்ளன.

ஒரு நிலத்தில் உணவுக்காகப் பயன்படுத்திய விலங்கைப் பிறிதொரு நிலத்திலும் பயன்படுத்தி உள்ளனர். ஒரு சில விலங்குகள் இடம்விட்டு இடம் பெயர்ந்து செல்வதன் வழி, உணவிலும் இம்மாற்றம் ஏற்பட்டது என்று கருத இடமுண்டு. சங்க காலத்தில் பதினான்கு விலங்குகளை மக்கள் உணவாகக் கொண்டுள்ளனர்.

## 2.4. பால் கலந்த உணவு

பால் மிகச்சிறந்த, ஊட்டச்சத்து நிறைந்த உணவுப்பொருளாகும். இதில் புரதம், கொழுப்பு, தாதுப்பொருள் முதலியன அடங்கியுள்ளன. இதனால் பண்டைத் தமிழர் தம் உணவில் பாலை அதிகம் பயன்படுத்தியுள்ளனர்.

### 2.4.1. அடுபாலும், இனிமையும்

சங்ககால மக்கள் பாலை நன்கு காய்ச்சினர். இங்ஙனம் காய்ச்சப்பட்டது ‘அடுபால்’[11] எனப்பட்டது. பாலின் இனிமையும் சத்தும் கருதி அதனை உணவில் கலந்தனர். அயன்மனைக் கிழத்தி, பாலைக்

கலந்தாற் போன்ற இனிமையுடைய தேமாம் பழத்தை வாவல் தின்றது என்னும் செய்தி இதனை நன்கு விளக்கும்.[12]

### 2.4.2. உலைநீராகப் பால்

பண்டைத் தமிழர் தண்ணீருக்கு மாற்றாகப் பாலை உலைநீராகப் பயன்படுத்தினர். குறிஞ்சி நிலத்துக் குறவர்கள் ஏர்பிடித்து உழாமல் கேழல், கிழங்கு தேடிக் கிளறிய நிலத்தில் தினையை விதைத்தனர். முற்றி விளைந்த தினையை, மான்கறி சமைக்கப்பட்ட பானையில், மரையானின் பாலைக் கறந்து உலைநீராக ஊற்றித் தினைச்சோறு சமைத்தனர். அதனை, வாழையிலையில் இட்டுப் பலருடன் பகுத்துண்டதை புறநானூறு குறிப்பிடுகின்றது.[13] பாலைநிலத்தில் திருமணம் முடிந்து, புதுமனை புகுந்த மணமகள், பாலை உலைநீராக வார்த்து உணவு சமைத்தனள். இதனை,

“துவரப் புலர்ந்து தூமலர் கஞலித்
தகரம் நாறுந் தண்நறுங் கதுப்பின்
புதுமண மகடூஉ அயினிய கடிநகர்ப்
பல்கோட்டு அடுப்பில் பால்உலை இரீஇ” (அகநா.141:12-15)

என்னும் பாடலடி விளக்கும். சங்க காலத்தில் பசு, மான் போன்றவற்றின் பால், உலைநீராகப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

### 2.4.3. பாலுடை அடிசில்

பால் கலந்த உணவை, ‘பாலுடை அடிசில்’[14] என்பர். பசுக்களை மேய்ச்சலுக்கு ஓட்டிச்செல்லும் இடையர்கள் பாற்சோறு உண்டமையைப் பெரும்பாணாற்றுப்படை எடுத்துரைக்கின்றது.[15]

ஆடு மேய்ப்பவர்கள் இரவில் மேய்ச்சல் நிலத்தில் தங்குவது இயல்பு. இந்நாளில் இடையன் மாலையில் கறந்த கறவையின் பாலைத் தன் வீட்டில் கொண்டு வந்து கொடுத்து, இரவுச் சோற்றுக்குப் பாற்சோற்றை எடுத்து சென்றனன்.[16]

வில்லின் ஓசைக்குப் பயந்த மரையேறு விரைந்தோடும் காட்டிலும், வேற்றுப் புலங்களிலும் சென்று மேய்ந்த பசுக்களின் பாலை, நிரையைக் காவல் காக்கும் இடையர், மகளிர் மனம் மகிழும்படிக் கொண்டுவந்து கொடுத்தனர். வழிச் செல்வோர் தாம் வலிமை பெறவேண்டும் என்பதற்காக அப்பாலுணவை விருந்தாகப் பெற்று உண்டனர்.[17] செம்மறியும், வெள்ளாடும் இராக்காலத்தில் இல்லத்தில் ஒன்றாகக் கட்டப்பட்டுக் கூடித்திரிந்தன. அந்நடுஇரவில் ஆயர்கள் தமக்கெனச் சமைத்த பாற்சோற்றை வழிப்போவோர்க்குக் கொடுத்துள்ளனர்.[18] இதனைப் போன்றே சீழ்க்கையடித்தலால் மடித்த வாயையுடைய இடையர் தினையரிசியாலாக்கின சோற்றைப் பாலுடன் கலந்து கொடுக்கப் பெரும்பாணர் பெற்றுச் சென்றனர்.[19] புல்லி என்பானது நாட்டில் இடையர், தாம் சமைத்த அவிழ்ச்சோற்றை நல்ல பசுவின் பாலுடன் கலந்து கூட்டி அளித்ததை,

"குடவர் புழுக்கிய பொங்கவிழ்ப் புன்கம்
மதர்வை நல்லான் பாலொடு பகுக்கும்
நிரைபல குழீஇய நெடுமொழிப் புல்லி" (அகநா.393:16-18)

என்ற அடிகள் விளக்கும். பண்டைத் தமிழர் பாற்சோற்றை தாம் உண்டதோடு மட்டுமின்றி வழிச்செல்வோருக்கும் அளித்தமை

குறிப்பிடத்தக்கது. இது சங்க காலத்தில் பால்வளம் சிறந்து விளங்கியமையைப் புலப்படுத்துகின்றது.

தாய், பால் உணவு அளிக்கும்பொழுது அதனைச் சிறு குழந்தைகள் வெறுப்பர். பால் உணவை மறுத்த பாலைநிலத் தலைவியிடம் தாய், தனக்காக ஒருவாயும், தந்தைக்காக ஒருவாயும் வாங்கிக்கொள் என்றுரைத்து ஊட்டியதை,

"பால்பெய் வள்ளஞ் சால்கை பற்றி
என்பா டுண்டனை யாயின் ஒருகால்
நுந்தை பாடும் உண்ணென் றூட்டி" (அகநா.219:5-7)

என்ற அடிகள் விளக்கும். பாலுணவை வெறுத்த பாலைநிலத் தலைவியை, அவளது கூந்தலைக் கோதி, நயமொழிகளைக் கூறித் தாய் ஊட்டியதை அகநானூறு எடுத்துரைக்கின்றது.[20]

இளஞ்சிறார்களுக்குக் காலிற்கிண்கிணி, கையில் வளை, மார்பில் ஐம்படைத்தாலி போன்றவற்றை அணிவிப்பதும், பாலுணவளிப்பதும் பண்டைத் தமிழ்ச் செல்வர் மரபாகும். பால் உண்ணாச் சிறுவனைச் சிறுகோல் கொண்டு புறத்தே சினந்து பாலூட்டியது,[21] வயலைக் கொடியைப் பசு தின்றதால் வயிற்றில் அடித்துக் கொண்டு அழுத தலைவியைத் தேற்றிப் பாலூட்டியது,[22] பாலையும் பந்தையும் மறந்து விளையாட்டாயமொடு சென்ற தலைவிக்குப் பாலூட்டியது,[23] தலைவன் தன்னை அடைந்தால் பால் உண்டு உயிர் வாழ்வேன், இல்லையெனில் இறந்துவிடுவேன் என்றுரைத்த நெய்தல்நிலத் தலைவிக்கு அறிவுறுத்திப் பாலூட்டியது,[24] பொற்கிண்ணத்தில் வைக்கப்பட்ட பாலைக் குழந்தைகள்

உண்ண வலியுறுத்தியது[25] என்பன போன்ற நிகழ்வுகளால் சங்ககால மக்களின் உணவில் பால் பெற்றிருந்த இடத்தை அறிய இயலும்.

### 2.4.4. பாலை மீதமின்றி உண்ணும்படி உரைப்பது

குழந்தை, சிறிதளவு பாலைக் குடித்துவிட்டுப் பின் மறுக்கும். அவ்வேளையில் நீ உண்டற்குரிய பாலின் அளவை அறியும் அறிவு நிரம்பினாயில்லை. இன்னும் சிறிது பால் உள்ளது. இதனை உண்க எனத் தாய் தன் மகளைப் பால் உண்ண அறிவுறுத்தி ஊட்டுவர். இதனை,

"பிறங்கிலை யினியுள பாலென மடுத்தலின்
ஈன்ற தாயோ வேண்டா ளல்லள்" (புறநா.346:1-2)

என்று அண்டர் மகன் குறுவழுதி எடுத்துரைப்பர்.

### 2.4.5. வாலவிழ் மிதவை

கொள்ளும், பயறும், பாலும் கலந்து உண்டாக்கிய உணவை 'வாலவிழ் மிதவை' என்பர். தமிழ்ப்பேரகராதி மிதவை என்பதற்கு, 'கும்மாயம், கூழ்'[26] எனப் பொருள் கூறுகின்றது. பாலைநிலத்து மக்கள் கொள்ளினையும், பயற்றினையும், பாலுடன் கலந்து சமைத்த வெள்ளிய அவில் கஞ்சியை வேண்டுமளவிற்கு உண்டதை,

"கொள்ளொடு பயறு பால்விரைஇ வெள்ளிக்
கோல்வரைந் தன்ன வாலவிழ் மிதவை
வாங்குகை தடுத்த பின்றை" (அகநா.37:12-14)

என்ற அடிகள் விளக்கும்.

### 2.4.6. பாலுடன் தேன் கலத்தல்

பாலும், தேனும் கலநத உணவு மிகவும் சுவையுடையதாக விளங்கும். தேன் கலந்து சமைக்கப்பட்ட பாலை,

"பிரசங் கலந்த வெண்சுவைத் தீம்பால்" (நற்.110:1)

என்று நற்றிணை உரைக்கின்றது. சங்கத் தமிழர் பாலுடன் தேன் கலந்து சமைக்கப்பட்ட உணவை மிகவும் விரும்பினர்.[27]

### 2.4.7. பால் பலகாரங்கள்

புலவர்கள், அரண்மனையில் ஒவ்வொரு நாளும் இறைச்சிஉணவு உண்பதை வழக்கமாகக் கொண்டிருந்தனர். அவ்வாறு ஊன் உணவும், நெல்லுணவும் மிக உண்டதால் வெறுப்புண்டாகியது. அதனை மாற்றப் பாற்பெய்து சமைத்த பாயசம் போல்வனவற்றையும் வெல்லப்பாகு கொண்டு செய்த இனிப்புச் சுவை கனிந்த பாற்பண்ணிகாரங்களையும் உண்டனர். இதனை,

"ஊனு மூணு முனையி னினிதெனப்
பாலிற் பெய்தவும் பாகிற் கொண்டவும்
அளவுபு கலந்து மெல்லிது பருகி
விருந்துறுத் தாற்றி யிருந்தனெ மாக" (புற.381:1-4)

என்ற அடிகள் உணர்த்துகின்றன. இவற்றால் பண்டைத் தமிழர் பாலை மிகவும் விரும்பி உணவில் கலந்து உட்கொண்டமை நன்கு புலப்படும்.

பாலைநிலமக்கள் பால் உணவை மிகவும் விரும்பி உண்டமை ஏழு இடங்களில் சுட்டப்பெறுகின்றது. பாலை நிலத்தில் வெயிலின் கொடுமை

அதிகமாக இருக்கும். அவ்வெப்பத்தைப் போக்கக் குளிர்ச்சியான பாலுணவை உட்கொண்டிருப்பர். பால், முல்லைநிலத்திற்குரிய உணவுப் பொருள் எனினும், பண்டமாற்றுமுறையில் முல்லைநில ஆயர் மக்கள் பிற நிலங்களில் தம் உணவுப்பொருட்களைக் கொண்டு விற்றுவந்தமை இவ்விடத்தில் சுட்டத்தக்கது.[28]

## 2.5. தயிர் கலந்த உணவு

தயிரானது மோர், வெண்ணெய், நெய் போன்ற பிற உணவுப் பொருட்களையும் உள்ளடக்கியது. இதனால் இது உடலுக்கு வலிமை கொடுக்கும் முக்கிய உணவாகக் கருதப்படுகின்றது. தயிர் மிகவும் சுவை கொண்டதாகும். எனவே பண்டை மக்கள் தயிரை விரும்பி உண்டுள்ளனர்.

### 2.5.1. உறையிடுதல்

பாலின் அடுத்த நிலை தயிர். சங்க கால மக்கள் பாலில் உறையிட்டு அதனைத் தயிராக்கியுள்ளனர். குடத்தளவுள்ள பாலில் அது உள்ள அளவறிந்து உறை ஊற்றி உறையச் செய்ய வேண்டும். உறையின் அளவு குறைந்தாலும், அதிகரித்தாலும் பாலின் தன்மை கெட்டுத் தயிராய் உறைதலின்றிக் கலங்கித் தோன்றும். முல்லை நில ஆயர்மகள் பாலுக்கு உறையிட்டுத் தயிராக்கியதை,

“மடப்பா லாய்மகள் வள்ளுகிர்த் தெறித்த
குடப்பாற் சில்லுறை போல” (புறநா.276:4-5)

என்ற அடிகள் புலப்படுத்தும்.

உறையிட்டு உறைய வைத்த பால் தயிராக மாறுகின்றது. நன்கு முதிர்ந்த தயிரை 'விளைதயிர்ப்பிதிர்வு'[29] என்று மலைபடுகடாமும், 'முளிதயிர்'[30] என்று குறுந்தொகையும் குறிப்பிடுகின்றன.

### 2.5.2. தயிர் கடைதல்

சங்க கால மக்கள் தயிர் வைக்கும் பானையைக் 'குழிசி'[31] என்றும், தயிர் கடைவதற்கு நடப்படும் தூணை 'வெளில்'[32] என்றும் வழங்குவர்.

பகற்பொழுதில் தயிரைக் கடைந்தால் வெப்பந்தாங்காது வெண்ணெய் உருகும் இயல்பினது. சுடப்பட்ட மண்தாழியில் தயிரை மத்தால் கடையும்பொழுது வெயிலின் வெப்பம் காரணமாக வெண்ணெய்க் கூட்டம் சிதறியதை நற்றிணை விளக்கும்.[33] அதனால் வைகறையில் கடைவர். பாலை நிலமக்கள் விளாம்பழம் போன்று மணம் கமழும் தயிர்த்தாழியில் மத்திட்டு வெண்ணெய் தோன்றக் கடைந்ததை,

"விளம்பழங் கமழுங் கமஞ்சூற் குழிசிப்
பாசந் தின்ற தேய்கான் மத்த
நெய்தெரி யியக்கம் வெளில்முதன் முழங்கும்
வைகுபுலர் விடியல் மெய்கரந்து தன்கா" (நற்.12:1-4)

என்னும் அடிகள் விளக்கும்.

தயிர் கடைந்த பின் மத்தை, தாழ்வாரமாகிய முற்றத்தில் வைப்பது வழக்கம். பாலை நிலத்துச் சீறூரில் தயிரைக் கடைந்த பின் முற்றத்தில் வைக்கப்பட்ட மத்தைக் கன்று தன் வாயால் சுவைப்பதை,

"தீந்தயிர் கடைந்த திரள்கால் மத்தம்
கன்றுவாய் சுவைப்ப முன்றில் தூங்கும்

படலைப் பந்தர்ப் புல்வேய் குரம்பை

நல்கூர் சீறூர்" (அகநா.87:1-4)

என்றுரைப்பர் மதுரைப் பேராலவாயர்.

### 2.5.3. தயிர்க் குழம்பு செய்தல்

தயிரைக் கரைத்துப் புளிக்குழம்பு செய்வது சங்ககால மகளிரின் உணவு சமைக்கும் முறையாகும். இதனைத் தற்காலத்தில் 'மோர்க்குழம்பு' எனக் குறிப்பிடுவர். இறுகி முற்றிய தயிரை முல்லைநிலத் தலைவி, புளிக்குழம்பு செய்யும் பொருட்டுத் தன் மெல்விரலால் துழாவித் தாளிதம் செய்தனள். அதனை உண்ட தலைவன் இனிதெனக் கூறியதை,

"முளிதயிர் பிசைந்த காந்தண் மெல்விரல்

கழுவுறு கலிங்கங் கழாஅ துடீஇக்

குவளை யுண்கண் குய்ப்புகை கமழத்

தான் றுழந் தட்ட தீம்புளிப் பாகர்

இனிதெனக் கணவ னுண்டலின்" (குறுந்.167:1-5)

என்று கூடலூர்கிழார் விளக்குவர். சங்ககால மக்கள் தயிர்க் குழம்பை இனிமை கருதி உண்டனர்.

### 2.5.4. அம்புளி மிதவை

முதிர்ச்சியடைந்த வரகுச் சோற்றுடன் வெள்ளிய வேளைப்பூவைத் தயிருடன் பெய்து, நன்கு பிசைந்து, மிளகுத் தூளிட்டுத் தாளிதம் செய்து புளிங்கூழ் சமைப்பர். இதற்கு 'அம்புளி மிதவை' என்று பெயர். இவ்வம்புளி மிதவையை அவரை கொய்யும் மக்கள் விரும்பி உண்டதை,

"கவைக்கதிர் வரகி னவைப்புறு வாக்கல்
தாதெரு மறுகிற் போதொடு பொதுளிய
வேளை வெண்பூ வெண்டயிர்க் கொளீஇ
ஆய்மக ளட்ட வம்புளி மிதவை
அவரை கொய்யுந ரார மாந்தும்
தென்னம் பொருப்ப னன்னாட் டுள்ளம்" (புறநா.215:1-6)

என்பர் கோப்பெருஞ்சோழன்.

### 2.5.5. இன்புளி வெஞ்சோறு

தயிரும், வரகுச் சோறும், ஈயலும் கலந்து சமைக்கப்பட்ட சோறு 'இன்புளி வெஞ்சோறு' என அழைக்கப்பட்டது. பாலை நிலத்துத் தலைவி செம்மறியாட்டின் முற்றிய தயிரை உலையில் ஊற்றினள். கொல்லையில் விளைந்த வரகினது அரிசியுடன் கார் காலத்தில் புற்றிலிருந்து வெளிப்பட்ட ஈயலைச் சேர்த்து இன்புளி வெஞ்சோறு சமைத்தனள். சூடான அச்சோற்றின் மீது பசுவின் வெண்ணெய்யை உருக்கி ஊற்றினள். அதனை ஏவலருக்கு முதலில் அளித்துப்பின் அவளும், அவளது கணவனும் செம்மண்பூசிய இல்லில் உண்டதை அகநானூறு குறிப்பிடுகின்றது.[34] இதனைப் போன்று உறைந்த தயிர், தொடரிப்பழம், புளிப்பேறிய கள், நெய் பெய்து பொரிக்கப்பட்ட தசைத் துண்டங்கள் போன்றவற்றை தினை அரிசியுடன் நெய் கலந்து சமைத்த வெண்சோற்றினை முல்லைநில மக்களும் உண்டனர்.[35] இவற்றால் சங்கத் தமிழர் சோற்றிற்குச் சுவைகூட்ட தயிரைப் பயன்படுத்தியமை புலனாகும். இன்றும் கூழ்போன்ற உணவு சமைக்க புளித்த தண்ணீரைப் பயன்படுத்துவது சுட்டத்தக்கது.

### 2.5.6. தயிரும், உடும்புத் தசையும்

வேட்டையாடுவது வேட்டுவரின் தொழிலாகும். இம்மக்கள் பல்வேறு விலங்குகளை வேட்டையாடி உணவில் பயன்படுத்தினர். அவற்றோடு உடும்பையும் வேட்டையாடி அதன் இறைச்சியைத் தயிருடன் கலந்து உண்டுள்ளனர். அதனைப் பிற இரவலர்க்கும் பங்கிட்டுக் கொடுத்தனர். வேட்டுவச் சிறுவர்கள் கொண்டுவந்த உடும்பின் தசையைப் பெய்து, தயிரோடு கூடிய கூழைப் பாணருக்கும், அவருடன் வந்த ஏனைய சுற்றத்தாருக்கும் பகிர்ந்து கொடுத்து விருந்துண்டதைத் தங்காற் பொற்கொல்லனார் குறிப்பிடுவர்.[36]

சங்கத் தமிழர் தயிரைத் தனித்தும், பிற உணவுப் பொருட்களுடன் சேர்த்தும் உண்டு மகிழ்ந்தனர். பாலைநிலத்து மக்கள், தயிரை அதிகமாக உணவில் பயன்படுத்தியுள்ளனர். வெயிலின் காரணமாக உடலின் வெப்பத்தைப்போக்கத் தயிரை அதிகமாக உட்கொண்டிருக்க இடமுண்டு. இவற்றால் தயிர் சங்ககால மக்களின் முக்கிய உணவாக விளங்கியமை புலனாகும்.

## 2.6. மோர் கலந்த உணவு

பாலைக் காய்ச்சி உறையிட்டு, முற்றிய தயிரில் சிறிதளவு நீர் கலந்து மத்தை விட்டுக் கடைவர். அதில் எழும் வெண்ணெய்யை நீக்கியபின் எஞ்சி இருக்கும் நீர் உணவை ‘மோர்’ என அழைப்பர். இம்மோரை சங்ககால மக்கள் உணவாகக் கொண்டுள்ளனர்.

## 2.6.1. வாலவிழ் வல்சி

மோரை உலைநீராக ஊற்றி அதில் பலாப்பழ விதையின் மாவையும், புளியம் பழத்தின் இனிய புளிப்பையும் அளவாகக் கலப்பர். அதில் கடமா, எய்மாவின் தசைகளைச் சேர்த்து இடுவர். பின் மூங்கிலரிசியை உலையில் இட்டு வெள்ளிய சோறு சமைப்பர். இதற்கு 'வாலவிழ் வல்சி' என்று பெயர். இவ்வாலவிழ் வல்சியைச் சமைத்த குறமகள், அதனை இரவலர்களுக்கு விருந்திட்டதை மலைபடுகடாம் விளக்கும்.[37] இவ்வுணவு குறிஞ்சி நிலத்தில் சமைக்கப்பட்டது குறிப்பிடத்தக்கது.

## 2.6.2. மோரும், ஈயலும்

முல்லை நில மக்கள் கார்காலத்தில் தினை அரிசியுடன், செம்புற்றில் இருக்கும் ஈயலை மோருடன் கலந்து சமைக்கப்பட்ட உணவை உண்டதை,

"கார்ப்பெய றலைஇய காண்பின் காலைக்
களிற்றுமுக வரியிற் றெறுழ்வீ பூப்பச்
செம்புற் றீயலி னின்னளைப் புளித்து
மென்றினை யாணர்த்து நந்துங் கொல்லோ" (புறநா.119:1-4)

என்ற பாடல் விளக்கும். மோருடன் பிற உணவுப் பொருட்களும் கலந்து சமைக்கப்பட்டமை சுட்டத்தக்கது.

### 2.6.3. வறுமையுற்றோரும் மோர் அருந்துதல்

முல்லைநில ஆயர்மகள், மோர் வேண்டி வந்தோர்க்கு மோரையும், வெண்ணெய் வேண்டி வந்தோர்க்கு வெண்ணெய்யும் கொடுத்துதவினள்.[38] வறுமையில் வாடுவோர் கூட உணவில் மோரையும், வெண்ணெய்யையும் சேர்த்துண்டுள்ளனர்.

முல்லைநில மக்கள் மோரை அதிகமாகப் பயன்படுத்திய குறிப்புகள் காணப்படுகிறன. இவர்கள் ஆநிரை, ஆடு, எருமை போன்றவற்றை வளர்ப்பு விலங்குகளாகக் கொண்டு மேய்த்தல் தொழில் செய்து வந்தனர். எனவே இவ்விலங்குகளின் வழிக் கிடைத்த உணவுப் பொருள்களை இவர்கள் அதிகமாக உண்டிருப்பதும் இயல்பாகும்.

## 2.7. நெய் கலந்த உணவு

தயிரைக் கடையும்பொழுது தோன்றிய வெண்ணெய்யை வெப்பத்தில் உருக்கினால் அது நெய்யாக மாறுகிறது. இந்நெய்யை சங்கத் தமிழர் உணவில் மிகுதியாகப் பயன்படுத்தியுள்ளனர்.

### 2.7.1. நெய்யுடை அடிசில்

நெய் கலந்த உணவை, ‘நெய்யுடை அடிசில்’[39] என்பர். பண்டை மன்னர்கள் தம்மை நாடி வந்த இரவலர்களுக்குப் பரிசு வழங்கிச் சிறப்பித்ததோடு மட்டுமின்றி, அவர்கள் மகிழ்ச்சியடைந்து மனநிறைவு பெறும் வகையில் நெய்யுடன் கூடிய சிறந்த உணவையும் அளித்துள்ளனர். இதற்குச் சான்றாக இரவலர்களுக்கு நீரை விட அதிகமாக நெய்யிட்டு ஊன் உணவு வழங்கி மண்ணில் வாழும் மனிதர்கள் நாணும்படியாகப்

புகழைச் செய்த கரும்பனூர் கிழானைப் புறத்திணை நண்ணாகனார் பாராட்டியிருப்பது இவ்விடத்தில் குறிப்பிடத்தக்கது.[40] இதனைப் போன்று வறுமையுற்றோர் சோழன் நலங்கிள்ளியிடம் சென்றால், நெய்யால் தாழிதம் செய்யப்பட்ட ஊன் கலந்த இனிய சுவையையுடைய பல வகையான உணவுப் பொருட்களைப் பசித்துன்பம் நீங்குமாறு கொடுப்பான் என்று கிணைப் பொருநர் கூறுவது சுட்டத்தக்கது.[41]

தன்னிடம் பரிசில் பெற வந்த பெருஞ்சித்திரனார் வறுமையால் வாடிய மேனியும், தளர்ந்த நடையையும் உடையவராய் இருப்பதைக் கண்ட பெருவள்ளலாகிய குமணன், அவர் வேண்டியவாறு விரைந்து பரிசில் தந்து விடாது, சில நாட்கள் தம்பால் இருத்தி, நல்லுணவு தந்து, உடல்வளம் பெறச் செய்து பின்பு விடுத்தல் வேண்டும் எனக் கருதினன். அவ்வகையில் புலவருக்குத் தாழிப்புச் செய்த துவையலுடன் நெய் கலந்த அடிசிலைப் பொன்னால் செய்த கலங்களில் வைத்து ஊட்டினன்.[42] இப்புலவரைச் சிறப்பித்ததைப் போன்று எருக்காட்டூர்த்தாயங் கண்ணனாருக்கும்,[43] கோவூர் கிழாருக்கும்[44] சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் நெய்யால் பொரித்துத் தாழிதம் செய்யப்பட்ட சூட்டிறைச்சியை வழங்கி இருப்பதைக் காணமுடிகின்றது. புலவர்கள் விரும்பியபடி பரிசில் பொருட்கள் வழங்கியதோடு, நெய் கலந்த உணவை வழங்கி அவர்களின் உடல் நலனையும் அரசர்கள் பேணிக் காத்துள்ளனர்.

பரிசில் பெறச் செல்லும் கூத்தர்கள் வழிப்போக்கின்பொழுது நெய்ச் சோறு பெற்று உண்டனர். நன்னனின் கூத்தர்கள், பாக்கம் எனும் ஊரில் உள்ளோர் கொடுத்த நெய்யிட்டுப் பொரித்த இறைச்சிப் பொரியலைத் தினைச் சோற்றுடன் பெற்று உண்டதை மலைபடுகடாம் விளக்கும்.[45]

மேலும், வழிச்செல்வோர் புல்லால் வேய்ந்த குடிலில் தங்கி அரிசிச் சோற்றுடன் நெய்யையும் சேர்த்து உண்டுள்ளனர்.[46]

சிறுவர்கள் நெய் கலந்த உணவை உண்பதில் மிகவும் விருப்பம் உடையவராய்த் திகழ்வர். இளஞ்சிறார் நெய்ச் சோற்றை உண்டு உடலெங்கும் சிதறிக் கொள்ளும் காட்சியை,

"குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்தும்
நெய்யுடை யடிசின் மெய்பட விதிர்த்தும்
மயக்குறு மக்களை" (புறநா.188:3-6)

என்னும் பாடல் விளக்கும்.

அரசர்கள் வெற்றியின் காரணமாக உண்டாட்டு நிகழ்த்துவர். படையெடுத்துச் சென்ற வீரர்கள் போரில் வெற்றி பெற்று வந்தனர். அவ்வீரர்களுக்கு நெய்யில் கடுகை இட்டுத் தாழிதம் செய்து, இனிய உணவு படைத்து வரவேற்றதை,

"வேம்புசினை யொடிப்பவுங் காஞ்சி பாடவும்
நெய்யுடைக் கைய ரையவி புகைப்பவும்
எல்லா மனையுங் கல்லன் றவ்வே" (புறநா.296:1-3)

என்னும் அடிகள் உணர்த்தும்.

### 2.7.2. நெய்யில் பொரித்த குறும்பூழ் இறைச்சி

சங்கத் தமிழர் பறவைகளின் இறைச்சியை நெய்யில் பொரித்து உண்டுள்ளனர். நெய்யில் பொரிக்கப்பட்ட குறும்பூழ் இறைச்சி மிகவும் சுவையுடையதாக விளங்கும். பெரிய மலை நாட்டையுடைய தலைவன்,

தலைவியை மணந்து கொள்வதற்கு உண்டான முயற்சிகளை மேற்கொள்கின்றான். குற்றேவல் புரிபவன் இனிய இச்செய்தியைக் கூறியதால் மகிழ்ந்த தோழி, உடனே அவனுக்கு நெய்யில் பொரிக்கப்பட்ட குறும்பூழ் இறைச்சியைச் சூட்டோடு இட்டனள் என்று வேட்டக் கண்ணன் குறிப்பிடுவர்.[47]

**2.7.3. நெய் வடகம்**

உழுத்த மாவினை நெய் பெய்து, நன்கு பிசைந்து, கொடிபோன்று கையாற்றிரித்து வெய்யிலில் உலர்த்துவர். பின் அதனை நெய்யில் இட்டுப் பொரிப்பர். இதுவே 'நெய் வடகம்' எனப்படும். சங்க காலக் குறிஞ்சி நில மக்கள், நெய் பெய்து பிசைந்த உழுத்த மாவினை வடகம் செய்ய நூற்றுப் போட்டிருப்பதை,

"நெய்யொடு மயக்கிய வுழுந்துநூற் றன்ன" (ஐங்..211:1)

என்ற அடி விளக்கும். நெய் வடகம் குறிஞ்சிநில உணவாக இருப்பது குறிப்பிடத்தக்கது.

**2.7.4. நெய்யில் கடலை வறுத்தல்**

அவரை, நிலக்கடலை போன்ற பயறுவகைகளின் உள்ளீடாக இருக்கும் விதையைக் 'கடலை' எனக் குறிப்பிடுவதுண்டு. நறிய நெய்யில் கடலையை இட்டு வறுத்துச் சோற்றுடன் சேர்த்து உண்டமையை,

"புல்வேய் குரம்பைக் குடிதொறும் பகர்ந்து
நறுநெய்க் கடலை விசைப்பச் சோறட்டுப்
பெருந்தோ டாலம் பூசன் மேவர
வருந்தா யாணர்த்து நந்துங் கொல்லோ" (புறநா.120:13-16)

என்ற அடிகள் விளக்கும்.

சங்ககால மக்கள் இறைச்சி போன்றவற்றை வறுக்கவும், சோற்றுடன் கலந்து உண்ணவும் நெய்யைப் பயன்படுத்தியுள்ளனர். நெய் பெய்த உணவை அரசன் முதல் சாதாரணக் குடிமக்கள் வரை அனைத்து மக்களும் உண்டு களித்தமை இதனால் புலனாகும். பல்வேறு பாடல்களில் ‘நெய்’ என்ற தனிச்சொல் மட்டும் இடம்பெற்றுள்ளது. இது எவ்விலங்கிலிருந்து பெறப்பட்டது என்று குறிப்பிடப்படவில்லை. எனினும் சங்ககாலத்தில் ஆநிரைகள் மிகுதியாக வளர்க்கப்பெற்றதால், அவற்றிலிருந்து பெற்றிருக்க இடமுண்டு.

## 2.8. இறைச்சி உணவுகள்

சங்கத் தமிழர் விலங்குகளின் இறைச்சியை மிகவும் விரும்பி உண்டுள்ளனர். இதனைப் பல பாடல்கள் எடுத்தியம்புகின்றன.

### 2.8.1. ஆவின் இறைச்சி

நாடு பிடிக்கும் கொள்கை காரணமாக வெட்சி வீரர்கள் பகைநாட்டு ஆநிரைகளைக் கவர்ந்து வருவர். கரந்தை வீரர்கள் படைகொண்டு வந்து போரிட்டு அந்நிரைகளை மீட்டுச் செல்வர். அவ்வாறின்றி வெட்சி வீரர்கள் கரந்தை வீரர்களை வென்று இந்நிரைகளைக் கொண்டு செல்வதும் உண்டு. ஆநிரைகளைக் கொண்டு செல்லும் வழியில் அவற்றை உணவிற்காகச் சமைத்துண்பர். ஆவின் இறைச்சியை மழவர்களும், படைவீரர்களும் உண்டு மகிழ்ந்துள்ளனர். போர் நிகழும் பாலைநில ஊர்களில் உள்ளவர்கள் அலறும்படி அவர்களுடைய கொழுத்த

ஆக்களை, படையையுடைய மழவர்கள் கவர்ந்து சென்று கொன்று தின்றதை,

“தாழிமுதல் கலித்த கோழிலைப் பருத்திப்
பொதிவயிற்று இளங்காய் பேடை ஊட்டிப்
போகில்பிளந் திட்ட பொங்கல் வெண்காழ்
நல்கூர் பெண்டிர் அல்கல் கூட்டும்
கலங்குமுனைச் சீறூர் கைதலை வைப்பக்
கொழுப்பா தின்ற கூர்ம்படை மழவர்” (அகநா.129:7-12)

என்னும் பாடலடிகள் புலப்படுத்தும்.

போர் வீரர்களாகிய மழவர்கள் பாலைநிலக் காட்டு நிழலில் தங்கி இளைய பசுவினைக் கொன்று அதன் ஊனைத் தின்றதை நக்கீரரும் எடுத்துரைப்பர்.[48] பாலுடைய பசுவினத்தைக் கவர்ந்த வெட்சி வீரர்கள் அதனை மீட்க வந்த கரந்தை வீரர்களை வாட்போர் செய்து அழித்தனர். பின்னர் தெய்வம் தங்கிய வேப்பமரத்தடியில் கொழுப்பினையுடைய பசுவினை அறுத்து, அத்தெய்வத்திற்கு உதிரத்தைத் தூவிப் பலியிட்டனர். அப்புலாலைப் புழுக்கிப் பாறையில் வைத்துண்டதை அகநானூறு விளக்கும்.[49]

கலைமானை அதன் வறட்சியுற்ற அழகிய கொம்பு சிதர்ந்தொழியப் பற்றிய புலி அடித்துத் தின்றது. எஞ்சிய முடைநாற்றமுடைய தசைகிடக்கும் அவ்விடத்தில், இரவில் காட்டரண்களிலுள்ளார் அலற, அவர்களைக் கொன்று தாம் கொண்ட நிரைகளைப் பகுத்துக் கொண்டு வந்த வெட்சி வீரர்கள் பாலைநிலப் பெரிய கற்பாறையின்

இடுக்கில்ஆவினைச் சமைத்துண்டனர்.[50] இவற்றால் வெட்சி வீரர்கள் தாம் கவர்ந்து வந்த ஆநிரைகளை உணவாக உட்கொண்டமை தெளிவாகும்.

படைவீரர்கள் கவர்ந்து வந்த ஆநிரைகள் இறைச்சிக்காகப் பயன்படுத்தப்பட்டுள்ளன. இச்செய்திகள் பாலைத்திணையில் இடம்பெற்றுள்ளன. பகைவேந்தனின் ஆநிரைக் கூட்டங்களைக் கவர்ந்து நெடுந்தொலைவு வரும் நிலையில் வீரர்கள் உணவுக்காக இவ்வாநிரைகளை அறுத்து உண்டுள்ளனர்.

### 2.8.2. எருதின் இறைச்சி

வெட்சி வீரர்கள் கவர்ந்து வரும் ஆநிரைகளில் எருதும் இடம் பெறும். அவற்றில் சிறந்த எருதுகளை மறவர்கள் உணவாக உட்கொண்டனர்.

குறிஞ்சி நிலத் தலைவன் யானை தாக்கினாலும் அஞ்சாதவன். தமது வலிமையாற் கொள்ளை கொண்டுண்ணும் குடியிற் பிறந்த புலியின் போத்தைப் போன்றவன். இத்தகைய வீரம்நிறைந்த இவன், தன் வார்த்தை கேளாத பகைவரின் காவலையுடைய நிலத்திற்கு விடியற்காலையில் சென்றனன். அவர்களின் பசுக்களைக் கவர்ந்து கொண்டு வந்து கள்ளுக்கு விலையாகக் கொடுத்தனன். அதன் பின் தமது இல்லில் வலிமையுடைய ஏற்றைச் சமைத்து உண்டனன்.[51]

பாலைநில மறவர்கள் எருதினைக் கொன்று கொழுப்புப் பொதிந்த சிறந்த தசையினை நெருப்பில் வைத்துச் சுட்டுத் தின்றனர். அவ்வூனைத் தின்றதால் நீர் வேட்கை எழுந்தது. அதற்கு முதிர்ந்த தோப்பிக் கள்ளைக்

குடித்தனர். புலால் நீங்காத கையினராய்க் கழுவாத வாயினராய்ச் சிறிய ஊர்ப் பக்கத்தில் கூத்தாடினர். இதனை,

"இன்சிலை எழிலேறு கெண்டிப் புரைய
நிணம்பொதி விழுத்தடி நெருப்பின் வைத்தெடுத்து
அணங்கரு மரபிற் பேஎய் போல
விளருன் தின்ற வேட்கை நீங்கத்
துகளற விளைந்த தோப்பி பருகிக்
குலாஅ வல்வில் கொடுநோக்கு ஆடவர்
புலாஅற் கையர் பூசா வாயர்
ஒராஅ உருட்டுங் குடுமிக் குராலொடு
மராஅஞ் சீறூர் மருங்கில் தூங்கும்" (அகநா.265:12-20)

என்ற பாடல் விளக்கும். இவற்றால் வெட்சி வீரர்கள் கவர்ந்து வந்த ஆநிரைகளில் எருது இடம்பெற்றமையும் அதனை, வீரர்கள் உணவாக உட்கொண்டமையும் புலனாகும். பாலைநிலத்தோரே எருதுகளை மிகுதியாக உண்டுள்ளனர்.

### 2.8.3. கன்றின் இறைச்சி

பாணர்கள் ஆவின் கன்றை உணவாக உட்கொள்ளும் வழக்கம் உடையவர்கள். இவர்தம் இவ்வழக்கத்தை,

"கன்றுபெறு வல்சிப் பாணன்" (நற்.310:9)

என்ற அடி விளக்கும்.

### 2.8.4. ஆமான் இறைச்சி

ஆமான் என்பது காட்டுப்பசுவாகும். இதன் சூட்டிறைச்சி மிகவும் சுவையுடையதாக விளங்கும். சிறுபாணர் தம் மகளிர் திரளுடன், வெப்பம் விளங்குகின்ற குடிலில் எயினர் குல மகளிரால் சமைக்கப்பட்ட ஆமானின் சூட்டிறைச்சியைச் சோற்றுடன் பெற்று உண்டதை சிறுபாணாற்றுப்படை எடுத்துரைக்கின்றது.[52]

### 2.8.5. களிற்றின் இறைச்சி

சங்க கால மக்களுக்குப் பல்வேறு வழிகளில் உதவிய யானை அம்மக்களின் உணவாகவும் பயன்பட்டுள்ளது.

மருத நிலத்தூரில் பாண்டியனின் படைகள் பயிற்சியில் ஈடுபட்டன. அதில் களிறு ஒன்று இறந்துபட்டது. இறந்த களிற்றின் இறைச்சியைப் பாணன் உணவாகப் பெற்றதை,

"ஒளிறுவாட் டானைக் கொற்றச் செழியன்
வெளிறில் கற்பின் மண்டமர் அடுதொறும்
களிறுபெறு வல்சிப் பாணன்" (அகநா.106:10-12)

என்பர்.

பாலை நிலத்தில் புலி கொன்று தின்ற பெரிய யானையின் இறைச்சி எஞ்சிக் கிடந்தது. அவ்வூனை உணவாகும் என்று கருதி ஆறலைக்கள்வர் கோலிற் கோர்த்துக் கொண்டு சென்றதையும், அவ்வழியில் உப்பு வண்டி செலுத்தி வந்த உப்பு வணிகர் மீதமுள்ள அக்களிற்றின் இறைச்சியைச் சிறு தீயில் வதக்கி உண்டமையையும்

தொண்டி ஆமூர்ச்சாத்தனார் விளக்குவர்.[53] இவற்றால் பாணன், ஆறலைக்கள்வர், உப்பு வாணிகர் போன்றோர் களிற்றின் இறைச்சியை உண்டமை புலப்படும்.

### 2.8.6. முயல் இறைச்சி

சங்ககால மக்கள் வேட்டையாடி உணவில் பயன்படுத்திய விலங்கு முயல் ஆகும். இம்முயலை வேட்டுவர் நாய் கொண்டு வேட்டையாடினர். வேட்டுவன் உணவுக்காக முயலுடன் பல விலங்குகளையும் வேட்டையாடி அவற்றைத் தன் தோளில் சுமந்தபடி வீட்டில் கொணர்ந்து சேர்த்ததை நற்றிணை உரைக்கின்றது.[54]

பண்பாடுவதில் வல்ல பாணன் ஒருவன் ஞாயிறுபட்ட பொழுதில் மறக்குடிப் பெண்ணின் வீட்டிற்குச் சென்றனன். அப்பெண்ணும், பாணனே, நீ வீட்டில் சென்று அமர்க, உனக்குச் சுட்ட முயல் இறைச்சியை உண்ணத் தருகின்றேன் என்று உபசரித்தனள்.[55]

காலையிலும், மாலையிலும் வரகரிசிச் சோற்றுடன் குறியமுயலின் சூட்டிறைச்சியைப் பாணர் உண்டு மகிழ்ந்ததை,

"காலை யந்தியு மாலை யந்தியும்
புறவுக் கருவன்ன புன்புல வரகின்
பாற்பெய் புன்கந் தேனொடு மயக்கிக்
குறுமுயற் கொழுஞ்சூடு கிழித்த வொக்கலொ
டிரத்தி நீடிய வகன்றலை மன்றத்து" (புறநா.34:8-12)

என்ற பாடல் விளக்கும்.

மருதநில மக்கள் முல்லைநிலத்தில், ஆக்களை மேயவிட்டு அங்குள்ள குறுமுயலின் சூட்டிறைச்சியைப் பழைய சோற்றுடன் சேர்த்து உண்டுள்ளனர்.[56] குறுமுயலின் தசையுடன் நறுநெய்யிட்ட சோற்றையும் பிற சூட்டிறைச்சிகளையும் தானுண்டதை மாங்குடி கிழார் நினைவு கூறுவர்.[57] இதனால் பழந்தமிழர் உணவில் முயல் இறைச்சி பெரும்பங்கு வகித்ததை அறிய இயலும்.

### 2.8.7. முளவுமா இறைச்சி

உடல் முழுவதும் உள்ள மயிர்க்கற்றை முட்களைப் போன்று கூர்மையாகக் காணப்படுவதால் இது 'முளவுமா' என்று அழைக்கப்பட்டது. இம்முட்களைக் கொண்டு முளவுமா தன்னை வேட்டையாட வருபவர்களிடமிருந்து காத்துக் கொள்ளும் இயல்புடையது. இம்மயிர்க்கற்றைகளான முட்களைக் கொண்டு வேட்டையாடுபவரைத் தாக்குவதால் இதற்கு 'எய்மா' என்ற பெயரும் வழங்கப்பட்டுள்ளது. இக்காலத்தார் இதனை 'முள்ளம்பன்றி' என்று வழங்குவர்.

பாலை நிலத்தில் வாழும் எயினர்கள் முள்ளம் பன்றியின் இறைச்சியை உணவாக உட்கொள்ளும் இயல்புடையவர்கள் என்பதை,

"முளமா வல்சி யெயினர் தங்கை" (ஐங்.364:1)

என்ற அடி விளக்கும்.

மல்லிகிழான் காரியாதியின் குடநாட்டில், மறவர் அம்பெய்து கொண்டு வந்த எய்ப்பன்றியினது தசையை, வெண்சோற்றுடன் கலந்து வருவார்க்கெல்லாம் வேண்டுமளவு கொடுத்தனர். எஞ்சியதைப் பெரிய

பனையோலையால் செய்யப்பட்ட கூடையில் வைத்து எடுத்துச் சென்று உண்டதை,

"பெரும்பெய ராதி பிணங்கரிற் குடநாட்
டெயினர் தந்த வெய்ம்மா னெறிதசைப்
பைஞ்ஞிணம் பெருத்த பசுவெள் ளமலை
வருநர்க்கு வரையாது தருவனர் சொரிய
இரும்பனங் குடையின் மிசையும்
பெரும்புலர் வைகறைச் சீர்சா லாதே" (புறநா.177:12-17)

என்னும் அடிகள் விளக்கும்.

### 2.8.8. கேழல் இறைச்சி

கேழல் என்பது பன்றியைக் குறிக்கும் சொல்லாகும். காட்டில் வாழும் இதன் இறைச்சி சுவை மிகுந்தது.

நன்னனைக் காண்பதற்காகச் சில கூத்தர்கள் சென்று கொண்டிருந்தனர். வழிச்செல்கையில் கானவர் பன்றியின் தசைகளைப் பழுது நீக்கிக்கொண்டிருந்தனர். நல்ல தசைகளைப் பிற விலங்குகளின் தசைகளோடு பனைஓலைப் பெட்டியில் நிறைத்தனர். அதனைத் தம்முள் பொருத யானைகளின் கொம்புகளைக் காவு மரமாகக் கொண்டு தூக்கி வந்தனர். அப்பன்றியின் இறைச்சியைக் கூத்தர்கள் பெற்று உண்டு மகிழ்ந்தனர்.[58] கூத்தர்கள் செல்லும் வழியில் கானவன் ஒருவன், தினைப்புனத்தைக் காவல் காத்து வந்தனன். அவ்வேளையில் தினையை மேய வந்த பன்றியைக் கண்டு அதன்மீது அம்பு எய்தனன். பன்றியும் விழுந்துபட்டது. இதனைக் கண்ட கூத்தர்கள், வீழ்ந்த பன்றியின்

இறைச்சியை உலர்ந்த மூங்கில் காட்டில் தானாகப் பற்றி எரிந்த தீயில் வாட்டி உண்டனர். உண்டது போக மீதம் உள்ள இறைச்சியைச் சுமையாகக் கட்டி வழிப்போக்கிற்கும் கொண்டு சென்றனர்.[59]

நாடாளும் மன்னர்கள் பன்றி இறைச்சியைப் புலவர்களுக்கு விருந்தாக அளித்துள்ளனர். ஓய்மான் வில்லியாதன் பன்றி இறைச்சியை நெய்யில் பொரித்துக் கிணைப்பொருநனுக்குக் கொடுத்ததை,

"வில்லி யாதன் கிணையேம் பெரும
குறுந்தா ளேற்றைக் கொழுங்க ணல்விளர்
நறுநெய் யுருக்கி நாட்சோ றீயா
வல்ல னெந்தை பசிதீர்த் தல்லெனக்
கொன்வரல் வாழக்கைநின் கிணைவன் கூற"(புறநா.379:7-11)

என்னும் பாடல் புலப்படுத்தும்.

சங்ககால மக்கள் காட்டுப் பன்றிகளை மட்டுமின்றி வீட்டுப் பன்றிகளையும் உண்டுள்ளனர். வீட்டில் குழிகளை வெட்டிப் பன்றிகளை வளர்த்து வந்தனர். ஆண் பன்றியையும், பெண் பன்றியையும் தனித்தனியாக வளர்த்தனர். ஒருசில ஆண் பன்றிகளைப் பெண் பன்றிகளுடன் இணை சேரவிடாமல் தடுத்து, குறிப்பிட்ட பருவத்தில் அதனை உணவாக உட்கொண்டனர். இத்தகைய ஆண் பன்றியின் இறைச்சியைப் பெரும்பாணர் பெற்றுண்டதை,

"கள்ளடு மகளிர் வள்ள நுடக்கிய
வார்ந்துகு சின்னீர் வழிந்த குழம்பி
னீர்ஞ்சே றாடிய விரும்பல் குட்டிப்
பன்மயிர்ப் பிணவொடு பாயம் போகாது

நென்மா வல்சி தீற்றிப் பனனாட்

குழிநிறுத் தோம்பிய குறுந்தா ளேற்றைக்

கொழுநிணத் தடியொடு கூர்நறாப் பெறுகுவிர்” (பெரும்பாண்.339-345)

என்று உரைப்பர் கடியலூர் உருத்திரங்கண்ணனார். இவற்றால், பண்டைத் தமிழர் காட்டுப்பன்றி, வீட்டுப்பன்றி ஆகிய இரண்டையும் உணவாகக் கொண்டமை புலப்படும்.

**2.8.9. மான் இறைச்சி**

சங்க இலக்கியத்தில் இரலை, நவ்வி, மரையான், உழை, கடமா என்ற ஐந்து வகை மான்கள் கூறப்பட்டுள்ளன. இவற்றைச் சங்ககால மக்கள் அம்பால் எய்தும், நாயை ஏவியும் வேட்டையாடியுள்ளனர். மானின் இறைச்சி சிறந்த உணவாகப் பயன்பட்டதை சங்க இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன.

முல்லைநிலத் தோட்டத்தில் தினைக்கள் உண்ட மறவர்கள், புல்வாய் மானை அம்பெய்து வேட்டையாடி அம்மானின் இறைச்சியைச் சமைத்து உண்டுள்ளனர்.[60] வெப்பமுடைய மலைப்பக்கத்தில் பசியையுடைய செந்நாய், மரையானைக் கொன்று தின்றது. செந்நாய் தின்றொழித்த மிச்சில் இறைச்சி வேற்று நாட்டிலிருந்து பாலைநிலத்தின் வழிச் செல்லும் மாந்தர் உண்ணுவதற்குரிய உணவாக விளங்கியது.[61] செந்நாய் போன்ற விலங்குகள் உண்ட மிச்சிலாகிய மானின் இறைச்சியை வழிப் போக்கர்கள் உண்டு சென்றமை குறிப்பிடத்தக்கது.

புலி, மானேற்றைக் கொன்று தின்றது. எஞ்சிய இறைச்சி காய்ந்து கிடந்தது. பாலைநில வழிச் செல்லும் புதியர் காய்ந்த அத்தசையைக் கண்டு மகிழ்ந்தனர். அதனை எடுத்துச் சென்று சமைத்துண்டதை,

“இரும்புலி துறந்த ஏற்றுமான் உணங்கல்
நெறிசெல் வம்பலர் உவந்தனர் ஆங்கண்
ஒலிகழை நெல்லின் அரிசியோ டோராங்
கானிலைப் பள்ளி அளைபெய் தட்ட
வானிணம் உருக்கிய வாஅல் வெண்சோறு
புகரரைத் தேக்கின் அகலிலை மாந்தும்” (அகநா.107:5-10)

என்னும் அடிகள் விளக்கும். காய்ந்த மான் தசையினையும் மக்கள் உணவில் சேர்த்துண்டுள்ளனர். பனைஓலை, வாழை இலை, தேக்கு இலை போன்றவற்றை உணவு உண்ணப் பயன்படுத்தியுள்ளனர்.

அரசர்களைக் கண்டு பரிசு பெறப் புலவர்கள் செல்வர். வழிச் செல்லும்பொழுது மானிறைச்சியைப் பெற்று உண்டுள்ளனர். ஒருமுறை கண்டீரக் கோப்பெருநள்ளியைக் காண வன்பரணர் சென்றனர். வழியில் வன்பரணரின் வழிநடை வருத்தத்தைக் கண்ட ஒரு வேட்டுவத் தலைவன் அவரின் பசி மயக்கத்தைப் போக்கத் தன்னுடன் வேட்டையாட வந்த இளையோர் மீளும் முன்னே தன் கையில் வைத்திருந்த மானின் இறைச்சியைச் சுட்டு அவருக்கு உண்ணக் கொடுத்தனன். பரணரும் உண்டு மகிழ்ந்து சென்றனர்.[62] சோழன் நலங்கிள்ளி தன்னைப் புகழ்ந்து பாடிய பாணரின் சுற்றத்தாருக்கு மானினது தசையையும் இடைமகள் தந்த தயிரையும் கலந்து பெருஞ்சோறு வழங்கினன்.[63]

சேரமான் வஞ்சன் தான் உண்ணும் மானின் மண்டை இறைச்சிப் பொரிக்கறியை நெல்லரிசிச் சோற்றுடன் புலவருக்கும், அவர் தம் சுற்றத்தாருக்கும் வழங்கியதை,

"யானுண வருள லன்றியுந் தானுண்
மண்டைய கண்ட மான்வறைக் கருனை
கொக்குகிர் நிமிர லொக்க லார" (புறநா.398:23-25)

என்ற பாடலில் திருத்தாமனார் விளக்குவர். மன்னர்கள் தாம் உண்ணும் ஊன் உணவைப் புலவர்கட்குப் பகிர்ந்தளித் திருப்பதைக் காண முடிகின்றது. வல்வில்ஓரி புலவர்கள் விரும்பியது கூறவும், அதற்குக் காலம் தாழ்த்தியிராமல் மானின் தசையைத் தந்து உண்ணச் செய்தனன்.[64]

மன்னர்கள் புலவர்கட்கு மான் இறைச்சி அளித்துப் பசியைப் போக்கியுள்ளனர். சங்கத் தமிழர் மானின் இறைச்சியை உணவில் பெருமளவு உண்டிருப்பது குறிப்பிடத்தக்கது.[1]

## 2.8.10. ஆட்டிறைச்சி

சங்க கால மக்கள் வெள்ளாடு, செம்மறியாடு ஆகியவற்றின் இறைச்சியை உணவாகக் கொண்டுள்ளனர்.

பாரியின் பறம்பு மலையில் அவனது ஆட்சிக் காலத்தில் கபிலரும், படைவீரர்களும் மது இருந்த சாடியைத் திறந்து குடித்தனர். ஆட்டுக்கிடாயை அறுத்துச் சமைக்கப்பட்ட கொழுவிய துவையலையும், ஊனையுடைய சோற்றையும் விரும்பி உண்டனர்.[65] தருமபுத்திரன் அரண்மனையில் ஆட்டுக்கிடாயை அறுத்துச் சூட்டுக் கோலில் கோர்த்துச் சுட்ட சூட்டிறைச்சியைச் சமைத்தனர். பின் தெய்வங்களுக்கிடும் படையல்

போல இரவலர்களுக்குச் சூட்டிறைச்சியைச் சோற்றுடன் வேண்டுமளவிற்கு இலையில் குறையாமல் கொடுத்தனர். இவ்வூன் உணவைத் தருமபுத்திரனும் உண்டு, இரவலர்களையும் உண்பித்திருந்ததைக் கோதமனார் விளக்கியுரைப்பர்.[66]

தந்துமாறன் என்னும் மன்னன் பாணருக்கும், அவனது சுற்றத்தாருக்கும், இரவலர்கட்கும் ஆட்டிறைச்சியையும், கள்ளையும் கொடுத்து மகிழ்ந்ததை,

"மைவிடை யிரும்போத்துச் செந்தீச் சேர்த்திக்
காயங் கனிந்த கண்ணகன் கொழுங்குறை
நறவுண் செவ்வாய் நாத்திறம் பெயர்ப்ப
உண்டுந் தின்று மிரப்போர்க் கீய்ந்தும்
மகிழ்கம் வம்மோ மறப்போ ரோயே" (புறநா.364:4-8)

என்னும் அடிகளில் கூகைக் கோழியார் சுட்டிக் காட்டுவர்.

பசியால் வருந்திய குமட்டூர் கண்ணனாரின் பசித் துன்பம் நீங்கும்படி, அரிவாளாற் பிளந்து அறுக்கப்பட்ட ஆட்டுத் தசையால் சமைக்கப்பட்ட வெள்ளிய ஊன் சோற்றை இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் அவருக்கு வழங்கினன்.[67] ஊனையும் சோற்றுடன் கலந்து சமைத்தலால் 'ஊன் பெய்த வெண்சோறு' என்றனர். இன்று நாம் 'பிரியாணி' என்று குறிப்பிடுவதும் இவ்வுணவையே ஆகும்.

கொதிக்கின்ற எண்ணெயில் இறைச்சித் துண்டுகளைப் பொரித்துண்பது வழக்கம். அவ்வகையில், காரியாதியின் மனையில் நெய் காய்கின்ற உலையில் ஆட்டிறைச்சித் துண்டுகளை இட்டுப் பொரித்துண்டதை,

"வையங் காவலர் வளங்கெழு திருநகர்
மையல் யானை யயாவுயிர்த் தன்ன
நெய்யுலை சொரிந்த மையூ னோசை
புதுக்கண் மாக்கள் செதுக்க ணாரப்
பயந்தனை மன்னான்" (புறநா.261:6-10)

என்று ஆவூர் மூலங்கிழார் குறிப்பிடுவர்.

அதியமான்பொகுட்டெழினி படை எடுத்துச் சென்று வென்ற ஊரில் விழா நடைபெறுவதில்லை. எனினும் செம்மறியாட்டுத் தசையுடன் உண்டாக்கப்படும் உணவு யாவருக்கும் தப்பாமற் கிடைத்தது.[68] திருமகள் வாழுகின்ற புதுவருவாயையுடைய மதுரை நகரில் மக்கள் ஆட்டினைக் கொன்று சமைத்துச் சோற்றுடன் சேர்த்து உண்டனர்.[69] மரங்களின் அடியில் செம்மறிக்கிடாயை அறுத்து அத்தசைகளை நெய்யிட்டுப் பொரிக்கறிகளாகப் பொரித்து உண்டமையை மதுரைக் காஞ்சி குறிப்பிடுகிறது.[70] இவற்றால் மன்னர்களும் மக்களும் ஆட்டிறைச்சியை விரும்பி உண்டுள்ளமை புலப்படுகிறது.

சங்கத் தமிழர் விலங்குகளின் இறைச்சியை முக்கிய உணவாகக் கொண்டுள்ளனர். ஐந்நிலமக்களும் இறைச்சி உணவை உண்டமை குறிப்பிடத்தக்கது.

### 2.9. பொது வகை ஊன்

சங்க இலக்கியத்தில் பெயர்சுட்டிய விலங்குகளின் இறைச்சி மட்டுமின்றி 'நிணம்,'[71] 'செழுநிணம்,'[72] 'தடி,'[73] 'ஊன்,'[74] 'செவ்வூன்,'[75] 'பேருன்'[76] போன்று ஊன் பொதுவாகவும் குறிக்கப்பெற்றுள்ளது.

வேட்டைக்குச் செல்வோரின் வேட்டையில் பல விலங்களின் இறைச்சி கிடைப்பதுண்டு. அவ்விறைச்சிகளை இல்லத்திற்குக் கொண்டு வருவர். அங்ஙனம் கொண்டு வந்த இறைச்சியைப் பாலைநிலத்து எயிற்றி, பறவைகள் கொத்திக் கொண்டு செல்லாமல் காவல் காத்துள்ளனள்.[77] இவற்றால் வேட்டையில் பல்விலங்குகளின் இறைச்சி கிடைத்துள்ளமை புலனாகும்.

### 2.9.1. வழிச் செல்வோர் ஊன் உணவு பெறுதல்

பரிசு பெறச் செல்லும் இரவலர்கள் வழியில் பல்வேறு இறைச்சி உணவுகளைப் பெற்று உண்டனர். நன்னனைக் காணச் செல்லும் கூத்தர்கள் கடமா, எய்மா போன்றவற்றின் இறைச்சியை ஒருங்கே பெற்றனர்.[78] இக்கூத்தர்கள் வழியில் வேட்டுவர் திரளைக் கண்டனர். அவர்களிடம் பகைவரை ஆளும் தன்மையுடைய நன்னனைக் காணச் செல்கிறோம் என்றனர். அதனைக் கேட்ட வேட்டுவர்கள் அவர்களுக்கு இறைச்சியையும், கிழங்கையும் உண்ணக் கொடுத்து அடர்ந்த காட்டில் வழிகூறி அனுப்பி வைத்தனர்.[79]

மருத நிலத்தூரில் கள்விற்கும் பழையர் மகளிர், விலங்குகளின் இறைச்சியில் உள்ள கழிவுகளைக் கழித்துக் கொழுப்புடன் கூடிய இறைச்சியைச் சோற்றில் இட்டுச் சமைத்தனர். ஊன் கலந்த அச்சோற்றைக் கூத்தர்கள் தம் சுற்றத்துடன் பெற்று உண்டனர்.[80] இவ்வாறு நன்னனிடம் பரிசில் பெற்றுச் செல்லும் கூத்தர்கள், வழியில் உள்ள இல்லத்தில் பலநாட்கள் தங்கிய பொழுதும் அவ்வில்லத்தோர்

நாள்தோறும் ஊன்சோற்றை முதல்நாள் போன்றே விருப்புவெறுப்பின்றி கூத்தர்க்கு வழங்கியுள்ளதை மலைபடுகடாம் எடுத்துரைக்கின்றது.[81]

நெய்தலங்கானல் எனும் ஊரில் உள்ள மகளிர் அமிழ்தைவிடச் சுவையையுடைய ஊன் உணவைச் சமைத்தனர். அவ்வடிசிலைக் குறைபடாமல் விருந்தினருக்கு வழங்கியதை,

"அமிழ்தட் டானாக் கமழ்குய் யடிசில்

வருநர்க்கு வரையா வசையில் வாழ்க்கை

மகளிர் மலைத்த லல்லது மள்ளர்" (புறநா.10:7-9)

என்ற பாடல் புலப்படுத்துகின்றது. இவற்றால் சங்ககால மக்கள் ஊன் உணவினை அமிழ்தைவிடச் சுவையுடையதாகக் கருதியமை புலனாகும்.

இறைச்சியால் ஆன துவையலைத் தாளிப்பதால் எழுந்த ஓசையும், கார்ப்பும் வழிச் செல்லும் இரவலரின் கண்ணைத் தகைத்தது. மேற்செல்லாமல் தடுத்தது. இரவலர்கள் அம்மனையில் உண்டதை,

"குய்குரன் மலிந்த கொழுந்துவை யடிசில்

இரவலர்த் தடுத்த வாயிற் புரவலர்

கண்ணீர்த் தடுத்த தண்ணறும் பந்தர்" (புறநா.250:1-3)

என்ற அடிகள் விளக்கும். கல்லாடனார் வேங்கடமலையில் எருதுகளின் உழைப்பினால் கிடைத்த நெல்லைப் பெற்றுக் கொண்டு கள்ளுடன் ஊன் சோறு உண்டதை புறநானூறு எடுத்துரைக்கின்றது.[82]

குறிஞ்சிநிலத் தலைவன் மதுவினை உண்டு, தன் சுற்றத்தினரொடு ஆரவாரம் செய்தனன். பின் சந்தன விறகால் சமைத்த ஊன் உணவு உண்ட காட்சியை,

"பிழிமகிழ் உவகையன் கிளையொடு கலிசிறந்து
சாந்த ஞெகிழியின் ஊன்புழுக் கயருங்
குன்ற நாடன்" (அகநா.172:12-14)

என்ற அடிகள் புலப்படுத்துகின்றன. குறிஞ்சி வளநாடு வரையாமல் வழங்கி விழாக் கொண்டாடினார்ப் போலச் செல்வத்தை உடையதாக இருந்தது. அங்கு குறிஞ்சி நிலத்தோர் இறைச்சியுடன் நெய்மிக்க அடிசிலை இடுகையில் குற்றமில்லாத உயர்ந்த குலத்தில் பிறந்த உயர்ந்தோர் தமது சுற்றத்தோடு விருந்துண்டனர்.[83] இழிந்தோர் முதல் உயர் குலத்தோர் வரை வழிச் செல்லும் மனையில் ஊன் உணவு பெற்று உண்டு சென்றதை அறிய இயலும்.

### 2.9.2. அரசர் அளித்த ஊன் உணவு

அரச மரபினர் இரவலர்கள், புலவர்கள், படைவீரர்கள் போன்றோருக்கு ஊன் உணவு வழங்கிச் சிறப்பித்திருக்கின்றனர்.

தலையாலங்கானத்துப் பாண்டியன் நெடுஞ்செழியன் பகைவர்களை வென்று கொணர்ந்த பொருட்களுடன் சுற்றத்தாருக்கும் புலவருக்கும் இறைச்சியுடன் கூடிய சோற்றையும், பால்சோற்றினையும் தனக்கெனப் பாதுகாவாமல் அனைவருக்கும் வழங்கும் வன்மையுடையவனாகத் திகழ்ந்தனன்.[84]

வேந்தர்கள் போரில் ஈடுபட்ட வீரர்களுக்கு ஊன் விருந்து படைப்பது வழக்கம். குதிரைப் படையையுடைய பாண்டவர் ஐவரும், நூறு கௌரவர்களுடன் போரிட்ட பொழுது சேரமான் உதியன் சேரலாதன் இருதரப்புப் படைவீரர்களுக்கும் ஊன் உணவு வழங்கியதை,

"அலங்குளைப் புரவி ஐவரொடு சினைஇ

நிலந்தலைக் கொண்ட பொலம்பூந் தும்பை

ஈரைம் பதின்மரும் பொருதுகளத் தொழியப்

பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்" (புறநா.2:13-16)

என்ற அடிகளில் முரஞ்சியூர் முடிநாகனார் விளக்குவர்.

இப்புறப்பாட்டைப் பற்றி இருவேறு கருத்துக்கள் கூறப்படுகின்றன. பாரதப்போரில் உதவிபுரிந்த சேரலாதனை நேரிற் பாடியவர் தலைச்சங்கத்துப் புலவரான முடிநாகராயர் எனவும், அலங்குளைப்புரவி என்ற இப்பாட்டுப் பாரதகாலத்தது எனவும் முறையே 'ரா.இராகவையங்காரும்,'[85] 'மு.இராகவையங்காரும்'[86] விளக்குவர். 'தேவநேயப் பாவாணரும்'[87] இக்கருத்தையே வழிமொழிவர். "இப்போரில் பெருஞ்சோறு கொடுத்தான் என்பதன் கருத்து நூற்றுவர் ஒழிய ஐவருக்குத் துணைப்படை போக்கினான் என்பதாகும்"[88] என்று சுட்டுவர் வ.சுப.மாணிக்கனார். "ஐவரென்னுந் தொகைக்குறிப்புச் சொல் பாண்டவரைக் குறிப்பாலுணர்த்தியது"[89] என்பர் உ.வே.சா. "பாண்டவரும், துரியோதனாதியோரும் பொருத காலத்து இருதிறத்துப் படைகட்கும் பெருஞ்சோறிட்டு இச்சேரமான் நடுநிலை புரிந்தானென்பது பற்றி, இவன் பெருஞ்சோற்றுதியஞ்சேரலாதன் எனப்படுகின்றான்"[90] என்று இம்மன்னனுடைய பெயர்ப்பொருத்தத்தைக் காட்டுவர் ஔவை.சு. துரைசாமிப்பிள்ளை. இக்கருத்துக்கள் பாரதப் போரில் சேரற்குத் தொடர்பிருந்ததை உறுதிப்படுத்துகின்றன. எனினும் உதியஞ்சேரல் பெருஞ்சோறு கொடுத்தது பாரத காலத்திலன்று. அவர் நினைவாக நீத்தார் கடன் செய்ததையே இப்புறப்பாடல் காட்டுகின்றது. இது கடைச்சங்ககாலப்

பாட்டாகும் என்று 'மொ.அ.துரையரங்கனாரும்,'[91] 'மயிலை.சீனி. வேங்கடசாமியும்'[92] கருதுவர். இப்புறப்பாடலில் ஐவராவர் பாண்டவர் அல்லர்; நூற்றுவராவார் துரியோதனாதியர் அல்லர்; இங்கு குறிக்கப்படும் போர் பாரதப் போரன்று; ஐவர் என்பது வேளிரையும், நூற்றுவர் என்பது சாதவாகனரையும் குறிக்கும். வடகொங்கு நாட்டுப் போரில் சேர அரசன் தன் குறுநில மன்னராகிய வேளிர் ஐவர்க்கு உதவிய செய்தியே இங்கு சுட்டப்படுவதாக ந.சுப்பிரமணியம் குறிப்பிடுவர்.[93] இதனை மறுத்து அ.விசுவநாதன் அவர்கள், "இக்கருத்து சங்கநூற் சான்றுகளைப் பார்க்கும்பொழுது உடன்படத்தக்கதாய் இல்லை. நூற்றுவருக்கும் ஐவருக்கும் சங்க நூலிற் சொல்லப்படும் கதைக் குறிப்புகளும், 'வயக்குறு மண்டிலம்வட மொழிப் பெற்ற முகத்தவன் மக்களுள் முதியவன் புணர்ப்பினால் ஐவர் என்று உலகேத்தும் அரசர்கள்' என்று வரும் இன்னோரன்ன தொடர்மொழிகளும் அறிஞர்கள் பலர் கொண்டபடி பாண்டவர்களையும் கௌரவர்களையுமே தெளிவாகக் குறிக்கக் காண்கிறோம்"[94] என்றுரைப்பர். இவற்றால் ஐவர் மற்றும் நூற்றுவர் என்பது பாண்டவர்களையும், கௌரவர்களையும் குறிப்பிடுவதை உணரமுடிகின்றது. உரையாசிரியர்கள் பலர், புறநானூற்றில் பாடப்பட்ட சேரமான் பெருஞ்சோற்றுஉதியஞ்சேரலாதனை பாரதகாலத்தைச் சார்ந்தவன் எனக் கருதுகின்றனர். எனவே இம்மன்னன் பாரதப் போரில் இருபடை வீரர்களுக்கும் ஊன் உணவு படைத்ததாகக் கருத இடமுண்டு.

போர்க்களத்தில் வெற்றி பெற்ற வேந்தர் தம் படைவீரர்கட்கும், தம்மை நாடி வந்த பாணர்கட்கும் ஊன் சோறு வழங்குதல் இயல்பாகும். சோறு வேறு, ஊன் வேறு எனப் பிரித்துக் காணமுடியாதவாறு ஊன்

குழையச் சமைத்த சோற்றினை வீரர்கட்குச் சேரன் பெருவிருந்தளித்தனன்.[95]

சேரமான் செல்வங்கடுங்கோ வாழியாதன் கபிலர் கையைப் பற்றியபொழுது, கை மென்மையாக இருக்கக் காரணம் என்னவென்று வினவினன். அதற்கு அவர் ஊனும், துவையும், கறிச்சோற்றையும் உண்டு வாழ்வதைத் தவிர வேறு தொழில் இல்லையாதலால் என் கைகள் மென்மையாக உள்ளன எனக்கூறினர்.[96] இதனைப் போன்று, உணவு உண்ட கலத்தை மிஞ்சிய உணவுடன் தூக்கி எறிந்து விட்டுப் பல்லில் சிக்கிய ஊனைத் தோண்டி எடுத்த நாட்கள் உண்டு. ஆனால் உண்ணாமல் இருந்த நாட்கள் இல்லை எனப் புறத்திணை நன்னாகனார் குறிப்பிடுவது இவ்விடத்தில் சுட்டத்தக்கது.[97] இதனால் நாள்தோறும் புலவர்பெருமக்கள் ஊன் உணவு உண்டு மென்வாழ்க்கை வாழ்ந்தமை புலனாகும்.

சோழநாட்டுப் பிடவூர்க்கிழான் மகன் பெருஞ்சாத்தனை, அகன்ற நில உலகம் மழையின்றி மிக்க வெம்மையுற்று வாடினும் பொரிக்கறியும், சூட்டுஇறைச்சியும் பெற்று வாழ்வாயாக என்று சான்றோர் வாழ்த்தினர்.[98] சங்க காலச் சான்றோர் ஊன் உணவு உண்ண வாழ்த்திச் சென்றமை, உணவில் பயன்படுத்தப்பட்ட இறைச்சிப் பயன்பாட்டினை நன்கு விளக்கும்.

மனைக்கிழத்தி ஒருத்தி, பாலாவியை ஒத்து விளங்குகின்ற நூலாற் செய்த துகிலை உடுத்திக் கொண்டு அரிவாளால் அறுத்த இறைச்சியையும், செந்நெல்லால் சமைத்த சோற்றையும் கலந்து உணவு சமைத்தனள். அவ்வடிசிலை வெள்ளிக்கலங்களில் இட்டுப் பிள்ளைகளுக்கு இடையே பரப்பி ஆசையுடன் அவர்களை உண்ணும்படிக் கூறினள்.[99]

இதனால் சங்க மகளிர் தம் பிள்ளைகள் உடல் வலிமை பெற வேண்டி ஊன் உணவு ஊட்டி வளர்த்தமை புலனாகும்.

### 2.9.3. ஊன் துவையல்

சங்க மக்கள் காய்ந்த இறைச்சியைச் சமைத்து உண்டுள்ளனர். மேலும், விலங்குகளின் ஊனைத் துவையலாக அரைத்து உண்டமையை,

"செவ்வூன் றோன்றா வெண்டுவை முதிரை
வாலூன் வல்சி மழவர் மெய்ம்மறை
குடவர் கோவே கொடித்தே ரண்ணல்" (பதிற்.55:7-9)

என்ற அடிகள் விளக்கும். இவ் ஊன் துவையல் சங்க கால மக்களின் உணவு வகைப்பாட்டினை விளக்குகின்றது.

### 2.9.4. பாசவல்

இறைச்சி, பால், கரும்புப்பாகு, செந்நெல்லரிசி ஆகியவற்றுடன் கலந்து செய்த கலவை 'பாசவல்' எனப்படும். பாலைநிலத்தலைவன் பாணருக்குப் பாசவல் பகுத்துக் கொடுத்ததை,

"செந்தீ அணங்கிய செழுநிணக் கொழுங்குறை
மென்றினைப் புன்கம் உதிர்த்த மண்டையொடு
இருங்கதிர் அலமருங் கழனிக் கரும்பின்
விளைகழை பிழிந்த அந்தீஞ் சேற்றொடு
பால்பெய் செந்நெற் பாசவல் பகுக்கும்
புனல்பொரு புதவின் உறந்தை யெய்தினும்"(அகநா.237:9-14)

என்று குறிப்பிடுவர் தாயங்கண்ணனார்.

### 2.9.5. திருமணத்தில் ஊன் உணவு

சங்கத் தமிழர் திருமணத்தில் ஊன் உணவு படைத்தனர். மருத நிலத்தூரார் புள்நிமித்தம் பார்த்துத் திருமணம் நடத்தினர். அத்திருமணத்திற்கு வந்திருந்த சுற்றத்தாருக்கு இறைச்சியுடன் கலந்த சோற்றைச் சமைத்து நெய்மிக இட்டு வழங்கியதை அகநானூறு குறிப்பிடும்.[100] இதனைப்போன்று, பாலைநிலத்தில் உடன் போக்கு மேற்கொண்டோர் தேக்குமர இலையில் குவிக்கப்பெற்ற ஊனினை உண்ணும் சீறூரில் தங்கினர். அவ்வூரார் அவர்கட்கு ஊன் உணவு அளித்தனர். தலைமக்கள் அவ்உணவை உண்டதை,

"சேக்குவள் கொல்லோ தானே தேக்கின்
அகலிலை குவித்த புதல்போல் குரம்பை
ஊன்புழுக் கயரும் முன்னிற்
கான்கெழு வாழ்நர் சிறுகுடி யானே" (அகநா.315:15-18)

என்ற அடிகள் விளக்கும். சங்ககால மக்களின் இம்மரபை ஒட்டி இற்றைத் தமிழர்களில் ஒரு சில சமுதாயத்தினர் திருமணத்தில் ஊன் உணவு படைப்பது சுட்டத்தக்கது.

### 2.9.6. ஊன் சமைத்தல்

வழிப்போக்கர்கள் சுரவழியில் செல்லும்பொழுது அவ்விடத்தில் கிடைக்கும் பொருட்களை வைத்து உணவு சமைத்து உண்டு செல்வர். பாலைநில வழியில் சென்ற உப்பு வணிகர் கூட்டம் கல் அடுப்பில் உணவு சமைத்து உண்டு சென்றனர். அவ்வழியில் வந்த வில்லையுடைய மழவர்

படையும் அக்கல் அடுப்பில் மணம் உண்டாக ஊனைப் புழுக்கி உண்டுள்ளனர். இதனை,

"உமண்சாத் திறந்த ஒழிகல் அடுப்பின்

நோன்சிலை மழவர் ஊன்புழுக் கயரும்

சுரன்வழக் கற்ற தென்னா துரஞ்சிறந்து" (அகநா.119:8-10)

என்ற பாடலடிகள் எடுத்துரைக்கும்.

வேட்டைக்குச் செல்வோர் யானை வேட்டை புரிவர். வேட்டுவன் களிற்றை வேட்டையாடிக் கோட்டைக் கவர்ந்து வந்து வீட்டின் முன் ஊன்றினன். பின் தம் சுற்றத்தாருடன் சந்தன விறகால் கல் அடுப்பில் சமைத்த ஊன் சோற்றை உண்டு மகிழ்ந்தனன்.[101] சங்க காலத்தில் வழிப்போக்கிடத்திலும், இல்லத்திலும் கல் அடுப்பைப் பயன்படுத்தி ஊன் சமைத்து உண்டிருப்பது சுட்டத்தக்கது.

### 2.9.7. இறைச்சியும், மீனும்

பண்டைத் தமிழர் விலங்குகளின் இறைச்சியுடன் பிற உணவுப் பொருட்களையும் சுவைபெற வேண்டிக் கலந்து உண்டனர். அவ்வகையில், காவிரிப்பூம்பட்டிணத்தில் உள்ள மனையில் மீனும், இறைச்சியும் ஒருங்கே கலந்து பொரித்த உணவை உண்டதை,

"மீன்றடிந்து விடக்கறுத்

தூன்பொரிக்கு மொலிமுன்றின்" (பட்டினப்..176-177)

என்ற அடிகள் உணர்த்தும்.

## தொகுப்புரை

சங்ககால மக்கள் வாழ்வில் ஊன் உணவு பெரிதும் இடம் பெற்றுள்ளது. விலங்குகள் இடம் பெயர்ந்து செல்லும் இயல்புடைய காரணத்தால் மக்கள் பல விலங்குகளின் இறைச்சியையும் உணவாக உண்டுள்ளனர்.

சங்க மக்கள் உணவில், விலங்கிடமிருந்து பெறப்படும் பால் முதல் இடம் வகித்தது. அவர்கள் பாலை உலைநீராகப் பயன்படுத்தியுள்ளனர். பாலுடன் தேன் கலந்துண்டு உடலை வலிமையாக்கியுள்ளனர். இறைச்சியுண்டு வெறுத்த பொழுது, பாற்பலகாரங்கள் செய்துண்டனர். சிறியவர்கள் முதல் முதியவர்கள் வரை அனைவரும் பாலுணவை விரும்பி உண்டுள்ளனர்.

பாலை உறையிட்டுத் தயிராக்கினர். அத்தயிரால் குழம்பு செய்தனர். வரகுச்சோற்றுடன் தயிரும், வேளைப்பூவையும் கலந்து அம்புளி மிதவையும், வரகுச்சோற்றுடன் தயிரும், ஈயலும் கலந்து இன்புளி வெஞ்சோறும் சமைத்துண்டனர். பண்டைத் தமிழர் தயிர் கலந்த உணவைத் தாமும் உண்டு இரவலருக்கும் வழங்கினர்.

தயிரைக் கடைந்து உண்டாக்கிய மோரில் மூங்கிலரிசியை இட்டுப் பலாவிதையின் மாவையும், புளியம்பழத்தின் புளிப்பையும் கலந்து வாலவிழ் வல்சி தயாரித்து உண்டனர். இம்மோருடன் ஈயலைக் கலந்து புளிக்கறி சமைத்தனர். மோரை வறுமையில் வாடுவோரும் உண்டிருப்பதால் சங்க கால மக்களின் உணவில் மோரின் முக்கிய பங்கு விளங்கும்.

பண்டைத் தமிழரின் உணவில் வெண்ணெய்யும், நெய்யும் முக்கிய பங்கு பெற்றுள்ளன. பழந்தமிழக வேந்தர்கள் புலவர்களுக்கும்,

இரவலர்களுக்கும், வீரர்களுக்கும் நெய் கலந்த உணவையும், ஊனையும் வழங்கியுள்ளனர். விலங்குகளின் இறைச்சி, பறவைகளின் இறைச்சி, பயறுவகைகள் போன்றவற்றைப் பொரித்துண்டுள்ளனர். நெய்யில் வடகம் செய்துண்டிருப்பதும் குறிப்பிடத்தக்கது.

வெட்சிவீரர்களும், பெரும்பாணர்களும், சிறுபாணர்களும், ஆ, எருது, ஆவின் கன்று, ஆமான் போன்றவற்றின் இறைச்சியை உண்டுள்ளனர். பாணர்களும், உப்புவணிகர்களும் களிற்றின் இறைச்சியை உணவாகக் கொண்டமை குறிப்பிடத்தக்கது.

சங்கத் தமிழர் முயல் இறைச்சியையும், முளமா இறைச்சியையும் விரும்பி உண்டுள்ளனர். மேலும் காட்டுப்பன்றி, வீட்டுப்பன்றி போன்றவற்றின் இறைச்சியை உணவில் சேர்த்துள்ளனர். மக்களும் மன்னனும் மானை வேட்டையாடி உண்டுள்ளனர்.

மன்னர்கள் உண்டாட்டு நிகழ்ச்சி நடத்தும்பொழுது ஆடுகளை வெட்டி உண்டனர். தெய்வங்களுக்கு ஆடுகளைப் பலியிட்டு அவ்வாட்டிறைச்சியைச் சமைத்து உண்டுள்ளனர். வேந்தர்கள் படைவீரர்கட்கு ஊன் உணவைச் சிறப்பு விருந்தாகப் படைத்துள்ளனர்.

சங்க கால மக்கள் ஊனை அரைத்துத் துவையலாகவும், இறைச்சி, பால், கரும்புப்பாகு, நெல்லரிசி ஆகியவற்றைச் சேர்த்துப் பாசவல் என்ற உணவையும் தயாரித்து உண்டுள்ளனர்.

திருமணத்தில் விருந்தினர்களுக்கு ஊன் உணவு வழங்குவது சிறப்பாகக் கருதப்பட்டது. உடன்போக்கு மேற்கொண்டோரும் ஊன் உணவு உண்டமை குறிப்பிடத்தக்கது.

இறைச்சியையும், மீனையும் பொரித்து ஒருங்கே உண்பது மக்களின் வழக்கமாக விளங்கியது.

பொதுவாகச் சங்கத் தமிழர் தாம் வாழும் இடத்தில் கிடைத்த இறைச்சியை உண்டுவந்துள்ளனர். நாடாளும் மன்னன் முதல் சாதாரணக் குடிமக்கள் வரை அனைவரும் ஊன் உணவை விரும்பி உண்டுள்ளனர்.

## சான்றெண் விளக்கம்

1. செ.தேவதாசு, பழந்தமிழ் இலக்கியத்தில் தமிழர் உணவுப் பொருட்கள், முதுகலை ஆய்வேடு, ப.2
2. சே.நமச்சிவாயம், தமிழர் உணவு, பக்.1-2
3. புறநா.10-7, பெரும்பாண்.283,476
4. புறநா.14:13
5. பதிற்.45:13
6. புறநா.250:1
7. அகநா.119:9, 172:13, 309:6, 315:17
8. ஐங்.391:3, பதிற்.55:7, 21:10
9. ஐங்.364:1, 365:1-3
10. சே.நமச்சிவாயம், தமிழர் உணவு, ப.20
11. நற்.175:9
12. குறுந்.201:1-4
13. புறநா.168:1-14
14. அகநா.394:11
15. பெரும்பாண்.170-175
16. குறுந்.221:2-4
17. மலைபடு.406-412
18. மேலது.413-417
19. பெரும்பாண்.166-168
20. அகநா.207:14-17

21. புறநா.310:1-3

22. நற்.179:1-6

23. குறுந்.396:1-2

24. ஐங்.168.3-4

25. நற்.297:1, குறுந்.356:6-7

26. எஸ்.வையாபுரிப்பிள்ளை(ப.ஆ), தமிழ்ப் பேரகராதி, தொ.5.ப.8199

27. அகநா.89:19-22, 105:4-6

28. பெரும்பாண்.155-165

29. மலைபடு.109

30. குறுந்.167:1

31. புறநா.65:2

32. நற்.12:3

33. மேலது.84:6-7

34. அகநா.394:2-10

35. புறநா.328:7-12

36. மேலது.326:8-12

37. மலைபடு.178-185

38. கலித்.110:5-6

39. புறநா.188:5, 160:7

40. மேலது.384:15-18

41. மேலது.382:8-11

42. மேலது.160:7-9

43. மேலது.397:11-16

44. மேலது.386:3-9

45. மலைபடு.162-169

46. மேலது.440-443

47. குறுந்.389:1-3

48. அகநா.249:11-19

49. அகநா.309:1-6

50. மேலது.97:1-6

51. பெரும்பாண்.134-143

52. சிறுபாண்.173-177

53. அகநா.169:1-7

54. நற்.59:3-5

55. புறநா.319:6-9

56. மேலது.395:1-5

57. மேலது.396:15-18

58. மலைபடு.152-157

59. மேலது.242-252

60. அகநா.284:8-11

61. நற்.43:1-5

62. புறநா.150:5-14

63. மேலது.33:1-15

64. மேலது.152:25-30

65. மேலது.113:1-4

66. மேலது.366:16-20

67. பதிற்.12:15-18

68. புறநா.96:6-9

69. மதுரைக்.210-214

70. மேலது.754-758/

71. அகநா.132:5

72. மேலது.237:9

73. மலைபடு.425

74. அகநா.315:17

75. பதிற்.55:7

76. மதுரைக்.533

77. ஐங்.365:1-3

78. மலைபடு.170-177

79. மேலது.421-427

80. மேலது.465-468

81. மேலது.563-566

82. புறநா.391:2-8

83. மலைபடு.201-208

84. மதுரைக்.533-535

85. ரா.இராகவையங்கார், தமிழ் வரலாறு, ப.240

86. மு.இராகவையங்கார், ஆராய்ச்சித் தொகுதி, ப.87.

87. தமிழ்ப்பொழில், இதழ் 5:36, பக்.195-200

88. வ.சுப.மாணிக்கம், சிந்தனைக்களங்கள், பக்.318-319

89. உ.வே.சா.(உரை.ஆ), புறநானூறு, பக்.6-7

90. ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை(உரை.ஆ), புறநானூறு, தொ.1. ப.4

91. மொ.அ.துரையரங்கனார், சங்ககாலச் சிறப்புப்பெயர்கள்,ப.218

92. தமிழ்ப்பொழில், இதழ் 5:36, ப.110

93. N.Subramaniam, History of TamilNadu, P.52-53

94. அ.விசுவநாதன், பாரதநூல்களின் திறனாய்வு, பக்.24-25

95. பதிற்.45:13-14

96. புறநா.14:12-16

97. மேலது.384:21-24

98. மேலது.395:33-40

99. பெரும்பாண்.469-480

100. அகநா.136:1-2

101. மேலது.172:11-14

**3.1. தொழில் - விளக்கம்**

**3.2. பண்டைத் தமிழர் தொழில் பாகுபாடு**

**3.3. சங்கத் தமிழர் தொழில்முறை**

**3.4. வேட்டைத் தொழிலில் விலங்குகள்**

3.4.1. வேட்டையாட ஆராய்தல்

3.4.2. வேட்டைத் தொழிலில் நாய்

3.4.2.1. வீட்டுக்காவலில் நாய்

3.4.3. விலங்குகளை வேட்டையாடும் முறை

3.4.3.1. எண்கு வேட்டை

3.4.3.2. எலி வேட்டை

3.4.3.3. குரங்கு வேட்டை

3.4.3.4. கேழல் வேட்டை

3.4.3.5. புலி வேட்டை

3.4.3.6. மான் வேட்டை

3.4.3.7. முயல் வேட்டை

3.4.3.8. முளவுமா வேட்டை

3.4.3.9. யானை வேட்டை

**3.5. மேய்த்தல் தொழில்**

3.5.1. ஆடு மேய்த்தல்

3.5.2. ஆநிரை மேய்த்தல்

3.5.3. கன்று மேய்த்தல்

3.5.4. ஆநிரைகள் மாலையில் வீடு திரும்புதல்

3.5.5. எருமை மேய்த்தல்

3.5.6. முந்நிரை மேய்த்தல்

**3.6. உழவுத் தொழிலில் விலங்குகள்**

3.6.1. எருதுகள் உழுதல்

3.6.2. எருமைகள் உழுதல்

3.6.3. கழுதை ஏரால் உழுதல்

**3.7. கடாவிடுதல்**

3.7.1. எருதைக் கடாவிடுதல்

3.7.2. எருமையைக் கடாவிடுதல்

**3.8. வணிகத் தொழிலில் விலங்குகள்**

3.8.1. உப்பு வண்டியில் எருதுகள்

3.8.2. நெல் வண்டியில் எருதுகள்

3.8.3. பொதி சுமந்த கழுதைகள்

**3.9. நிரைகவர்தலும் மீட்டலும்**

3.9.1. ஆநிரை கவர்தல்

3.9.2. நிரைகவர்தலின் நோக்கம்

3.9.3. நிரை மீட்டல்

3.9.4. நிரை மீட்போர் பெயரை நடுகல்லில் பொறித்தல்

**3.10. போர்த் தொழிலில் விலங்குகள்**

3.10.1. போரில் யானையின் பங்கு

3.10.1.1. யானையைப் பிடித்தல்

3.10.1.2. யானைக்குப் பயிற்சி அளித்தல்

3.10.1.3. யானை, குதிரைகளுக்கு உணவிடுதல்

3.10.1.4. யானை, குதிரைகளை அலங்கரித்தல்

# சங்ககால மக்கள் தொழிலில் விலங்குகள்

மனிதன் கூடிவாழத் தொடங்கிய காலத்தில் தனது உடல் உழைப்பைப் பயன்படுத்தித் தொழில் செய்து வந்தான். அதன்வழித் தன் அடிப்படைத் தேவைகளை நிறைவு செய்து கொண்டான். காலப்போக்கில் தன் அறிவுத் திறமையால் பல்வேறு தொழில்களை மேற்கொள்ளத் தொடங்கினான். இங்ஙனம் தொழில் புரிவதற்கு விலங்குகள் பெரிதும் உதவின. இதன்விளைவாக மக்கள் தம் வாழ்வில் பல நிலைகளிலும் விலங்குகள் பங்குபெறத் தொடங்கின. அவ்வகையில் சங்ககால மக்கள் தொழிலில் விலங்குகளின் பயன்பாடு பற்றி விளக்குவது இவ்வியலின் நோக்கமாகும்.

## 3.1. தொழில் - விளக்கம்

மக்களின் வாழ்க்கைச் செயல்முறைகளில் ஒன்று தொழிலாகும். தொல்காப்பியர் கருப்பொருட்களில் ஒன்றாகத் தொழிலைக் குறிப்பிடுவர்.[1] சங்க இலக்கியத்தில் ‘தொழில்’[2] என்ற சொல் அறுபத்தெட்டு இடங்களில் சுட்டப்பெற்றுள்ளது. தொழில் என்பது, “மூளையையோ, உடலையோ முழுவதுமாகவோ, பகுதியாகவோ வருத்தி ஏதோ ஒன்றைப் படைப்பதற்காகச் செய்கின்ற செயலைக் குறிக்கும்”[3] என வாழ்வியற்களஞ்சியம் சுட்டுகின்றது. எனவே மக்களின் அறிவுத்திறனாலும், உடல்உழைப்பாலும் நிறைவேற்றப்படும் செயல் தொழிலாகும் என்பதை அறியஇயலும்.

## 3.2. பண்டைத் தமிழர் தொழில் பாகுபாடு

தொல்காப்பியர் காலத்திற்கு முன்பு தமிழ்நாட்டில் மக்களிடையே பலவிதப் பிரிவுகள் இருந்தன. குறிப்பாக அந்தணர், அரசர், வணிகர், வேளாளார், என்ற பிரிவுகள் இருந்தமை குறிப்பிடத்தக்கது. இவையாவும் அவர்கள் செய்யும் தொழிலினால் ஏற்பட்ட பிரிவுகளாகும். இப்பிரிவுகள் தவிர பாணர், கூத்தர், பொருநர், அடியோர், வினைவலர் போன்ற பல பிரிவுகளும் இருந்தன. இதனை, “பொதுநிலையில் பண்டைத் தமிழர் இடம்பற்றி வேட்டுவர், ஆயர், உழவர், நுளையர், எயினர் எனவும், அகவொழுக்கம் பற்றி வெற்பன், அண்ணல், மகிழ்நன், துறைவன், விடலை எனவும், தொழில் பற்றி அந்தணர், அரசர், வணிகர், வேளாளர், அடியோர், வினைவலர் எனவும் மூன்று பிரிவுகளாகப் பகுக்கப்பட்டனர். வேட்டுவர், ஆயர் எனும் நிலமக்களே அந்தணர், அரசர் முதலிய அறுவருமாவார், உலகியலுக்கு ஏற்ற வகையில் பலவகைப் பட்ட தொழில் செய்து வந்த மக்களிடையே நிகழும் பழக்கவழக்கங்களைக் கொண்டு அம்மக்களை நிலமக்கள், தலைமக்கள் எனவும், அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் எனவும், அடியோர், வினைவலர் எனவும், பெருநிலமன்னர், குறுநிலமன்னர், உழுவித்துண்ணும் வேளாளர், உழுதுண்ணும் வேளாளர் எனவும் வகுத்தும், அனைவரையும் கிளவித் தலைவர் எனத் தொகுத்தும் ஆசிரியர் தொல்காப்பியர் இலக்கணஞ் செய்துள்ளார்”[4] என்பர் பி.சி.சசிவல்லி. “உயிர் வாழ்க்கைக்கு இன்றியமையாத உழவுத் தொழில் செய்து வந்தவரை வேளாளர் எனவும், கொண்டு கொடுத்து வந்தவரை வணிகர் எனவும், நாடுகாத்துவந்தவரை அரசர் எனவும், ஒழுக்க நெறி கற்பித்து

வந்தவரை அந்தணர் எனவும் வழங்கினர்”[5] என உரைப்பர். எனவே பண்டைத் தமிழர் பாகுபாடுகளுக்குத் தொழிலே அடிப்படைக் காரணம் என்பதை உணர முடிகின்றது.

### 3.3. சங்கத் தமிழர் தொழில் முறை

சங்ககால மக்களின் தொழில்கள் நிலத்தை அடிப்படையாகக் கொண்டு அமைந்தன. அத்தொழிலை அடிப்படையாகக் கொண்டே மக்களிடம் பாகுபாடும் இருந்தது. இதனை, “வேட்டைத் தொழிலினடிப்படையில் குறிஞ்சி, கால்நடை வளர்ப்புத் தொழிலினடிப்படையில் முல்லை, உழவுத் தொழிலினடிப்படையில் மருதம், வணிகத் தொழிலினடிப்படையில் நெய்தல், பொருளீட்டல் அடிப்படையில் பாலை ஆகிய பிரிவுகள் அமைந்துள்ளன”[6] என்பர் அ.ஆறுமுகம்.

சங்கத் தமிழர் எதாவது ஒரு வகையில் ஒரு தொழிலைச் செய்து வாழ்ந்து வந்துள்ளனர். அவர்களின் தொழில்களுக்கு ஒரு சில விலங்குகளும் உறுதுணையாக அமைந்துள்ளன. வேட்டை, மேய்த்தல், உழவு, வணிகம், போர் போன்ற பல்வேறு தொழில்களைச் சங்ககால மக்கள் விலங்குகளை ஆதாரமாகக் கொண்டு செய்துள்ளனர்.

### 3.4. வேட்டைத் தொழிலில் விலங்குகள்

மனிதன் விலங்கோடு விலங்காக வாழ்ந்த காலத்தில் விலங்கைத் தாக்கி வீழ்த்தி வாழ முற்பட்ட நிலையில் வேட்டைத் தொழில் தோன்றியிருக்க இடமுண்டு. அன்று தொடங்கி இந்தத் தொழில் காலந்தோறும் வளர்ந்து தற்காலத்தில் ஒரு கலையாகப்

போற்றப்படுகின்றது. காலமாற்றத்தால் இக்கலை இன்று வீரத்தின் அடையாளமாகக் கருதப்படுவதும் சுட்டத்தக்கது. சங்க காலத்தில் ஐந்நிலமக்களும் வேட்டைத் தொழிலில் ஈடுபட்டனர். உணவு தேடுதல், பொருளீட்டல் என்ற அடிப்படைகளில் வேட்டைகள் நிகழ்ந்தன. வேட்டைத் தொழிலில் வேட்டையாடப்படும் பொருளாகவும், வேட்டையாடுவதற்கு உதவியாகவும் விலங்குகள் விளங்கியுள்ளன.

### 3.4.1. வேட்டையாட ஆராய்தல்

வேட்டைக்குச் செல்பவர் குறித்த விலங்குகளைத் தேர்ந்தெடுத்து வேட்டையாடுவர். குறவர்கள் இரவுநேரத்தில் விலங்குகளை ஆராய்ந்து தேடித் திரிந்ததை,

"தேஎ மருளு மமைய மாயினு
மிறாஅவன் சிலையர் மாதேர்பு கொட்குங்
குறவரு மருளுங் குன்றத்துப் படினே" (மலைபடு.273-275)

என்னும் அடிகள் விளக்கும். இதனைப்போலவே குறிஞ்சிநிலத் தலைவன் விலங்கின்பின் வேட்டை மேற்சென்றதை நற்றிணை விளக்கும்.[7] இதன்வழி சங்ககால மக்கள் விலங்குகளை ஆராய்ந்து வேட்டையாடியமை புலப்படும்.

### 3.4.2. வேட்டைத் தொழிலில் நாய்

தொடக்ககால மனிதன் தான் உயிர் வாழ்வதற்கும், தன் உயிரைக் காப்பதற்கும் விலங்குகளைப் பயன்படுத்தியுள்ளான். உயிர் வாழ உணவு இன்றியமையாதது. எனவே விலங்குகளை வேட்டையாடி உணவாக உட்கொண்டுள்ளான்.

வேட்டைத் தொழிலுக்கு நாய் மிகவும் பயன்பட்டுள்ளது. வேட்டையாளர்கள் நாயின் உதவியுடன் பிற விலங்குகளை வேட்டையாடினர். வடுகர் சினம் மிக்க நாய்களை வைத்திருந்ததை,

"கல்லா நீண்மொழிக் கதநாய் வடுகர்" (அகநா.107:11)

என்ற அடி விளக்கும். வேட்டுவர்கள் நாய்களுடன் பல மலைகளையும் கடந்து வேட்டைக்குச் சென்றதை,

"முருகுமுரண் கொள்ளும் தேம்பாய் கண்ணிப்

பரியல் நாயொடு பன்மலைப் படரும்

வேட்டுவற் பெறலொ டமைந்தனை" (அகநா.28:6-8)

என்று பாண்டியன் அறிவுடைநம்பி குறிப்பிடுவர். புலிக்கூட்டம் போன்ற நாய்கள் தொடர்ந்து உடன்வரக் குறிஞ்சிநிலத் தந்தை வேட்டைக்குச் சென்றதை அகநானூறு குறிப்பிடும்.[8] வேட்டையாளர்கள் வேட்டையாடும்பொழுது ஒரு குறிப்பிட்ட விலங்கைச் சுட்டிக் காட்ட நாயானது தப்பாமற் கொள்வதுண்டு.[9] ஏவப்பட்ட நாய் ஒன்று தனக்குரியது என்று மானைக் கவ்வ, வேட்டுவன் அந்நாயை விரட்டி அவ்விறைச்சியைப் பெற்றமை,[10] நாய் முயலைக் கவ்வியமை,[11] மான் திரளைத் துரத்தியமை[12] என்பன போன்ற செய்திகளும் இதனை விளக்கும். வேட்டைக்காக நாயுடன் வந்த தலைவனுடன், தலைவியின் சந்திப்பு நிகழ்ந்துள்ளது.[13] அச்சந்திப்பின்பொழுது, தன்னைச் சுற்றிக் கல்லென்னும் ஓசைப்படக் கத்தும் வேட்டைநாய்களின் குரல்களை மாற்றித் தலைவியின் பேச்சினைக் கேட்கத் தலைவன் ஏங்கினன்.[14] தலைவன் அடக்கியும் அடங்காத வேட்டைநாய்கள், தலைவியை வளைத்துக்கொண்டு மேலே வந்ததை குறிஞ்சிப்பாட்டு குறிப்பிடும்.[15]

வேட்டுவர்கள் வேட்டையின்பொழுது தம்மை விட்டுப் பிரிந்த நாயை அழைக்க ஊதுகொம்பினை ஊதித் தாம் இருக்கும் இடத்தைத் தெரியப்படுத்துவர்.[16] இவற்றால் சங்கத்தமிழர் வேட்டைத் தொழிலில் நாய் பயன்படுத்தப்பட்டமையை அறிய இயலும்.

### 3.4.2.1. வீட்டுக் காவலில் நாய்

வீட்டைக் காவல் காக்க நாய்கள் பெரிதும் உதவின. வேட்டை முடித்து வந்த எயினர், நாய்களைத் தம் வீட்டுக் காவலுக்காகச் சங்கிலியால் கட்டிவைத்தனர்.[17] இங்ஙனம் வீட்டில் காவலுக்காக வைக்கப்பட்ட நாய், தலைவியைச் சந்திக்கத் தலைவன் வருகின்றபொழுது உறங்காமல் குரைத்தலைச் செய்திருக்கின்றது.[18]

பிச்சை எடுப்பவர்கள் நாய்கள் இல்லாத வீடுகளில் சென்று நெய் கலந்த செந்நெல்சோற்று உருண்டையைப் பிச்சையாகப் பெற்று உண்டதை,

"ஆசி றெருவி னாயில் வியன்கடைச்
செந்நெ லமலை வெண்மை வெள்ளிழு
தோரிற் பிச்சை யார மாந்தி" (குறுந்.277:1-3)

என்னும் அடிகள் விளக்கும்.

கடற்கரை ஓரங்களில் சுறாமீன்கள் நீரைப் பீய்ச்சியடிப்பது இயல்பு. அந்நீர் இல்லத்தின் கண் உள்ள வாயிற்கதவுகளில் மோதியதால் வாயிலில் உள்ள நாய்கள் நடுங்கின.[19]

வீட்டில் உள்ள நாய்கள் தன்னை வளர்ப்பவர்களுடன் மிகவும் அன்பாக நடந்து கொள்ளும் என்பதை, குறிஞ்சிநில வேட்டுவன் தான்

வேட்டையாடிய முட்பன்றி இறைச்சியுடன் குடிசையில் நுழைந்தபொழுது அவ்வீட்டு நாய்கள் அவனது கால்களைப் பற்றிக் கொண்டு விளையாடியமையால் அறிந்து கொள்ள முடிகின்றது.[20] இவற்றால் வேடுவர்களின் வேட்டைத் தொழிலிலும், வீட்டுக் காவலிலும் நாய்கள் பயன்பட்டமை புலனாகும்.

### 3.4.3. விலங்குகளை வேட்டையாடும் முறை ✓

சங்ககால மக்களின் விலங்கு வேட்டையில் பல்வேறு கருவிகள் பயன்படுத்தப்பட்டன. இவ்வேட்டை முறைபற்றி, "சங்ககாலத்தில் வேட்டைத் தொழில் சிறப்பாகப் போற்றி வளர்க்கப்பெற்றுள்ளது. வேட்டைக்குச் செல்வோர் அதற்குத் தேவையான கருவிகளுடன் செல்லுதலும், காட்டில் எல்லாத் திசைகளிலும் அலைந்து வேட்டையாடுதற்குரிய விலங்குகள் உள்ள இடத்தை அறிதலும், சரியான இடமறிந்து வலை விரித்தலும், பதுங்கிய இடத்திலிருந்து விலங்கை வெளிப்படச் செய்தலும், வலையில் சிக்கியவுடன் அஞ்சாது பாய்ந்து தாக்குதலும், வேட்டைத் தொழிற் கூறுகளாகும்"[21] என்பர் சசிவல்லி.

#### 3.4.3.1. எண்கு வேட்டை

பாலைநிலச் சிறிய ஊரில் உள்ள மக்கள் எண்குவின் ஒலியினை உணர்ந்தனர். அம்பும், வில்லும் கொண்டு அதனை வேட்டையாட அலைந்தனர்.[22] எண்குவினால் ஏற்படும் தீமைகருதி அதனை வேட்டையாடியுள்ளனர்.

### 3.4.3.2. எலி வேட்டை

பாலைநில வேட்டுவச் சிறுவர்கள் ஊகம் புல்லைத் துண்டித்து அதன் நுனியில் முள்ளைச் செருகி வில்லிடை வைத்து எலியை வேட்டையாடினர்.[23] பண்டைத் தமிழர் உணவின் பொருட்டும், நெற்கதிர்களைச் சேதப்படுத்திய காரணத்திற்காகவும் எலியை வேட்டையாடியுள்ளனர்.

### 3.4.3.3. குரங்கு வேட்டை

பழுத்த பழ மரங்களை நாடிக் குரங்குகள் செல்வதுண்டு. இக்குரங்குகள் பழங்களைப் பறித்துத் தின்றது போக மீதியைச் சேதப்படுத்தும் இயல்புடையவை. பழுத்த பலாவைக் காத்துக் கொண்டிருந்த குறிஞ்சிநில வேடன் சோர்வுற்ற நேரம் பார்த்து ஆண்குரங்கு அப்பழத்தைக் கவர்ந்தது. இதனைக் கண்ணுற்ற வேடன் குரங்குகளைப் பிடிக்க மரந்தோறும் வலையை மாட்டி வைத்ததை,

“கலைகை தொட்ட கமழ்சுளைப் பெரும்பழம்
காவன் மறந்த கானவன் ஞாங்கர்க்
கடியுடை மரந்தொறும் படுவலை மாட்டும்
குன்ற நாட தகுமோ பைஞ்சுனை” (குறுந்.342:1-4)

என்ற பாடல் விளக்கும். பழம் கவர வரும் குரங்குகளை அம்பெய்தும் தாக்குவர்.[24] குரங்குகள் பலாப்பழங்களைச் சேதப்படுத்தியதன் காரணமாக அதனை வேட்டையாடியுள்ளனர். குறிஞ்சிநிலத்தில் மட்டும் குரங்குகள் வேட்டையாடப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது.

### 3.4.3.4. கேழல் வேட்டை

மக்கள் தாம் விளைவித்த தினையைப் பிற விலங்குகள் கவர்ந்து செல்லாமல் பாதுகாப்பர். அங்ஙனம் மழவர் தினைபுனத்தில் காவல் இருந்தபொழுது தின்றழிக்க வந்த கேழலை அம்பெய்து கொன்றனர்.[25] இதனைப்போன்று, அம்பெய்து கொன்ற கேழலை கானவன் எடுத்துச் சென்று தன் மனைவியிடம் கொடுக்க, அதை அவள் தன் சுற்றத்தாருக்கு அறுத்துப் பங்கிட்டுக் கொடுத்ததை நற்றிணை குறிப்பிடுகின்றது.[26]

விலங்குகளை வேட்டையாடுகின்றபொழுது அவை தன்னைக் காத்துக் கொள்ள எதிர்த்துப் போரிடும். இவ்வகையில் கேழலானது தன்னை வேட்டையாடக் கருதிய வேட்டுவனையும், நாயையும் எதிர்த்து நின்று போரிட்டுத் தன் இனத்துடன் காட்டிற்குள் சென்றதைக் கபிலர் குறிப்பிடுவர்.[27] தன் குட்டிகளைக் காக்க வேட்டையாளர்களையே எதிர்த்து நிற்கும் துணிவு பன்றிக்கு இருந்தமையை இச்செய்தி உணர்த்தும். இதனைப்போன்றே சுருக்குவார் வைத்த பொறியாலும்,[28] கல்லால் மூடப்பட்ட பொய்க்குழியாலும்[29] கேழல்களை வேட்டையாடியுள்ளனர்.

சங்ககால மக்கள் கேழலை இறைச்சிக்காகவே வேட்டையாடியுள்ளனர். இவ்வேட்டை, பெரும்பான்மை குறிஞ்சிநிலத்தில் மட்டுமே நடைபெற்றுள்ளது.

### 3.4.3.5. புலி வேட்டை

சங்க மக்கள் புலிகளை அதன் தோலுக்காகவும், பற்களைத் தாலியாகச் செய்து அணிவதற்கும் வேட்டையாடியுள்ளனர். மலைநாட்டவர் பாறைகள் செறிந்த குன்றுகளில் குகைகளைக் கண்டு அவற்றின்

வாயிலில் கற்பலகையால் கதவமைத்து உள்ளே ஆடுகளைக் கட்டுவர். புலிகள் அதனுட் புகுந்து ஆடுகளைத் தாக்கும்பொழுது வாயிற் கதவாகிய கற்பலகை விரைவாக மூடிக்கொள்ளும். இப்பொறிவழிப் புலியை வேட்டையாடியதை,

"இரும்புலி வேட்டுவன் பொறியறிந்து மாட்டிய

பெருங்கல் லடாரும் போன்மென விரும்பி" (புறநா.19:5-6)

என்ற அடிகள் விளக்கும்.

சிறுவர் மார்பில் அணியும் ஓர் அணிகலன் புலிப்பல் தாலியாகும். இத்தாலியானது வீரர்கள், புலியை வேட்டையாடி அதன் தோலைப் பெற்றதோடு தம் வீரத்தின் நினைவாக, அதன் பல்லைப் பிடுங்கித் தம் குழந்தைகளுக்குக் கழுத்தில் அணிவித்ததாகும்.[30] புலிப்பல் கோர்த்த தாலியை அணிந்த சிறுவர்களை,

"புலிப்பல் கோர்த்த புலம்புமணித் தாலி" (அகநா.7:18)

"புலிப்பற் றாலிப் புன்றலைச் சிறாஅர்" (புறநா.374:9)

என்ற பாடலடிகள் சுட்டும். மேற்சுட்டிய செய்திகளின் வழி புலி வேட்டையாடப்பட்டமையும், அதன் பற்களைச் சிறுவர்கள் தாலியாக அணிந்தமையும் புலப்படும்.

கானவர் தினைப்புனத்தில் மேயும் கேழலைப் பிடிக்க இயந்திரம் அமைத்து வைத்திருந்தனர். அந்த இயந்திரப் பொறியில் புலி சென்று சிக்கிக் கொண்டதை நற்றிணை விளக்கும்.[31]

புலியைப் பிடிக்கக் கட்டிய வலையில் குறுநரி பட்டுவிட்டதை,

"இரும்புலி கொண்மார் நிறுத்த வலையுளோர்

ஏதில் குறுநரி பட்டற்றாற்" (கலித்.65:24-25)

என்ற அடிகள் உணர்த்தும். இதனைப்போன்று, பரதவர் மீன்பிடிக்கும் பொருட்டு விரித்த வலையில் நீர்நாய் அகப்பட்டுக் கொண்டது. பரதவர் அதனையும் பிடித்தனர்.[32] இவ்வாறு ஒரு விலங்கை வேட்டையாட வேண்டி வைத்த பொறியில் மற்றொரு விலங்கு அகப்பட்டுக் கொண்ட நிலையில் அவ்விலங்குகளையும் வேட்டையாடியுள்ளனர்.

### 3.4.3.6. மான் வேட்டை

வேட்டுவச் சிறுவர்கள் நெய்தல்நிலத்தில் மரங்களின் மேலேறி நின்று மான் வேட்டையாடியதை,

"மரன்மேற் கொண்டு மான்கணந் தகைமார்
வெந்திறல் இளையவர் வேட்டெழுந் தாங்கு" (நற்.111:4-5)

என்னும் அடிகள் புலப்படுத்தும். குறிஞ்சிநிலத்தில், மான்களை வலைவிரித்துப் பிடித்தும்,[33] புதருக்குள் இருக்கும் இணைமான்களைக் கற்களை வீசி அகற்றியும்[34] வேட்டையாடியுள்ளனர். பாலைநில மறவர்கள் மானை அம்பெய்து கொன்றனர்.[35] நெய்தல்நில வேடர் வெள்ளத்தில் அகப்பட்டுக் கரையேற முடியாமல் தவித்த மானை அம்பெய்து கொன்றிருக்கின்றனர்.[36] கடமான்களை வேட்டையாட, அம்மானை நீண்ட நேரம் அலைக்கழிப்புச் செய்வர். இதனால் வேடனும், நாயும் களைப்படைந்தமையை பரணர் குறிப்பிடுவர்.[37] இத்தகைய வேட்டையின்பொழுது கடமான்கள் தப்பிச் செல்வதுமுண்டு.[38] இவற்றால் மான்வேட்டை முறை புலனாகும்.

சங்க மக்கள் மானை, அதன்தோல், இறைச்சி, கொம்பு போன்றவற்றிற்காக வேட்டையாடியுள்ளனர். மான்வேட்டைக்குத் தடையேதும்

விதிக்கப்பட்டதற்கானக் குறிப்புகள் இல்லை. ஆனால் தற்காலத்தில் மான்களை வேட்டையாடுவது தடைசெய்யப்பட்டிருப்பதும், மீறியவர்களுக்குத் தண்டனை வழங்கப்படுவதும் குறிப்பிடத்தக்கது.

### 3.4.3.7. முயல் வேட்டை

சங்ககால மக்கள் முயலை இறைச்சிக்காக மட்டும் வேட்டையாடியுள்ளனர். இது வளைகளில் வாழும் தன்மையது.[39] இம்முயல், எலியைப் பிடிக்கும் குறும்பூழ்ப் பறவையின் ஆராவாரத்திற்கும்,[40] மன்றத்தில் விளையாடும் சிறுவர்களின் ஆரவாரத்திற்கும்,[41] மக்களின் சீழ்க்கை ஒலிகேட்டும்,[42] மனிதன் ஊன்றிச் செல்லும் கைத்தடியின் ஒலிக்கும்[43] அஞ்சும் இயல்புடையது. இவ்வச்சத்தால் மனைமுன்றிலில் இருக்கும் மட்கலன்கள் உருண்டுடையுமாறு ஓடியதுமுண்டு.[44] இம்முயல்களை முல்லைநிலக் கோவலர்கள் முல்லைப் பூவைப் பறிக்கும் கோலால் அடித்தும்,[45] பாலைநில மக்கள் வேலி ஓரங்களில் வலைகளை மாட்டி வளைத்து, நாயுடன் சென்று பசிய தூறுகளையடித்து விரட்டியும்[46] வேட்டையாடியுள்ளனர்.

### 3.4.3.8. முளவுமா வேட்டை

முளவுமாவையும் சங்ககால மக்கள் வேட்டையாடியுள்ளனர். முளவுமாவைக் கொன்ற ஆடவரை,

"முளவுமாத் தொலைச்சிய முழுச்சொ லாடவர்" (புறநா.325:6)

என்று குறிப்பிடுவர் முதுகண்ணன் சாத்தனார். முழையில் எய்ப்பன்றியைப் பிடிக்க முயன்றபொழுது, அது தன் கூர்மையான முட்களால் குத்த, கானவர் அழுதமையை,

"சேயளைப் பள்ளி யெ.்.குறு முள்ளி

னெய்தெற விழுக்கிய கானவ ரழுகை" (மலைபடு.300-301)

என்ற அடிகள் விளக்கும். இம்முள்ளம் பன்றியை, இயந்திரத்தை அமைத்தும்[47] வேட்டையாடுவர். இதுவன்றி, வேட்டைக்குச் சென்ற குறிஞ்சிநிலக் குறவன், காட்டிலுள்ள மல்லிகைப் புதரில் முள்ளம்பன்றியை அம்பெய்து கொன்றதுமுண்டு.[48] புலிப்பல் கோர்த்த கழுத்தணி அணிந்த குறச்சிறுவர்களைக்கண்டு முளவுமா பயந்து ஓடியது. இதனைக் குறவர்கள் வேட்டையாடினர்.[49]

### 3.4.3.9. யானை வேட்டை

யானையைக் கோட்டின் பயன்கருதி வேட்டையாடியுள்ளனர். குறிஞ்சிநில வேட்டுவன் வெண்கடம்ப மரத்தின் பின்நின்று களிற்றின் மார்பில் அம்பைச் செலுத்திக் கொன்றனன். பிறகு அதனின்று எடுத்து வந்த வெண்கோட்டைப் புல்லால் வேய்ந்த குடிசையில் புலால் நாற்றம் வீச ஊன்றியதை,

"இரும்புவடித் தன்ன கருங்கைக் கானவன்
விரிமலர் மராஅம் பொருந்திக் கோல்தெரிந்து
வரிநுதல் யானை அருநிறத் தழுத்தி
இகலடு முன்பின் வெண்கோடு கொண்டுதன்
புல்வேய் குரம்பை புலர ஊன்றி" (அகநா.172:6-10)

என்ற அடிகள் விளக்கும். குறிஞ்சிநிலத்தில் புலியுடன் போர் செய்த யானை புண்பட்டுக் கிடந்தது. அதன் தந்தத்தை எடுக்கக் கருதிய வேடர்கள் அதன்மீது மீண்டும் அம்பெய்து துன்பப்படுத்தினர். அவ்யானை இறந்தபின் அதனின்று தந்தத்தைக் கவர்ந்தனர்.[50] வில்லிருந்து அம்பெய்து களிற்றைக் கொன்றதை நற்றிணையும் குறிப்பிடுகின்றது.[51]

விலங்குகளை வேட்டையாடும்பொழுது உயிருக்கு அஞ்சி அவை தப்பிச் செல்லும். வேட்டையாளர்கள் அவற்றின் அடிகளைத் தேடிச்செல்வர்.[52] இதன்படி அம்புபட்ட யானை தப்பியது. அது புனத்திற்கு வந்திருக்கும் என்று ஐயுற்ற தலைவன் நாயுடன் அதனைத் தேடி வந்துள்ளனன்.[53]

பாலைநில மறச்சாதியினர் தம் வில்லைக் கொண்டு வழிப் போக்கர்களைத் துன்புறுத்தியதோடு, காட்டிலுள்ள யானைகளைக் கொன்று தந்தங்களையும் கைப்பற்றினர்.[54] யானை வேட்டைக்குச் செல்வோர் தவறாது வேட்டையாடி வந்திருக்கின்றனர்.[55] குறிஞ்சியிலும், பாலையிலுமே யானைகள் அதிகமாகக் காணப்பட்டன. எனவே, யானை அதன் கோட்டின் பயன்கருதி வேட்டையாடப்பட்டுள்ளது.

சங்ககால மக்கள் எண்கு, எலி, குரங்கு, கேழல், நரி, நீர்நாய், புலி, மான், முயல், முளவுமா, யானை போன்ற விலங்குகளை வேட்டையாடியுள்ளனர். இவ்விலங்குகளைக் கைப்பற்ற நாய் உறுதுணையாக இருந்தது. வில், அம்பு, குறுந்தடி, வலை, பொய்க்குழி, இயந்திரப்பொறி, கற்பொறி, சுருக்குவார்ப்பொறி போன்ற பிற கருவிகளைக் கொண்டும் வேட்டையாடியுள்ளனர். மேற்சுட்டப்பட்ட பதினொரு விலங்குகளில் நரி, நீர்நாய், போன்றவை தவறுதலாக வலையில்

அகப்பட்டுக்கொண்டவை. இவ்விரண்டு விலங்குகளையும் மக்கள் தம் வாழ்வில் எப்பயன் கருதி வேட்டையாடினர் என்ற குறிப்பு காணப்படவில்லை. உணவுப்பொருளிற்குச் சேதம் விளைவித்தற்காகக் குரங்கை வேட்டையாடியுள்ளனர். எலி, கேழல், மான், முயல், முளவுமா போன்ற ஐந்து விலங்குகளும் உணவின் பொருட்டு வேட்டையாடப்பட்டன. புலியின் தோல், புலிப்பல், யானையின் கோடு போன்றவற்றை மக்களின் பயன்கருதி வேட்டையாடிய குறிப்புக் காணப்படுகின்றது. எண்கு மக்களுக்கு ஏற்படுத்தும் துன்பத்திற்காக வேட்டையாடப்பட்டுள்ளது. குறிஞ்சிநிலத்தில் வேட்டைத் தொழில் மிகுதியாக நடைபெற்றிருக்கின்றது.

### 3.5. மேய்த்தல் தொழில்

முல்லைநில மக்களின் முக்கியத் தொழில் விலங்குகளை மேய்த்தலாகும். பிற நிலங்களில் உள்ள மக்களும் இத்தொழிலில் ஈடுபட்டுள்ளனர். மேய்த்தல் தொழிலில் ஈடுபட்டோரை, 'புல்லினத்து ஆயர்,'[56] 'ஆடுடை இடைமகன்,'[57] 'கொல்லைக் கோவலர்,'[58] 'வன்கை இடையன்'[59] என்ற தொடர்கள் குறிப்பிடும். இவர்தம் மக்கள் 'புல்லினத்தாயர் மகன்,'[60] 'பசுவினத்து இடையன் மகள்'[61] என்றே அழைக்கப்பட்டனர். இதனை, "முதல் நிலையில் பயிர்களை விளைவிப்பது மட்டுமின்றிக் கால்நடைகளை வளர்ப்பதும் வேளாண்மைத் தொழிலின் ஒரு கூறாக இருந்தது. நாளடைவில் இது முல்லைநிலத்தார்க்குரிய தொழிலாக அமைந்தது. இவ்வாறு ஆடு, மாடுகள் மேய்த்தலைத் தொழிலாகக் கொண்ட மக்கள் ஆயர், கோவலர், இடையர் என்ற பெயரால்

அழைக்கப்பட்டனர்”[62] என்று குறிப்பிடுவர் வி.சி.சசிவல்லி. இவற்றால் முல்லைநில மக்களின் மேய்த்தல் தொழில் விளங்கும்.

### 3.5.1. ஆடு மேய்த்தல்

முல்லைநில மக்கள் ஆடுகளைக் கூட்டமாக வளர்த்து வந்தனர். பூழி நாட்டினர், ஆடுகளை நிரைகளாக வைத்திருந்தமையை நற்றிணை சுட்டும்.[63] இடையர்கள் பகலில் ஆட்டின் தொகுதியை மேய்க்கச் சென்றதை பெயர் தெரியாப் புலவர் ஒருவர் இயம்புவர்.[64] வெள்ளாட்டின் தொகுதி மேய்ச்சல் நிலங்களில் பரவி மேய்ந்ததை,

“யாரணங் குற்றனை கடலே பூழியர்
சிறுதலை வெள்ளைத் தோடுபரந் தன்ன” (குறுந்.163:1-2)

என்னும் அடிகள் விளக்கும்.

ஆட்டுத் தொகுதியில், வெள்ளாட்டுக் கிடாய்கள் பிற ஆடுகள் சூழ மேயும் தன்மை கொண்டதாய் விளங்கியது.[65] முல்லைநிலத்தில் ஆடுமேய்க்கச் செல்வோர் தீக்கடைக்கோல், தோற்பை, பனையோலை ஆகியவற்றை முதுகில் கட்டிக் கொள்வர். ஒரு கையில் உறியையும், ஒரு கையில் கோலையும் எடுத்துச் செல்வர். இவர்கள் வாயைக் குவித்து வீளையிடும் ஒலிக்கு அஞ்சி ஆட்டின் தொகுதி பிறநிலத்தில் புகாமல் அந்நிலத்திலேயே நின்று மேயும்.[66] இவற்றால் ஆடு மேய்ப்போரின் தோற்றத்தினையும், அதில் முல்லைநில மக்கள் ஈடுபட்டதையும் அறிய இயலும்.

### 3.5.2. ஆநிரை மேய்த்தல்

சங்ககால மக்கள் தாம் வளர்த்து வந்த ஆநிரைகளை மேய்ச்சல் நிலங்களுக்கு ஓட்டிச் சென்று மேய்த்து வந்தனர். சங்க காலத்தில், “ஆநிரைகளை மேய்ப்பதற்கென்று ஊரவரால் பொதுவாக விடப்பட்ட நிலம் விடுநிலம் எனப்படும்.”[67] இது வன்புலம், மென்புலம் என இருவகைப்படும். வன்புலத்துப் புல், ஆநிரைகளுக்கு மிக்க உரந்தரும் உணவாகும். இதனால் மென்புலத்து நன்செய் வயல்களை உழுத எருதுகளை, அண்மையிலுள்ள வன்புலத்து விடுநிலத்துப் புல்மேயுமாறு விட்டனர்.[68] இதனைப் போன்று, விடுநிலத்தில் மழை பெய்தலால் புட்கள் தழைத்தோங்கின. அதனைப் பசுக்கள் மேய்ந்ததை புறநானூறு சுட்டும்.[69] இவற்றால் விடுநிலம் மேய்ச்சல் தொழிலுக்குப் பயன்பட்டமை புலனாகும்.

குறிஞ்சிநில மேட்டுநிலம் பழங்கொல்லை என அழைக்கப்படும். இங்கு முதிய பசு, இளைய புல்லை மேய்ந்ததை குறுந்தொகை குறிப்பிடும்.[70] இப்புற்களை மேய்வதற்காகக் கோவலர்களும் பசுக்களை அவ்விடத்திற்கு ஓட்டிச் செல்வர்.[71]

முல்லைநிலவாழ் மக்கள், பல பசுக்களை வைத்திருந்தனர். இதனை, ‘பல்லான் கோவலர்’[72] என்ற தொடர் விளக்கும். புல் மேய்ந்த பசுவின் மடிகளில் பால் நிரம்புவதால், அவை தம் கன்றுகளுக்குப் பாலூட்டக் கருதி மன்றங்களுக்குத் தாமே செல்லும் இயல்பினது.[73] இங்ஙனம் செல்லும் பசுவின் மேல் காந்தளின் மகரந்தத் தாதுக்கள் படிந்திருப்பதால் அது தன் தாய் தானோ என ஐயம் கொண்ட கன்றைப்

பற்றி நற்றிணை குறிப்பிடுகிறது.[74] மேய்ச்சலுக்குச் சென்று வந்த பசு சிலவேளைகளில் தன் கன்றுக்குப் பால் கொடுக்க மறுத்ததும் உண்டு.[75]

ஆநிரை மேய்ப்போர் மருதநில வயல்களுக்கு ஆநிரைகளை ஓட்டிச் சென்றனர். மேய்ச்சலுக்குச் சென்ற கன்றை ஈன்ற பசு, நெற்கதிரோடு கூடிய ஆம்பல் மலரை மேய்ந்தது.[76] சேறு நிறைந்த வயலில், ஆரல்மீன்கள் உகள, பசுக்களைக் கட்டி வைத்து மேய்த்ததை அகநானூறு குறிப்பிடுகின்றது.[77] மருதநில வயல்களில் அறுவடையின்பின், ஆநிரைகளை மேயவிட்டுள்ளனர்.[78] முதிய பசு ஒன்று நெற்கதிரைத்தின்றது. இதனைக் கண்ட வயற்காவலர், அப்பசுவிற்குக் கரும்பினை வெட்டிப் போட்டு உண்பித்தனர். பின் பாகற் கொடியைப் பகன்றையின் கொடியுடன் கயிறாகத் திரித்துக் காஞ்சி மரத்திடலில் கட்டினர்.[79] மேலும், பசு கரும்புக் காட்டில் புல் மேய்ந்ததை புறநானூறு சுட்டுகின்றது.[80]

கோடைகாலத்தில் காவிரியாற்றில் தண்ணீர் வற்றியதால் புல் வளர்ந்தது. மேய்ச்சலுக்குச் சென்ற எருதுகள் அதனை மேய்ந்து வந்தன.[81] பாலைநிலத்துப் பசுக்கள், தாளியறுகினை[82] விரும்பி உண்டன.

மேய்ச்சல் நிலங்களில் பகற்பொழுதில் மழை பெய்தது. அதனால் இடையர்கள், மேய்ச்சல் நிலங்களிலிருந்து ஆநிரைகளைத் திருப்பி ஓட்டிவந்தனர்.[83] இந்நிரைகளுக்கு வைக்கோலைத் தின்பதற்காகப் போட்டனர்.[84] ஆநிரை மேய்ந்து கொண்டு இருக்கும் நிலங்களில் பிற விலங்குகளும் மேய்ந்துள்ளன.[85] இவற்றால் சங்ககால மக்கள் ஆநிரைகளை மேய்த்து வந்தமை புலப்படும்.

### 3.5.3. கன்று மேய்த்தல்

எருது, பசு போன்றவை மட்டுமன்றி அவற்றின் கன்றுகளையும் ஆயர்கள் மேய்ச்சலுக்குக் கொண்டு செல்வர். குறிஞ்சி நிலச் சிறுவர்கள் கன்றுகளை மேய்ச்சலுக்கு ஓட்டிச் சென்றதை கபிலர் குறிப்பிடுவர்.[86] சிலவேளைகளில் பலாவின் விதையை எடுத்துத் தின்பதற்காக, இக்கன்றுகளை விட்டுக் கடாக்களை மட்டும் ஓட்டிச் செல்வர்.[87] கன்றுகளை, தினைத்தாள் அரிந்த நிலத்தில் மேயவிட்டுள்ளனர்.[88]

முல்லைநிலத் தலைமக்கள், முல்லைநிலத் தோட்டங்களில் கன்றுகளை மேய்க்க ஓட்டிச் செல்வர்.[89] முல்லைநிலத்தில் வெய்யிலின் கொடுமையால் ஒருவரும் செல்ல முடியாத உச்சிக் காலத்தில் கூட கன்று மேய்ந்திருக்கின்றது.[90] பெரும்பாலும் இளங்கன்றுகளைப் பசுக்களுடன் இணைத்தே மேய்த்துள்ளனர்.[91] அரண்மனைக்கு மதிலும், அகழியும் சிறந்த பாதுகாப்பு. அவை அழிந்தொழிந்த நிலையில், அந்நிலம் கன்றுகள் மேயுமிடமாகத் திகழந்ததை புறநானூறு எடுத்துரைக்கும்.[92] இவற்றால் ஆநிரைகளும் அதன் கன்றுகளும் மேய்ச்சல் நிலத்திற்குக் கொண்டு செல்லப்பட்டு மேய்க்கப்பட்டமையை அறிய இயலும்.

### 3.5.4. ஆநிரைகள் மாலையில் வீடு திரும்புதல்

மேய்ச்சலுக்குக் கொண்டு சென்ற ஆநிரைக் கூட்டங்களைப் பாதுகாப்புக் கருதி, மாலையானதும் ஓட்டிவந்து தொழுவத்தில் அடைப்பர்.

ஆயர்கள் மாலைப்பொழுதில் ஆநிரைகளைத் தொழுவத்தில் சேர்க்க வேண்டித் தெருவில் ஓட்டி வந்ததை கிள்ளிமங்கலம் கிழார்மகனார் சோகோவனார் குறிப்பிடுவர்.[93] பிரிந்து சென்ற பசுக்கள், மாலைக்காலத்தில்

மீண்டு வருதலை அவற்றின் கன்றுகளும் எதிர்நோக்கி வருந்தியிருந்தன.[94] இவ்வாறு கன்றுகள் மாலையில் தாய்ப்பசுவை எதிர்நோக்கியிருத்தலை,

"கடுஞ்சுரை நல்லா னடுங்குதலைக் குழவி

தாய்காண் விருப்பி னன்ன" (குறுந்.132:4-5)

என்னும் அடிகள் புலப்படுத்தும்.

இல்லத்தில் உள்ள இடைச்சாதி மகளிர், மேய்ச்சலுக்குச் சென்றிருந்த பசு விரைந்துவருமென்று கன்றிடம் கூறுவர்.[95] பசுக்களும், மாலையில் கன்றை நினைத்துத் திரும்பி வந்தமை,[96] பசு ஒன்று தன் கன்றினை நினைத்து தன் மடியிலிருந்து பாலை ஒழுக விட்டு வந்தமை[97] போன்றவையும் புலவர்களால் பாடப்பட்டுள்ளன. வீட்டிலுள்ளோரும், மாலையில் அப்பசு வீட்டை நோக்கி வருகின்றதா எனக் கல்மேல் ஏறி நோக்குவர்.[98] இம்மகளிரின் எதிர்பார்ப்பிற்கேற்பவே, கோவலர்களும், இடையர்களும் பசுக்களை மாலையில் தொழுவத்திற்கு ஓட்டி வந்தனர்.[99] மாலையில் தொழுவத்தில் புகுந்த முதற்சூல் கொண்ட பசுவானது, தான் ஈன்ற கன்றுக்குப் பால் கொடுத்து விடிந்தபொழுதும் மேய்ச்சலுக்குச் செல்லாமல் அக்கன்றைச் சுற்றிச் சுற்றி வந்துகொண்டிருந்தது.[100] இவற்றால் கன்றுகளைத் தேடிப் பசுக்கள் பாசத்துடன் தொழுவத்தில் நிறைந்தமை புலப்படுகின்றது.

ஆன்கன்றுகள் மாலைக்காலத்தில் இல்லில் புகுவதை, 'கன்றுபுகு மாலை'[101] என்று கல்லாடனார் குறிப்பிடுவர். மாலைநேரம் வந்ததும் பசுக்கள் தாம் தங்கும் நெய்தல்நில மன்றங்களில் தன்கன்றுகளுடன் புகுந்தன.[102] இவற்றால் சங்ககால மக்கள் பசு, எருது, கன்று போன்றவற்றை வளர்ப்பு விலங்குகளாக மேய்த்து வந்தமையும், அவற்றைப்

பாதுகாப்புக் கருதி மாலையில் இல்லம் நோக்கி ஓட்டி வந்து தொழுவத்தில் அடைத்தமையும் புலனாகும்.

### 3.5.5. எருமை மேய்த்தல்

சங்ககாலத்தில் எருமைகளை மேய்க்கப் பழனம் என்ற ஓர் இடமிருந்தது. இதற்கு, "கழனிகளின் மருங்குள்ள ஊர்ப் பொதுநிலம்"[103] என்று பொருள் சுட்டுவர் பொ.வே.சோமசுந்தரனார். பழனத்தில் படர்ந்திருந்த பாகற்கொடி கழனிக்கதிரின் மேலும் படர்ந்திருந்தது. அந்நிலத்தில் மேய்ந்த எருமை, அக்கழனிக் கதிரொடு அதன் மேலதாக உள்ள பாகற்கொடியையும் உண்டது[104] என்பதால் ஊர்ப்பொதுநிலமாகிய பழனத்தில் எருமை மேய்ந்ததை அறிய இயலும்.

எருமைகள், 'கழுநீர் மலர்,'[105] 'மோரோடம்,'[106] 'ஆம்பல்',[107] 'பகன்றை மலர்',[108] 'தாமரை',[109] 'குவளை',[110] 'நெய்தல்'[111] போன்றவற்றை மிகவும் விரும்பி மேயும். சிலவேளைகளில், தாமரை மலரை வெறுத்ததுமுண்டு.[112]

காரெருமையின் பாலைக் கறந்து விட்டுக் கன்றுகளைக் கட்டி வைப்பர். பின், மருதநிலச் சிறுவர்கள் அவ்வெருமையின் மீதேறி மேய்ச்சலுக்கு ஓட்டிச் செல்வர்.[113] இவ்வெருமைகளை, தோட்டங்களிலும், வயல்வெளிகளிலும் மேய்த்துள்ளனர்.[114] எருமையையும், அதன் கன்றையும் உழவர்கள் வயல்வெளிகளில் மேய்ச்சலுக்குக் கட்டி வைத்தனர். அவ்வெருமைகள், கன்றினின்று அகன்று செல்லாமல் பக்கத்தில் உள்ள பசிய பயிர்களை மேய்ந்து நிற்பதை,

"இருமருப் பெருமை யீன்றணிக் காரான்

உழவன் யாத்த குழவியி னகலாது

பாஅற் பைம்பயி ராரு மூரன்" (குறுந்.181:3-5)

என்ற அடிகள் விளக்கும். சிலவேளைகளில் எருமை, கட்டியிருந்த கயிற்றை அறுத்துக் கொண்டு சென்றது. அவ்வாறு சென்ற எருமை வயலிலுள்ள நெற்கதிரைச் சேதப்படுத்தியதை,

"கருங்கோட் டெருமை கயிறுபரிந் தசைஇ

நெடுங்கதிர் நெல்லி னாண்மேய லாரும்" (ஐங்..95:1-2)

என்னும் அடிகள் உணர்த்தும்.

வயல்வெளிகளில் மேய்ந்துகொண்டிருக்கும் எருமைத் திரளில் உள்ள கடா, பறையோசை கேட்டு அஞ்சியது.[115] இவ்வெருமைகளின் கன்று, காய்ந்த செந்நெற்கதிர்களைத் தின்று, நெடுங்கூட்டின் நிழலில் தங்கியது.[116]

எருமை தின்றொழித்த பச்சை இலைகளின் கொடிகளைப் பாலைநில மகளிர் அணிகலன்களாக அணிந்தனர்.[117] நீராடிய மருதநில மகளிர், தம்அணிகலன்களை மணற்திட்டின் மேல் மறந்து விட்டுச் சென்றனர். அவை எருமையின் காலடியில் பட்டு மிதிபட்டன.[118] மருதநிலத்திலேயே எருமை மேய்த்தமை பற்றிய குறிப்புகள் மிகுதியாகக் காணப்படுகின்றன.

### 3.5.6. முந்நிரை மேய்த்தல்

ஆடு, ஆநிரை, எருமை என்பன மூன்றும் மூவினமென்றும், முந்நிரையென்றும் வழங்கப்படும். இதனை, 'மூவினமேய்த்தல்'[119] என்று நம்பியகப்பொருளும் சுட்டும். கார்காலத்தில் மழைபெய்தது. வெள்ளம்

பெருகியது. அதனால் முல்லைநிலமாகிய மேட்டுநிலத்தில் முந்நிரைகளையும் இடையர் மேயவிட்டனர்.[120] கார்காலத்தில் எங்கும் பசுமைத் தோன்றிக் காணப்பட்டதால் விலங்குகள் பசிதீர்ந்து மேய்ச்சலை மறுத்தது.[121] இவற்றால் விலங்குகள் செழிப்பான நிலப்பகுதியில் மேய்ந்தமை விளங்கும்.

சங்ககால மக்கள் முந்நிரைகளாகிய ஆடு, ஆநிரை, எருமை போன்றவற்றை வளர்ப்பு விலங்குகளாகக் கொண்டு மேய்த்து வந்தனர். இவற்றின் கன்றுகளும் நன்முறையில் பாதுகாக்கப்பட்டுள்ளன. ஐந்நிலமக்களும் மேய்த்தல் தொழிலில் ஈடுபட்டபொழுதும் ஆடும், ஆநிரையும் முல்லைநில மக்களால் பெரும்பான்மை மேய்க்கப்பட்டுள்ளன. எருமை மருதநில மக்களால் மேய்க்கப்பட்டமை குறிப்பிடத்தக்கது.

### 3.6. உழவுத்தொழிலில் விலங்குகள்

உழவுத்தொழிலே உலகில் தலைச்சிறந்த தொழிலாகக் கருதப்படுகின்றது. உலகில் உள்ள மனித உயிரினங்களின் பசிப்பிணியைப் போக்குவது உழவுத்தொழில் ஆகும். இத்தகைய உழவுத்தொழிலைச் செய்பவர் 'உழவர்'[122] எனப்பட்டனர். "உழைத்தல் என்பது இடைவிடாது முயலும் மெய்ம்முயற்சியைக் குறிக்கும் சொல்லாகும். இடைவிடாது உழைக்கும் மெய்ம்முயற்சி பயிர்த்தொழிலுக்கு வேண்டப்படுதலின் இத்தொழிலை உழவு என்ற சொல்லால் பண்டையோர் வழங்கினர் போலும்"[123] என உழைப்பிற்கு வரைவிலக்கணம் தருவர் வி.சி.சசிவல்லி.

பண்டைத் தமிழர் உழுவதற்கு எருதுகளையும், எருமைகளையும் பயன்படுத்தினர். உழுதல் என்பதே நிலத்தைப் பண்படுத்துதலாகும். “ஓர் ஏர் கொண்டு உழுதல் ஒருசால் உழவு, இரண்டு ஏர் கொண்டு உழுதல் இருசால் உழவு என்று குறிப்பிடலாம்”[124] என்பர் சு.இராசாராம். இந்நிலையில் நிலத்தை உழும்பொழுது, இரண்டு எருதுகளும் ஓடாமலும் மெல்லப் போகாமலும் ஒத்து நடக்கும்படிச் செய்து உழுவர்.

பண்டைத் தமிழர் உழவுத் தொழிலுக்கு விலங்குகளைப் பயன்படுத்தியது போலவே பிற நாடுகளிலும் பயிர்த்தொழிலுக்கு விலங்குகளைப் பயன்படுத்தி உழுதொழிலைச் சிறப்புறச் செய்ததற்கான குறிப்புகள் பல நூல்களில் இடம்பெற்றுள்ளன. “சுமேரியர்கள் நிலத்தை உழுவதற்கு எருதுகளைப் பயன்படுத்தினர்.”[125] இவர்களைப் போலவே, “பாரசீக மக்களும் எருதுகளைக் கலப்பையில் பூட்டி நிலங்களை உழுதனர்.”[126] இவற்றால் பன்னாட்டு மக்களும் விலங்குகள் வழி உழவுத் தொழில் மேற்கொண்டமை புலப்படும்.

### 3.6.1. எருதுகள் உழுதல்

சங்ககாலத்தில் உழவுத்தொழிலுக்கு எருதுகளே பெரிதும் பயன்படுத்தப்பட்டன. புலவர்கள் அரசனை வாழ்த்தும்பொழுது அவனுடைய உழவெருதுகளையும் வாழ்த்துவது மரபு. எருதுகள் மக்கள் வாழ்வில் பெற்ற பங்களிப்பே இதற்குக் காரணமாகும். குறுநில அவியனையும் அவனது உழவெருதுகளையும் மாறோக்கத்து நப்பசலையார் வாழ்த்தியமை இவ்விடத்தில் சுட்டத்தக்கது.[127]

பண்டைத் தமிழர் உழவுத் தொழிலைத் தொடங்கும் முன் அது நன்முறையில் நடைபெறவேண்டும் என வேண்டுவது வழக்கம். அந்த ஆண்டின் விளைவைக் குறித்து முதற்கண் பூட்டும் ஏரை, ‘கடியேர் பூட்டுநர்’[128] எனப் பதிற்றுப்பத்து குறிப்பிடுகின்றது. இதனை, “பொன்னேர் பூட்டுதல்”[129] என்று ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை உரைப்பர். அவ்வாறு புதிய ஏரைப் பூட்டும் உழவர் கொன்றைப் பூவைச் சூடிக் கொள்வது வழக்கம்.

வயல்களில், எருதுகள் பூட்டிய மேழியைப் பிடித்துக் கலப்பையைக் கொண்டு உழும் உழவுத்தொழிலில் நுகம் எப்பொழுதும் நடுநிலை வகிக்கும்.[130] இதனால் உழவுத்தொழில் மேற்கொள்ளும் எருதுகள் புண்பட்டுத் துன்பப்படுவது இயல்பு. எனினும், இவ்வெருதுகள் வருந்தி உழைக்கும் தன்மை கொண்டவை.[131]

சங்ககால மக்கள் அயராது வருந்தி உழைக்கும் எருதுகளையே தேர்ந்தெடுத்து உழவு செய்தனர். ஈரமுடைய நிலம் காயும் முன்னே உழுதல் நல்லது. அதற்குப் பல உழவெருதுகளில் சிறந்த எருதுகளை ஆராய்ந்து தேர்ந்தெடுத்ததை,

“ஈரச் செவ்வி யுதவின வாயினும்
பல்லெருத் துள்ளு நல்லெருது நோக்கி
வீறுவீ றாயு முழவன்” (புறநா.289:1-3)

என்ற பாடலடிகள் விளக்கும். ஆராய்ந்து தேர்ந்தெடுத்த பல ஏறுகளையுடையோர் சிறிது சோம்பியிருப்பினும், ஓரேருழவனோ விரைந்து சென்று தன் நிலத்தை உழத் தொடங்கினான் என்று குறுந்தொகை குறிப்பிடுகின்றது.[132]

உழவர் தாம் வயலில் விளைவித்த விளை பயிர்களை அறுவடை செய்து, மீண்டும் ஏர்பூட்டி உழவு செய்வர். பாலைநிலத்தோர் நெற்பயிர் நட்ட கழனியில் நெல்லை அறுவடை செய்தனர். அந்நிலத்தில் உழவர்கள் ஆராய்ந்த எருதுகளைக் கொண்டு மீண்டும் உழவு செய்தமையை அகநானூறு குறிப்பிடும்.[133]

முல்லைநிலப் பழைய கொல்லையிற் உள்ள மரங்களை வெட்டி உழுதனர். அந்நிலத்தில் பருவமறிந்து உழவர்கள் விதைக்கச் சென்றனர்.[134] சேறு கலந்த மருதநில வயல்களை உழுததோடு, புழுதி கலந்த நிலத்தையும் பலசால்பட உழுது விதைகளை விதைத்ததைக் கபிலர் குறிப்பிடுவர்.[135] நிலங்களில் உழுது களைத்த எருதுகளை இருப்பிடம் கொண்டு சேர்ப்பர்.[136]

உழவர்கள் உழவுத் தொழிலில் சிறந்த எருதுகளை வயலுக்குக் கொண்டு சென்றனர். பிடியினது வாயைப் போன்ற கலப்பையால் உடும்பினது முகம் போன்ற பெரும்கொழு மறைய அழுக்கி உழுது விதைத்தனர். பின்னர் அப்பயிர்களின் இடையே முளைத்த களைகளைக் களைக்கொட்டுக் கொண்டு களைந்ததை,

"குடிநிறை வல்சிச் செஞ்சா லுழவர்
நடைநவில் பெரும்பகடு புதவிற் பூட்டிப்
பிடிவா யன்ன மடிவாய் நாஞ்சி
லுடுப்புமுக முழுக்கொழு மூழ்க வூன்றித்
தொடுப்பெறிந் துழுத துளர்படு துடவை"(பெரும்பாண்.197-201)

என்ற அடிகள் விளக்கும். இதனால் உழவுத்தொழிலின் செய்முறையை அறியஇயலும்.

உழுது களையெடுத்துப் பாதுகாத்த பயிர், யானை நின்றால் மறைக்கும்படி விளைந்ததை,

"களிறு மாய்க்குங் கதிர்க்கழனி" (மதுரைக்.247)

என்ற அடி சுட்டும். முல்லைநிலத்தில் உழவு செய்து விதைத்த பசிய பயிரில் குட்டிகளையுடைய பெண்மானுடன் கலைமான் துள்ளித் திரிந்து மேய்ந்ததை அகநானூறு எடுத்துரைக்கும்.[137]

வேலமரங்கள் மிகுதியாகத் தோன்றும் புன்செய் நிலங்களை உழவர்கள் உழுது பயிர் செய்தனர். பல கடாக்களைப் பூட்டி உழுதநிலத்தில் கதிர்களைப் பெற்றனர்.[138] இவ்வழி உழவுத்தொழில் செய்து கதிர் விளைவித்துப் பெற்றதை,

"பல்விதை யுழவிற் சில்லே ராளர்
பனித்துறைப் பகன்றைப் பாங்குடைத் தெரியல்
கழுவுறு கலிங்கங் கடுப்பச் சூடி
இலங்குகதிர்த் திருமணி பெறூஉம்" (பதிற்.76:11-14)

என்ற அடிகளும் உணர்த்தும். இவற்றால் சங்ககால மக்கள் உழவுத்தொழிலுக்கு எருதுகளைப் பயன்படுத்தியமையும், அதன்வழி நெல்மணிகளைப் பெற்றமையும் நன்கு விளங்கும்.

### 3.6.2. எருமைகள் உழுதல்

எருமைகள் பால்கறக்கப் பயன்பட்டதைப் போன்று உழவுத்தொழில் செய்யவும் பயன்படுத்தப்பட்டன. மருதநிலத்தூரில் உழவர்கள் எருமைகளைக் கொண்டு உழவுத்தொழில் செய்ததை,

"மலைகண் டன்ன நிலைபுணர் நிவப்பின்

பெருநெற் பல்கூட் டெருமை உழவ" (நற்.60:1-2)

என்ற பாடலடிகள் விளக்கும். வாணன் என்பானது காவிரியின் வடபாலுள்ள சிறுகுடி என்னும் ஊரில் உள்ள மருதநில வயலில், எருமைக் கடாவைக் கொண்டு உழவர் உழுததை நக்கீரர் எடுத்துரைப்பர்.[139] காரேறுகள் தம்முள் சண்டையிட்டுப் பொருது சேறாக்கிய நிலத்தில் உழவர்கள் உழாமல் நாற்றுநட்டுள்ளனர்.[140]

எருமைகளை உழவுக்காக மருதநில மக்கள் மட்டும் பயன்படுத்தியுள்ளனர். பண்டைத் தமிழர் உழவுத் தொழிலுக்காக எருதுகளையும், எருமைகளையும் பயன்படுத்தியுள்ளனர். எனினும் பசுக்களை உழவுத்தொழிலில் ஈடுபடுத்தியமை பற்றிய குறிப்பு இடம்பெறவில்லை.

ஒருசில காரணங்களினால் உழவுத்தொழிலில் தொய்வு ஏற்பட்டது. பருவகாலத்தில் மழைபெய்யாமல் முல்லைநிலத்தில் எருதுகள் உழாமல் சோம்பிக் கிடந்தன.[141] போரின் காரணமாகப் பாதுகாப்புக் கருதி, அந்நாட்டுமக்கள் சுற்றத்தாருடன் வெளியேறுவர். இங்ஙனம் மக்கள் வெளியேறியதால் போர் முடிந்த பின்பும் அவ்வூரில் உழுவாரும், எருதுகளும் இல்லாததால் நிலங்கள் வளப்பமின்றிக் கிடந்தன.[142] பகைவரின் தேர் உருண்டுசென்ற வயல்கள் எருதுகளால் உழமுடியாதவைகளாக இருந்தன.[143] இவற்றால் உழவுத்தொழில் மேற்கொள்ள முடியாத சூழ்நிலை ஏற்பட்டமை புலனாகும்.

### 3.6.3. கழுதை ஏரால் உழுதல்

வெற்றி பெற்ற வேந்தன் பகைநாட்டைக் கைப்பற்றிய பின் தனது வெற்றியைக் கொண்டாடவும், பகைவர்நிலங்களைப் பாழ்படுத்தவும் கழுதை ஏர் கொண்டு உழுவர். பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி பகைவர்களின் விளைநிலங்களைக் கழுதை ஏரால் உழுது பாழ்படுத்தியதை,

"கடுந்தேர் குழித்த ஞெள்ள லாங்கண்
வெள்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டிப்
பாழ்செய் தனையவர்" (புறநா.15:1-3)

என்ற பாடல் விளக்கும்.

தம்மைப் பணிந்து திறை செலுத்தாத மன்னர்களின் மீது படையெடுத்துச் சென்ற அதியமான் பொகுட்டெழினி, பல்வேறு அரண்களைக் கடந்து சென்று அவரை வென்றனன். பின் இறந்து வீழ்ந்த வீரர்களின் உடற்குருதி தோய்ந்து ஈரம்புலராத போர்க்களத்தைக் கழுதையேர் பூட்டி உழுதனன். அந்நிலத்தில் வெள்ளை வரகும், கொள்ளும் விதைத்ததை,

"ஒருகண் மாக்கிணை யொற்றுபு கொடாஅ
உருகெழு மன்ன ராரெயில் கடந்து
நிணம்படு குருதி பெரும்பாட்டீரத்
தணங்குடை மரபி னிருங்களந் தோறும்
வெள்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டி
வெள்ளை வரகுங் கொள்ளும் வித்தும்" (புறநா.392:5-10)

என்னும் அடிகள் உணர்த்தும். இவ்வாறு பகைவர்களின் விளைநிலங்களைக் கழுதை ஏர் கொண்டு உழுதமையை பதிற்றுப்பத்தும் சுட்டும்.[144] வேளாண் தொழிலுக்கு எருதும், எருமையும் பயன்பட்டன. பகை நாட்டைச் சீர்குலைக்கக் கழுதையேர் பயன்படுத்தப்பட்டுள்ளது.

### 3.7. கடாவிடுதல்

பயிர்கள் விளைந்தபின் அவற்றை அரிந்து களத்தில் குவித்து வைப்பர். பின்னர் விலங்குகளை மிதிக்கவிட்டுப் போரடித்துத் தானியங்களைப் பெறுவர். இதற்குக் ‘கடாவிடுதல்’ என்று பெயர்.

#### 3.7.1. எருதைக் கடாவிடுதல்

சங்ககால மக்கள் உழவெருதுகளை வயலை உழுவதற்கு மட்டுமின்றி, கதிரடிக்கவும் பயன்படுத்தினர். குறவர்கள், மருதநில மாந்தர் களஞ்செப்பம் செய்தது போன்ற அகன்ற கற்பாறையில் மெல்லிய தினையைத் துவைத்துத் தாளை நெடிய போராக விட்டனர். பின் துயிலச் சென்றனர். எருது கொண்டு போரடிக்கச் செல்ல, வைகறைப்பொழுதில் குறவர்களைக் களிறு முழங்கி எழுப்பியதை,

“வேங்கைக் கண்ணியர் எருதெறி களமர்
நிலங்கண்டு அன்ன அவன்கண் பாசறை
மென்தினை நெடும்போர் புரிமார்
துஞ்சுகளிறு எடுப்புந்தம் பெருங்கல் நாட்டே” (நற்.125:9-12)

என்ற அடிகள் விளக்கும். வைகறையில் பாலைநிலத்து உழவர் நெற்தாளைக் கடாவிட்டு மிதித்துப் பிரித்தெடுத்தனர். பின் வைக்கோலைக் கருமேகம்போன்று குவித்து வைத்ததை,

"கங்குல் ஓதைக் கலிமகிழ் உழவர்

பொங்கழி முகந்த தாவில் நுண்துகள்

மங்குல் வானின் மாதிரம் மறைப்ப

வைகுபுலர் விடியல் வைபெயர்த் தாட்டித்

தொழிற்செருக் கனந்தர் வீட எழிற்றகை" (அகநா.37:1-6)

என்னும் பாடலடிகள் உணர்த்தும். எருதுகளைப் பூட்டிச் செந்நெல்லையடித்துப் பிரித்தெடுத்துள்ளனர்.[145] வயலுக்கு அருகில் மேட்டுநிலத்தேயிட்ட நெற்போரை கடாவிட்டு அடித்து மிதித்து நெல்லைத் தனியாக்கியுள்ளனர்.[146] பாலைநிலத்துப் புதுக்கொல்லையில் தளைத்த வரகின்கதிரை எருதுகளின் குளம்பால் துவைத்து உதிர்ந்த வரகுகளைப் பிரித்தெடுத்ததை அகநானூறு விளக்குகின்றது.[147]

கடாவிட்டுத் தாளினின்று பிரித்தெடுத்த வரகினை, முன்றிலிற் உள்ள குதிர்களில் போட்டு வைப்பர்.[148] அந்நெற் குவியல் மேருமலை போல காட்சியளித்ததை முடத்தாமக்கண்ணியார் குறிப்பிடுவர்.[149]

நீர்மிக்க நெற்களத்தில் போரினைப் பிரித்துப் போட்டுக் கடாவிட்டு மிதிக்கச் செய்தனர். கள்ளுண்டு வந்த உழவர் கடாவை அவிழ்த்துவிட்டு நெல்லைத் தூற்றும்பொழுது, அதில் வெளிப்பட்ட துரும்புகள் அருகில் உள்ள பாத்தியின் வெள்ளுப்பின் மீது படிந்தது. அதனைக் கண்ட நுளையர்கள் உழவரொடு மாறுபட்டுக் கைகலந்தனர். இதனைப் பார்த்த மருதநிலத்து முதிய மக்கள் அவர்களை விலக்கி விட்டு நுளையர்களுக்குக் கள் கொடுத்துச் சமாதானப்படுத்தியை அகநானூறு குறிப்பிடுகின்றது.[150]

### 3.7.2. எருமையைக் கடாவிடுதல்

சங்கத் தமிழர் எருதுகளைப் போல எருமைகளையும் கதிரடிக்கப் பயன்படுத்தியுள்ளனர். ஆம்பலையும், நெய்தலையும் நெல்லுடன் சேர்த்து அறுத்து, உழவர் மகளிர் நெற்கட்டினைக் களத்தில் கொண்டு சேர்த்தனர். பின் எருமைக்கடாக்களைக் கொண்டு மிதித்து உதிர்த்து, மெல்லிய செந்நெல் குவியலில் மரக்கால்களை அளத்தற்காகச் செருகி வைத்ததை,

"அறாஅ யாண ரகன்கட் செறுவின்
அருவி யாம்ப னெய்தலொ டரிந்து
செறுவினை மகளிர் மலிந்த வெக்கைப்
பரூஉப்பக டுதிர்த்த மென்செந் நெல்லின்
அம்பண வளவை யுறைகுவித் தாங்கு" (பதிற்.71:1-5)

என்ற அடிகள் விளக்கும்.

சங்ககால மக்கள் நெல், தினை, வரகு போன்றவற்றைக் கதிரிலிருந்து பிரித்தெடுக்க ஆநிரை, எருமை போன்றவற்றைப் பயன்படுத்தியுள்ளனர்.

## 3.8. வணிகத் தொழிலில் விலங்குகள்

சங்ககால மக்களின் வணிகத் தொழிலுக்கு விலங்குகள் பெரிதும் பயன்பட்டன. பண்டங்களை ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குக் கொண்டு செல்ல விலங்குகள் உதவின.

### 3.8.1. உப்பு வண்டியில் எருதுகள்

நெய்தல்நிலத்து வணிகர்கள் உப்பு விற்கச் செல்ல எருதுபூட்டிய வண்டிகளைப் பயன்படுத்தியுள்ளனர். உப்புகளை வண்டியில் ஏற்றி, அவ்வண்டியை எருதுகளைப்பூட்டித் துறைகளிலிருந்து இழுத்துச்சென்றதை முடங்கிக்கிடந்தநெடுஞ்சேரலாதன் குறிப்பிடுவர்.[151] வெண்மையான கல்லுப்பை ஏற்றியவண்டி, மணலில் மடுத்து நின்றது. அவ்வாறு நின்ற எருதுகளை வேகப்படுத்த நெய்தல்நிலத்து வணிகர் ஒலி எழுப்பினர்.[152] சிலவேளைகளில் இவ்வண்டிகள் சேற்றில் புதைந்து நின்றுள்ளன.[153] அதனால் இளைய எருதுகள் துன்பப்பட்டன.[154]

வெயிற்காலத்தில் கல்லாக விளைந்த உப்புகளை ஏற்றிக்கொண்டு பல வண்டிகள் சென்றன. உப்பு வணிகர் அவற்றை ஒன்றிணைத்துச் செல்ல எருதுகளை உரப்பி ஓட்டும் ஒலி பேரொலியாகக் கேட்டது.[155] இவ்உப்புவண்டிகளை, மணற்குன்றின்மீது நின்ற நெய்தல்நில மகளிர் எணணியுள்ளனர்.[156]

பாலைநிலத்து உப்புவணிகர் நீரற்ற காட்டின்வழிக் கடாக்கள் பூட்டிய வண்டியில் உப்பு ஏற்றிக் கொண்டு சென்றனர். காட்டுவழியில் அவ்வெருதுகளை உரப்பி ஓட்டும்ஒலி மலையில் எதிரொலித்தது.[157] சிலவேளைகளில் வண்டிகளில் பூட்டப்பட்ட எருகளின் மணியோசையும், வண்டிஓட்டுபவரின் சீழ்க்கை ஒலியும் சேர்ந்து புதியவருக்குப் பாதுகாவலைத் தந்தது.[158]

பல உப்புவண்டிகள் ஒன்றன் பின் ஒன்றாகச் செல்வது வழக்கம். இங்ஙனம் உப்பு வணிகர் ஊர்கள் தோறும் சென்றதை,

"முடலை யாக்கை முழுவலி மாக்கள்

சிறுதுளைக் கொடுநுக நெறிபட நிரைத்த

பெருங்கயிற் றொழுகை மருங்கிற் காப்பச்

சில்பத வுணவின் கொள்ளை சாற்றிப்

பல்லெருத் துமணர் பதிபோகு நெடுநெறி" (பெரும்பாண்.61-65)

என்ற அடிகள் விளக்கும்.

சங்ககால மகளிர் வேற்றூருக்கு உப்பு விற்கச் சென்றுள்ளனர். நெய்தல்நிலத்துப் பரதவ மகளிர், எருது பூட்டிய வண்டியில் உப்பு விற்கச் செல்லும்பொழுது, அவர்களின் குரலைக் கேட்ட நாய் வேற்றுக் குரலாய் இருப்பதைக் கண்டு குரைத்தது இதனை விளக்கும்.[159]

உப்பு வணிகர் நீண்டதொலைவு பயணம் மேற்கொள்ளுவர். அப்பொழுது வண்டியில் பூட்டிய எருதுகள் ஓய்வெடுக்க வழியில் நிறுத்துவர். இங்ஙனம் உப்புவணிகர் எருதுகள் இளைப்பாற வேண்டி வண்டியில் இருந்து அவிழ்த்து விட்டதை அகநானூறு இருபாடல்களில் குறிப்பிடும்.[160] பாலைநிலத்தில் காற்று, புழுதியெழுப்பிச் சுழன்று வீசியது. அதனால் உப்புவணிகர் எருதுகளுடன் சுரநெறியில் தங்கிச் சென்றுள்ளனர்.[161]

குறிஞ்சிநிலத்தின் வழியாக உப்புவண்டிகள் வரிசையாகச் சென்றுகொண்டிருந்தன. அப்பொழுது பெய்த மழையால் அவ்வண்டியில் இருந்த உப்புகள் கரைந்ததை குறுந்தொகை குறிப்பிடுகின்றது.[162]

சங்கத் தமிழர் பண்டமாற்று முறையில் நெல்லைக் கொடுத்து உப்பைப் பெற்றனர். மருதநிலத்து உப்பு வணிகர் தமது நிலத்தில் விளைந்த நெல்லை வண்டிகளில் ஏற்றிச் சென்று கொடுத்து

நெய்தல்நிலத்து உப்பைப் பெற்று வந்து அதனைத் தம் நாட்டில் விற்றனர். இதனை,

"தம்நாட்டு விளைந்த வெண்ணெல் தந்து
பிறநாட்டு உப்பின் கொள்ளை சாற்றி
நெடுநெறி ஒழுகை நிலவுமணல் நீந்தி
அவணுறை முனிந்த ஒக்கலொடு புலம்பெயர்ந்து
உமணர் போகலும் இன்னா தாகும்" (நற்.183:1-5)

என்னும் பாடலடிகள் உணர்த்தும். இதனைப் போன்று, உப்பின் விலையைச் சொல்லி விற்று அதற்குப் பண்டமாற்றாக நெல்லைப் பெற்று வந்து படப்பையில் குதிரைகளைப் பிணைத்துக் கட்டியதைப் பட்டினப்பாலை குறிப்பிடும்.[163] இவற்றால் வணிகத்தொழிலில் குதிரை பயன்படுத்தப்பட்டுள்ளதை அறிய இயலும்.

சங்ககாலத்தில் உப்புவணிகர் நெய்தல்நிலத்தில் விளைந்த உப்பைப் பிறநிலங்களுக்கு விலங்குகள் வழிக் கொண்டு சென்று விற்பனை செய்துள்ளனர். இதற்கு ஆநிரை, குதிரை போன்றவை பயன்பட்டுள்ளன.

### 3.8.2. நெல் வண்டியில் எருதுகள்

உப்பு வணிகத்திற்கு மட்டுமன்றி நெல் மூட்டைகளை எடுத்துச் செல்வதற்கும் எருதுகள் பயன்பட்டுள்ளன. மருதநிலத்தில் விளைந்த நெல்மணிகளைக் களத்தில் இருந்து ஏற்றிச் செல்ல, நெல்அறுப்போர் கொண்டு வந்த எருதுபூட்டிய வண்டி சேற்றில் புதைந்து விடுகின்றது. அவ்வண்டி உருளையின் அடியில் கரும்புகளைப் போட்டு அகற்றியதை,

"அரிந்துகால் குவித்த செந்நெல் வினைஞர்

கட்கொண்டு மறுகுஞ் சாகா டளற்றுறின்

ஆய்கரும் படுக்கும் பாய்புனல் ஊர" (அகநா.116:2-4)

என்ற அடிகள் உணர்த்தும்.

பகடு இழுத்துச் சென்றால் மட்டும் வண்டி ஓடி விடாது. அதை ஓட்டுபவன் சிறந்தவனாகவும், வல்லவனாகவும் இருக்கவேண்டும். ஓட்டுபவன் திறம்படச் செயல்பட்டால் மட்டுமே வண்டியைச் செலுத்த முடியுமென்று தொண்டைமான்இளந்திரையன் குறிப்பிடுவர்.[164] மேலைச்செய்திகளால், சங்க மக்களின் வணிகத்திற்கு எருது பூட்டிய வண்டி பயன்பட்டமை புலனாகும்.

### 3.8.3. பொதிசுமந்த கழுதைகள்

சங்ககால மக்கள் தம் வணிகத்தொழிலில் கழுதையைப் பயன்படுத்தியுள்ளனர். ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு வணிகப் பொருட்களை எடுத்துச் செல்லக் கழுதைகள் பெரிதும் உதவியுள்ளன.

கடலில் விளைந்த உப்பினை மேற்குதிசைக்குக் கொண்டு சென்று விற்க நினைத்த வணிகர்கள், உப்புப் பொதியைக் கழுதை மீது ஏற்றிச் சென்றனர். பாலைநிலத்தில் பிறழ்ந்து கிடந்த பரற்கற்கள் நிறைந்த சுரநெறியில் கழுதை உப்புப் பொதிசுமந்து சென்றதை அகநானூறு குறிப்பிடும்.[165] பாலைநில வழியில் பண்டங்களைச் சுமந்து வந்த கழுதைகள் இளைப்பாற, அவற்றை யாமர நிழலில் அவிழ்த்துவிட்டனர். அதன் தளர்வினைப் போக்க அவ்விடத்தில் தங்கிச் சென்றுள்ளனர்.[166]

கழுதையின் மேல் உப்புப்பொதி போன்று மிளகுப் பொதிகளையும் ஏற்றிச் சென்றதை,

"அணர்ச்செவிக் கழுதைச் சாத்தொடு வழங்கு

முல்குடைப் பெருவழிக் கவலை காக்கும்" (பெரும்பாண்.80-81)

என்னும் அடிகள் விளக்கும். பாலைநிலத்தில் பொருட்களைக் கழுதை மீது ஏற்றிச் செல்லும்பொழுது அவை கள்வர்களால் களவாடப்பட்டுள்ளன.[167]

சங்ககாலத்தில் உப்பு, மிளகு, பிற பண்டங்களைச் சுமந்து செல்லக் கழுதை பயன்பட்டமை விளங்கும். பாலைநிலத்தில் மட்டும் கழுதை பொதிசுமக்கப் பயன்படுத்தப்பட்டமை குறிப்பிடத்தக்கது.

### 3.9. நிரைகவர்தலும் மீட்டலும்

போருக்கு அடிப்படைக் காரணம் நிரைகவர்தலாகும். ஒரு நாட்டின் மீது அரசர் பகை கொண்டு போரிட எண்ணினால் முதலில் அந்நாட்டிலுள்ள பசுக்கூட்டங்களைக் கவர்ந்து வருவர். அதனை மீட்க வரும் கரந்தை வீரர்களிடம் போரிட்டு வென்று, அவர்களின் நாட்டைக் கைப்பற்றுவர். எனவே போருக்கு அடித்தளமிடுவது நிரைகவர்தல் என்பது புலப்படும். இவ்வழியைப் பயன்படுத்திப் பண்டை மன்னர்கள் போரிட்டு எதிரி நாட்டுப் படைகளை வெற்றி கொண்டு அவர்தம் நாட்டைக் கைப்பற்றியுள்ளனர்.

#### 3.9.1. ஆநிரை கவர்தல்

ஆநிரைகளை மட்டும் கவர்ந்து வருவதால் இப்போர் முறைக்கு 'ஆநிரை கவர்தல்' எனப் பெயரிட்டுள்ளனர். போரைத் தொடங்கப் பரியேறிச் சென்று நிரைக் கூட்டங்களைக் கவர்ந்து வருவர். அதனால் இவர்களைக் 'கொள்ளையர்'[168] என்று குறிப்பிடுவர் மாமூலனார்.

முள்ளூர் மன்னன் மலையமான் திருமுடிக்காரி இரவுப்பொழுதில் இனநிரையைக் கவர்ந்து வந்தனன். ஆநிரைக்குரியோர் அவனோடெதிர் நின்று போரிட்டு அழிந்ததை,

"மாயிரு முள்ளூர் மன்னன் மாவூர்ந்து
எல்லித் தரீஇய இனநிரைப்
பல்லான் கிழவரின் அழிந்தவிவள் நலனே" (நற்.291:7-9)

என்ற அடிகள் விளக்கும். கல்லென்னும் ஆரவாரம் உண்டாக ஓசை எழுப்பிப் பல கறவைகளைப் பாலைநில வெட்சியர் கவர்ந்து வந்து மன்றில் அடைத்ததை அகநானூறு குறிப்பிடும்.[169]

பாலைநிலத்து மழவர்கள் இரவில் மாற்று மொழிபேசும் தேயங்களுக்குச் சென்றும் ஆநிரைகளைக் கவர்ந்து வந்துள்ளனர்.[170] இவ்வாறு சேய்மை நாட்டிற் சென்று ஆநிரைகளைக் கவர்ந்து வந்ததை, கல்லாடனாரும்,[171] மதுரைப்பேராலவாயாரும்,[172] குறிப்பிடுவர். ஆநிரை கவரும் வேளையில் தண்ணுமை ஒலிப்பர்.[173] இவர்களைப் போன்று 'அஞ்சி',[174] 'குறிஞ்சிநில உதியன்',[175] 'வடுகர் தலைவன் எருமை',[176] 'சோழன்'[177] போன்றோரும் ஆநிரையைக் கவர்ந்துள்ளனர்.

மழவர்கள் பசுவினைக் கவர்ந்தமையால் பாலைநில ஊர் பாழானது. அதனால் அங்குள்ள முதியவர்கள், அவமானத்தால் நரைத்ததலை கவிழ்ந்து ஒருபுறத்தே தங்கியிருந்தனர்.[178]

வெட்சி வீரர்கள், தாம் கவர்ந்து வந்த ஆநிரைகளைத் தம் நில மக்களுக்குப் பரிசாக வழங்கி இன்புறுவர்.[179] அவ்வாறின்றி, கள்ளுக்கு விலையாகக் கொடுப்பதுமுண்டு.[180] இவற்றால் பாலைநிலங்களில் பெரும்பான்மையான ஆநிரைகள் கவரப்பட்டுள்ளமை புலனாகும்.

### 3.9.2. நிரைகவர்தலின் நோக்கம்

பகைநாட்டினின்றும் நிரைகளைக் கவர்தலின் நோக்கம், அவற்றிற்குப் போரில் ஊனம் ஏற்படாமல் தவிர்ப்பதற்காக எனக் கூறுவாரும் உண்டு. "பகைவரது நாட்டின் மேல் படை நடத்த விழையும் வேந்தன், அறவோர், அந்தணர், மகளிர், பிணியாளர் முதலிய தீங்கு செய்யத் தகாத மக்களைப் போரால் விளையும் துன்பங்களினின்றும் விலக்கி உய்வித்தல் வேண்டியாம். போர் கருதி நும்நாட்டில் புகுகின்றோம். நீவிர் நுமக்குப் பாதுகாவலான இடங்களை நாடிச் செல்லுங்கள் என அறிவிப்பான். அவ்அறிவிப்பினைக் கேட்டு உணர்ந்து வெளிச் செல்லும் பகுத்தறிவற்றவை பசுக்கள். அவற்றைக் காக்க விரும்பியவன் ஒருவரும் அறியாதபடி நள்ளிரவில் தன்படை வீரர்களை அனுப்பிக் களவில் கவர்ந்து வரச்செய்வான்"[181] என்பர் வெள்ளைவாரணர். இதனால் பகைநாட்டு நிரைகளைக் கவர்தல் என்பது அவற்றைப் பாதுகாக்கவே என்ற கருத்துப் பெறப்படுகின்றது. ஆனால் கன்றினைப் பிரித்து நிரைகளை மட்டும் கவர்ந்து செல்வதன் உள்நோக்கம் ஏதோ காரணம் கருதியேயாகும். இக்கருத்தைப் பற்றி, "1. பசுக்களைக் காக்க நினைப்போர் நள்ளிரவில் ஒருவரும் அறியாதபடி தடுத்த கரந்தையரையும் கொன்று களவு செய்வானேன்? 2. நள்ளிரவு, களவு, கொலை இவை அறமா?. 3. காக்க வேண்டிய வீட்டு விலங்கு பசு மட்டுமா? மான், முயல், கோழி, ஆடு, எருமை ஆகியன வளாக்கப்பட்டனவே. அவற்றைக் காக்க அரசன் நினையாதது ஏன்? இவ்வினாக்கள் அளிக்கும் ஒரே விடை ஆநிரை கவர்ந்ததற்கும், காக்கப்பட வேண்டும் என்று எண்ணப்பட்டத்திற்கும்

காரணம் வேறு இருத்தல் வேண்டும்"[182] என உரைப்பர் க.ப.அறவாணன். ஆடு, எருமை, மான் போன்ற விலங்குகள் இருப்பினும் அவற்றையும் பாதுகாக்கக் கொண்டு செல்லாமல், ஆவின் கன்றைக் கதறும்படி விட்டு, ஆநிரையை மட்டும் வெட்சி வீரர்கள் கவர்ந்து செல்வது[183] நாடுபிடிக்கும் நோக்கத்தால் எனக் கருத இடமுண்டு.

### 3.9.3. நிரை மீட்டல்

வெட்சி வீரர்கள் கவர்ந்து சென்ற நிரைகளைக் கரந்தை வீரர்கள் மீட்டு வருவர். அந்நிலையில் போர் புரிவர். ஆநிரை கவர்தல், மீட்டல் தொடர்பான பாடல்களில் மழவர், மறவர் என்ற சொற்கள் இடம்பெற்றுள்ளன. இதனை, "மழவர் என்ற சொல் ஆநிரை கவரும் வீரர்களையும், மறவர் என்ற சொல் ஆநிரை மீட்கும் வீரர்களையும் குறிப்பனவாய் அமைந்துள்ளன"[184] என்பர் அ.விசுவநாதன். இதனால் வெட்சியர் என்பது மழவரையும், கரந்தையர் என்பது மறவரையும் குறிப்பதை அறிய இயலும்.

வெட்சி மழவர்களைப் போர்முனையில் வென்று கரந்தை மறவர்கள் ஆக்களை மீட்டதை,

"நுழைநுதி நெடுவேற் குறும்படை மழவர்
முனையாத் தந்து முரம்பின் வீழ்த்த
வில்லேர் வாழ்க்கை விழுத்தொடை மறவர்" (அகநா.35:4-6)

என்ற அடிகள் விளக்கும். பாலைநிலத்து மறவர்கள், போரில் வென்று ஏறுகளுடன் கூடிய ஆனினத்தை மீட்டு வந்ததை அகநானூறு குறிப்பிடும்[185]. இச்செய்தியினால் பசுக்களுடன் எருதுகளும் கவரப்பட்டமை

புலப்படும். எழினி என்னும் அதியமான்அஞ்சி, நிரை மீட்டு வந்ததை இரண்டு பாடல்கள் சுட்டுகின்றன.[186] மறவர்கள், ஆக்களை மீட்டு வரும்பொழுது, ஆநிரைகளின் கழுத்தில் மணிகட்டி ஓசைஎழுப்பியும், செவ்வழிப்பண்ணைப் பாடியும் வந்துள்ளனர்.[187] ஆநிரைகளை மீட்டு வந்தும் கோபம் தாளாத அஞ்சாமையுடைய கரந்தை வீரர்கள், வெட்சி வீரரைப் பொருதுபட்டுள்ளனர்.[188] அதனால், காட்டில் மறைந்திருந்து காவல் புரியும் பகைவர்களைக் கண்டு அவர் காவலைக் கட்டழித்தபின் நிரை மீட்க அவரிடைச் செல்வது நன்று எனச் சான்றோர் அறிவுரை கூறுவர்[189].

வடுகர் தேயத்தில் போரிட்டு ஆநிரைகளை மீட்டு வந்தமைக்காக விடியற்காலத்தில் கள்ளைப் பலியிடுவர்.[190] இவற்றைப் போன்று, ஆநிரைகளை மீட்டு வந்ததை, ஆமூர்க் கவுதமன் சாதேவனாரும்,[191] பரணரும்[192] விளக்குவர். பாலைத்திணைப் பாடல்களே ஆநிரை மீட்சியை மிகுதியாகக் கூறுகின்றன. ஆநிரைகள் பாலைநிலத்திலே மிகுதியாகக் கவரப்பட்டமை இதற்குக் காரணமாகும்.

### 3.9.4. நிரை மீட்போர் பெயரை நடுகல்லில் பொறித்தல்

நாடுபிடித்தல் பொருட்டு வெட்சிவீரர்கள் பகைநாட்டு ஆநிரைகளைக் கைப்பற்றுவதும், அவர்களை எதிர்த்துப் போரிட்டுக் கரந்தை வீரர்கள் அவ்வாநிரைகளை மீட்பதும் இயல்பு. ஆநிரைகளை மீட்கப் போரிடும் கரந்தை வீரர்கள் விழுப்புண்பட்டு இறப்பர். “வெட்சியார் ஆநிரைகளையும், அவற்றை மேய்த்துக் காத்தோம்பும் கரந்தையார் வாழும் இடங்களையும் வளைத்துக் கொண்டனர். வெட்சியார்-கரந்தையார் இடையே போர் மூண்டது. கரந்தையார் பகைஞர் தாக்குதலையும், ஆநிரைகவர்தலையும்

எதிர்பார்த்திலர். எனவே அவர்களில் பலர் அவ்விடத்தே மாண்டனர்"[193] என்பர் கா.கோவிந்தன். இவர்களின் வீரம் கருதி இவர்களின் நினைவாக அந்நாட்டோர் அவர்களுக்கு நடுகல்நட்டுச் சிறப்புச் செய்வர்.

பாலைநிலத்தில் வெட்சியாரை வென்று நிரை மீட்டு வந்த கரந்தை வீரர்களின் பெயர்களை நடுகல்லில் பொறித்து வழிபட்டதை,

"மரம்புல் லென்ற முரம்புயர் நனந்தலை
அரம்போழ் நுதிய வாளி அம்பின்
நிரம்பா நோக்கின் நிரையங் கொண்மார்
நெல்லி நீளிடை எல்லி மண்டி
நல்லமர்க் கடந்த நாணுடை மறவர்
பெயரும் பீடும் எழுதி அதர்தொறும்
பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்" (அகநா.67:9-10)

என்ற பாடல் விளக்கும். இதனைப் போன்று ஆநிரை மீட்ட கரந்தை வீரர்களுக்கு நடுகல் நடப்பட்டதை, 'வடமோதங்கிழார்',[194] 'ஆவூர் மூலங்கிழார்',[195] 'உறையூர் இளம்பொன் வாணிகனார்,'[196] 'பெயர் தெரியாப் புலவர் ஒருவர்'[197] போன்றோர் குறிப்பிடுவர். இந்நடுகல் வழிபாடுகள் அனைத்தும் நிரை மீட்டு வந்த கரந்தை வீரர்களுக்கு மட்டும் செய்யப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது. நிரை கவர்ந்து சென்ற வெட்சி வீரர்களுக்கு நடுகல் நடப்பட்டதாகக் குறிப்பு காணப்படவில்லை. கரந்தை வீரர்கள் மானங்காத்தல் பொருட்டுப் போரிட்டு இறந்ததால் அவர்களுக்கு நடுகல் நடப்பட்டிருக்கின்றது.

சங்ககாலத்தில் போருக்காக ஆநிரைகள் கவரப்பட்டுள்ளன. மீட்க வந்த கரந்தையரில் இறந்துபட்ட வீரர்களுக்கு நடுகல் நடப்பட்டுள்ளது.

போர் தொடங்கக் காரணத்தை ஏற்படுத்தவே ஆநிரைகள் கவரப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.

### 3.10. போர்த்தொழிலில் விலங்குகள்

சங்ககால மன்னர்கள் போராற்றுவதைத் தமது கடைமையாகக் கொண்டனர். இப்போரில் விலங்குகளின் பங்கு இன்றியமையாதது. மன்னரின் நால்வகைப் படையில் பெரிதும் இடம் வகித்தவை யானையும், குதிரையும் ஆகும். யானைப்படை, குதிரைப்படை, தேர்ப்படை ஆகிய மூன்று படைகளும் போரில் விலங்குகளின் பயன்பாட்டை நன்கு விளக்கும். போர்க்களத்தில் மட்டுமன்றி போர் தொடர்பான அனைத்து நிகழ்வுகளிலும் விலங்குகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

#### 3.10.1. போரில் யானையின் பங்கு

சங்ககால மன்னர் ஒவ்வொருவரும் யானைப்படை வைத்திருந்தனர். இது நால்வகைப் படையில் ஒன்றாக விளங்கியது. மற்ற படைகளை விட இவ்யானைப் படையே பெரியதாக விளங்கியது. யானைப்படை பற்றிய செய்திகளே சங்க இலக்கியத்தில் மிகுதியாகக் காணப்படுகின்றது.

##### 3.10.1.1. யானையைப் பிடித்தல்

யானைகளைப் போர்த்தொழிலில் ஈடுபடுத்த, காட்டிலிருந்து அவற்றைப் பிடித்துவருவது வழக்கம். கைப்பற்றப்பட்ட யானைகளுக்குப் பல்வேறு போர்ப்பயிற்சிகளையும் கற்றுக் கொடுப்பர். காட்டிலிருந்து யானையைப் பிடித்து வந்ததை,

"புதுக்கோள் யானையிற் பிணித்தற்றா லெம்மே" (குறுந்.129:6)

என்ற அடி விளக்கும்.

யானை பிடிக்கும் விதத்தை, யானை வரும் வழியில் ஆழ்ந்த பள்ளம் தோண்டுவர்; அதன்மேல் மெல்லிய கழிகளைப் பரப்பி மணலைக் கொட்டி நிலம்போலத் தோன்றச் செய்வர்; அதனை அறியாது வரும் யானை அப்பள்ளத்தில் வீழ்ந்து விடும்; பின்னர் பழகிய யானைகளைக் கொண்டு அதனைப் பிணித்துக் கொள்வர் எனக் காட்டு யானையைக் கைப்பற்றியதை குறுங்கோழியூர் கிழார் விளக்குவர்[198]. வேங்கடமலையில் பிடியானை வருந்த அதன் கன்றிற்குத் தொழில் பழக்க வேண்டி மன்றத்தில் கொண்டு வந்துப் பிணித்துக் கட்டியுள்ளனர்.[199] பாலைநில வேட்டுவர் பெண்யானை காட்டில் அலற அதன் கன்றைப் பிரித்துக் கொண்டனர். பின் வெண்கடம்ப மரத்தின் கிளையை வெட்டி நார் உரித்துக் கயிறாகத் திரித்து, அக்கயிற்றினால் யானைக் கன்றைக் கட்டி இழுத்துச் சென்றனர்.[200]

குழியில் விழுந்த பிடியானையைக் கண்டு களிறு பிளிறியது. அவ்வொலியைக் கேட்டு அஞ்சிய யானைக் கன்றானது ஊருக்குள் சென்று அங்குள்ள எருமையிடம் பாலுண்டது.[201] இதனால் சங்ககால மக்கள் பிற விலங்குகளுடன் யானைக் கன்றையும் வளர்த்து வந்ததை அறியஇயலும்.

பொய்க்குழியில் விழுந்த யானை, தன் கொம்பால் மண்ணை இடித்துத் தகர்த்து மேலேறித் தன்பிடியுடன் சென்றிருக்கின்றது.[202] பொய்க்குழியில் விழுந்த களிற்றினைக் காக்க, பெரிய மரத்தினைப் பிடியானை முறித்துக் குழியில் தள்ளியதை அகநானூறு குறிப்பிடும்.[203]

பாலைநிலத்தில் கிணறுவெட்டுவோர் குந்தாழியைக் கொண்டு நிலத்தைத் தோண்டினர். அவ்விடத்தில் நீர் வராமையால் தழையைக் கொண்டு மூடினர். இதனைக் கண்ட களிறு, தன் கோடு கவர வேட்டுவர் வெட்டிய குழி என்று நினைத்து ஒதுங்கிச் சென்றது.[204] காடு சூழ்ந்த நாட்டில் யானைக் கூட்டம் மிகுதியாகக் காணப்பட்டதால் அவற்றைப் பிடித்துவந்துள்ளனர்.[205] இவற்றால் போரில் பயன்படுத்துவதற்காக யானைகளைப் பொய்க்குழி வெட்டிப் பிடித்து வந்தமை புலனாகும்.

### 3.10.1.2. யானைக்குப் பயிற்சி அளித்தல்

பொய்க்குழியில் யானைகளைப் பிடித்து வந்த பிறகு அவற்றிற்கு பல்வேறு போர்ப்பயிற்சிகளை அளித்தனர்.

தமிழ்மன்னர்கள் தங்கள் யானைகளுக்குப் பயிற்சியளிக்க ஆரியர்களை அமர்த்திக் கொண்டனர். அவர்கள், தொழில் பழகாத ஆண்யானைக்குப் பயிற்சியளிக்கத் தொழில் கற்ற பெண்யானைகளைப் பயன்படுத்தினர். இதனை,

"........ ........ ......... ஆரியர்
பிடிபயின்று தரூஉம் பெருங்களிறு" (அகநா.276:9-10)

என்ற பாடலடிகளில் பரணர் விளக்குவர். வடமொழியை அடியிலே கல்லாத தமிழ் இளைஞர்களும் யானைகளைப் பயிலப்பண்ணும் வடமொழிச்சொற்களைக் கற்றுப் பயிற்சியளித்துள்ளனர். அவர்கள் பாதுகாப்புக் கருவியுடன் வடமொழியைப் பேசி யானைகளுக்குப் பயிற்சியளித்ததை,

"கவைமுட் கருவியின் வடமொழி பயிற்றி" (முல்லைப்..35)

என்ற அடி விளக்கும். அவ்வடமொழிப் பேச்சுக்கள், "அப்புது, அப்புது; ஆது, ஆது; ஐ, ஐ என்பவையாகும்"[206] எனச் சுட்டுவர் நச்சினார்க்கினியர்.

பாகர் பயிற்றுத் தந்த குறிப்பு மொழிகளை யானைகள் அறிந்துகொண்டு செயல்பட்டன.[207] காட்டாற்றின் பெரிய சுழியில் வீழ்ந்து அகப்பட்ட யானையைப் பாகர் பிடித்து வந்தனர். பின் அதன் சினம் தணியச் செய்தனர். கம்பத்தில் கட்டித்தம் ஏவற்தொழிலைச் செய்யப் பலவாறு அந்த யானையுடன் குறிப்பு மொழியில் பேச்சுகளைக் பேசி, அவற்றைப் பயிலப் பண்ணினர்.[208] இத்தகைய போர்ப் பயிற்சியை, பாண்டியன் நெடுஞ்செழியனின் யானை பயின்று வந்ததை மதுரைக் காஞ்சி விளக்கும்[209].

யானைக்கு நீர் விளையாட்டுப் பயிற்சியும் கற்றுக் கொடுத்தனர். பாகனின் உதவியால் யானை நீர் விளையாடலைக் கற்றுக் கொண்டிருந்தது. அதனால் கழார் என்னும் ஊரில் தோட்டங்களிலும், வயல்வெளிகளிலும் நீர் மேவியதை அகநானூறு குறிப்பிடும்.[210] யானைகளுக்குக் கற்றுக்கொடுக்கப்பட்ட இந்நீர்விளையாட்டுப் பயிற்சி போர்க்காலத்தில் பகைவர்களின் நீர்த்துறையைக் கலக்குவதற்குப் பெரிதும் உதவின.

போர்த்தொழில் பழகும் யானைக்குக் கப்பணப் பயிற்சி சிறப்பாக அளிக்கப்பட்டது. நெருஞ்சி முள்ளைப் போன்ற முனைப்பட இரும்பால் செய்த கருவியைக் கொண்டு வேகமாக வரும் யானையை அடக்குவர். இது, "பருக்கைக் கற்களைப் போலத் தோன்றியதால் பரல் என்றும் அழைப்பர்."[211] இக்கருவியைப் பாகர் தன் மடியில் வைத்திருப்பர்.

பயிற்சியின்பொழுது யானையின் விசையைக் காணும் பொருட்டு, அந்த யானைக்கு முன்னே ஓடிவருவர். அவ்யானை, தம்மை நெருங்கும்பொழுது தம் மடியில் வைத்திருந்த கப்பணங்களை யானையின் முன் நிலத்தில் வீசுவர். அக்கப்பணங்கள் யானைகளின் கால்களைத் துளைப்பதால் மேற் கொண்டு வாராமல் நிற்கும். யானைகளுக்குப் போர்ப்பயிற்சியாக இக்கப்பணப்பயிற்சியளித்ததை மதுரைக்காஞ்சி விளக்கியுரைக்கும்.[212]

போர்ப் பயிற்சிகளைப் பெற்ற யானைகளின் அடிச்சுவடு வட்டமாகத் தோன்றும்.[213] பல்வேறு பயிற்சிகளைக் கற்றுத் தந்த பாகர்கட்கு, யானையால் துன்பம் வர அதிலிருந்து உயிர்தப்பியதுமுண்டு.[214] பாகரால் தொழில் பழக்காத யானையின் மருப்புகள் கூரிழந்து காணப்பட்டது.[215] மேற்சுட்டியவற்றால், யானைகளுக்கு நீர்விளையாட்டு, கப்பணம் போன்ற பயிற்சிகளை அளித்துப் போருக்குத் தயார்படுத்தியுள்ளமை புலனாகும்.

### 3.10.1.3. யானை, குதிரைகளுக்கு உணவிடுதல்

போர்ப்பயிற்சியில் ஈடுபடும் யானை மற்றும் குதிரைகளுக்குப் பல்வகை உணவிடுவது வழக்கம். யானைக்கு இடும் உணவைக் 'கவளம்' என்பர். நூறுமா நிலமானாலும் அது விளைந்து கிடக்கையில் யானைகளை மேயவிடின் அது உண்ணுவதை விட மிதித்துச் சேதப்படுத்துவது அதிகமாகும். கவளமாகக் கொடுத்தால் விளைநிலம் ஒருமா அளவாயினும் குறைந்ததாயினும் பலநாட்களுக்கு அக்களிற்றுக்கு உணவாக வரும். இதனால்தான் ஆவூர் மூலங்கிழார்,

"ஒருபிடி படியுஞ் சீறிடம்
எழுகளிறு புரக்கு நாடுகிழ வோயே" (புறநா.40:10-11)

என்று சோழன்குளமுற்றத்துத்துஞ்சியகிள்ளிவளவனைப் பாராட்டுகின்றார்.

யானைக்கு, நெய்யும் பாலும் கலந்த கவளத்தைக் கொடுப்பர்.[216] இக்கவளத்தை, பாகர் அறியாமல் சூலுடைய மந்தி கவர்ந்து சென்றது.[217] பாகர் யானைக் கன்றுக்குக் கவளத்தை இட, இருப்பு முள்ளால் குத்துவர். அதனால் துன்பமுற்ற கன்று, கவளத்தைத் தன் மெய்யின் மேல் வாரியிறைத்துக் கொள்ளும்.[218] யானை, கரும்பு, நெற்கதிர், அதிமதுரத்தழை கொண்ட கவளத்தை உண்ணாமல் அவற்றைக் கொண்டு தன் நெற்றியைத் துடைத்துக் கொண்டதை முல்லைப்பாட்டு விளக்கும்.[219]

மீன் விற்றுப் பெற்ற நெல்மாவைத் தயிருடன் கலந்த உணவையும்,[220] உப்பு வாணிகரின் உப்பு விலையினாற் பெற்ற நெல்லைக் குற்றிச் சமைத்த அரிசிக் காணத்தையும்[221] குதிரைக்கு உணவாக இடுவர். போர்க் குதிரைகளுக்குப் பன்றி நெய்யால் ஆன உணவையும், உழுந்தின் சக்கையால் ஆன உணவையும் கொடுப்பர்.[222] இவற்றால் யானைகளுக்குக் கவளமாகவும், குதிரைகளுக்குக் காணமாகவும் பல்வேறு உணவு வகைகள் கொடுக்கப்பட்டிருப்பதை அறிய இயலும்.

### 3.10.1.4. யானை, குதிரைகளை அலங்கரித்தல்

யானைகளைப் போர்க்களத்திற்குக் கொண்டு செல்லும் முன் பொன்னாலாகிய நெற்றிப் பட்டத்தைச் சூட்டி அலங்கரிப்பர்.[223] அலங்கார ஆடைகளையும்,[224] துகிற்கொடியையும்[225] அணிவிப்பர். வண்ணங்களைத் தோய்த்துக் குதிரைகளை ஒப்பனை செய்வர்.[226] இவற்றால் போருக்குச் செல்லும் யானைகளையும், குதிரைகளையும் அலங்கரித்தமை புலனாகும்.

### 3.10.1.5. யானைக்குப் பூண் பூட்டுதல்

யானையின் மருப்பு, போரிடும்பொழுதும், மதிலைத் தாக்கும்பொழுதும் முறிந்து விழாமல் பாதுகாப்பாக இருக்க, அம்மருப்பில் இரும்பாலான பூண் பூட்டுவர். பெரிய கையினையுடைய யானைக்கு வளைந்து கிடக்கும் பூணைச் சேர்க்கும் பொருட்டுக் கொல்லன் இரும்பை அடித்ததைப் பெரும்பாணாற்றுப்படை விளக்கும்.[227] பெருங்கதவினைத் தாக்கும் யானையின் மருப்பிற்கு இரும்பால் பூண் செய்து பூட்டியதை,

"பெருங்கதவு பொருத யானை மருப்பின்
இரும்புசெய் தொடியி னேர வாகி" (அகநா.26:6-7)

என்ற அடிகளும் உணர்த்தும். இதனைப் போன்று, யானையின் மருப்பை அறுத்து, சீவி ஒழுங்குபடுத்திப் பூண் பூட்டியதை அகநானூறு குறிப்பிடும்.[228] இதனால் போர்க்களத்தில் யானைகளின் மருப்புகள் முறிந்து சிதையாமல் இருக்க இரும்புப் பூண் பூட்டப்பட்டமை புலனாகும்.

### 3.10.1.6. போர் அறிவித்தலில் யானையின் பங்கு

பல்வேறு பயிற்சிகளைப் பெற்ற யானைகளைப் போர்க்களத்தில் பயன்படுத்த தயார் நிலையில் வைத்திருப்பர். பண்டை மன்னர்கள் போர் தொடங்கும் முன் போர் பற்றிய அறிவிப்பை வெளியிடுவர். இவ்வறிவிப்பை வெளியிடப் புலையன் பெரிய மலை போன்ற யானையின் மீது ஏறிச் சென்றதைக் கபிலர் உரைப்பர்.[229] போர்ப் பறை ஒலித்துக் கொண்டு முன்னே செல்லக் களிற்றுப் படை பெருமிதத்தோடு அதன்பின் நடந்து சென்றது.[230] போர்ப் பறைகளை யானைகள் மட்டும் சுமந்து சென்றமை குறிப்பிடத்தக்கது.

போருக்குச் செல்லும் வீரர்கட்குப் போர்ப்பூ (காஞ்சிப்பூ) வழங்குவது மன்னனின் வழக்கம். இப்போர்ப்பூவைப் பெற்றுச் செல்லுமாறு வள்ளுவன் தண்ணுமையை யானை மீதிருந்து முழக்கினன்.[231] இங்ஙனம் தன்நாட்டில் தன்வீரர்கட்கு அறிவிப்புக் கொடுத்ததோடு மட்டுமின்றி பகைநாட்டிலும் யானையின் மீதிருந்து முரசறைந்து போர்தொடங்கும் செய்தியை அறிவித்ததை,

"ஆவு மானியற் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்
தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும்
பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்
எம்மம்பு கடிவிடுது நும்மரண் சேர்மினென" (புறநா.9:1-5)

என்னும் பாடல் விளக்கும்.

### 3.10.1.7. பகைவரின் நீர்த்துறையை அழித்தல்

போர் பற்றிய அறிவிப்பைப் போர்ப்பறை வழிக் கேட்டறிந்த யானைப் படையினர் தமது படையினைப் பகைநாட்டில் விரைந்து செலுத்துவர். படையெடுத்துச் சென்ற வேந்தன் பகைநாட்டினைத் துன்புறுத்தும் வகையில் அவர்களின் அடிப்படைத் தேவைகளில் ஒன்றான நீர்நிலைகளை யானைப்படை கொண்டு கெடுப்பர். இந்நிகழ்ச்சியே போரின் தொடக்க நிலையாகும். முதலில் பகைநாட்டின் நீர்நிலைகளில் உள்ள நீரை வெளியேற்றுவர். இந்நீரை வெளியேற்ற யானைப் படையைப் பயன்படுத்துவர். பகைவர்களின் காவற்பொய்கைகளில் களிறு சென்று நீரைக் கலக்கி வெளியேற்றியதை புறநானூறு எடுத்துரைக்கின்றது.[232]

போரெடுத்துச் சென்ற பல்யானைச்செல்கெழுகுட்டுவன், தன் யானைப்படைகளைப் பகைவர் நாட்டுக் காவல்மரத்தில் கட்டி, அவர்களின் நீர்த்துறையைச் சேறாக்கிக் கலக்கியதைக் காப்பியாற்றுக் காப்பியனார் குறிப்பிடுவர்.[233] படையெடுத்துச் சென்ற பாண்டியன்பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி பகைவருடைய நீர்க்கயங்களில் களிறுகளை நீராட்டிக் கலக்கியதை,

"துளங்கியலாற் பணையெருத்திற்
பாவடியாற் செறனோக்கின்
ஒளிறு மருப்பிற் களிறவர
காப்புடைய கயம்படியினை
அன்ன சீற்றத் தனையை யாகலின்" (புறநா.15:7-11)

என்ற அடிகள் விளக்கும். சிறிதளவே நீருள்ள நீர்நிலைகளில் களிறை விட்டுக் கலக்கியதால், அவ்வூர்ப் பொய்கை சேறாகியது.[234] இங்ஙனம் மருதநிலத்தூரில் நீராடும் குளத்தில் களிறுகள் ஒன்றுடன்ஒன்று பொருது நீரைக் கலங்கச் செய்ததை பரணரும் விளக்குவர்.[235] இவற்றால் பகைவரின் நீர்நிலைகளைக் களிற்றுப்படை சென்று கலங்கச் செய்தமை புலனாகும். இச்செயல் படையெடுத்துச் சென்ற வேந்தன் பகைநாட்டோரை அடிபணியச் செய்ய மேற்கொண்டவையாகும்.

### 3.10.1.8. போரில் யானைப்படை

படைகொண்டு சென்ற மன்னன் பகைவர்களின் அடிப்படைத் தேவைகளைக் கெடுத்தபின், போர்க்களத்தில் நேருக்குநேர் போரிட

ஆயத்தமாவர். பயிற்சி பெற்ற யானைகளைப் போர்க்களத்திற்குக் கொண்டு செல்வர். அவை மற்ற படைகளுடன் விரைந்து போரிடும்.

களிறு, மா, தேர், மறவர் என்னும் நான்கன் தொகுதியே படை என அழைக்கப்படுவதை,

"படுமணி மருங்கின் பணைத்தாள் யானையும்
கொடிநுடங்கு மிசைய தேரு மாவும்
படையமை மறவரொடு துவன்றிக் கல்லெனக்
கடல்கண் டன்ன கண்ணகன் றானை" (புறநா.351:1-4)

என்ற அடிகள் விளக்கும்.

### 3.10.1.9. யானைகள், வீரர்களை வீழ்த்துதல்

படை எடுத்துச் செல்லும் வேந்தன் போர்க்களத்திற்குத் தன்நாட்டுக் கொடியை யானைமேல் ஏந்திச் செல்வது வழக்கம். சோழன்குளமுற்றத்துத்துஞ்சியகிள்ளிவளவன், பலநிறமுடைய உயரமான கொடிகளை இளங்களிற்றின் மேல் ஏற்றிப் போர்க்களத்திற்குச் சென்றதைப் புறநானூறு சுட்டுகின்றது.[236]

வேந்தர் தாம் கொண்டு சென்ற களிற்றுப் படையை, ஏனைய படைகளுக்கு நடுவே நிற்கும்படி நெறி உண்டாக நிறுத்துவர்.[237] நெடுநகரில் மணற் பரந்த போர்க்களத்தில் யானைகளும் குதிரைகளும் சீற்றத்துடன் நிற்கும். இங்ஙனம் பகையரசர்களின் நிலத்திற் சென்று பாசறை அமைத்துப் போரிடத் தருணம் பார்த்து வருவர். பின், போருக்கு அறிகுறியான முரசொலி கேட்டவுடன் விரைந்து சென்று முதலில் பகைவர்களின் யானைப்படையுடன் போரிடுவர்.[238] இருதரப்புப்

படைவீரர்களும் அதிரப் பொருதுகொண்டிருக்கும் போர்க்களத்தில் யானைகளை முன்னே விட்டு வழி ஏற்படுத்துவர். அவ்விடைவெளியின் வழியே புதிய வீரர்களை உட்புகுத்துவர். படையின் நடுப்பகுதிக்குச் சென்றவுடன் திடுமெனப் பகைவீரர்களைத் தாக்கிக் கொன்று வெற்றி கொள்வர்.[239] உட்புகுத்திய யானைகளைப் பரப்பிப் போரிடுவதுமுண்டு.[240]

வீரர்கள் வேலாலும், வாளாலும் போர்செய்யக் களிறுகள் எதிர்த்துப் போரிடும்.[241] அவ்வீரர்களின் தலையைத் தன்கோட்டால் குத்தித் தூக்கிச் செல்லும்.[242] இதனால் யானைகளின் கோடுகளில் பூணப்பட்ட இரும்புப் பூண் சிதைவது இயல்பு.[243] மேற்கண்ட செய்திகள் யானைப்படையின் பேராற்றலை நன்கு வெளிப்படுத்தும்.

### 3.10.1.10. வீரர்கள், யானைகளை வீழ்த்துதல்

போர்க்களத்தில் வீரர்கள் களிற்றுப்படையைச் சேதப்படுத்தி வெற்றி காண்பதுமுண்டு. சங்ககாலத்தில், பகைவர்களின் களிற்றைக் கொல்வதே காளையர்க்குக் கடமையாக இருந்தது.[244] வேல் கொண்டு யானையை எறிவதில் பயிற்சி பெற்ற வீரர்கள் மிகுந்த வேட்கைகொண்டிருந்தனர். யானை சேய்மையில் வந்தால் வேற்படையும், அண்மையில் காணின் வாட்படையும் கொண்டு போரிட வேண்டும் என்ற போர் நுணுக்கத்தைக் கற்றிருந்தனர்.[245] இதன்படி, வீரன் ஒருவன் வேலை எறிய அது யானையின் முகத்தில் தப்பாமல் பாய்ந்தது.[246]

வீரர்கள், களிறுகளைத் தன் வாளால் வெட்டும்பொழுது அதன் நுனி முறிந்து வடுப்படுவதியல்பு.[247] வீரன் ஒருவன் யானையை வெட்டுகின்றபொழுது, வாள்கோணலாக அதனை வீழ்ந்த யானையின்

மருப்பில் தொடுத்து நேர் செய்து கொண்டு போர்செய்தனன்.[248] போர்க்களத்தில், களிறு கோட்டால் குத்தினாலும் புறங்கொடுத்து ஓடாமல் எதிர்த்து நின்று போர் புரிவர்.[249] அப்போர்க்களத்தில் வீரர்கள் தன் வாளால் யானையின் பூண் பூணப்பட்ட துதிக்கையை ஒரே வெட்டில் வீழ்த்துவர்.[250] இங்ஙனம் வெட்டப்பட்ட யானையின் துதிக்கை பனைமரம்போலக் கிடந்தது.[251] அதனால் போர்வீரன் வேலால் எறியும்பொழுது, அக்களிறு பிடியானை நாண அஞ்சியோடியது.[252] வீரர்கள் போர்க்களத்தில் கொன்ற யானைகளை எண்ணின் அவை மழைத் துளியினும் பலவாகும்.[253] இவற்றால் போர்க்களத்தில் வீரர்களால் தாக்கப்பட்ட யானைகள் இறந்துபட்டு வீழ்ந்தமை புலனாகும்.

### 3.10.1.11. வீரரும், யானையும் இறந்துபடுதல்

நீண்டநேரம் போரிடும்பொழுது யானையும், வீரனும் ஒருங்கே இறந்துபடுவது இயல்பு. அவ்வகையில், போரில் களிற்றைக் கொன்று தானும் இறந்தான் என்ற செய்தியைக் கேட்ட தாய், அவனை ஈன்றபொழுது உண்டான உவகையை விட அதிகமாக மகிழ்ந்தனள்.[254] இதனைப் போன்று, ஒரு பெண்ணின் தந்தை போரில் யானையைக் கொன்றும், அவளது கணவன் பகைவர்நிரைகவராமல் காத்துப்போரிட்டும் இருவரும் ஒருங்கே இறந்துள்ளனர் என்பதைப் புறநானூறு எடுத்துரைக்கும்.[255] பகைவர்களின் படைக்கு நடுவில் சென்று பெரிய யானையைப் போர்க்களத்தில் வெட்டிக் கொன்றதால் ஏற்பட்ட புண்ணினால் இறந்த தலைவருமுண்டு.[256] இவற்றால் யானையும், வீரரும் ஒருசேர இறந்துபட்டமை விளங்கும். இக்கருத்துகளைப் போன்று, யானைப்படை

வீரர்களைக் கொல்லுதலும்,[257] வீரர்கள் யானைப்படையைக் கொல்லுதலும்,[258] இருதரப்பும் ஒருசேர வீழ்வதும்[259] பற்பல பாடல்களில் குறிப்பிடப்படுகின்றன. இவையன்றி, 'கடற்பிறக்கோட்டிய சேரன் செங்குட்டுவன்',[260] 'சோழன் கரிகாற் பெருவளத்தான்',[261] 'ஆடுகோட்பாட்டுச்சேரலாதன்',[262] 'திதியன்',[263] 'கிள்ளி',[264] 'அதியமான்',[265] 'கோப்பெருஞ்சோழன்',[266] 'நன்னன்',[267] 'களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல்',[268] 'தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன்'[269] போன்றோரும் போர்புரிவதற்குச் சிறந்த யானைப்படைகளை வைத்திருந்தமை குறிப்பிடத்தக்கது.

பண்டை மன்னர்கள் ஒவ்வொருவரும் தமக்கென்று காவல் மரம் வளர்த்தனர். இது கடிமரம் என்று அழைக்கப்பட்டது. "கடிமரம் சில அரசரால் தலைநகரில் மட்டும் தனிமரமாகவும், சிலரால் ஊர்தோறும் தனிமரமாகவும், சிலரால் சோலைதோறும் தனிமரமாகவும் வளர்க்கப்பட்டதாகத் தெரிகின்றது"[270] என்பர் ஞா.தேவநேயன். "பகைமன்னர்களின் காவல்மரத்தைத் தடிவது ஒரு வீர நிகழ்ச்சி"[271] என்றும், "காவல் மரத்தை அழிப்பது வெற்றி பெற்றதற்குச் சான்றாகும்"[272] என்றும் குறிப்பிடுவர். போரில் வெற்றிகொள்ளும் மன்னன், பகைநாட்டு மன்னர்களின் காவல்மரத்தில் யானைகளைப் பிணித்துக் கட்டுவது[273] அவர்களை இழிவுபடுத்துவது போன்றதாகும்.

### 3.10.1.12. யானையின்மேல் வெற்றிக்கொடி எடுத்தல்

வெற்றி கொண்ட வீரர்கள் போரிட்டு வென்றபின் மலைபோலும் யானையின் மேல் வானளாவ வெற்றிக்கொடி எடுத்து வருவர்.[274]

இவ்வீரர்கள் களிற்றின் மேல் பேருவகையோடு திரும்பிவருதலை, இல்லில் உள்ளோர் கண்டு மகிழ்வர்.[275] யானையின்மேற் போர்க்களத்திற்குச் சென்ற சில வீரர்கள் அவ்யானையின் மீதே திரும்பிவந்தமை சுட்டத்தக்கது.

### 3.10.1.13. போருக்குச் சென்ற யானைப்படை போரிடாமை

பல்வேறு பயிற்சி பெற்ற யானைப்படை போர்முகம் நோக்கிச் சென்றது. பார்ப்பனர் இரவில் பகைவேந்தரிடம் தூது சென்று போரை நிறுத்தியதால், அப்பெருங்களிற்றுப்படைகள் கலைந்து தத்தம் இடம் சேர்ந்தமை பற்றிப் புறநானூறு குறிப்பிடுகின்றது.[276] இவற்றால் போர்க்களத்தில் யானைப்படைகளின் செயல்பாடும், மன்னர்களுக்கு உதவியாக, அவை பல்வேறு நிலைகளில் போரிடப் பயன்பட்டமையும் நன்கு விளங்கும்.

### 3.10.1.14. மதில் அழிக்கும் யானைப்படை

ஒருநாட்டிற்கு அரணாக விளங்குவது மலை. அதைப்போல மன்னன் அரண்மனைக்கு அரணாக விளங்குவது மதில். மன்னர்கள் பகைநாட்டு மதிலை அழிக்க யானைப்படையைப் பயன்படுத்தினர்.

ஒரு அரசனுக்குத் துணையாகப் போரிட வந்த துணைஅரசர்கள் அவனைக் கைவிட்டனர். அதனால் யானைப்படையுடன் வந்த பகைவேந்தன் மதிற்புறத்தில் தங்கினன்.[277] இதனைப்போன்று, தனக்கு வந்த துன்பத்தைப் போக்குவாரைக் காணாமல் கலக்கமுற்று அரசன் வருந்தினன். அவ்வரசனுக்கு உறுதுணையாக யானைப்படை உள்ளே செல்ல முடியாதவாறு மதில் மிகக் காவலாக இருந்தமையும் சுட்டத்தக்கது.[278]

போர்த்தொழில் பயின்ற யானைகளின் படைவெள்ளம், மதிலின் வாயிலில் உள்ள கணைய மரத்தை முறித்தது.[279] இதனால் யானையின் கொம்பில் பூணப்பட்ட பூண்பிளந்து நுனி மழுங்கியதே ஒழிய தந்தம் முறியவில்லை.[280] அவ்வாறின்றிச் சிலவேளைகளில் கதவின் வலிமையால் யானையின் மருப்பு முறிந்து பாதியாகக் காட்சியளித்தது.[281]

சினந்தெழுந்த யானைப்படைகள், எதிரிகளின் வாயிற்கதவைத் தகர்க்கும்பொழுது பாகர் குத்துக்கோலால் குத்தியும் அடங்காது சென்று மதிலை அழித்தன.[282] இதனால் அதியமானின் யானைப்படை செல்லக் கண்ட பகைவேந்தர்கள், தத்தம் மதில் வாயில்கட்குப் பழைய கதவுகளைப் போக்கிப் புதிய கதவுகளும், கணைய மரங்களும் அமைத்தனர்.[283] பகைவர்களின் மதிலை இடித்துத் தள்ளியும் அடங்காமல் களிறு நின்ற போர்க்களம் ஒரு விழாவினைக் கொண்டாடும் இடமாகக் காட்சியளித்ததைப் புறநானூறு சுட்டும்.[284]

யானைகள் தாக்காமல் இருப்பதற்காக, மதிற்சுவரில் கூர்மையான வேல்களைப் பதிப்பர். அவ்வாறு வேலால் அழகுப்படுத்தப்பட்ட காவலையுடைய எயிலைக் களிற்றுப்படை சென்றுகுத்தியது.[285] மிக்க காவலையுடைய மதிலை யானைப்படை சென்று அழித்தமையை பிற புலவர்களும் சுட்டியுள்ளனர்.[286] இவற்றால் போருக்குச் சென்ற யானைப்படை மதிலை அழித்துச் சேதப்படுத்தி வெற்றி கொண்டமை புலப்படும்.

### 3.10.1.15. போரில் மதம்பிடித்த யானை

போர்க்களத்தில் யானைகளுக்கு மதம்பிடிப்பதுண்டு. அவ்வேளையில் அதனைக் கட்டுப்படுத்துவதென்பது இயலாத ஒன்று. வேழத்திற்கு

மதம்பிடித்ததால் அதனை அடக்க வந்த தோட்டியையும், பாகனையும் விலக்கிச் சென்றது.[287] மதம்பிடித்து நினைவிழந்து சுழன்று திரிந்த யானையை, பாகன் பரிக்கோலால் குத்தினன். அவ்வாறு குத்தியும் அடங்காது யானை சென்றது.[288]

மதம்பிடித்த களிறுகளுக்கு அதன் மதம் தணியப் பிடியானையுடன் சேர்ப்பது இயல்பு. அங்ஙனம் பிடிகளைப் புணர்ந்தும் மதம் தணியாது போர் வேட்கை கொண்டு களிறுகள் திரிந்தன.[289] சோழன் கருவூரை முற்றுகையிடுகையில், அவன் ஊர்ந்து சென்ற களிறு மதம்பட்டது. அதனைக் காணும் பகைவர், அதனை அடக்க முயலாது சினம் மிகுவித்து, அதற்கும் ஊர்ந்து வரும் சோழனுக்கும் தீங்கு விளைவித்தனர்.[290] இவ்வாறு மதம்பிடித்து ஊறுவிளைவித்த யானையை, யாழிசை வாசித்தும்,[291] பரிக்கோலால் குத்தியும்[292] அடக்கியுள்ளனர். எனினும் சிலவேளைகளில் பாகரையும், பரிக்கோற்காரரையும் யானை கொன்றிருக்கின்றது.[293]

தாம் பராமரித்துப் பாதுகாத்து வந்த யானையைப் போர்க்களத்தில் இழந்தமைக்காகப் பாகர் வருத்தமடைந்தனர்.[294] போர்க்களத்தில் யானைகளுக்கு மதம்பிடித்தாலும் அதனைத் திறமையாக அடக்கக் கூடிய பாகர்களும் இருந்தமை குறிப்பிடத்தக்கது.

### 3.10.2. போரில் குதிரைப்படை

போரில் குதிரைப்படையின் பங்கு இன்றியமையாதது. போரிடுவதற்குச் சிறந்த குதிரைகளைத் தேர்ந்தெடுப்பர். அவ்வகையில்,

தன் தமையனைக் கொன்றவனைக் கொல்ல ஒருவன் சிறந்த குதிரைகளை ஆராய்ந்து தேர்ந்தெடுத்தமையை அரிசில்கிழார் குறிப்பிடுவர்.[295]

குதிரை ஏறுபவர் காலில் பரிவடிம்பு அணிவர். "பரிவடிம்பு என்பது குதிரையில் ஏறிச்செல்பவர் அதனை விரையச் செலுத்தற் பொருட்டுக் காலில் அணியும் இரும்பு. இது வடிம்பு போன்று இருந்ததால் பரிவடிம்பெனப்பட்டது"[296] என்பர் ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை. இதனைக் காலில் அணிவதால் தழும்பு ஏற்பட்டுள்ளது. இப்பரிவடிம்புக் காலணியைச் சோழன் செருப்பாழியெறிந்த இளஞ்சேட் சென்னி அணிந்திருந்தமையை புறநானூறு குறிப்பிடும்.[297] .

பகைவரது குதிரைப்படை, தம்மெல்லைக்குட்புகாதவாறு வழியில் முள் வேலியிடுதல் மரபாகும். இம்முள்ளிடும் மரபினை,

"இனநன்மாச் செலக்கண்டவர்
கவை முள்ளிற் புழையடைப்பவும்" (புறநா.98:7-8)

என்ற அடிகள் உணர்த்தும். குட்டுவனைப் பகைத்துப் போரிடுவார் இன்மையின், அவன் நாட்டெல்லைப் புறத்தை முள்ளிட்டு அடைக்கவும் இல்லை.[298] இதற்குக் குட்டுவன் சிறந்த குதிரைப்படையை வைத்திருந்தமையே காரணமாகும்.

போர்க்களத்திற்குச் சென்ற குதிரைகள் விரைந்து சென்று போராற்றும். இவ்வாறு விரைந்து செல்லும் காட்சியானது நிலமும், குதிரையின் குளம்பும் பின்னிடுவதைப் போல இருக்கும்.[299] போர்க்களத்தில், குதிரைத்திரள் புழுதி எழுந்து ஆகாயத்தில் உள்ள சூரியனை மறைக்கும் அளவிற்குப் பகைவர் மேற்செல்லும்.[300] இங்ஙனம் பகைவர் நாட்டை, குதிரைப்படைகள் துகள் எழுப்பப் போரிட்டதை மாங்குடிமருதனார்

விளக்குவர்.[301] போராற்றும் குதிரைப்படைகள், காற்றைப் போலவும்,[302] வளைத்து விடப்பட்ட மூங்கில் விரைந்து மேனோக்கி எழுவது போலவும்[303] விரைந்து சென்று போரிட்டதை பதிற்றுப்பத்தும், புறநானூறும் எடுத்துரைக்கும்.

வாகைப் பறந்தலை என்னும் போர்க்களத்தின்கண், சிறந்த குதிரைப்படையுடன் போரிடும் கரிகாற்பெருவளத்தானின் போர்த் திறமையைக்கண்டு, ஒன்பது மன்னர்களும் ஒன்பது குடைகளைப் போர்க்களத்திற் போட்டுச் சென்றனர்.[304] இதன்வழி அம்மன்னனின் குதிரைப்படையின் சிறப்பு வெளிப்படும். இதனைப் போன்று, போரில் வெற்றி பெற்றுச் சினம் தீர்ந்த கடியநெடுவேட்டுவனின் விரைந்து செல்லும் குதிரைக்கு அஞ்சி, அவனைப் புகலிடமாகக் கொண்டவர் பிழைப்பர். இல்லையேல் போரில் மடிதல் உறுதி எனப் பெருந்தலைச்சாத்தனார் குறிப்பிடுவதும் இவ்விடத்தில் சுட்டத்தக்கது.[305]

பகைவர்களின் வீரம்கெட எதிர்த்துப் பொருத குதிரைகள், போர்க்களத்தில் இறந்து வீழ்ந்த வீரர்களின் பிணங்களை மிதித்துக் கொண்டு சென்றது. அதனால் அவற்றின் குளம்புகளில் குருதிக்கறை படிந்து காணப்பட்டது.[306] இத்தகைய போர்க்களத்தில் வென்று குதிரையேறிவரும் தலைவனின் அழகைப் பார்க்க இல்லில் உள்ளோர் மிகவும் விருப்பமுடையவர்களாக இருந்தனர்.[307] போருக்குச்சென்ற தலைவன், திரும்பி வராத நிலையில், எல்லோருடைய குதிரைகளும் போருக்குச் சென்று திரும்பி வந்துவிட்டன. ஆனால் என்கொழுநன் ஊர்ந்து சென்ற குதிரை வாராததாயிற்று. அவனைச் சுமந்து சென்ற குதிரை

போர்க்களத்தில் இறந்துபட்டு வீழ்ந்துவிட்டதோ? என்று தலைவி வருந்தியதுமுண்டு.[308]

சங்கத் தமிழர் குதிரைப் படையைக் கடல் வழியாகச் செலுத்திப் போரிட்டதை,

“காலுளைக் கடும்பிசி ருடைய வாலுளைக்
கடும்பரிப் புரவி யூர்ந்தநின்
படுந்திரைப் பனிக்கட லுழந்த தாளே” (பதிற்.41:25-27)

என்ற அடிகள் விளக்கும்.

சங்ககால மக்கள் போராற்றுவதற்குச் சிறந்த குதிரைகளைத் தேர்ந்தெடுத்துள்ளனர். அதன்வழி விரைந்து சென்று போரிட்டுள்ளனர். கடற்போரில் குதிரைப்படை பயன்படுத்தப்பட்டமை குறிப்பிடத்தக்கது.

### 3.10.3. போரில் தேர்ப்படை

யானை, குதிரை போன்றவை தனிப்படைகளாக இருந்ததோடு மட்டுமின்றித் தேரில் பூட்டப்பட்டுத் தேர்ப்படையாகவும் விளங்கியது. சோழன் ஆர்க்காடு என்னும் பதியில் களிறுகள் பூட்டப்பட்ட தேர் இயங்குவதற்கென்று தனித்தெருக்கள் இருந்தன என்னும் செய்தி இதனை விளக்கும்.[309]

போர்க்களத்திற்குக் களிறுகள் பூட்டப்பட்ட தேரில் கொடிகளைக் கட்டிச் செல்வது வழக்கம்.[310] களிறு பூட்டிய நெடிய தேரில் கட்டிய இக்கொடிகள் முகிற்கூட்டத்தின்முன் கொக்குப் பறப்பது போன்று தோன்றியது.[311] மோகூர் மன்னன் பழையனைக் குட்டுவன் தாக்கிய போர்க்களத்தில், கொடியசைய வருந்தேர்கள் தாம் செல்லும் நெறியறிந்து

சுழன்று சென்றதைப் பதிற்றுப்பத்து குறிப்பிடுகின்றது.[312] இதனைப்போன்று, நம்பிநெடுஞ்செழியனும் விரைந்த செலவினையுடைய குதிரையை விரைந்து செலுத்தி, நெடிய வீதியின்கண் தேரைச் சூழ இயக்கியிருக்கின்றனன்.[313]

ஒரு நாட்டில் போர் நடந்தால் அந்நாட்டு மன்னன் மட்டுமன்றி மக்களும் பாதிக்கப்பெறுவர். பகைமன்னர் தேர், யானை, குதிரைப்படைகளுடன் போர்செய்யும்பொழுது, போர்க்களத்திற்கு அருகில் உள்ள ஊர்மக்கள் உறங்காமல் சில நாட்கள் மட்டுமே உறங்கியிருப்பதைக் காணமுடிகின்றது.[314]

வீரர்கள் போர்தொடங்கும் முன் நான்குவகைப்படைகளையும் வெற்றி கொள்வதாகச் சூளுரைப்பர்.[315] இந்நான்குவகைப் படைகளும் 'முதற்றே'[316] போரிடவேண்டும் என்று குறிப்பிடுவர். குட்டுவன் நான்குவகைப் படைகளுடன் போரிட்டனன்.[317] முப்படைகளைச் செலுத்துவதன்வழி செல்வக்கடுங்கோவாழியாதனின் கைகள் வலிமையுடையனவாக இருந்தன.[318] பெருஞ்சேரலிரும்பொறையின் தேர்ப்படை வலிமையை, புதிதாகப் போரிடச் செல்பவரிடம் சான்றோர் எடுத்துக் கூறுவர்.[319] ஆடுகள் பரந்து செல்வது போன்று குதிரைகளும், ஆக்கள் பரந்து மேய்வதைப்போல யானைகளும் போரிடும் தன்மையைப் பதிற்றுப்பத்து விளக்கும்[320].

அரசர்கள் குதிரையின் மீதிருந்தும், யானையின் கழுத்திலிருந்தும் போரிடுவர்[321]. இப்போர்க்களத்தில், புலி, மானின் கழுத்தைக் கவ்வுவது போன்று குதிரைகள் எதிரியின் தலையைத் தகர்த்தது.[322] குதிரை பூண்ட தேரையுடைய பாண்டியன் நெடுஞ்செழியன் போரில் எழுவரை வென்றனன்.[323] போர்க்களத்தில் பகை மன்னரிடமிருந்து தேர்ப் படையைக்

கைப்பற்றிக் கொள்வதுமுண்டு.[324] சோழன் கரிகால்பெருவளத்தான் மீண்டும் நாடுபிடிக்கும் கொள்கையில் தேர்ப்படையுடன் பகைவர் நாட்டிற்குச் சென்று போரிட்டனன்.[325] தேரில் பூட்டிப் போரிட்டு இறந்த யானையின் தசையைப் பருந்தினம் இரையாகக் கொண்டது.[326] போரில் தேர்ப்படையும், மறவரும் ஒருசேர மடிந்தனர்.[327] மன்னன், விழுப்புண்பட்ட தேர்ப்படையை நினைத்துப் பாசறையில் வேதனைப்பட்டனன்.[328] போர்க்களத்தில், வீரர்களைப் பாதுகாக்க தேர்ப்படை பயன்பட்டுள்ளது.[329] வேள்பாரியின் பறம்புமலையை முற்றுகையிட மூவேந்தர் தேர்ப்படையை நிறுத்தி வைத்தனர்.[330]

'சோழமன்னன்,'[331] 'சேரன்செங்குட்டுவன்,'[332] 'சேரமான்மாந்தரஞ் சேரலிரும்பொறை',[333] 'அதியமான்நெடுமான்அஞ்சி',[334] 'சோழன்ராசசூயவேட்ட பெருநற்கிள்ளி,'[335] 'பாண்டியன்நெடுஞ்செழியன்'[336] போன்ற பல்வேறு மன்னர்களும் சிறந்த தேர்ப்படை வைத்திருந்தனர். இதனால் சங்கத் தமிழரின் தேர்ப்படை வளம் புலப்படும்.

### 3.10.4. விலங்குகளைத் திறையாகக் கொடுத்தல்

பெருவேந்தர்கள் போரிட வருகின்றபொழுது அவர்களைத் எதிர்த்துப் போரிட முடியாத சிற்றரசர்களும், குறுநிலமன்னர்களும், தோல்வியுற்றபகை அரசர்களும் விலங்குகளைத் திறையாகச் செலுத்துவர். "போரில் ஈடுபட்டு இழப்பு ஏற்படுவதை விரும்பாதவர்கள் விலங்கு மற்றும் அருங்கலங்களைத் தந்து பகையைக் குறைத்துக் கொள்வர். இவ்வாறு பெறப்படுவது திறை எனப்படும்"[337] என்று உரைப்பர் அ.ஆறுமுகம். அருங்கலங்கள் மட்டுமன்றி விலங்குகளையும் திறையாகச் செலுத்தியமை குறிப்பிடத்தக்கது.

பாண்டிய அரசர்களுக்கு வடதிசைக்கண் வெள்ளிய கோட்டினையுடைய யானைகளை வேங்கடமலைப் பக்கத்திலுள்ள அரசர்கள் திறையாகச் செலுத்தியதை,

"வேங்கடம் பயந்த வெண்கோட் டியானை
மறப்போர் பாண்டியர் அறத்திற் காக்கும்
கொற்கையம் பெருந்துறை முத்தின் அன்ன" (அகநா.27:7-9)

என்ற அடிகள் விளக்கும். போர்க்களம் புகுந்த அரசனுக்குப் பகைவர்கள் அணிகலன்களையும், களிற்றையும் திறையாகக் கொடுத்தனர். பின் வணங்கிப் பணிமொழி கூறிச் சென்றனர். இதனால் அரசன் சேனையுடன் தன் இருப்பிடத்திற்குத் திரும்பியதை,

"நன்கலங் களிற்றொடு நண்ணார் ஏந்தி
வந்துதிறை கொடுத்து வணங்கினர் வழிமொழி
சென்றீ கென்ப வாயின் வேந்தனும்
நிலம் வருத் துறாஅ ஈண்டிய தானையொடு
இன்றே புகுதல் வாய்வது நன்றே" (அகநா.124:1-5)

என்ற அடிகள் உணர்த்தும். இதனைப் போன்று, பகைவேந்தர் சேரமான் சிக்கற்பள்ளித்துஞ்சிய செல்வக்கடுங்கோவாழியாதனுக்கு யானைகளைத் திறை செலுத்தியதைப் புறநானூறு குறிப்பிடும்.[338]

தலைவன் பகைநாட்டு அரசர்களை வென்று, அவர்கள் கொடுத்த திறையைப் பெற்றுக் கொண்டு குதிரைகள் பூட்டப்பட்ட தேரில் வந்ததை கலித்தொகை குறிப்பிடுகின்றது.[339]

கழுவுள் என்பவன் ஆயர் தலைவன். பிற வேந்தருடன் பெரும்பகை கொண்டிருந்தனன். கழுவுள், குட்டுவனால் அடைமதிற்பட்டுக் கிடப்ப,

அவன் கீழ் வாழ்ந்த இடையர்கள் வேறுபுகல் காணாது தம்முடைய ஆநிரைகளைத் தாமே கொணர்ந்து தந்து அருள் வேண்டி நின்றனர்.[340] இதனால் ஆநிரைகளும் திறையாகக் கொடுக்கப்பட்டதை உணர முடிகின்றது.

பகையரசர்கள் தம் நாட்டிலிருந்து யானைகளையும், குதிரைகளையும், பசுத்திரள்களையும் கலங்கள் வழித் திறையாகப் பாண்டியனுக்கு அனுப்பி வைத்ததை மதுரைக் காஞ்சி குறிப்பிடும்.[341] இவற்றால் யானை, குதிரை, ஆநிரை போன்ற விலங்குகளைப் பகையரசருக்குத் திறையாகக் கொடுத்துள்ளதை உணர முடியும்.

### 3.11. விலங்குகளைப் பராமரித்தல்

சங்ககால மக்கள் விலங்குகளைத் தமக்கு உதவும் பொருட்டு வளர்த்து வந்தனர்.தொழிலுக்குப் பயன்படுத்திய விலங்குகளைப் பராமரித்துப் பாதுகாத்தும் வந்தனர்.

#### 3.11.1. ஆநிரை பராமரிப்பு

விலங்குப் பராமரிப்பில் முதல்நிலை பெறுவது ஆநிரையாகும். ஆநிரைகளைக் காத்தோம்பும் ஆயர்களை, 'அறவை நெஞ்சத்தாயர்'[342] என்பர். ஆநிரைகளைப் பாதுகாக்கத் தொழுவம் அமைத்தனர். அத்தொழுவம் முற்றிலும் 'தொடரி' என்னும் முள்மரத்தால் சூழப்பட்டிருந்ததை,

"புல்லார் வியன்புலம் போகி முள்ளுடுத்
தெழுகா டோங்கிய தொழுவுடை வரைப்பிற்" (பெரும்பாண்.184-185)

என்ற அடிகள் விளக்கும். இம்முள்மரம், "விடத்தர், விடத்தேர், விடத்தேரை என வழங்கப்பட்டது."[343]

தொழுவத்தில் சிறிய குளங்கள் வெட்டப்பட்டிருந்தன. எருதிற்கு வைக்கோலிடும் பல சாலைகளும் அமைக்கப்பட்டிருந்தன.[344] அங்கு தாமணி தொடுத்த நெடிய தாம்புகள் கட்டின குறியமுளைகள் நடப்பட்டிருந்தன.[345] வேனிற்காலத்தில் ஆநிரைகளைப் பாதுகாக்க இத்தொழுவம் மிகவும் உதவின.[346] முள்ளால் அடைக்கப்பட்ட தொழுவத்தில் ஆநிரைகளைக் கொணர்ந்து அடைத்தனர். இடி முழங்கும் பாதியிரவில் பலபசுக்கள் கட்டிய தொழுவத்தில் ஒரு ஆனேறு செல்ல அதன் கழுத்தில் கட்டப்பட்டிருந்த ஒற்றை மணி ஒலித்தது.[347] பல பசுத்திரளையுடைய தொழுவத்தில் பாம்பு புகுந்தாற்போல் எருது நுழைந்தது.[348] இதனால் பசுக்களோடு எருதுகளையும் காவல் புரிந்தமை புலப்படும்.[349] ஆநிரைகளின் நெரிசலில் அத்தொழுவம் சேறாகியது. அதனால் ஆநிரைகள் படுக்க இயலாமல் மேலே தூக்கிக் கட்டப்பட்டிருந்தன.[350]

தொழுவத்தில் கட்டப்பட்ட எருது கயிற்றை அறுத்துச் சென்றதை குறுந்தொகை விளக்கும்.[351] வறுமையுற்ற வீட்டிலும் ஆக்களைப் பராமரித்து வந்துள்ளனர்.[352] இரவில் தொழுவத்தில் பசுவைக் காவல் காத்துக்கொண்டிருந்த ஊமையர்கள் பசு கிணற்றில் விழுந்ததைக் கண்டு அதனை வெளிப்படுத்திச் சொல்லமுடியாமல் வருந்தியிருக்கின்றனர். இதனை,

"......... ......... .......... கூவற்

குராலான் படுதுய ரிராவிற் கண்ட

உயர்திணை யூமன் போலத்

துயர்பொறுக் கல்லேன்" (குறுந்.224:3-6)

என்ற அடிகள் உணர்த்தும். இவற்றால் தம்வாழ்வில் பெருமளவு உதவும் ஆநிரைகளை மக்கள் பாதுகாத்தமை புலப்படும்.

**3.11.2. கன்று பராமரிப்பு**

மேய்த்தலுக்குத் தாய்பசுவைக் கொண்டு செல்லும் கோவலர்கள் தொழுவத்தில் கன்றுகளைப் பாதுகாப்புக் கருதிக் கட்டுவர்.[353] சிலவேளைகளில் தாய்ப்பசுவும் அருகில் கட்டப்பட்டிருக்கும். இதனால் அத்தாய்ப்பசு, மரத்தில் கட்டப்பட்டிருக்கும் தன் கன்றினை விரைந்து அடிக்கடி பார்ப்பதுண்டு.[354] அவ்வேளையில் தன்கன்றை நெருங்குபவர்களைப் புனிற்றா கோபங்கொண்டு சென்று மோதும் இயல்புடையது.[355] இவற்றால் ஆயர் கன்றினைப் பாதுகாத்தமை புலப்படும்.

**3.11.3. மேய்ச்சல் நிலத்தில் தங்குதல்**

ஆயர் இடம்விட்டு இடம் சென்று ஆநிரை மேய்க்கும் தன்மையினர். ஆயர்கள் மாலைநேரங்களில் ஆநிரைக் கூட்டங்களை இல்லத்திற்கு ஓட்டி வராமல் நீண்டதொலைவு காரணமாகவும், வழியில் ஏற்படும் அச்சம் காரணமாகவும், கானகத்தில் தங்குவர். கன்றுகளையுடைய ஆநிரைக்கூட்டங்களுடன் இடையர், கானகத்தில் தங்கியதை பெரும்பாணாற்றுப்படை விளக்குகின்றது.[356] இதனை, "ஆயர் வாழ்க்கை மேற்கொள்ளும் நாடோடிகள் கால்நடை வளர்த்தலையே முதன்மைத் தொழிலாகக் கொண்டுள்ளனர். வாழுமிடங்களைச் சுற்றியுள்ள பகுதிகளில்

ஆண்டு முழுவதும் கால்நடைகளை வளர்க்க வேண்டிய நிலை இவர்களுக்கு உள்ளதால் பருவகாலங்களுக்கு ஏற்பவோ சீரான இடைவெளி கொண்டோ இடம்விட்டு இடம்பெயர்ந்து மேய்க்கின்றனர்"[357] என்பர் சீ.பக்தவத்சல பாரதி. இதனால் இவர்கள் காடுகளில் இரவில் தங்க வேண்டியது இன்றிமையாததாகும்.

### 3.11.4. பிறநிலையில் ஆநிரை பராமரிப்பு

பாலைநெறியில் வழுக்கி விழுந்த ஏறு முடம்பட்டுத் தன்னந்தனியாகக் கிடந்தது. அவ்வெருதைக் கண்ட சிறுவர்கள் இருப்பை மரத்தின் பூவைத்தன் வில்லினால் உதிர்த்து அதனைத் தின்ன வரும் மரைமானைத் துரத்தி எருதை உண்பித்தனர்.[358] முடம்பட்ட எருதை உப்புவாணிகர் வேறு வழியின்றி சுரத்தில் கைவிட்டுச் சென்றதைப் புறநானூறு குறிப்பிடுகின்றது.[359]

நல்ல எருதின் முன்புள்ள நடையின் சிறப்பு நீங்கியதால், அதனை உழவர் தொழில் செய்யப் பயன்படுத்தாமல் புல்லையுடைய தோட்டத்திற்குக் கொண்டு சென்று கட்டியதை நற்றிணை விளக்கும்.[360] எருதின் முதுமை கருதியும், துன்பம் கருதியும் அதனைத் தொழில் செய்வதிலிருந்து விடுவித்துள்ளனர்.

தொழுவத்தில் கட்டாமல் மன்றத்திலும் ஆநிரைகள் உலாவித் திரிந்தன. அவை கண்டாரைக் கொல்லும் சினம்மிக்கவையாக இருந்தன.[361] இங்ஙனம் தெருவில் நின்ற கன்றை ஈன்ற பசு பாணன்மீது பாய்ந்ததால் அவன் கலக்கமுற்றனன்.[362] மேலைச் செய்திகளின்வழி ஆநிரைகளையும் அதன் கன்றுகளையும் பாதுகாத்தமை புலப்படும்.

### 3.11.5. எருமைப் பராமரிப்பு

சங்ககால மக்கள் ஆநிரைகளைப் பாதுகாத்தது போன்று எருமைகளையும் பாதுகாத்தனர். எருமையின் கன்றுகளைத் தூண்களில் வரிசையாகக் கட்டிப் பராமரித்தனர்.[363] இல்லில் கட்டப்பட்டிருந்த எருமை மழையால் சேறாகிய இடத்தில் நிற்பதை வெறுத்து 'ஐ' எனக் கூச்சலிட்டு நடு இரவில் அச்சத்தை ஏற்படுத்தியது.[364] எருமையைக் காலையில் உழுத தன் தொழிலின் வருத்தம் நீங்க, நீர்நிரம்பிய பொய்கையில் விடுவர். அதன் அயர்வு நீங்கிய பின்னர் நீண்ட கிளைகளையுடைய இருள்நிரம்பிய மருதமரத்தின் நிழலின்கண் கட்டுவர்.[365] சிலவேளைகளில் தொழுவத்தில் கட்டிப் பாதுகாக்கப்பட்ட எருமைகள் விடுபட்டுத் தெருவில் நடந்து சென்றது. அதன் கழுத்தில் கட்டப்பட்ட மணியானது ஒலித்து உறங்குவோரது துயிலை எழுப்பித் துன்புறுத்தியிருக்கின்றது.[366]

தொழுவத்தில் எருமைகளுடன் அதன் கன்றுகளையும் பாதுகாத்தனர்.[367] சங்ககால மக்களின் தொழிலுக்குப் பயன்படுத்தப்பட்ட எருமைகள், தொழுவத்தில் தன் கன்றுகளுடன் பராமரிக்கப்பட்டமை, அக்கால மக்களின் விலங்குப் பராமரிப்பு முறையை நன்கு விளக்கும்.

### 3.11.6. ஆடு பராமரிப்பு

மேய்ச்சலுக்குச் சென்ற ஆடுகளை மாலைநேரத்தில் ஓட்டிவந்து தொழுவத்தில் அடைத்தனர். ஆடுகள் தம் கழுத்தில் கட்டப்பட்ட மணி ஒலிக்க மேய்ச்சல் தொழிலை விட்டுப் பாதுகாப்பு வேண்டித் தொழுவத்தில் புகுந்ததை நற்றிணை குறிப்பிடும்.[368] ஆடுகளை அடைக்கும் தொழுவத்தில் பந்தல் அமைப்பது இயல்பு. அங்கு வெள்ளாட்டின் புழுக்கைகள் பரவிக்

கிடந்தன. அப்பந்தரின் கீழ் இடையன் சிறிய சுடரையுடைய விளக்கைக் கொழுத்தி ஆடுகளைப் பாதுகாத்தனன்.[369] இச்செய்தியால் ஆடுகளுக்கெனத் தனியாகத் தொழுவம் அமைக்கப்பட்டமை புலனாகும்.

ஆடுகளை மேய்க்கப் புலிவழங்கும் காடுகளைக் கடந்து சென்ற ஆயர்கள் மேய்ச்சல்நிலங்களில் தங்கியிருந்தனர்.[370] மேய்ச்சல்நிலங்களில் இடையர், நடுஇரவில் ஆட்டுக்குட்டிகளை ஒருசேரத் தொகுத்து வைப்பர். ஓலைப்பாயை முதுகில் கொண்டு தீயில் அகங்கை காய்ந்திட மிக்க இரவில் குறுநரிகளை ஓட்ட ஒலிஎழுப்புவர்.[371] மழை பெய்யும் பாதியிரவில் செம்மறியாட்டினைப் பாதுகாவல் செய்யும் இடையன் கடைக்கோலில் தீமூட்டி எரியச் செய்தனன். உறியும் தோற்படுக்கையும் கொண்டு மழையில் நனைந்து நின்று சீழ்க்கை ஒலியை எழுப்பினன். அவ்வொலியைக் கேட்டு ஆட்டுக்குட்டியைக் கவரப் பார்த்திருக்கும் குள்ளநரி அஞ்சி ஓடியது.[372] இதனால் ஆட்டுமந்தைகளை இரவில் நரிகளிடமிருந்து காத்தமை விளங்கும்.

மக்கள், உழவுத்தொழிலில் பயன்படுத்தும் எருதுகளைப் பசுக்களோடு சேராமல் தனித்துக் கட்டினர். அவ்விடத்தில் ஆட்டுக்கிடாய்களையும் கட்டிப் பாதுகாத்துள்ளனர்.[373] இங்ஙனம் சங்கத் தமிழர் தாம் வளர்த்து வந்த ஆடுகளைத் தொழுவத்திலும், மேய்ச்சல்நிலங்களிலும் மிக்க பாதுகாப்புக் கொடுத்துப் பராமரித்து வந்தமை தெளிவாகும்.

### 3.11.7. யானைப் பராமரிப்பு

மக்களின் பல்வேறு பயன்பாட்டிற்கு உதவிய யானைகளையும் மக்கள் பாதுகாத்துள்ளனர். செல்வம் மிக்கவர் தம் வீட்டில் வளர்த்த

யானைகளைக் கயிற்றால் கட்டிப் பாதுகாத்தனர். அக்கயிறுகளைப் பொன்னால் அழகு செய்தனர்.[374] கயிற்றை எதிரெதிரே நின்ற களிறுகள் இழுத்து அறுத்தெறிந்ததுமுண்டு.[375] யானைகளைக் கட்டி வைப்பதற்கெனத் தனிக் கட்டுத்தறிகள் இருந்தன. யானையைச் சங்கலியால் கட்டிப் பாதுகாத்தமை பற்றிய குறிப்புகளும் காணப்படுகின்றன.[376]

யானை தன் தலையிலும், உடம்பிலும் தானே புழுதியை வாரிவீசிக் கொள்ளும் இயல்புடையது. அதன்மேற்படிந்த புழுதி நீங்கும்படி யானைப்பாகன் கழுவிப் பராமரித்தனன்.[377] குடவாயில் என்னும் ஊரில் சென்னி என்பான் யானைகளை நீராட்டக் குளம் வெட்டினன். அக்குளத்திற்கு யானைகளைக் கொண்டு சென்று குளிப்பாட்டினன்.[378] யானைகளுக்குத் தொழில்பழக்கித் தறியில் பிணித்துக் காத்து வந்த பாகன் ஒருவன் போர்க்களத்தில்பட்டனன். அதனால் காப்பவரின்றிக் களிற்று யானை தனித்து வந்தது.[379]

### 3.11.8. ஆமான் பராமரிப்பு

சங்ககாலக் குறிஞ்சிநில மக்கள் ஆமானை வீட்டில் வளர்த்து வந்தனர். அது மனையிடத்தில் கன்றையீன்றதை,

"மனைத்தலை மகவை யீன்ற வமர்க்கண்

ஆமா நெடுநிரை நன்பு லார" (புறநா.117:4-5)

என்ற அடிகள் விளக்கும்.

ஆமானின் குழவி தன் இயல்புக்கு ஒவ்வாத குடியிற் வளர்ந்தாலும் அவர்களோடு இணைந்து அவரது வாழ்க்கையில் வன்மை பெற்றிருக்கின்றது. வேட்டுவர் விளையாடும் பொருட்டு ஓசை எழுப்புதலால்

அஞ்சிய ஆமானின் கன்று, தன் இனத்தினின்றும் பிரிந்து ஊருக்குள் சென்றது. வேறு குடியினராகிய மகளிர் பாதுகாக்க அவ்வீட்டின்கண் வளர்ந்து வந்தது.[380] வீட்டில் வளர்க்கப்பட்ட பூவோடுகூடிய அவரையின் தளிரைத் தின்னும் ஆமாவைக் கானவர் ஆரவாரத்துடன் ஓட்டினர்.[381] இவற்றால் சங்ககால மக்கள் கானகத்தில் வாழும் இயல்புடைய ஆமானைத் தம் வீட்டில் வளர்த்து வந்தமை புலப்படும். பால்முதலிய உணவுப்பொருட்களைப் பெறவே ஆமானை இல்லத்தில் வளர்த்துள்ளனர்.

### 3.11.9. பல்விலங்குகள் பராமரிப்பு

சங்க மக்கள் காட்டில் வாழும் புலிகளைப் பிடித்து வந்து கூண்டு செய்து வளர்த்து வந்தனர். இதனை,

"கொடுவரிக் குருளை கூட்டுள் வளர்ந்தாங்கு" (பட்டினப்.220-221)

என்ற பாடலடி விளக்கும்.

செந்நாய்க்குப் பயந்த கலைமான் கோவலரின் குழலோசை கேட்டுப் பாதுகாப்புத் தேடிச் சென்றதை அகநானூறு குறிப்பிடுகின்றது.[382]

சங்கத் தமிழர் உழவுத்தொழிலில் பெரிதும் உதவிய ஆநிரைகளையும், எருமைகளையும் பாதுகாத்துள்ளனர். இல்லம் தேடி வந்த ஆமான், மான் போன்றவையும் பாதுகாக்கப்பட்டுள்ளன. புலிகளின் வலிமை கருதி அவை கூண்டுகளில் வளர்க்கப்பட்டுள்ளன. போர்க்களத்தில் பயன்படுத்தப்படும் குதிரைகளும், யானைகளும் நன்கு பராமரிக்கப்பட்டுள்ளன. இதனால் சங்ககால மக்கள், விலங்குகளின்மீது கொண்ட அன்பு புலனாகும்.

### 3.11.10. விலங்குகளுக்கு நீர்கொடுத்தல்

மேய்ச்சலின்பொழுது வெம்மையால் வாடிய விலங்குகளுக்கும், பிற தொழிலின் பொருட்டுப் பயன்படுத்தப்பட்ட விலங்குகளுக்கும் நீர் தேடிக் கொடுத்துப் பாதுகாத்தனர். சங்க மக்கள் கிணற்றின் அருகில் ஆநிரை நீர் பருகக் குழி தோண்டுவர். இக்குழியைப் 'பத்தல்' என்பர். "பத்தல் என்பது தொட்டியைக் குறிக்கும். ஆநிரை நீர்பருகற் பொருட்டுத் தோண்டப்பட்டதாகலின் ஆநீர்ப்பத்தல் என அழைக்கப்பட்டது"[383] என்பர் பொ.வே.சோமசுந்தரனார்.

மேய்ச்சலில் ஈடுபட்ட கொங்கரது ஆக்கள் பாலைநிலத்து ஆடவர் வெட்டிய கிணற்றில் ஊறும் நீரை உண்ண புழுதி பரப்பிச் சென்றதை அகநானூறு குறிப்பிடும்.[384] பாலைநிலத்தில் நீருண்ணக் கூட்டமாகச் செல்லும் ஆநிரைக்குப் பின்னே நீண்ட கோலைக் கொண்ட ஆயர் குழலினை ஊதிச் செல்வது வழக்கம்.[385] கிணறு தோண்டப் பயன்படும் கருவி 'குந்தாழி' எனப்படும். கொங்கர் இரும்பாலான குந்தாழியால் பாறையை உடைத்து ஊறிய நீரைக் கயிற்றைக் கட்டி முகவையில் முகந்து பத்தலில் ஊற்றுவர். பின் பசுக்களை உண்பிப்பர்.[386]

வேட்டுவர்கள் வறட்சியுற்ற காலத்தில் ஆநிரைகள் குடிக்க வேண்டி கிணற்றிலிருந்து நீரை எடுத்து நீர்ப்பத்தலில் ஊற்றினர். அதன் வாயை விற்பொறியால் மூடினர். அவ்விடம் நோக்கி வந்த இளம்பிடி தன் கன்றுடன் அப்பத்தரின் விற்பொறியை முறித்துத் தன் கன்றுக்கு நீரை உண்பித்துக் கூட்டிச் சென்றது.[387]

பாலைநில இடையர் குந்தாழி போன்றவற்றைப் பயன்படுத்தாமல் ஆநிரை மேய்க்கும் கோலால் அரிதின் முயன்று குழி தோண்டுவர். அதில் ஊறிய நீரை ஆநிரைகளை அருந்தச் செய்வர். இடையர்களை வஞ்சித்துக் காட்டுயானைகள் அந்நீரைப் பருகிச் சென்றுள்ளன.[388] இவ்வாறு பாலைநிலக் கோவலர் தோண்டிய பத்தலில் நீர் வடிந்து செல்லும் சிறிய குழி காய்தலால் நீர்வேட்கை மிக்க களிறு அதனை மிதித்துச் சென்றது.[389] ஆயர், ஆநிரைகள் நீர் பருகப் பாலைநிலத்துக் கற்களை உடைத்து வெட்டிய கிணற்றில் நீர் இல்லாமையால் கன்றுடன் வந்த பிடி அதனைத் தடவிப் பார்த்துச் சென்றது.[390] பாலைநில வெம்மையால் வருந்திய கடாக்களை குளத்தில் நீர் பருக விட்டனர்.[391] இவற்றால் மக்கள் தமக்குப் பயன்பட்ட விலங்குகளுக்கு நீர் தேடிக் கொடுத்தமையும், இதனைக் காட்டு விலங்குகள் பயன்படுத்திக்கொண்டமையும் நன்கு விளங்கும்.

## 3.12. விற்பனைத் தொழிலில் விலங்குகள்

பண்டைத் தமிழர் தம் உடல் உழைப்பின் திறமையால் பல்வேறு தொழில்களைச் செய்து வந்தனர். அவ்வகையில் விலங்குகளின் வழி விற்பனைத் தொழிலை மேற்கொண்டிருப்பது குறிப்பிடத்தக்கது.

### 3.12.1. இறைச்சி விற்பனை

சங்ககால மக்கள் விலங்குகளின் இறைச்சியை அங்காடிகளில் வைத்து விற்று வந்தனர். இதற்கெனத் தனி அங்காடிகள் இருந்தன.

இறைச்சி விற்பவரைப் 'பாசவர்' என்பர். "எருதுகளையும் ஏனைய ஆடு, மான் முதலிய விலங்குகளையும் கொன்று அவற்றின் இறைச்சிகளை

விற்பதால் அவர்களைத் தாழ்பாசவர் எனவும், கொலை புரியும் தொழிலைச் செய்வதால் கரும்பாசவர் எனவும் அழைப்பர்."[392] இறைச்சி துண்டிக்கும் கத்தியை 'எ்.கு' என்றனர். இறைச்சி வெட்டுவதற்கு அடியில் வைக்கும் மரக்கட்டை, அக்கத்தியின் வெட்டுப்பட்டு மேடுபள்ளமாய் வரிபோன்று காணப்பட்டதை,

"நெறிபடு மருப்பி னிருங்கண் மூரியொடு
வளைதலை மாத்த தாழ்கரும் பாசவர்
எ்.கா டுனங் கடுப்ப" (பதிற்.67:15-17)

என்ற அடிகள் விளக்கும்.

இறைச்சி விற்கும் கடையில் பச்சிறைச்சியொடு சூட்டிறைச்சியையும் விற்று வந்தனர். இறைச்சி வாங்க வந்த நுகர்வோர் இடம்மாறிச் செல்லாமல் அளவறியாது வாரிக் கொண்டு செல்லவும், அவ்விடத்தில் உண்ண வேண்டி ஆட்டு வணிகர் இறைச்சி கொத்தும் அடைகுறட்டில் வெட்டிய தசையைப் பொறித்தும் கொடுத்துள்ளனர். இதனை,

"வருநர் வரையார் வார வேண்டி
விருந்துகண் மாறா துணீஇய பாசவர்
ஊனத் தழித்த வானிணக் கொழுங்குறை
குய்யிடு தோறு மானா தார்ப்பக்
குடலொலி கொண்டு செழுநகர் நடுவண்
அடுமை யெழுந்த வடுநெய் யாவுதி" (பதிற்.21:8-13)

என்ற பாடல் விளக்கும்.

ஊரில் இருந்த மற்ற அங்காடிகளில் நெய்யுடன் கிழங்கு, மீன்நெய், நறவு ஆகியவற்றை விற்றனர். கரும்பொடு அவலைக் கூறுபடுத்திக்

கொடுத்தவர், மானின் தசைகளோடு கள்ளையும் விற்றுள்ளனர்.[393] இச்செய்தி ஊரில் பல்வேறு இறைச்சி அங்காடிகள் இருந்தமையை புலப்படுத்தும்.

இறைச்சி விற்பனையாளர் விலங்கின் திரளைக் கொன்று வலைஞர் குடியில் கொண்டு சென்று கொடுத்துள்ளனர்.[394] பாணர்சாதியினர் இறைச்சியைத் தோற்பையில் வைத்திருந்ததை,

"பச்சூன் பெய்த சுவல்பிணி பைந்தோற்

கோள்வல் பாணமகன்" (பெரும்பாண்.283-284)

என்ற அடிகள் உணர்த்தும். இதனால் பண்டைத் தமிழர் விலங்கின் இறைச்சியை விற்பனைக்குப் பயன்படுத்தியமை புலனாகும்.

**3.12.2. யானைக்கோடு விற்பனை**

காடுகளில் யானைகளை அம்பு எய்து கொன்று கோட்டைக் கவர்ந்தனர். கவர்ந்து வந்த அக்கோடுகளைக் கடைத்தெருவில் விற்றும், கள்ளிற்கு மாறாகக் கொடுத்தும் வந்துள்ளனர். குறிஞ்சியும், முல்லையும் சார்ந்த புன்புலக் கடைத்தெருவைப் 'பொன்னுடை நியமம்'[395] என்பர். இங்குள்ள வேட்டுவருக்குப் பிறர் பொன்னைத் தந்து அவர் கொணரும் ஊனும், வேழவெண்கோடும் பெறுவர். எனினும் வேட்டுவர்கள் ஆமானின் இறைச்சியையும், யானையின் கோட்டினையும் கொண்டு சென்று குறிஞ்சிநிலத்துக் கடைத்தெருவில் கள்ளிற்கு விலையாகக் கொடுத்ததை,

"காந்தளங் கண்ணிக் கொலைவில் வேட்டுவர்

செங்கோட் டாமா னூனொடு காட்ட

மதனுடை வேழத்து வெண்கோடு கொண்டு

பொன்னுடை நியமத்துப் பிழிநொடை கொடுக்கும்

குன்றுதலை மணந்த புன்புல வைப்பும்" (பதிற்.30:9-13)

என்ற பாடல் புலப்படுத்தும்.

வேட்டைக்குச் சென்ற வேட்டுவர் யானையுடன் போரிட்டு வென்று அதன் வெள்ளிய கொம்பினைக் கொண்டு வந்தனர். அதனின்று உதிர்ந்த முத்துகளைப் பொன்னுடன் கோர்த்துக் கட்டினர். அதனைக் கடைத்தெருவிற்குக் கொண்டு வந்து விற்றனர்.[396] இதனைப்போன்று, தந்தத்தைக் கடைந்து அழகுபடுத்தி விற்றதை அகநானூறு குறிப்பிடும்.[397]

குறிஞ்சிநில மக்கள் அருவிபாயும் பரந்த நிலத்தில் மலைநெல்லை விதைத்தனர். அச்சிற்றூர் சிறுகுடி மக்கள் உணவின்றி பசித்திருந்தபொழுது யானைக் கொம்பை விற்று அவ்விலையால் வரும் உணவை உண்டனர்.[398] அன்றாட உணவிற்கு யானைக் கொம்பு விற்றுப்பெற்ற உணவுப்பொருட்கள் உதவியுள்ளன.

போரில்லாக் காலத்தில் சேரனுடைய வீரர்கள் காலங்கழிக்கும் திறம் வியப்பானது. நாள்தோறும் அவர்கள் பகைப்புலத்துப் பகைவேந்தர் ஊர்ந்து வரும் களிற்றினைக் கொன்று கொணர்ந்த அதன் வெண்கோடுகளைக் கள்ளுக்கு விலையாகத் தந்து கள்ளைப் பெற்று மகிழ்ந்தனர்.[399] இதனால் யானைக் கோடுகள் விற்பனை செய்யப்பட்டமை புலனாகும்.

### 3.13. விறகு பிளந்த யானை

யானைகள் விறகுகளைப் பிளக்கப் பயன்படுத்தப்பட்டன. பாலைநிலத்தில் உப்புவண்டிகளை வரிசையாக நிறுத்தி வைத்தாற்

போன்று உலர்ந்த மரக்கிளைகளைப் பிளக்க இயலாமல் யானை தன் துதிக்கையை மடித்து வருந்தியதை,

"கவணை யன்ன பூட்டுப்பொரு தசாஅ
உமணெருத் தொழுகைத் தோடுநிரைத் தன்ன
முளிசினை பிளக்கு முன்பின் மையின்
யானை கைமடித் துயவும்" (குறுந்.388:3-6)

என்னும் அடிகள் விளக்கும்.

### 3.14. மரந்தூக்கும் யானை

காட்டில் பெரிய மரக்கட்டைகள் கிடந்தன. உலர்ந்த அவ்மரக்கட்டைகளைத் தூக்கிவர யானைகளைப் பயன்படுத்தினர்.[400] அம்மரங்களைக் கடைந்து விளக்குகளைச் செய்து எரியவிட்டனர். அந்தணர்கள் வேள்வி செய்ய யானைகள் விறகு கொண்டு வந்ததுமுண்டு.[401] போரில் அறுகை மன்னனிடம் மோகூர் மன்னன் தோற்றதால் அவனது காவல் மரமாகிய வேம்பினை வெட்டி வீழ்த்தினன். பின் அம்மரத்தினால் முரசு செய்யத் துண்டங்களாகத் தறித்து வண்டியிலேற்றி யானைகளைப் பூட்டி எடுத்துச் சென்றனன்.[402] மேலைச் செய்திகளின் வழி மரங்களைத் தூக்க யானைகள் பயன்பட்டமை நன்கு விளங்கும்.

### 3.15. யானையை வைத்துப் பிச்சை எடுத்தல்

சங்ககால மக்கள் விலங்குகளைப் பிச்சை எடுக்கவும் பயன்படுத்தினர். அவ்வகையில் தழும்பன் என்பானது ஊணூரில் யானை பிச்சை எடுத்ததை,

"ஏளர் தழும்பன் ஊணூர் ஆங்கண்

பிச்சைசூழ் பெருங்களிறு" (நற்.300:10-11)

என்ற அடிகள் உணர்த்தும்.

### 3.16. நெய்யும், விலங்கும்

ஆயர் சாதியில் பிறந்த மகளிர் விடியற்காலத்தில் மத்தைக் கயிற்றால் கட்டினர். உறையாலே சிறுகத் தோய்ந்த இனியதயிரைக் கடைந்து வெண்ணெய்யை எடுத்தனர். பிறகு பூவாற் செய்த சுமட்டின் தலைமீது மோர்ப்பானையை வைத்துக் கொண்டு காலையில் குறிஞ்சி நிலத்தில் மோரை விற்கச் சென்றனர். மோர் விற்றுக் கிடைத்த நெல்லால் சுற்றத்தார் எல்லோரையும் உண்ணச் செய்தனர். பின் நெய்யை விற்ற விலைக்குப் பொன்னை வாங்காமல் பால் எருமைகளையும், நல்ல பசுக்களையும், கரிய எருமைநாகினையும் நெய்யிற்கு ஒப்பாகச் சொல்லி வாங்கினர்.[403] சங்ககால மகளிர் பொன்னைச் சேர்க்க விரும்பாமல் பாற்பயனைத் தரும் விலங்குகளைப் பண்டமாற்றாகப் பெற்றமை அம்மகளிர் பொன்னிற்கு நிகராக விலங்குகளைக் கருதியமை காரணமாகும்.

சங்கால மக்கள் தம் வளமான வாழ்விற்கு விலங்குகளையே நம்பி இருந்தனர். அதனால் தாம் ஈடுபடும் அனைத்துத் தொழில்களிலும் விலங்குகளை உட்படுத்தினர். அவ்விலங்குகளின் வழியே அவர்தம் வாழ்க்கை நிலையை மேன்மைப்படுத்திக் கொண்டனர்.

## தொகுப்புரை

சங்ககால மக்கள் தாம் வாழும் நிலப்பகுதிக்கேற்பத் தொழில் புரிந்தனர். அவர்களின் தொழிலுக்கு விலங்குகள் பெரிதும் உதவின.

எண்கு, எலி, குரங்கு, கேழல், நரி, நீர்நாய், புலி, மான், முயல், முளவுமா, யானை போன்ற பதினொரு விலங்குகள் வேட்டையாடப்பட்டுள்ளன. இவற்றில் எலி, கேழல், மான், முயல், முளவுமா என்ற ஐந்து விலங்குகள் உணவின் பொருட்டும், புலி தோலுக்காகவும், யானை கோட்டிற்காகவும் வேட்டையாடப்பட்டுள்ளன. இவ்வேட்டைத் தொழிலில் நாய் முக்கியப் பங்காற்றியுள்ளது. இவ்விலங்குகள் பெரும்பான்மை குறிஞ்சி நிலத்தில் வேட்டையாடப்பட்டுள்ளன.

ஆநிரை, ஆடு, எருமை முதலியவற்றை வளர்ப்பு விலங்குகளாகக் கொண்டு மேய்த்தல் தொழிலில் ஈடுபட்டனர்.

எருதும், எருமையும் உழவுத்தொழிலில் பயன்பட்டன. வெற்றி பெற்றவர் பகைவேந்தரை இழிவுபடுத்தவும், அவர்களின் விளைநிலங்களைப் பாழ்படுத்தவும் கழுதை ஏர் கொண்டு உழுதுள்ளனர்.

நெல்மணிகளை அறுவடை செய்த தாளிலிருந்து பிரித்தெடுக்க ஆநிரை, எருமை போன்ற விலங்குகளைப் பயன்படுத்தியுள்ளனர்.

வணிகர் சிலர் ஆநிரைகள், குதிரைகள் போன்றவற்றைத் தமது வாகனங்களாகப் பயன்படுத்தியுள்ளனர். கழுதைகளும் சில நேரங்களில் பொதிசுமக்க உதவின.

ஓர் அரசன் பகைநாட்டைக் கைப்பற்ற ஆநிரை கவர்தலைப் போர்க் காரணமாகக் கொண்டனன். இது நாடு பிடிக்கும் கொள்கையை வலியுறுத்துகின்றது.

கவர்ந்து சென்ற ஆநிரைகளைக் கரந்தை வீரர்கள் மீட்டு வந்தனர். அந்நிலையில் போரிட்டு இறந்த கரந்தை வீரர்களுக்கு நடுகல் நடப்பட்டிருக்கின்றது. மானங்காத்தல் பொருட்டுக் கரந்தை வீரர்கள் போரிட்டு இறந்ததால் இவர்களுக்கு மட்டும் நடுகல் நடப்பட்டது.

போருக்கென்று யானைகளைப் பொய்க்குழியில் பிடித்து வந்தனர். பயிற்சியாளரைக் கொண்டு பல்வேறு போர்ப்பயிற்சிகளைக் கற்றுக் கொடுத்துள்ளனர்.

மன்னர்கள் போரில் வெற்றியடைய யானை, குதிரை போன்ற விலங்குகள் பெரிதும் பயன்பட்டன.

மக்கள் ஆடு, ஆநிரை, ஆமான், எருமை, யானை, குதிரை, புலி, மான், ஆகிய விலங்குகளைப் பாதுகாத்துள்ளனர். இவ்விலங்குகளில் ஆநிரைகளுக்கு நீர் தேடிக்கொடுத்துள்ளனர்.

சங்ககாலத்தில், இறைச்சி விற்பனைக்கென்று தனி அங்காடிகள் இருந்தன. யானையின் தந்தத்தையும் மக்கள் விற்றுள்ளனர்.

யானைகளை விறகு பிளக்க, மரம் தூக்க, பிச்சை எடுக்க எனப் பலநிலைகளில் பயன்படுத்தியுள்ளனர்.

சங்ககாலத்தில் ஐந்நிலமக்களும் இவ்விலங்குகளைக் கொண்டு பல்வேறு தொழில்களைச் செய்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

## சான்றெண் விளக்கம்

1. ச.வே.சுப்பிரமணியன்(தெ.உரை.), தொல். நூற்-964
2. முருகு.89, பெரும்பாண்.102, மதுரைக்.10,72,124, நெடுநல்.188, பட்டினப்..121,275, நற்.42:2, 90:10, 131:1, 153:4, 157:1, 161:1, 239:9, 315:5, 330:4, 333:1, குறுந்.242:5, ஐங்.426:1, 442:1, 443:5, 445:2, 447:1, 448:2, 450:1, 451:4, 498:3, பதிற்.26:14, 28:6, 40:3, 72:13, 84:16,21, 90:8, பரி.3:71, 10:113, 15:13, 18:29, 20:62, 22:44, கலித்.82:35, 85:24, 138:2, 148:1, அகநா.60:2,3, 66:10, 141:5, 160:11, 252:11, 254:10, 260:4, 298:2, 317:1, 340:19, 363:10, 384:1, புறநா.3:12, 14:14,15, 66:2, 166:18, 212:5, 224:9, 285:7, 319:13, 387:11
3. ஆசிரியர் குழு, வாழ்வியற் களஞ்சியம் தொகுதி 5, ப.342
4. வி.சி.சசிவல்லி, பண்டைத் தமிழர் தொழில்கள், ப.6
5. மேலது, ப.6
6. அ.ஆறுமுகம், சங்க இலக்கியத்தில் குடும்பம், உடைமை, அரசு, ப.41
7. நற்.389:4-5
8. அகநா.158:15-18
9. பெரும்பாண்.139, நற்.276:1-4
10. கலித்.23:26-29
11. நற்.252:10

12. புறநா.205:7-9

13. அகநா.118:5-6

14. குறிஞ்சிப்.149-152

15. மேலது.130-138

16. அகநா.318:1-15

17. பெரும்பாண்.125-129

18. அகநா.122:7-11, குறிஞ்சிப்.240-242

19. நற்.135:2-5

20. மேலது.285:3-8

21. வி.சி.சசிவல்லி, பண்டைத் தமிழர் தொழில்கள், ப.121

22. அகநா.171:7-15

23. புறநா.324:3-8

24. குறுந்.385:1-5

25. நற்.13:3-5, 75:5-7

26. மேலது.336:1-6

27. அகநா.248:2-10

28. நற்.82:6-11

29. மதுரைக்.294-295

30. குறுந்.161:3-4

31. நற்.119:1-3

32. குறுந்.171:2-3

33. நற்.190:8

34. குறுந்.272:1-6

35. அகநா.371:1-10

36. கலித்.120:11

37. குறுந்.179:1-2

38. புறநா.202:1-4

39. மேலது.333:1-5

40. குறுந்.384:1-6

41. புறநா.334:1-4

42. அகநா.394:13-16

43. ஐங்.421:1-4

44. புறநா.322:5-6

45. மேலது.339:1-4

46. பெரும்பாண்.106-117

47. நற்.98:1-7

48. அகநா.182:4-8

49. புறநா.374:9-15

50. நற்.65:5-6

51. மேலது.228:5-9

52. கலித்.37:1-2

53. கலித்.97:6-7, அகநா.388:11-15

54. குறுந்.331:1-5

55. புறநா.214:4-5

56. கலித்.110:1, 107:2

57. நற்.266:3

58. மேலது.266:1

59. மேலது.169:7

60. கலித்.115:4, 113:6, 113:9

61. மேலது.113:10

62. வி.சி.சசிவல்லி, பண்டைத்தமிழர் தொழில்கள், ப.118

63. நற்.192:3-4

64. மேலது.169:6-7

65. புறநா.286:1-2

66. நற்.142:2-8

67. ஒளவை.சு.துரைசாமிப்பிள்ளை (உரை.ஆ), புறநானூறு தொ.2, ப.247

68. புறநா.395:1-5

69. மேலது.325:1-13

70. குறுந்.204:3-4

71. பதிற்.21:20-21

72. ஐங்.87:1, 476:2-3

73. அகநா.14:5-11

74. நற்.359:1-3

75. நெடுநல்.4-12

76. நற்.290:1-3

77. அகநா.341:4-11

78. பதிற்.62:13-19

79. அகநா.156:3-7

80. புறநா.386:10-13

81. அகநா.341:4-11

82. குறுந்.104:2-4

83. அகநா.264:1-6

84. புறநா.125:7, 366:13, கலித்.65:12

85. நற்.171:1-5

86. குறுந்.241:3

87. மலைபடு.336-339

88. கலித்.108:32-33

89. மேலது.110:19-23, 116:1

90. மேலது.112:12-13

91. புறநா.230:1

92. மேலது.355:1-3

93. நற்.363:7-9

94. குறுந்.64:1-4

95. முல்லைப்..12-17

96. குறுந்.108:1-2, அகநா.64:10-17

97. குறுந்.344:4-6

98. மேலது.275:3-8

99. குறுந்.221:45, 358:6-7

100. கலித்.110:12-15

101. அகநா.9:20

102. கலித்.119:9-11

103. பொ.வே.சோமசுந்தரனார் (உரை.ஆ), ஐங்குறுநூறு.ப.131

104. ஐங்.99:1-2

105. நற்.260:1-4

106. ஐங்.93:1-5

107. மேலது.91:1-3

108. மேலது.97:1-3

109. அகநா.46:1-6

110. மேலது.56:2-7

111. மேலது.100:15-18

112. நற்.260:1-4

113. மேலது.80:1-3

114. அகநா.146:1-5

115. மலைபடு.471-477

116. பட்டினப்..13-15

117. நற்.391:2-6

118. ஐங்.100:1-2

119. நாற்கவிராசநம்பி, நம்பியகப்பொருள், நூற்.22:13

120. நெடுநல்.1-5

121. ஐங்.497:3-5

122. புறநா.289:3, பெரும்பாண்.197-201

123. வி.சி.சசிவல்லி, பண்டைத் தமிழர் தொழில்கள், ப.47

124. சு.இராசாராம், சங்க இலக்கியத்தில் நடைமுறை வாழ்க்கை, ப.23

125. ஞா.தேவநேயன், பண்டைத் தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப.240

126. மேலது, ப.241

127. புறநா.383:1-5

128. பதிற்.43:16

129. ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை(உரை.ஆ), பதிற்றுப்பத்து, ப.197

130. பட்டினப்..205-207

131. மதுரைக்.259-260

132. குறுந்.131:4-5

133. அகநா.41:4-7

134. குறுந்.155:1-3

135. புறநா.120:3

136. மேலது.322:1

137. அகநா.314:2-7

138. பதிற்.58:12-19

139. நற்.340:6-7

140. பெரும்பாண்.208-212

141. குறுந்.391:1-2

142. பதிற்.19:16-18

143. மேலது.26:1-3

144. மேலது.25:1-13

145. பெரும்பாண்.238

146. மலைபடு.460-462

147. அகநா.393:4-6

148. பெரும்பாண்.186-191

149. பொருந.242-244

150. அகநா.366:1-11

151. மேலது.30:5-6

152. நற்.4:7-12

153. பதிற்.27:10-16

154. புறநா.102:1-5

155. நற்.354:8-10

156. புறநா.116:9-19

157. அகநா.17:10-14

158. மேலது.173:8-12, 191:4-12

159. மேலது.140:1-9

160. அகநா.159:1-3, 295:1-10

161. மேலது.329:4-8

162. குறுந்.165:3-4

163. பட்டினப்..29-32

164. புறநா.185:1-6

165. அகநா.207:1-7

166. மேலது.343:10-15

167. மேலது.89:10-17

168. மேலது.101:10

169. மேலது.63:10-12

170. மேலது.239:3-7

171. மேலது.113:12-17

172. புறநா.262:4-6

173. அகநா.63:17-18

174. மேலது.115:13-15

175. மேலது.168:4-7

176. மேலது.253:9-20

177. மேலது.338:18-19

178. மேலது.377:4-11

179. புறநா.87:8-13

180. மேலது.258:1-11

181. க.வெள்ளைவாரணர், தமிழ் இலக்கிய வரலாறு, பக்.92-93

182. க.ப.அறவாணன், அற்றைநாட் காதலும் வீரமும், ப.233

183. அகநா.131:6-12

184. அ.விசுவநாதன், தமிழ்ச்சிந்தனைகள், ப.57

185. அகநா.105:14-15

186. குறுந்.80:5-6, அகநா.372:9-11

187. அகநா.214:10-15

188. மேலது.269:3-5

189. புறநா.259:1-7

190. அகநா.213:4-8

191. மேலது.159:5-8

192. நற்.100:7-9

193. கா.கோவிந்தன், பண்டைத் தமிழர் போர்நெறி, பக்.40-41

194. புறநா.260:11-19

195. மேலது.261:11-15

196. மேலது.264:1-6

197. மேலது.263:5-6

198. மேலது.17:14-19

199. மேலது.389:9-12

200. அகநா.83:1-10

201. மேலது.165:1-6

202. பட்டினப்..223-224

203. அகநா.8:8-12

204. மேலது.21:15-27

205. புறநா.5:1-3

206. நச்சினார்க்கினியர்(உரை.ஆ), சீவகசிந்தாமணி, ப.585

207. நற்.340:1-2

208. மலைபடு.325-327

209. மதுரைக்.43-48

210. அகநா.376:2-6

211. உ.வே.சா.(தொ.ஆ) பத்துப்பாட்டு மூலமும் நச்சினார்க்கினியர் உரையும், ப.407

212. மதுரைக்.592-598

213. புறநா.392:4

214. அகநா.336:13-14

215. புறநா.238:9

216. புறநா.44:1-5

217. பெரும்பாண்.393-396

218. நற்.360:7-9

219. முல்லைப்..30-36

220. மதுரைக்.658-660

221. நற்.254:6-7

222. புறநா.299:1-7

223. நற்.296:1-3, அகநா.201:1-7, புறநா.3:7-14, பரி.18:27, பதிற்.62:1-5, கலித்.86:1

224. நற்.299:1

225. அகநா.111:3-8

226. கலித்.96:7-28

227. பெரும்பாண்.434-440

228. அகநா.1:1-4

229. நற்.77:1-3

230. புறநா.79:3

231. மேலது.293:1-2

232. புறநா.16:1-19

233. பதிற்.33:2-5

234. புறநா.306:1-2

235. மேலது.341:17-19

236. மேலது.38:1-4

237. கலித்.132:5-6, பரி.22:1-2

238. பதிற்.54:12-17

239. புறநா.26:1-7

240. மதுரைக்.177-179

241. பரி.10:109-110

242. கலித்.57:8-11

243. அகநா.99:11-13

244. புறநா.312:5-6

245. மேலது.323:5-7

246. மேலது.332:9-10

247. பதிற்.45:4-6

248. புறநா.284:3-8

249. மேலது.287:5-7

250. பதிற்.51:29-30

251. புறநா.36:5-6

252. மேலது.308:4-11

253. மேலது.302:8-11

254. மேலது.277:2-4

255. மேலது.279:3-6

256. மதுரைக்.734-735

257. பதிற்.32:2-6, கலித்.134:2-3, புறநா.115:5-6, 200:6-8, 265:8-9, 270:2-4, 275:7-9, 333:15-18, 342:13-15, 22:1-9, சிறுபாண்.196-201

258. பதிற்.28:1-4, கலித்.25:22-24, அகநா.57:14-17, புறநா.35:23-25, 103:6-8, 126:20-21, 125:9-10, 274:3-7, 301:4-6, 301:12-16, 303:6-9, 310:4-6, 19:9-11, மதுரைக்.347-350, நெடுநல்.168-171

259. குறுந்.393:3-6, அகநா.235:4-5, புறநா.307:2

260. பதிற்.42:8

261. புறநா.66:3

262. பதிற்.52:1-2

263. அகநா.322:6-8

264. புறநா.81:1-2

265. மேலது.93:12-15

266. மேலது.213:8

267. மலைபடு.225-227

268. பதிற்.32:10-11

269. புறநா.371:15-17

270. ஞா.தேவநேயன், பழந்தமிழ் ஆட்சி, ப.28

271. கி.வா.ஜெகந்நாதன், வீரர் உலகம், ப.59

272. அரங்க.இராமலிங்கம், சங்க இலக்கியத்தில் வேந்தர், ப.149

273. புறநா.347:9-12, 57:9-11, பட்டினப்.172-173

274. பதிற்.69:1-7

275. கலித்.31:9-12

276. புறநா.305:5-6

277. நற்.43:8-12

278. மேலது.287:1-3

279. பதிற்.15:3-5

280. அகநா.24:11-13

281. பதிற்.16:1-8

282. மேலது.53:15-21

283. புறநா.98:1-8

284. மேலது.31:7-11

285. கலித்.135:4-5

286. ஐங்.429:3-4, பதிற்.29:13-15, 84:3-14, அகநா.164:11-14, புறநா.37:11-14

287. கலித்.138:1-2

288. மேலது.55:20-24

289. பதிற்.82:4-10

290. புறநா.13:2-9

291. கலித்.2:26-27

292. மேலது.97:22-23

293. மதுரைக்.380-383

294. புறநா.220:1-4

295. மேலது.304:3-8

296. ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை(உரை.ஆ), புறநானூறு, ப.383

297. புறநா.378:4

298. பதிற்.45:15

299. புறநா.303:1-3

300. மதுரைக்.49-52

301. மேலது.184

302. பதிற்.80:15-17

303. புறநா.302:1-2

304. அகநா.125:16-22

305. புறநா.205:1-4

306. பதிற்.65:1-5

307. கலித்.31:13-14

308. புறநா.273:1-7

309. நற்.227:5-8

310. மேலது.141:8-10

311. பதிற்.83:1-5

312. மேலது.49:4-9

313. புறநா.239:13-15

314. குறுந்.91:5-8

315. புறநா.72:1-9

316. மேலது.55:6-10

317. பதிற்.22:17-27

318. புறநா.14:1-11

319. பதிற்.77:1-12

320. மேலது.78:12-14

321. மேலது.34:4-8

322. புறநா.4:7-12

323. அகநா.36:13-19

324. மேலது.346:21-25

325. பட்டினப்..228-238

326. பதிற்.35:3-5

327. புறநா.63:1-6, 227:4-5

328. முல்லைப்..67-76

329. பதிற்.81:6-9

330. புறநா.109:11-14

331. நற்.10:5-8

332. மேலது.395:4-5

333. புறநா.53:5

334. மேலது.97:8-13

335. மேலது.377:23-30

336. மதுரைக்.128-129

337. அ.ஆறுமுகம், சங்க இலக்கியத்தில் குடும்பம் உடைமை அரசு, ப.234

338. புறநா.387:5-12

339. கலித்.31:17-18

340. பதிற்.71:13-24

341. மதுரைக்.687-695

342. புறநா.390:1

343. உ.வே.சா.(தொ.ஆ), பத்துப்பாட்டு மூலமும் நச்சினார்க்கினியர் உரையும், ப.229

344. பட்டினப்..46-52

345. பெரும்பாண்.243-244

346. புறநா.224:12-14

347. குறுந்.190:5-7

348. கலித்.113:17-19

349. பட்டினப்..201

350. நற்.109:7-9

351. குறுந்.117:4

352. அகநா.369:22-25

353. மேலது.293:11-12

354. மேலது.49:4-7

355. கலித்.116:8

356. பெரும்பாண்.176

357. சீ.பக்தவத்சலபாரதி, பண்பாட்டு மானிடவியல், ப.471

358. அகநா.107:13-18

359. புறநா.307:7-9

360. நற்.315:4-5

361. புறநா.309:4

362. அகநா.56:9-12

363. நற்.120:1-2

364. குறுந்.261:3-6

365. நற்.330:1-6

366. குறுந்.279:1-3

367. நற்.271:1-3

368. மேலது.321:1-2

369. புறநா.324:9-12

370. மேலது.54:10-14

371. அகநா.94:3-8

372. மேலது.274:1-12

373. பெரும்பாண்.325-327

374. ஐங்.356:1-3

375. நற்.284:9-11

376. மேலது.62:1-2, 74:1-4

377. குறுந்.13:1

378. அகநா.44:17-18

379. நற்.182:8-10

380. குறுந்.322:1-5

381. மதுரைக்.292-293

382. அகநா.219:12-18

383. பொ.வே. சோமசுந்தரனார்(உரை.ஆ), ஐங்குறுநூறு, ப.421

384. அகநா.79:1-9

385. மேலது.225:7-9

386. பதிற்.22:11-16

387. நற்.92:4-9

388. ஐங்.304:1-5

389. அகநா.115:6-12

390. மேலது.321:6-10

391. மேலது.37:11

392. ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை(உரை.ஆ), பதிற்றுப்பத்து, ப.319

393. பொருந.214-219

394. பட்டினப்..196-199

395. ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை(உரை.ஆ), பதிற்றுப்பத்து, ப.125

396. அகநா.282:1-10

397. மேலது.331:1-8

398. குறுந்.100:1-6

399. பதிற்.68:9-13

400. புறநா.247:1-10

401. பதிற்.64:3-11, புறநா.251:4-6, பெரும்பாண்.496-500

402. பதிற்.44:14-17

403. பெரும்பாண்.155-165

**4.1. பண்பாடு – விளக்கம்**

**4.2. பண்பாட்டில் விலங்குகள்**

**4.3. ஏறுதழுவுதலின் சிறப்பு**

4.3.1 பரண் அமைத்தல்

4.3.2 மகளிர் விரும்புதல்

4.3.3 ஏறுதழுவ வற்புறுத்துதல்

4.3.4 அறைகூவலும் சூளுரையும்

4.3.5 கடவுளை வணங்குதல்

4.3.6 ஏற்றிற்குக் கொம்பு சீவிவிடுதல்

4.3.7 ஏற்றிற்குக் கோபம் மிக மருந்து புகைத்தல்

4.3.8 தொழுவத்தில் பாய்ந்த பல்வகை ஏறுகள்

4.3.9 தொழுவநிலை

4.3.10 வீரர்களும் எருதுகளும் பொருதல்

4.3.11 ஏற்றை அடக்கிய ஆயர்தம் நிலை

4.3.12 ஏறுதழுவுதலைக் கண்ட மகளிரின் நிலை

4.3.13 விழுப்புண் போற்றல்

4.3.14 தழுவப்பட்ட ஏறுகள்

4.3.15 வெற்றி பெற்றவர்களுக்குத் திருமணம்

**4.4. நீராட்டுவிழாவில் விலங்குகள்**

4.4.1 நீராடலைப் பார்க்கச் செல்லுதல்

**4.5. வழிபாட்டில் விலங்குகள்**

4.5.1 கோவிலில் விலங்குகள்

# சங்ககால மக்கள் பண்பாட்டில் விலங்குகள்

சங்ககால மக்கள் இயற்கையைத் தழுவி வளமான வாழ்வு வாழ்ந்தனர். கூட்டுக்குடும்பமாகவும், தனிக்குடும்பமாகவும் வசித்தனர். உணவு தேடுதலை விடுத்து, உணவு உற்பத்தியில் ஈடுபட்டனர். பொருளீட்டும் நிலையில் பிற நாட்டினருடன் வணிகத்தொடர்பை ஏற்படுத்தினர். இவற்றால் சங்கத் தமிழரின் அறிவுத்திறனும், பொருளாதார நிலையும் வளர்ச்சியுற்றன. பிற உயிரினங்களின்மேல் இரக்கம் கொள்ளுதல், பல்வேறு அறச்செயல்களை மேற்கொள்ளுதல், விருந்தோம்புதல், தலைமைக்குக் கட்டுப்படுதல் என்பன போன்ற பண்பட்ட செயல்களில் சிறந்து விளங்கினர். திருமணத்தில் பண்பாட்டு முறையைக் கடைப்பிடித்தனர். கோயில்களை நிறுவினர். அவற்றில் உயிரினங்களைப் பலியிட்டு வழிபாடு மேற்கொண்டனர். இங்ஙனம் சங்ககால மக்கள் தம் பண்பாட்டுக் கூறில் விலங்குகள் இடம்பெற்றமையை விளக்குவது இவ்வியலின் நோக்கமாகும்.

## 4.1. பண்பாடு - விளக்கம்

சங்ககால மக்கள் பண்புள்ளவர்களாகத் திகழ்ந்தனர். ‘பண்பெனப்படுவது பாடறிந்தொழுகுதல்’[1] என்று கலித்தொகை சுட்டும். “பண்புடைமையாவது பெருமை, சான்றாண்மைகளில் தான் வழுவாது நின்றே எல்லா இயல்புகளும் அறிந்து ஒத்து ஒழுகுதல்”[2] என்பர் பரிமேலழகர். சென்னைப் பல்கலைக்கழக அகராதி பண்பாடு என்ற

சொல்லிற்கு, “பிறர் இயல்பை அறிந்து நடக்கும் நற்குணம்”[3] எனப் பொருளுரைக்கின்றது.

அறிஞர் தெ.பொ.மீனாட்சிசுந்தரம், “பெரும்பாலும் சிறந்த வாழ்க்கைக்கு அடிப்படையாக அமைகின்ற உள்ளப் பாங்கின் வெளிப்பாட்டையே பண்பாடு என்கிறோம். அந்த வெளிப்பாடு சுவையுணர்வாகவும், நடையுடை பாவனைகளாகவும் தோன்றும். அப்பண்பாடில்லாதவனைக் காட்டுமிராண்டி என்கிறோம். வாழ்வின் பல பல போக்குகள் அமைந்த பல்வேறு நிலைகளையும் இந்தப் பண்பாடு என்பது குறிக்கும். உடலைப் பற்றிய நன்னிலை, மனதைப் பற்றிய தூய்மை நிலை, பேச்சின் இனிமை இவையெல்லாம் பண்பாட்டில் அடங்கும்”[4] என்று பண்பாட்டிற்கு விளக்கம் தருவர்.

“தமிழர் பண்பாடு என்றால் தமிழ் மக்களுக்கு தனித்துரிய திருந்திய மனப்பான்மை என்று பொருள்படவேண்டும். தமிழ் மொழியிலும், தமிழ் இலக்கியங்களிலும் இத்தனிப்பட்ட திருந்திய மனப்பான்மை தெளிவாகவும், சிறப்பாகவும் விளங்குவதாகும்”[5] என்றுரைப்பர் எஸ்.வையாபுரிப்பிள்ளை.

“மக்களின் பழைய வரலாற்றில் அவர்கள் இயற்றிக்கொண்ட கருவிகள், சமூகப்பழக்கம், வழக்கம், நம்பிக்கை, சமயம் முதலியவற்றைப் பண்பாடு என்ற சொல்லால் குறிக்கின்றனர். மக்களின் அறிவுநலம், ஒழுக்க உயர்வு, கொள்கை நலம், பண்பு நலம், வாழ்க்கை நலம் ஆகியவை மென்மேலும் திருந்திய நிலையே பண்பாடு எனலாம்”[6] என்பர் அ.தட்சிணாமூர்த்தி.

பண்பாடு குறித்து, "ஆங்கிலத்தில் பண்பாடு என்ற சொல்லுக்கு Culture என்ற சொல் பயின்று வருகின்றது. அதற்கு Tilage, improvementlу training, intellectural development cultivate என்பன பொருள்களாகக் காட்டப்பட்டுள்ளன. The state of being cultivated என்ற பொருளும் உண்டு. இந்தச் சொல்லோடு ஆங்கிலத்திலுள்ள மற்றொரு சொல்லையும் இணைத்துப் பார்த்தால் பொருள் நமக்கு நன்கு விளங்கும். அச்சொல் Agriculture என்பதாகும். நல்ல அறிஞர்களின் பொன்மொழியாகிய எருவினை இட்டுச் சிந்தனை ஏர் ஓட்டி நல்ல வகையில் நம்மை நாம் பண்படுத்திக்கொள்வதே பண்பாடு"[7] என்றும், "மனிதன் பெறும் அறிவு, நம்பிக்கை, திறமைகளையும், பழக்கவழக்கங்களையும் உள்ளடக்கிய முழுமையே பண்பாடு"[8] என்றும் மொழிவர் அ.ஆறுமுகம்.

மேற்சுட்டிய அறிஞர்களின் விளக்கங்கள், பண்பாடு என்பது மக்களின் நடவடிக்கைகளோடு தொடர்புபடுத்தியும், அவை மென்மேலும் திருந்தி வந்தமை பற்றியும் குறிப்பிடுகின்றன.

பண்பாடு என்பது ஒவ்வொருவரும் சமுதாயத்திடமிருந்து பெறும் செல்வமாகும். இது சடப்பொருள்கள், சடப்பொருள்கள் அல்லாதன என இருவகைப்படும். வீடுகள், கருவிகள், ஆடைகள், அணிகள் போன்றவை சடப்பொருள்கள். மொழி, தொழில், மனப்போக்கு, கொள்கைகள், வழக்கங்கள், அறநெறி போன்றவை சடப்பொருள்கள் அல்லாதன. இவ்விரு சொற்களின் விளக்கங்கள் பண்பாடு என்ற சொல்லின் பொருளைத் தெளிவுபடுத்துகின்றது. ஆனால் பண்பாடு என்பது இதுதான் என்று குறிப்பிட்டு விளக்குவது கடினம். இதனை, "பண்பாடு என்பது இன்ன தன்மைத்து என்று காண இயலாது. எனினும் பண்பாடு

உள்ளமையால்தான் இவ்வுலகம் நிலைத்து நிற்கிறது. தனிமனிதன் சமூகத்துடன் ஒட்டியிருப்பதும், சமூகம் தனிமனிதனுக்கு உணர்த்துவதும் பண்பாட்டின் அடிப்படையிலாகும். அத்தகைய பண்பாடு ஒன்று இல்லையெனின் உலகம் இல்லை, உயிர்கள் இல்லை, உற்றதொரு செயல் இல்லை, ஒன்றுமே இல்லை"[9] என்று சுட்டுவர் அ.கிருட்டிணன். இவ்வகையில் அறிஞர் பெருமக்கள் மனிதனின் விழுமிய வாழ்க்கை நிலைதான் பண்பாடு என்று குறிப்பிடுவதை அறிய இயலும்.

நாகரிக வாழ்வைக் கைக்கொண்டு அகவாழ்விலும், புறவாழ்விலும் நிறைவடைந்த மனிதன் வாழ்வில் சில பண்புகள் உருப்பெற்று வளரத்தொடங்கின. அத்தகைய பண்பு, தன் பயனுக்குப்போக எஞ்சிய பொருள்களைப் பிறருக்கு மனநிறைவோடு கொடுக்கத் தூண்டியது. அப்பண்பு வளர்ச்சியுற்றுப் பகிர்ந்துண்ணும் பழக்கமாகிப் பின், தன்னலமின்றித் தனக்கில்லையானாலும், பிறருக்குக் கொடுத்து மகிழ்கிற பெருமைமிக்க நிலைக்குக் கொண்டுசென்றது. இப்பண்பு தொழிலிலும், கலையிலும், அவலத்திலும், வீரத்திலும், ஈகையிலும் அறிவின் துணையுடன் செம்மையுற்று நெறிப்படுத்தப்பட்டுத் திருந்திய மன உணர்வுகளாகிப் பண்பாடென முழுமை பெற்றது. பண்பாடு என்றுரைக்கப்படும் மனிதப்பண்பின் சிறப்புக்கூறு பொதுவான தன்மையில் பொருளுணர்த்துவதாக அமையினும் இப்பண்பாடு நாட்டிற்கு நாடும், இனத்திற்கு இனமும், ஊருக்கு ஊரும் மாறுபட்ட நிலையுடையதாக இருக்கின்றது.

மக்களின் அறிவுநலம், கருத்துநலம், குணநலம், கொள்கைநலம், ஒழுக்கநலம் முதலியன மேன்மேலும் திருந்தி வரும் நிலையினைப்

பண்பாடு என்ற சொல் வரையறுக்கின்றது. இங்ஙனம் பண்பாடு என்பது மக்களின் பல்வேறு செயல்திறங்களை அடிப்படையாகக் கொண்டது என்பது புலனாகும்.

### 4.2. பண்பாட்டில் விலங்குகள்

பண்பாடு என்பது மக்களின் செயல்திறன்களை அடிப்படையாகக் கொண்டு அமைந்தது. அவ்வகையில் சங்ககால மக்களின் பண்பாட்டுச் செயல்முறைகளுக்குச் சில விலங்குகள் உதவிபுரிந்துள்ளன.

### 4.3. ஏறுதழுவுதலின் சிறப்பு

ஒரு சமூகத்தின் பண்பாடு அவர்தம் திருமண முறையின் மூலம் வெளிப்படும். சங்க காலத்தில் ஆயர்குல மக்களின் திருமணம் வீரத்தோடு தொடர்புடையதாக விளங்கியது. ஆயர்குல மகளிரை மணக்க ஆயன் ஏறுதழுவி அதனை அடக்கி வெற்றி பெறுதல் வேண்டும். இதுவே அவர்தம் பண்பாடாக விளங்கியது. இதனை, “முல்லைக் குமரன் முல்லைக் குமரியை மணக்க வேண்டின், அவள் பெற்றோர் விடுக்கும் காளை ஏற்றினைத் தழுவி அடக்குதல் வேண்டும். இவ்வழக்கம் ஏறுதழுவுதல் எனப்படும்”[10] என வ.சுப.மாணிக்கமும், “சங்க கால ஆயர் ஏறுகளைத் தழுவி அடக்கி அந்த ஏறுகளுக்குரிய மங்கையரை மணப்பதையே தம் குல மரபாகக் கொண்டிருந்தனர்”[11] என அ.முத்துசுவாமியும் ஏறுதழுவுதலை விளக்கியுரைப்பர். “முல்லைக்கலி கூறும் ஏறுதழுவுதல் இரண்டு முறைகளில் காணப்படுகின்றது. ஒன்று உள்ளப்புணர்ச்சி காரணமாக மற்றொன்று ஆயன் தன் வீரத்தை மற்றவர்களுக்குத்

தெரியப்படுத்துவதற்காக"[12] என்பர் க.மைதிலி. "சங்கப் பாடல்களில் இருநூற்று முப்பத்து நான்கு பாடல்கள் முல்லைத்திணைக்குரியவை. இதில் முல்லைக்கலியில் ஏறுதழுவுதல் என்ற செய்தி ஏழு பாடல்களில் இடம் பெற்றுள்ளது. இவ்வேறுதழுவுதல் தொல்காப்பியர் குறிப்பிடாத புதிய மரபாகும்"[13] என்பர் சே.செந்தமிழ்ப்பாவை.

ஆணும், பெண்ணும் இணைந்து வாழும் கரணம் என்னும் வதுவைச் சடங்கு நிகழத்துணை நின்றது ஏறுதழுவுதல் என்னும் நிகழ்ச்சியாகும். இது சங்ககால மக்களின் பண்பாட்டில் விலங்குகள் பெற்றிருந்த இடத்தை நன்கு விளக்கும்.

### 4.3.1. பரண் அமைத்தல்

தொழுவத்தில் ஏறு தழுவும் நிகழ்ச்சியைக் காண மக்கள் கூடுவது இயல்பு. அவ்விடத்தில் பரண் அமைப்பர். இப்பரணை 'மிடை'[14] என அழைப்பர். முன்பகுதியில் உள்ள பரண்மேல் ஆநிரை பாயாமல் இருக்கத் தடுப்பு அமைப்பர். இதற்கு 'உழலை மரம்'[15] என்று பெயர். பல பசுக்களையுடைய பொதுவர் ஏறுதழுவுதலைக் காணவிரும்பிய ஆயர் மகளிர் பரணைக் கைப்பற்றி அமர்வர்[16]. சில வேளைகளில் ஏறுகள் உழலையைத் தாண்டி அப்பரண்களின் மீதும் பாய்ந்தன.[17] பரண்களின்மீது பெண்கள் அமர்வதைப்பற்றி, "ஆயர் ஏறுதழுவுமிடம் பரந்த வெளிப்பகுதியாக இருக்கும். அங்கு பிடவம், முல்லை, தோன்றி, கொன்றை முதலிய மலர்களைத் தலையில் சூடிப் பெண்டிர் ஏறுதழுவுதலைக் காணப் பரணின் மீது அமர்ந்திருப்பர்"[18] எனக் குறிப்பிடுவர் அ.கிருட்டிணன்.

### 4.3.2. மகளிர் விரும்புதல்

வீரனை மகளிர் விரும்புவர். சங்க மகளிர், வீரத்துடன் போரிட்டு ஏற்றினை அடக்கிய தலைவனை விரும்பி மணந்துள்ளனர். அதனால் இம்மகளிர் ஏறுதழுவுதலைக் காணத் தொழுவத்திற்குச் சென்றனர்.

ஆயர்குடியில் ஆணும், பெண்ணும் களவு நெறியில் ஒழுகினும் ஆயன் காளையை அடக்கினால் மட்டுமே திருமணம் நடைபெறும். இல்லையெனில் திருமணம் நடைபெறாது. அதனால் ஆய்ச்சியர் ஏறுதழுவினவனுடைய தோளைத் தழுவுதலையே விரும்பினர்.[19] உயிருக்கோ, ஏற்றின் மறுப்பிற்கோ அஞ்சும் ஆயன், ஆயர் மகளுடைய தோளை எளிதாகத் தழுவமுடியவில்லை.[20] உயிருக்கு அஞ்சாது ஏற்றைத் தழுவும் வீரனே ஆயர் மகளின் தோளைத் தழுவ உரிமையுடையவனாக இருந்தனன்.[21] ஏற்றின் கோட்டிற்கு அஞ்சும் ஆயனை, ஆயமகள் மறுபிறப்பினும் சேராள் என்பதை,

> "கொல்லேற்றுக் கோடஞ்சு வானை மறுமையும்
> புல்லாளே ஆய மகள்" (கலித்.103:63-64)

என்னும் அடிகள் விளக்கும். பல்வேறு நிறமுடைய ஏறுகள் தொழுவில் விடப்படும். அவற்றில் வெள்ளை ஏற்றைத் தழுவுபவன் கூரிய எயிற்றையும், அழகையும் உடையவளைச் சேர்வான் என்றும், கரிய ஏற்றைத் தழுவுபவன் பிணையாகிய மானோக்குப்போலும் நோக்கினையுடையவளைக் கூடுவான் என்றும், சிவந்த ஏற்றினது சினத்தை அஞ்சாது தழுவுபவன் மூங்கில் போன்ற தோளையுடையாளை இணைவான் என்றும் சுட்டுவர்.[22] ஆயர்கள் கோட்டினத்தாயர், கோவினத்தாயர், புல்லினத்தாயர் என

மூவகைப்படுவர். "மூவகை ஆயருள் எவன் அஞ்சாது ஏறுதழுவி அடக்கினானோ அவனையே ஆய்ச்சியர் மணம் முடித்தனர். ஏனையோரை அவ்வாயர்ப்பெண்டிர் உள்ளத்தாலும் நினைப்பர் அல்லர்"[23] என்பர் அ.கிருட்டிணன். இக்கருத்துகள் வீரனையே மணப்பது என்னும் ஆய்ச்சியரின் எண்ணத்தை வெளிப்படுத்தும்.

### 4.3.3. ஏறு தழுவ வற்புறுத்துதல்

களவு வாழ்க்கையில் ஈடுபடும் தலைவி தனது திருமணம் விரைவில் நடைபெற்றுக் கற்புவாழ்க்கை தொடங்க விரும்புவள். அதனால் தோழியர் தலைவனை ஏறுதழுவி ஊரறிய தலைவியைத் திருமணம் முடிக்க வேண்டுவர். தன்னைப்போல ஏறுதழுவுதலில் வல்லவர் யாரும் இல்லையென்று பசுத்திடலில் நின்று கூறும் தலைவன் ஒருநாளேனும் ஏறுதழுவி நம்மைக் கொண்டவன் அல்லன் என்று மொழிவர்.[24] இவற்றால் தோழி, தலைவனை ஏறுதழுவ வற்புறுத்தியதை அறிய இயலும்.

### 4.3.4. அறைகூவலும் சூளுரையும்

தலைவியை விரும்பும் பல்லோர் ஏறுதழுவ விரும்புவர். அந்நிலையில் தொழுவத்தில் பல்வேறு ஏறுகள் நிறுத்தப்படும். அவ்வேறுகளை அடக்க வீரர்களுக்கு அறைகூவலும் விடப்படும்.[25] இத்தகைய அறைகூவலைக் கேட்ட தலைவன் ஏறுதழுவியே தலைவியை மணம்முடிப்பேன் என்று சூளுரை செய்தனன். அதனால் அவளுடைய சுற்றத்தார்கள் தலைவியின் வழியாக நிகழ்த்தும் ஏறுவிடுகின்ற விழாவிற்கு ஏறுகளைப் பரக்கச் செலுத்தி இவ்வீரனே அன்றி மற்றும் ஏறுதழுவுவார்

உளராயினும் வருக என்று பறையறைந்து தெரிவித்தனர்.[26] இதனால் ஒரு ஏற்றினைத் தழுவ பலர் போட்டியிட்டதனை அறிய முடிகின்றது.

### 4.3.5. கடவுளை வணங்குதல்

மக்கள் எந்த ஒரு செயலைத் தொடங்கும் முன்னும் தம் குலதெய்வத்தை அல்லது காவல் தெய்வத்தை வணங்குதல் மரபாகும். அவ்வகையில் ஏற்றைத் தழுவுவதற்கும் வீரர்கள் கடவுளை வணங்கித் தொழுவத்தில் இறங்கியுள்ளனர். இதனை,

"முழக்கென இடியென முன்சமத் தார்ப்ப
வழக்குமாறு கொண்டு வருபுவரு பீண்டி
நறையொடு துகளெழ நல்லவ ரணிநிற்பத்
துறையு மாலமுந் தொல்வலி மராஅமும்
முறையுளி பராஅய்ப் பாய்ந்தனர் தொழூஉ" (கலித்.101:10-14)

என்ற அடிகள் விளக்கும். ஏறுதழுவுதல் தம் வாழ்க்கையை முடிவுசெய்யக்கூடியது என்பதால் ஆயர்கள், தெய்வத்தைத் தொழுது களத்தில் புகுந்துள்ளனர்.

### 4.3.6. ஏற்றிற்குக் கொம்பு சீவிவிடுதல்

தொழுவத்தில் ஏறுகளை விடுவோர் தம் ஏறுகள் வெற்றியடைய எண்ணுவர். அதனால் ஏறுகளுக்குக் கொம்பைச் சீவிவிடுவர். ஏறுதழுவுவோர் களத்தில் நிற்க, மகட்கொடை நேர்ந்த ஆயர் ஏறுகளின் கொம்புகளைக் கூர்மையாகச் சீவித் தொழுவத்தில் விட்டதை கலித்தொகை குறிப்பிடுகின்றது.[27] கரிய ஏற்றைக் கொம்பு சீவியதோடு

சுட்டி அணிந்து அலங்கரித்து தொழுவத்தில் விடுவதும் உண்டு.[28] அவ்வாறு கொம்பு சீவிய ஏறுகள் தொழுவினுள் புகுந்தவுடன் கோபம் உடையதாக விளங்கின.[29] இவற்றால் ஏறுதழுவுவதற்கு விடப்படும் எருதுகள் கொம்பு சீவப்பட்டமை புலப்படும்.

### 4.3.7. ஏற்றிற்குக் கோபம் மிக மருந்து புகைத்தல்

சீற்றத்துடன் தொழுவில் நின்று கொண்டிருக்கும் ஏறுகளை அடக்க வீரர்கள் தயாராவர். இதனைக் கண்ட ஏற்றையுடையோர் ஏற்றிற்கு மேலும் கோபம் வருவதற்கு மருந்தினாற் புகைத்தனர்.[30] இதனால் வெகுண்டெழுந்த ஏறுகள் கொல்கின்ற களிற்றை ஒத்துக் காணப்பட்டன. தொழுவத்தில் புகை வலம்வர கோபம் ஊட்டி நிறுத்தப்பட்ட ஏறுகள் பறையின் ஒலி கேட்டும் மக்கள் ஆரவார ஒலியைக் கேட்டும் வலிமையான ஆயர் மீது சென்று பாய்ந்தன.[31] மக்களின் அதிகப்படியான ஒலியும் புகையும் சேர்ந்து ஏற்றிற்குக் கோபத்தை ஏற்படுத்தியதால் அது சினத்துடன் விளங்கியது.

### 4.3.8. தொழுவத்தில் பாய்ந்த பல்வகை ஏறுகள்

சங்க காலத்தில் பெண்மகவு வைத்திருப்போர் இல்லத்தில் ஆனேறு வளர்த்து வந்தனர். அதனால் ஆநிரைகள் பெருகிக் காணப்பட்டன. அவற்றில் முருகனது நிறம் போல சிவந்த ஏறு,[32] முக்கண்ணன் நிறம் போல மாறுபாடு மிக்க குராலேறு,[33] திருவாகிய மறுவையுடைத்தாகிய மார்பனைப்போல அமைந்த கரிய ஏறு,[34] பால்போல வெண்மை நிறம் கொண்ட பழித்தலற்ற வெள்ளை ஏறு,[35] புள்ளிகள் வெள்ளையாய் இருக்கின்ற சிவந்த ஏறு,[36] வெள்ளைக் கால்களையுடைய

கரிய ஏறு,[37] மிக நீண்டு பொருந்திய சிவந்த மருவினையுடைய வெள்ளிய நிறமுடைய ஏறு, கரிய கழுத்தினையும் குரால்நிறத்தினையும் உடைய ஏறு, பல புள்ளிகளை உடைய ஏறு, நன்கு உயர்ந்த வெள்ளைக் கால்களையுடைய ஏறு, காலனது வலிபோலும் வலிமையையுடைய ஏறு[38] என்பன போன்ற பல ஏறுகளையும் தொழுவத்தில் விட, அதனை வீரர்கள் தழுவியுள்ளனர். வீரர்கள் இப்பல்வகை ஏறுகளைத் தழுவுவதால் பல்வேறு ஏற்றங்கள் பெற்றுள்ளனர். இதனை, "பல்வேறு ஏறுகள் தொழுவத்தில் விடப்பட்டன. கொல் ஏற்றினை வெற்றிகொள்பவனுக்குப் பல ஏற்றங்கள் கிடைக்கப்பெற்றன. அவன் விரும்பிய பெண், அவனுக்கு மாலையிடுவது பெரும் ஏற்றமாகக் கருதப்பட்டது" என்பர் இரா.வசந்தகுமார்.

### 4.3.9. தொழுவநிலை

ஏறும் இடையரும் தம்முள் மாறுபட்டுப் பொருகின்ற காட்சி இரு வேந்தர் போரிடும் போர்க்களத்தைப் போன்று இருந்ததை,

"ஏறும் பொதுவரு மாறுற்று மாறா
இருபெரு வேந்தரும் இகலிக்கண் ணுற்ற
பொருகளம் போலுந் தொழூஉ" (கலித்.105:47-49)

என்னும் அடிகள் விளக்கும்.

ஏறுதழுவும் இடத்தில் சில நேரங்களில் எதிர்பாராத விதமாக மழை பெய்யும். அம்மழைநீரில் ஏற்றினங்கள் தம்கொம்பால் மண்ணைக் குத்திச் சீற்றம் கொண்டவையாகப் போர்க்களத்திற்குச் செல்லும் வீரர் போலத் தொழுவத்தில் பாய்ந்தன.[40] பல ஏறுகளையும் தொழுவத்தில் தழுவவிட்டதனால் புகை சூழ்ந்த அந்தத் தொழுவம், சிங்கம், குதிரை,

களிறு முதலிய மாவினங்கள் பெரிய மலையின் குகையிடத்தில் ஒன்று சேர மழை பெய்ததைப் போன்று இருந்ததைக் காணமுடிகின்றது.[41] இவற்றால் தொழுவத்தில் வீரர்களும் ஏறுகளும் பொரும் நிலை போர்க்களம் போலக் காட்சியளித்தமை புலனாகும்.

### 4.3.10. வீரர்களும் எருதுகளும் பொருதல்

தொழுவத்தில் பாய்ந்த ஏறுகள் வீரர்களைத் தாக்க முற்பட்டது. வீரர்களும் அக்கோபமிக்க ஏறுகளைத் தழுவ முற்பட்டனர். இதனால் ஏறுகள் கூர்மையான கொம்பால் வீரர்களை மாறாமல் எவ்விடத்தும் குத்துவதால் உடலிலிருந்து வழியும் குருதியானது மழை நீர் பெய்வதைப் போன்றிருந்ததை,

> "தாக்குபு தம்முட் பெயர்த்தொற்றி யெவ்வாயும்
> வைவாய் மருப்பினான் மாறாது குத்தலின்
> மெய்வார் குருதிய வேறெல்லாம் பெய்காலைக்
> கொண்டல் நிரையொத் தன" (கலித்.106:11-14)

என்ற அடிகள் விளக்கும். இங்ஙனம் ஏறு தம்மைத் துளைத்தாலும் தம்முடைய புண்களிலிருந்து வழிகின்ற குருதி வழுக்க, மணலை அள்ளிக் கையில் பிசைந்து தடவிக் கொண்டு மீண்டும் ஏற்றைத் தழுவினர்.[42]

வீரர்கள் ஏற்றின் மீது பாய்ந்து சென்றனர். கொம்பினைப் பிடித்துக் கொண்டும், மார்பில் அழுந்தத் தழுவிக் கொண்டும், கழுத்தைப் பிடித்தும் ஏற்றினைத் தழுவினர். இவர்களை ஏறு இறக்கும்படிக் குத்தியது.[43] இத்தகைய சீற்றத்தையுடைய ஏற்றை, கைநெகிழாமல் தழுவ வேண்டும் எனத் தலைவனுக்கு ஏறுதழுவும் இடத்தில் உள்ளோர் நுணுக்கத்தைக்

கற்பித்தனர்.[44] இதனால் ஏறானது தன் உடலைக் குத்திக் குடல் சரிய வெளிக்கொணர்ந்தாலும் அதனுடன் இடையன் எதிர்த்துப் போரிட முயன்றனன்.[45] இது பண்டைத் தமிழரின் வீரத்தை நன்கு வெளிப்படுத்தும்.

ஆயர் மகன் ஒருவன் வெள்ளேற்றின் மீது பொருந்திக் கிடந்தனன்.[46] இந்நிலையில் செங்காரியினுடைய கொம்புகள் குத்தியதால் வழிந்தோடிய குருதி அவன்மார்பில் பாய, கழுத்தில் கிடந்த அரிய மணிகள் சிவந்த நிறத்தை அடைய, அவன் நறாம்பூவைச் சூடும் நம்பிபோல் தோற்றம் அளித்தனன்.[47] இதனால் ஆயர் மகனுக்கு ஏறுகுத்தியதால் அதிகப்படியான குருதி வெளியேறியமை புலப்படும்.

தொழுவினுள் ஏறுகளைத் தழுவுவதற்கு விரும்பிக் குதித்த பொதுவரைத் தேர்ந்தெடுத்து அவ்வேறுகள் குத்தின.[48] மிகுந்த கோபத்தையுடைய வலிமையான ஏற்றின் கொம்புகளைப்பிடித்தும்,[49] கழுத்தைப்பிடித்தும்[50] இறுகத் தழுவினர். இதனால் ஏறுதழுவினோர் தம் மார்புகளை ஏற்றின் எதிரில் கொடுக்கவேண்டிய நிலை ஏற்பட்டது. அவற்றின் கொம்புகளும் கவிழ்ந்து குத்தின. அதனால் தழுவினவர்கள் பலரும் கலங்கிப் போனதுண்டு.[51] ஏறுகள், வீரர்களைக் குத்திய கொம்பில் குடல்கள் மாலைபோல் சிவந்த நிறத்துடன் காணப்பட்டன.[52] இவற்றால் வீரர்களின் குடல் வெளிவந்தமை புலனாகும். எருதுகள், தம் கொம்புகளில் ஆயனின் குடர்களைச் சுற்றிக்கொண்டு திரிய, அவ்ஏற்றின் முன்னே நின்று ஆடி, அக்குடரை இரண்டு கைகளாலும் வாங்கி வயிற்றில் இட்டுக் கொண்ட ஆயனைப்பற்றியும் ஒரு பாடல் குறிப்பிடுகின்றது.[53] இச்செய்திகள் தொழுவத்தில் வீரர்கள் இறந்தமையை எடுத்துக்காட்டுகின்றன.

தொழுவத்தில், வெள்ளை ஏற்றைத் தழுவிக் கொண்டிருக்கும் வீரனை இளைய கரிய ஏறானது பாய்ந்து மீண்டும் தாக்கியது.[54] வெள்ளை ஏற்றினது கோபத்தை அஞ்சாதவனாய் அதனுடன் பொருத வீரனின் தலையைத் தன் கோடால் குத்தித் தகர்த்தன.[55] தொழுவத்தில் மார்பு கொடுத்துப் பொருவாரோடும், கோட்டிடையில் புகுவாரோடும், ஏறுகொல்ல வல்லவனென்று சாற்றுவாரோடும் ஏறுகள் பாய்ந்து சென்று பொருதன.[56] அதனுடன் மற்றவர்கள் தடுத்தும் கேட்காமல் ஏற்றைத்தழுவிய வீரர்களின் எலும்பை முறித்துத் தசைகளைக் கிழித்து அகற்றின.

தொழுவத்தில் விடப்பட்ட மிக்க கோபமுடைய ஏற்றின் கொம்பிடையே வீரர்கள் தாம் விரும்பும் மகளிரை விரும்பிப் பாய்வதைப் போல பாய்ந்தனர்.[57] இது ஏறுதழுவும் தலைவன் ஏற்றிற்குரிய தலைவியை மணக்க வேண்டும் என்ற உறுதியுடன் போரிட்டதை வெளிப்படுத்துகின்றது. இறுதியில் பெரிய புலித்திரளும், பெரிய களிற்றுத் திரளும் தம்முள் மாறுபட்டுப் பொருதாற் போன்று ஏற்றைத் தழுவிய பொதுவர், ஏற்றை வென்று தொழுவத்தை விட்டுச் சென்றனர்.[58] இவ்வாறு தொழுவத்தில் விடப்பட்ட ஏறுகளும் வீரர்களும் பொருது முடித்தபின் வீரர்கள் வெற்றிபெற்றமை குறிப்பிடத்தக்கது.

### 4.3.11. ஏற்றை அடக்கிய ஆயர் தம் நிலை

ஆயர்கள் தம் வீரத்தை வெளிப்படுத்தி ஏற்றுடன் பொருவர். இவ்வாறு ஏறுகளுடன் பொருத பின் அவ்வேற்றை வருத்தி அடக்கியதை ஒரு பாடல் விளம்புகின்றது.[59]

ஒரு வீரச்செயலை செய்து முடித்தவனுக்குப் பெருமிதம் ஏற்படும். அவ்வகையில் ஏற்றைத் தழுவி அடக்கிய ஆயன் ஒருவன் கொலையேற்றைத் தாம் அடக்கிவிட்டமைக்காக பெருமிதம் கொண்டதை ஒரு பாடல் சுட்டுகின்றது.[60]

ஏற்றை அடக்கிய ஆயன் நீண்ட தொலைவு தெப்பம் ஓட்டியவன் தள்ளாடிக் கரை சேர்வதைப் போன்று தளர்ச்சியுடன் தள்ளாடி நடந்து வந்தனன்.[61] ஏற்றைத்தழுவி அடக்கியவன் மார்பில் கிடந்த மாலையைத் தூக்கி எறிய, அது தலைவியின் கையில் விழுந்தது.[62] இது ஏறு தழுவி வென்றவன் தலைவிக்கு மாலை இடுவது போன்று அமைந்தது.

### 4.3.12. ஏறுதழுவுதலைக் கண்ட மகளிரின் நிலை

தன் மனம் விரும்பும் தலைவன் ஏறுதழுவி வெற்றி கொண்டனன் என்பதை அறிந்த தலைவி மகிழ்ச்சி கொண்டனள். தன் கையில் தலைவனின் மாலை கிடைத்ததால் பெரும் மகிழ்வுற்றவள், அந்நிலையில் நல்ல ஏற்றைத் தழுவின பொதுவன் முகத்தை நோக்கி ஆயர் சாதியில் பிறந்த ஆயர்மகள் கண் இமைத்தனள்.[63]

ஏறுதழுவி வென்று வந்த தலைவன், ஆய்ச்சியர் தயிர் கடைவதனால் கையில் சிந்தின புள்ளிகளோடு, ஏற்றைத் தழுவியதால் ஏற்பட்ட குருதிதோயுமாறு அவளைத் தழுவினன்.[64]

மோர் விற்று வரும் செல்வத்தை விடத் தன் தலைவன் ஏறு தழுவினன் என்று ஊரார் கூறும் சொல்தான் சிறந்தது என ஆயர்மகள் கருதியதை,

"கொல்லேறு கொண்டான் இவள்கேள்வன் என்றூரார்

சொல்லுஞ்சொற் கேளா அளைமாறி யாம்வருஞ்

செல்வமெங் கேள்வன் தருமோவெங் கேளே" (கலித்.106:43-45)

என்ற பாடல் விளக்கும். இதனால் பண்டைத் தமிழ் மக்கள் செல்வத்தைக் காட்டிலும் வீரமிக்க ஏறுதழுவும் பண்பாட்டைப் போற்றியுள்ளமை விளங்கும்.

ஏற்றினைத் தழுவி வென்ற எருமை இனத்தைச் சார்ந்த ஆயர் மகனைத் தலைவி தழுவினள். இதனைச் சுற்றத்தார் மகிழ்ச்சி பொங்க ஏற்றுக்கொண்டனர். ஆனால் தொழுவத்தில் பார்த்துக் கொண்டிருந்த அயலவரின் கண்கள் கோபம் கொண்டு தலைவியின் கண்களை நோக்கித் தீய்ந்து போயின.[65] இச்செயலானது ஏறு தழுவி வென்ற ஒரு ஆடவனை மணக்கப் பல பெண்கள் முயன்றதை எடுத்துக் காட்டுகின்றது.

சிவந்த கரிய ஏற்றினது கோட்டை ஆயர் மகன் தழுவும்பொழுது தன் நெஞ்சு அவனுடன் சென்று விட்டதாகவும், அதன் பின் பசுத் திரளையுடைய ஆயர் சாதியிற் பிறந்த மகனுக்குத் தன்னைக் கொடுப்பதால் என்ன பயனென்றும் தலைவி பெற்றோர் செயலைக் கண்டு கூறுவது அவளின் உறுதிப்பாட்டை விளக்கும்.[66] இவ்வாறு ஏறு தழுவும் களத்தில் மகளிரின் மனநிலை அமைந்திருந்தமை புலனாகும்.

### 4.3.13. விழுப்புண் போற்றல்

ஆயர்கள் ஏறுகளைத் தழுவும்பொழுது கொம்புகளால் குத்தப்பட்டு புண் ஏற்பட்டது. பொதுவனுடைய மார்பில் கொலைத் தொழிலையுடைய ஏற்றினுடைய கொம்புகள் விழுப்புண் ஏற்படுத்தியதால் ஆயர் மகளிர்

அவற்றைப் போற்றிப் பாடியுள்ளனர்.[67] ஏறுகளினால் ஏற்பட்ட ஆயர் தம் புண்களை ஆயச்சியர் தழுவி ஆற்றியதை,

"முயங்கிப் பொதிவெம் முயங்கிப் பொதிவேம்

முலைவேதின் ஒற்றி முயங்கிப் பொதிவேம்

கொலையேறு சாடிய புண்ணையெங் கேளே" (கலித்.106:34-36)

என்னும் பாடல் விளக்கும்.

### 4.3.14. தழுவப்பட்ட ஏறுகள்

ஏறுதழுவிய வீரர்களைத் தலைவியின் சுற்றத்தாரும், தலைவியும் அரவணைத்துக் கூட்டிச் சென்றதைப் போல ஏறுகளையும் இருப்பிடத்திற்கும், மேய்ச்சலுக்கும் கொண்டு சென்றனர். இதனை,

"தொழுவினுள் கொண்டவே றெல்லாம் புலம்புக" (கலித்.104:60)

என்னும் பாடலடி விளக்கும்.

### 4.3.15. வெற்றி பெற்றவர்களுக்குத் திருமணம்

ஏறு தழுவி வெற்றி கொண்டவர்களுக்குத் தலைவியைத் திருமணம் முடித்தனர். தொழுவத்தில் விடப்பட்ட ஏற்றைத் தழுவித் தலைவன் வெற்றி கொண்டனன். இதனால் அதனைக் கண்ட சுற்றத்தார்கள் ஏறுதழுவின தலைவனுக்கே தலைவியை மணஞ்செய்து கொடுக்க வேண்டும் எனத் தண்ணுமையில் ஒலி எழுப்பி ஆரவாரம் செய்தனர்.[68] ஊரிலுள்ளோர் அலர் கூறுவதை இழிவுபடுத்தி, தலைவியின் சுற்றத்தார் காரிஏற்றைத் தழுவி வென்ற தலைவனுக்கு மணம்பேசி முடித்துள்ளனர்.[69] இவ்வாறு ஏறு தழுவி வெற்றிகொண்ட வீரர்களுக்கு ஆயர்களும் சுற்றத்தாரும்

தலைவியைத் திருமணம் செய்து வைத்துள்ளனர். இத்திருமணத்திற்கு மணலைக் கொண்டு வந்து மன்றில் பரப்பித் தன் இல்லத்தைச் செம்மண்ணால் பூசிக் கோயிலைப் போல் வைத்திருந்தனர். சுற்றத்தாருடன் எருமைப் பேட்டின் கொம்பினை நட்டுத் திருமணத்தைச் செய்தனர்.[70] இதனை, "முல்லை நிலத்தில் மணச்சடங்கின்பொழுது, பெண் எருமையின் கொம்பை வழிபட்டுச் சடங்கு செய்தனர். குடும்ப விருத்திக்காக இன வளத்தைப் பெருக்கும் சின்னமாக, பெண் எருமைக் கொம்பை வழிபடும் நம்பிக்கையை இதனால் அறியலாம்"[71] என்பர் கா.சுப்பிரமணியன். இவற்றால் ஆயர்தம் திருமணத்திற்கு எருமைக்கோடு பயன்படுத்தப்பட்டமை புலப்படும். இதனைப் போன்று யானையை வெல்லும் பெருவலியையுடைய பெருவேந்தர்க்கே தலைவியை மணம் முடித்துத் தருவதாக அவளின் தந்தை உரைத்ததைப் புறநானூறு எடுத்துரைக்கும்.[72] மேற்சுட்டியவற்றால் எருது, யானை போன்றவற்றை வென்றவர்கட்கு பெண்களை மணம் முடித்துத் தந்திருப்பதை அறிய இயலும்.

### 4.4. நீராட்டு விழாவில் விலங்குகள்

பரிபாடலில் உள்ள வையைப் பாடல்களில் மக்கள் புதுவெள்ளப் பெருக்கு எடுத்து வரும் வையையில் நீராடச் சென்றமை பற்றி விரிவாகக் கூறப்பட்டுள்ளது. மதுரை மக்கள் நீராடச் செல்ல விலங்குகளை வாகனமாகப் பயன்படுத்தியுள்ளனர். ஆடவரும், பெண்டிரும் தம்மை அலங்கரித்துக் கொண்டு அவரவர் நிலைக்குத் தகுந்தாற்போல் யானைகளிலும், குதிரைகளிலும், தேரிலும் சென்றனர். இதற்கு வாகனமாக விலங்குகள் பயன்பட்டன. தொல்காப்பியம்,

"தேரும் யானையும் குதிரையும் பிறவும்

ஊர்ந்தனர் இயங்கலும் உரியர் என்ப" (தொல்.1158)

என்ற நூற்பாவில் மக்கள் போக்குவரத்திற்கு விலங்குகள் பயன்பட்டமையை விளக்குகின்றது.

வையையில் நீர் விழாவின் பொருட்டுச் செல்ல மக்கள் அணிகளையும், சாந்துகளையும் அணிந்து கொண்டனர். சிலர் குதிரை,பிடி, களிறு ஆகியவற்றின் மீது ஏறிச் சென்றனர். ஆடவர் குதிரையைச் செலுத்தினர். சிலர் தேரில் ஊர்ந்தும் சென்றனர்.[73] இவற்றால் மக்கள் நீராடலுக்குச் செல்ல விலங்குகள் பயன்பட்டமை புலனாகும்.

மக்கள் அனைவரும் ஏதேனும் ஒரு விலங்கின் வழி ஊர்ந்து சென்று வையையை அடைந்தனர். வையைப்புனலில் ஆடும் பொருட்டு மகளிர் மேகலையை இறுகப்புனைந்தனர். வண்ணநீரை வீசும் கருவிகளையும், பனி நீர் கலந்த சந்தனத்தையும் எடுத்துக் கொண்டனர். பின்னர்த் தமக்குத் தகுந்தாற் போல் குதிரை, யானை, எருது, அத்திரி போன்ற விலங்குகள் பூட்டப்பட்ட வண்டிகளிலும், இவ்விலங்குகளின் மீதும் ஏறிச் சென்றுள்ளனர்.[74]

நீர் விழாவிற்குச் செல்லும்பொழுது வழியில் யானைகளுக்கு மதம் பிடித்து, அவை அதில் ஏறிசெல்வோருக்குத் துன்பத்தை ஏற்படுத்தின. மதுரை நீர் விழாவின்பொழுது ஒரு களிறானது தனக்குப் பக்கத்தில் வரும் பிடியைக் கண்டு மயக்கமுற்றது. தன் மேலிருந்த மைந்தர் செலுத்த செல்லாமல் ஒரு புலிமுக மாடத்திற்கு அருகில் நின்றது. அப்பொழுது அந்தப்பிடி அக்களிற்றின்மேல் சென்ற மனத்துடன் மயக்கமடைந்து மேலுள்ள மகளிருடன் நடத்தலிற் சோர்ந்து சென்றது. நின்ற களிறு,

புலிமுக மாடத்திற் செய்து வைத்திருந்த புலியுருவத்தைக் கண்டு மெய்யான வேங்கை என்று கருதி, தம்மேல் பாயும் என அஞ்சித் தன் மேலிருந்த மகளிர் நடுங்கும்படி பாகர் தடுத்தும் அடங்காமல் சினங்கொண்டது. அதனைக் கண்ட களிறு பிளிறி அங்குசத்திற்கும் அடங்காமல் பெருஞ்சினம் கொண்டது. இந்நிகழ்ச்சிகளைக் கண்ட மைந்தர் அக்களிற்றைப் புலிமுகமாடத்தினின்றும் போக்கிப் பிடியின் பால் சேர்த்தனர். பிடியும் களிறும் அமைதியுற்றன. இதனால் மகளிரும் நடுக்கம் தீர்ந்து மகிழ்ந்தனர்.[75]

நீராடுதல் பொருட்டு நீரணிகளை அணிந்து கொண்ட இளைஞரும், மகளிரும், யானையின் மேலும், குதிரையின் மேலும் ஏறிப் போர்க்களத்திற்குச் செல்பவர்களைப் போல வையை நோக்கிப் புறப்பட்டனர்.[76] மதுரையிலுள்ளோர் துயில் நீங்கி வையையில் நீராடும் பொருட்டு விரைந்தனர். அதன் விரைவான நோக்கில் சிலர் குதிரையில் செல்வதா, எருதுகளில் செல்வதா என ஐயுற்றனர். சிலர் குதிரைகளுக்கு இடும் சேணம் முதலியவற்றை யானைகளுக்கு இட்டனர். சிலர் மறதியால் யானைகளுக்கு ஒன்றும் அணியாமல் நடத்தினர்.[77] நீராடச் செல்லும் ஆர்வத்தால் இவ்வாறு மதுரை மக்கள் நடந்து கொண்டதை அறிய முடிகின்றது. நீராட விலங்குகளின்மேற் சென்றவர் அவ்விலங்குகளை நீராட்டி மருதமரத்தில் கட்டிவைத்ததைக் குறுந்தொகை விளக்குகின்றது.[78]

நீராடச் செல்லும் மகளிர் தேருக்கு மகளிரும், மைந்தர் தேருக்குப் பாகரும் தேரோட்டியாகச் செயல்பட்டுள்ளனர்.[79] வையை நீராட்டு விழாவின்பொழுது முன்பு உழைப்புக்குப் பயன்படுத்த முடியாத எருதுகளையெல்லாம் நீர்விளையாட்டில் செலுத்தியுள்ளனர்.[80] இந்நிகழ்ச்சி

எருதிற்கு நோய் நீங்கி மீண்டும் உழைப்பிற்குப் பயன்படும் என்ற நம்பிக்கையில் செய்யப்பட்டிருக்கக்கூடும். இதனால் சங்ககால மக்களன்றி விலங்குகளும் நீர்விளையாட்டில் பங்குபெற்றமை புலப்படும்.

### 4.4.1. நீராடலைப் பார்க்கச் செல்லுதல்

சங்ககால மக்கள், நீராடாமல் அதனைப் பார்க்க விலங்குகளின்மீது சென்றுள்ளனர். நீராடலையும், நீரின் அழகையும் காணச் சில மகளிர் குதிரையின் மீதும், பிடியின் மீதும் ஏறிச் சென்றதை,

“நீரணி காண்போர் நிரைமாட மூர்குவோர்
பேரணி நிற்போர் பெரும்பூச றாக்குவோர்
மாமலி யூர்வோர் வயப்பிடி யுந்துவோர்” (பரி.10:27-29 )

என்ற அடிகள் விளக்கும்.

நீராடுதல் என்பது தமிழரின் பண்பாட்டுக்கூறுகளில் ஒன்றாக விளங்கியுள்ளது. சங்ககால மக்கள் நீராடுதலுக்கு ஆநிரை, யானை, குதிரை, அத்திரி ஆகிய விலங்குகளை வாகனமாக்கிச் சென்றுள்ளனர். இவ்விலங்குகளையும் நீராட வைத்துள்ளனர். இந்நிகழ்ச்சிகள் சங்கத்தமிழரின் பண்பாட்டுக்கூறுகளில் விலங்குகள் இடம்பெற்றமையை விளக்குகின்றன.

## 4.5. வழிபாட்டில் விலங்குகள்

சங்ககால மக்கள் கடவுளை வழிபடுதலின்வழி தம் செயல்கள் வெற்றியடைவதாக நம்பினர். எனவே, இறைவழிபாட்டிற்குச் செல்ல விலங்குகளைப் பயன்படுத்தியுள்ளனர்.

### 4.5.1. கோவிலில் விலங்குகள்

சங்க காலத்துக் கோவில்களில் விலங்குகளைப் பராமரித்து வந்துள்ளனர். தெய்வமுள்ள கோவில்களில் கவரியும், குதிரையும் இருந்ததை நெடுநல்வாடை விளக்குகின்றது.[81] பிடிகள் புதிய வழிப்போக்கர்கள் பலரும் வந்து தொழுது தங்கும் தெய்வம் உறையும் அம்பலத்தில் பருத்த, நெடிய தூண்சாயும்படி தன் உடம்பை உரசிப் பெரிய நல்ல களிறுகளுடன் கூடித் தங்கியிருந்தமையை கடியலூர் உருத்திரங்கண்ணனார் விளக்குவர்.[82] வழுதியுடன் சென்றவர்களுள் சிலர் கோயிலில் உள்ள குரங்குகளுக்கு உண்ணுவதற்குரிய பண்டங்களைக் கொடுத்தமை, சிலர் கருமுக முசுக்கலைகளுக்குக் கரும்பை அளித்தமை போன்றவற்றைப் பரிபாடல் குறிப்பிடும்.[83] தற்காலத்தில் கோயில்களில் யானை, பசு போன்றவற்றை வளர்த்து வருவது இதன் எச்சம் எனக் கருத இடமுண்டு.

### 4.5.2. விலங்குகளில் வழிபடச் செல்லுதல்

கோயிலிலுள்ள தெய்வங்களை வணங்குவதற்கு விலங்குகளின் மீது ஏறிச் சென்றுள்ளனர். மதுரை மக்கள் திருப்பரங்குன்றத்தில் உள்ள செவ்வேளை வணங்க வேண்டிக் குதிரையிலும், தேரிலும் ஏறிப் புறப்பட்டமையை பரிபாடல் சுட்டும்.[84]

பாண்டிய மன்னனுடன் முருகவேளைத் துதிக்க வந்த மக்கள் தாம் ஏறி வந்த யானைகளை வழியினின்றும் அகற்றி மரங்களிற் கட்டி அவற்றிற்கு உணவாகக் கரும்பை முறித்துக் கொடுத்தனர். சிலர் குதிரைகளையும் வழியினின்று நீக்கி நிறுத்தினர்.[85] இதனால் வாகனமாகப்

பயன்படுத்தப்பட்ட விலங்குகள் ஒழுங்குபட வரிசையாக நிறுத்தப்பட்டமை புலனாகும்.

### 4.5.3. காமனை வழிபடுதல்

இளவேனிற்காலத்தில் ஊரிலுள்ளோர் காமனுக்கு விழா எடுத்துச் சிறப்புச் செய்தனர். இதனை,

"நாமில்லாப் புலம்பாயின் நடுக்கஞ்செய் பொழுதாயின்

காமவேள் விழவாயின் கலங்குவள் பெரிதென" (கலித்.27:23-24)

என்ற அடிகள் உணர்த்தும். ஊரார் எடுக்கும் காமன் விழாவிற்கு ஆய்ச்சியர் தம் கையில் பால் கொண்டு மாயோன் மகனாகிய காமனை வழிபடக்கோவிலுக்குச் சென்றதை,

"படையிடுவான் மன்கண்டீர் காமன் மடையடும்

பாலொடு கோட்டம் புகின்" (கலித்.109:19-20)

என்ற பாடலடிகள் புலப்படுத்தும். சங்க மக்கள் இறைவனை வழிபட பசுவின்பாலைப் பயன்படுத்தியமை சுட்டத்தக்கது.

## 4.6. உயிர்ப்பலியிடுதல்

காலந்தோறும் மக்கள் இறைவழிபாட்டை மேற்கொண்டு வருகின்றனர். இறைவனை வழிபட்டுத் தம் செயல்களைத் தொடங்குவது மரபாக உள்ளது. இச்செயல்கள் நன்முறையில் ஈடேற 'உயிர்ப்பலி' கொடுப்பர். தொல்காப்பியம் விலங்குப் பலி பற்றிக் குறிப்பிடவில்லை. "வெட்சித் திணையில் வரும் கொற்றவைநிலை என்பதற்குக் கொற்றவைக்குப் பரவுக்கடன் கொடுக்குங்கால் அவளதுநிலை கூறுதல்"[86]

என்பர் இளம்பூரணர். உயிரைப்பலியிடல் என்பது, "தாம் வேண்டிக்கொண்ட காரியம் வெற்றிபெறும்போது அவ்நேர்த்திக்கடனுக்காக ஆடு, மாடு போன்ற உயிர்களைப் பலியிடுதல் ஆகும்"[87] என்பர் சே.செந்தமிழ்ப்பாவை. கொற்றவை போர்த்தெய்வம் ஆகையினால் அவளுக்குரிய பரவுக்கடன் விலங்குப்பலியாக இருக்க இடமுண்டு. "கொற்றவைக்கும், முருகக் கடவுளுக்கும் விலங்குப் பலி சங்க கால நூல்களுள்ளும் கூறப்படுவதால் தொல்காப்பியர் காலத்தும் விலங்குப்பலி இருந்ததெனக் கருதலாம்"[88] என்பர் காமாட்சி சீனிவாசன். எனவே தொல்காப்பியர் காலந்தொட்டுத் தெய்வங்களுக்கு விலங்குப்பலி கொடுத்து வந்தமை புலனாகும்.

### 4.6.1. வேட்டைப் பலி

மக்கள் தத்தம் வினை மேற்கொள்கின்றபொழுது தெய்வத்தை வணங்கிச் செல்வது மரபு. தாம்சென்ற வினை முடிவுறாமல் தடைப்படுமாயின் தெய்வக்குற்றம் ஏற்பட்டதாகக் கருதி, அதனை நீக்குவதற்குப் பலி கொடுப்பது போன்ற செயல்களில் ஈடுபடுவர். இதனைப் போன்று சங்க காலத்திலும் கானவர்களின் வேட்டைக் குறி தவறுமாயின் கானகத் தெய்வத்தை வழிபடும் வழக்கம் இருந்துள்ளது. ஆமானை வேட்டையாடியபொழுது குறி தவறியதற்காகவும், மழை பெய்ய வேண்டியும் தம் சுற்றமொடு சென்று பலியைப் படைத்ததை,

"அமர்கண் ஆமான் அருநிறம் முள்காது
பணைத்த பகழிப் போக்குநினைந்து கானவன்
அணங்கொடு நின்றது மலைவான் கொள்கெனக்

கடவுள் ஓங்குவரை பேண்மார் வேட்டெழுந்து

கிளையொடு மகிழுங் குன்ற நாடன்" (நற்.165:1-5)

என்னும் பாடல் விளக்கும். இதனால் வேட்டையின் பொருட்டு வழிபாடு நடத்திப் பலியிட்டிருப்பதை அறிய இயலும்.

## 4.6.2. ஆடுபலியிடுதல்

தெய்வத்தின் முன் ஆடு பலியிடுதல் பண்டை வழக்கமாக இருந்திருக்கின்றது. தெய்வத்தின் முன் ஊன் கலந்த பலிச்சோறு படைத்தனர். இப்பலிச்சோற்றை உண்ண வேண்டிப் பேயானது தான் நிலைகொண்டிருந்த பாழ் மன்றத்தை மோதியெழுந்ததை நற்றிணை சுட்டும்.[89]

பேய் பிடித்தவர்களுக்கு ஆட்டின் குருதியைப் பூசுவதாலும், தெய்வத்திற்கு வழிபாடு செய்வதாலும் பேய் நீங்கும் என்ற நம்பிக்கை சங்ககால மக்களிடையே இருந்தது. ஆட்டின் கழுத்தை அறுத்து அதன் இரத்தத்தில் தினைகளைக் கலக்கிப் பல தெய்வங்களையும் பலவாறு வணங்கியுள்ளனர்.[90] மறியறுத்துத் தினைபரப்பி வைத்து முருகன் முதலியோரை வழிபட்டதைத் திருமுருகாற்றுப்படை விளக்கும்.[91] அச்சத்தின் காரணமாக தெய்வத்திற்கு விலங்குகளைப் பலியிட்டமை தெளிவாகும்.

தலைவியின் உடல் மாறுபாடு கருதி, இந்நிலை மாற தெய்வத்திற்கு விலங்குகளைப் பலியிடும் மரபு இருந்தது. தலைவியின் உடல் பசலையினால் பொன்நிறத்தைப் போன்று வெளுத்துக் காணப்பட்டது. அதனைக் கண்ட அன்னையர், நீர்த்துறையினிடத்து

நிலைபெற்ற தெய்வத்திற்கு வெள்ளாட்டுக் கிடாயைச் செலுத்தித் தன் மகளுக்கு உற்ற நோய் எதுவென அறியமுடியாமல் அழுது நின்றதை அகநானூறு சுட்டும்.[92]

தலைவியின் பசலை நோயை அறியாமல் அன்னை முருகவேள் அணங்கியது என்று கருதினள். இதனால் தெய்வம் உறையும் கோவிலுக்கு அழைத்துச் சென்றனள். பூசாரி பூக்களைத் தூவி ஆட்டினை வெட்டிப் பலி கொடுத்ததை,

"நன்னுதற் பசந்த படர்மலி அருநோய்
அணங்கென உணரக் கூறி வேலன்
இன்னியங் கறங்கப் பாடிப்
பன்மலர் சிதறியர் பரவுறு பலிக்கே" (நற்.322:9-12)

என்ற அடிகள் உணர்த்தும்.

தலைவனைப் பிரிந்ததால் தலைவியின் உடல் வேறுபடுகின்றது. இதனைப் பிறிதொரு நோய் எனக் கருதிய அன்னை கழங்கில் அம்மாறுபாட்டைக் கண்டனள். அந்நோயை வெறியாட்டெடுத்தல் மூலம் தீருமென்று உள்ளத்தில் நினைத்தனள். அதனால் முருகவேளுக்கு ஆட்டை அறுத்துப் பலியிட்டதை,

"அணங்கறி கழங்கிற் கோட்டங் காட்டி
வெறியென உணர்ந்த உள்ளமொடு மறியறுத்து
அன்னை அயரும் முருகுநின்
பொன்னேர் பசலைக் குதவா மாறே" (நற் .47:8-11)

என்ற பாடல் உணர்த்தும். பலவகைநிறங்களுடைய சோற்றோடு சிறிய ஆட்டுக்குட்டியைக் கொன்று அவ்உதிரத்தால் தலைவியின் நெற்றியில்

தடவி முருகக் கடவுளை வணங்கிப் பலியாகக் கொடுத்ததை குறுந்தொகை குறிப்பிடுகின்றது.[93]

தலைவியின் பொருட்டு பெரிய ஆட்டுக் கிடாய் அன்றிச் சிறிய ஆட்டுக்குட்டிகளும் தெய்வத்திற்குப் பலி கொடுக்கப்பட்டிருக்கின்றது.[94] அன்னையர் தலைவியின் துன்பம் தீர்க்க ஆட்டுக்குட்டியின் உயிரைப் பலியிட்டதை பேரிச்சாத்தனார் விளக்குவர்.[95] ஊரில் தெய்வங்களுக்கு விழா எடுக்கும் பொழுதும் சிறிய தினையரிசியைப் பூக்களோடு கலந்து வழிபாடு நிகழ்த்தி மறியறுத்துள்ளனர்.[96]

சங்க காலத்தில் மக்களின் நன்மை கருதி கோவில் விழாக்களில் மறியறுத்துக் கொண்டாடினர். பசியும் பிணியும் நீங்கவும் தெய்வத்திற்கு ஆட்டுக்கிடாயை வெட்டி உதிரத்தை வெள்ளரிசியில் கலந்து சிறுபலியிட்டதை நக்கீரர் உரைப்பர்.[97]

**4.6.2.1. ஆட்டு மந்தையைப் பலியிடுதல்**

சங்ககால மக்கள் ஓர் ஆட்டைப் பலியிட்டதோடு மட்டுமின்றி, ஆட்டு மந்தையை ஒருசேரத் தொகுத்து அதனையும் பலியிட்டுள்ளனர். ஆற்றங்கரையில் வெறியாட்டெடுக்கும் இடங்களில் ஆட்டின் தொகுதிகளை நிறுத்தினர். அவ்வாடுகள் பலியிடப்பட்டு இறந்துபடுதல் உறுதியாகும் என்பதை,

"நீர்நிலை பெருத்த வார்மண லடைகரைக்
காவு தோறிழைத்த வெறியயர் களத்தின்
இடங்கெடத் தொகுத்த விடையின்" (புறநா.366:21-23)

என்ற பாடல் விளக்கும்.

**4.6.2.2. நடுயாமத்தில் பலியிடுதல்**

ஆட்டினைப் பகலில் பலியிட்டதோடு இரவிலும் பலியிட்டிருக்கின்றனர். வளம்பொருந்திய கோவிலில் நடு இரவில் அழகிய செந்தினையைக் குருதியுடன் கலந்து தூவி முருகனை வணங்கினர். அவ்விடத்தில் ஆடு பலியிடப்பட்டதை,

"வளநகர் சிலம்பப் பாடிப் பலிகொடுத்
துருவச் செந்தினை குருதியொடு தூஉய்
முருகாற்றுப் படுத்த உருகெழு நடுநாள்" (அகநா.22:9-11)

என்ற அடிகள் உணர்த்தும். இப்பலி தலைவியின் பசலை நோயின்பொருட்டுச் செய்யப்பட்டது.

**4.6.2.3. மன்னன் பலிச்சோறு படைத்தல்**

மன்னர்கள் தம் படைகளுடன் சென்று வெற்றிக்காகப் பலிச்சோறு படைத்துள்ளனர். இதனை, பாலைநிலத்தில் உதியன் சேரலாதன் குதிரைப் படைகளுடன் சென்று தன் வெற்றிக்காக முன்னோர்களுக்குப் பலிச்சோறு படைத்தனன் என்னும் செய்தி விளக்கும்.[98]

**4.6.3. பசுவினைப் பலியிடல்**

வெட்சி வீரர்கள் பாலைநிலத்தில் பசுவினைக் கவர்ந்து வந்தனர். தமது வெற்றிக்குக் காரணமாக விளங்கிய தெய்வத்திற்கு வேப்பமரத்தடியில் பசுவினைப் பலியிட்டு, அதன் புலாலைப் புழுக்கி உண்டதை அகநானூறு குறிப்பிடுகின்றது.[99] பசுவைக் கவர்ந்து வந்த

வெற்றிக்காக அப்பசுவினைத் தெய்வத்திற்குப் பலியிட்டமை குறிப்பிடத்தக்கதாகும். இதனை, "பெரும்பாலும் உயிர்ப்பலியாக இடப்பெறும் விலங்கினம் ஆணாகத்தான் இருக்கும். ஈண்டு, பசு பலியாகக் கொடுக்கப் பெற்றுள்ளதால் இத்தெய்வம் பெண் தெய்வமாக இருக்கலாம். பசுவைப் பலிகொடுக்கும் வழக்கம் ஒரு புதிய வழக்கமாகும்"[100] என்று குறிப்பிடுவர் அ.விசுவநாதன்.

### 4.6.4. பறவைக்குப் பலிப்பொருள் இடுதல்

இல்லத்தில் காக்கை கரைந்தால் வீட்டிற்கு விருந்து வரும், வெளியில் சென்றவர்கள் ஆக்கமொடு திரும்புவர் என்ற நம்பிக்கை சங்க மக்களிடம் இருந்தது. எனவே, நன்மை நடப்பதற்காகக் காகத்திற்குப் பலியிட்டுள்ளனர். இங்ஙனம் காக்கைக்குச் சோற்றுடன் விலங்கிறைச்சியையும் சேர்த்துப் பலியிட்டதை,

"மறுவி றூவிச் சிறுகருங் காக்கை
யன்புடை மரபினின் கிளையோ டாரப்
பச்சூன் பெய்த பைந்நிண வல்சி
பொலம்புனை கலத்திற் றருகுவென்" (ஐங்.391:1-4)

என்னும் அடிகள் புலப்படுத்தும்.

காக்கை விருந்தினர் வருகையைக் கரைந்து தெரிவித்தது. இதனால் ஏழு வள்ளல்களில் ஒருவனாகிய கண்டீரகக் கோப்பெருநள்ளியின் காட்டிலுள்ள இடையர்கள் பசுக்கள் தந்த நெய்யோடு, தொண்டி என்னும் ஊரில் விளைந்த வெண்ணெல்லரிசிச் சோற்றை ஏழு பாத்திரங்களில் ஏந்திப் பலியாகக் கொடுத்ததை,

"திண்டேர் நள்ளி கானத் தண்டர்

பல்லா பயந்த நெய்யிற் றொண்டி

முழுதுடன் விளைந்த வெண்ணெல் வெஞ்சோ

றெழுகலத் தேந்தினுஞ் சிறிதென் றோழி

பெருந்தோ ணெகிழ்த்த செல்லற்கு

விருந்துவரக் கரைந்த காக்கையது பலியே" (குறுந்.210:1-6)

என்னும் பாடலடிகள் விளக்கும். காக்கைக்கு இடும் உணவினைப் பலி என்று குறிப்பிட்டுள்ளனர். காக்கைக்கு ஏழு பாத்திரங்களில் நெய் கலந்த உணவிடுவது வழக்கமாக இருந்திருக்கிறது. இன்றும் காக்கைக்குச் சோறிடும் வழக்கம் இருப்பது குறிப்பிடத்தக்கது.

### 4.6.5. முரசிற்குப் பலியிடுதல்

முரசு என்பது போர்க்களத்தில் ஒலிக்கப்படும் தோற்கருவியாகும். இதனை அரசர் அரண்மனைகளில் பாதுகாப்பாக வைத்திருப்பர். போர்க்காலங்களில் மட்டும் இதனைப் பயன்படுத்துவர். போர் தொடங்கும் முன் இம்முரசை எடுத்து வந்து, அலங்காரம் செய்து, யானைமீது ஏற்றுவர். பின் போரில் வெற்றி பெறவேண்டும் எனக் கருதி அம்முரசிற்கு விலங்குக் குருதியைப் பலியாகக் கொடுப்பர்.[101] இதனை, 'பலிபெறு முரசம்'[102] என்றும் குறிப்பிடுவர். கொற்றமுரசிற்கு நீராட்டி அணிசெய்து பலியூட்டி வணங்கியதை ஐங்குறுநூறு குறிப்பிடுகின்றது.[103] சிலப்பதிகாரத்தில்,

"உயிர்ப்பலி யுண்ணும் உருமுக்குரன் முழக்கத்து

மயிர்க்கண் முரசமொடு மாதிரம் அதிர" (சிலப்.26:195-196)

என்ற அடிகளில் முரசிற்கு உயிர்ப்பலி கொடுத்தமை பற்றிய குறிப்பு இடம்பெற்றுள்ளது. எனவே, சிலப்பதிகார காலத்தும் முரசிற்கு உயிர்ப்பலி கொடுத்தமை விளங்கும். இவற்றால் போரில் வெற்றிபெறுதற்காக நோக்கில் முரசிற்கு விலங்கினைப் பலிகொடுத்தமை புலப்படும்.

### 4.7. வேள்வியில் விலங்குகள்

சங்ககாலத்தில் பல்வேறு வேள்விகள் செய்யப்பட்டுள்ளன. இதனை, 'பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி'[104] என்னும் பாண்டிய மன்னனின் பெயரும் நன்கு விளக்கும். வேள்வியில் விலங்குகள் இடம்பெற்றமை பற்றி நான்கு இடங்களில் குறிப்புளது. திருமாலுக்கு வேள்வி செய்யப் பசுக்களை வாங்கியதைப் பரிபாடல் சுட்டுகின்றது.[105]

வேள்வி செய்ய நெய்யைப் பயன்படுத்தியுள்ளனர்.[106] காட்டிலுள்ள எழுவகைப்பட்ட பசுக்களாலும், நாட்டிலுள்ள எழுவகைப்பட்ட பசுக்களாலும் கொணர்ந்த நெய்யை நீரை விட அதிகமாக வேள்வியில் பயன்படுத்தியமையை,

"காடென்றா நாடென்றாங்
கீரேழி னிடமுட்டாது
நீர்நாண நெய்வழங்கியும்" (புறநா.166:19-21)

என்ற பாடலடிகள் புலப்படுத்தும். இவற்றால் சங்ககாலத்தில் வேள்வியில் பசு, நெய் போன்றவற்றின் பயன்பாட்டை அறிய இயலும்.

### 4.8. யானையின் கவளத்தை உண்ணுதல்

சங்கத் தமிழர் தெய்வங்களுக்குப் பலி செலுத்தி, அப்பலியைத் தாம் உண்டு மகிழ்ந்தனர். கோவிலில் யானைக்குப் படைக்கப்பட்ட

உணவை அது உண்டதுபோக மீதியுள்ளதை மகளிர் உண்டனர். அவ்வாறு உண்ணாது ஒழிந்தால் திருமணமான மகளிர் தம் கணவனுடைய சிறந்த அன்பைப் பெறார், கன்னி மகளிர் குறைவற்ற மணாளரைப் பெறார் என்ற நம்பிக்கையிருந்தது.[107] எனவே சங்க மகளிர் சிறந்த கணவன் பெறவேண்டி யானையுண்ட கவளத்தை உண்டிருப்பதைக் காண முடிகின்றது. இன்றும் சில தமிழகக் கோவில்களில் குருதிகலந்த உணவு மகப்பேறு கருதி மகளிருக்கு வழங்கப்படுவது இவ்விடத்தில் சுட்டத்தக்கது.

### 4.9. நடுகல் வழிபாடு

வீரர்கள் போரில் வீரமரணம் எய்துவது இயல்பு. இங்ஙனம் இறந்த வீரர்களுக்குச் சிறப்புச் செய்யும் பொருட்டு அவனது பெயரில் நடுகல் நட்டு வழிபடுவர். இது சங்ககால மரபாகும். இந்நடுகல் வழிபாடே காலப்போக்கில் சிறுதெய்வ வழிபாடாக வலுப்பெற்றது. குலதெய்வமாகவும் போற்றப்பெற்றது. குதிரையையுடைய பண்ணன் என்பவன் போரில் இறந்தபின் பசுக்களையுடைய கோவலர்கள் அவனை நடுகல்லாய் வணங்கிப் போற்றியுள்ளமை இவ்விடத்தில் சுட்டத்தக்கது.[108] இதனைப் போன்று உயர்ந்த கோட்டினையுடைய யானையைக் கொன்று தாமும் விழுப்புண்பட்டு வீழ்ந்திறந்த வீரனின் பெயரும், பீடும் எழுதி நட்ட கல்லை, கடவுளாகக் கருதி அவனது வழிவந்தோர் வழிபட்டனர். அதற்கு நெல்லைச் சொரிந்து வழிபாடும் செய்ததைப் புறநானூறு குறிப்பிடுகின்றது.[109]

நிரைமீட்கப் போரிட்டு இறந்த கரந்தை மறவர்களுக்கு நடுகல் நடுவர். பாலைநிலத்துக் கரந்தை வீரராகிய மறவர் தம் முன்னோரின் நடுகல்லில் மயிர்த்தோகைகளைச் சூட்டித் துடியை அடித்து நெல்லால்

உண்டாக்கிய கள்ளுடன் செம்மறிக்குட்டியைப் பலிகொடுத்ததை அகநானூறு சுட்டுகின்றது.[110] அரசன், போர்க்கள வீரன், கரந்தை வீரன் ஆகியோருக்கு நடுகல் நட்டு அதற்கு ஆடுகளைப் பலியிட்டிருப்பது குறிப்பிடத்தக்கது. சங்ககாலத்தில் விலங்கினங்களைப் பலியிட்டதைப் பற்றிய குறிப்புகள் மட்டுமே இடம்பெற்றுள்ளன.

## தொகுப்புரை

சங்க இலக்கியம் தமிழின மக்களின் தனிநாகரிகத்தையும், கால வளர்ச்சியால் நிகழ்ந்த பண்பாட்டு மாற்றத்தையும் காட்டுகின்றது. அவ்வகையில் ஏறுதழுவுதல் என்பது முல்லைக் கலியில் மட்டும் இடம்பெறுவது பிற்காலப் பண்பாட்டு வளர்ச்சிக் கூறாகும்.

தோழி தலைவியின் பொருட்டுத் தலைவனை ஏறுதழுவ வற்புறுத்துவதன்வழி, தலைவனும் தலைவியும் முன்னரே களவில் ஈடுபட்டமை புலனாகும். களவு கற்பாக மாற, பெற்றோர் ஏறுதழுவுதலை நிகழ்த்தித் திருமணத்தை நடத்தியுள்ளனர். மக்களின் இன்றியமையா வாழ்க்கை நிகழ்வுகளில் ஒன்றான திருமணத்தில் விலங்குகள் இடம்பெற்றமை பண்பாட்டில் விலங்குகள் பெற்ற இடத்தை விளக்கும்.

மக்கள் நீராட்டு விழாவிற்கும், இறைவழிபாட்டிற்கும் செல்ல அத்திரி, ஆநிரை, குதிரை, யானை போன்ற விலங்குகள் வாகனமாகப் பயன்பட்டுள்ளன.

சங்ககாலத்தில் பல்வேறு காரணங்களுக்காக மக்கள் விலங்குகளைப் பலியிட்டுள்ளனர். இதில் தலைவியின் உடல் மாறுபாடு, பிணி நீங்குதல், போரில் வெற்றி பெறுதல், நடுகல்லை வணங்குதல் போன்ற காரணங்களுக்காக ஆட்டைப் பலியிட்டுள்ளனர்.

போர்க்களவெற்றிக்காகப் பசுவைப் பலியிட்டமை புதிய வழக்கமாகும். பறவைக்குப் பலிப்பொருள் இடுதல், யானை உண்ட உணவை உண்ணுதல் போன்றவை மக்கள் கொண்ட நம்பிக்கையின் வெளிப்பாடாகும்.

பலியிடும் நிகழ்ச்சிகளுக்கு ஆடு, பசு போன்ற விலங்குகள் மட்டுமே பயன்படுத்தப்பட்டுள்ளன. வேள்விப்பொருளாகப் பசு வாங்கப்பட்டமை சங்ககால மக்கள் பண்பாட்டில் விலங்குகளின் இடத்தை நன்கு வெளிப்படுத்தும்.

## சான்றெண் விளக்கம்

1. கலித்.133:8
2. பரிமேலழகர் (உ_ரை.ஆ), திருக்குறள், ப.303
3. ஆசிரியர் குழு, தமிழ் அகராதி, ப.2454
4. தெ.பொ.மீனாட்சிசுந்தரம், தமிழும் பிறபண்பாடும், ப.28
5. எஸ்.வையாபுரிப்பிள்ளை, தமிழர் பண்பாடு. ப.2
6. அ.தட்சிணாமூர்த்தி, தமிழர் நாகரிகமும் பண்பாடும், பக்.5-6
7. அ.பரமசிவானந்தம், சமுதாயமும் பண்பாடும், பக்.216-217
8. அ.ஆறுமுகம், நாட்டுப்புற இலக்கியமும் பண்பாடும், ப.203
9. அ.கிருட்டிணன், தமிழர் பண்பாட்டியல், ப.2
10. வ.சுப.மாணிக்கம், தமிழ்க் காதல், ப.147
11. அ.முத்துச்சாமி, சங்க இலக்கியத்தில் ஆயர், ப.111
12. க.மைதிலி, ஆய்வுக்கோவை, முல்லைக்கலி காட்டும் ஏறு தழுவுதல் (கட்.), ப.2073
13. சே.செந்தமிழ்ப்பாவை, சங்கப் பாடல்களில் மரபு மாற்றங்கள், முனைவர் பட்ட ஆய்வேடு, பக்.73-74
14. கலித்.103:10
15. மேலது.106:21-22
16. மேலது.103:5-9
17. மேலது.105:43-44
18. அ.கிருட்டிணன், தமிழர் பண்பாட்டியல், ப.216
19. கலித்.106:40-42

20. மேலது.103:68-70

21. மேலது.103:65-67

22. மேலது.104:18-24

23. அ.கிருட்டிணன், தமிழர் பண்பாட்டியல்,ப.216.

24. கலித்.101:43-45

25. மேலது.102:9-12

26. மேலது.102:13-14

27. மேலது.101:7-9

28. மேலது.105:10

29. மேலது.105:55-56

30. மேலது.104:39-44

31. மேலது.104:29-31

32. மேலது.104:14-15

33. மேலது.104:12

34. மேலது.104:10

35. மேலது.104:8

36. மேலது.103:14

37. மேலது.103:12

38. மேலது.105:12-19

39. இரா.வசந்தகுமார், அறிவியல் கண்ணோட்டத்தில் சங்கஇலக்கிய விலங்குகள், ப.20.

40. கலித்.106:7-10

41. மேலது.103:16-21

42. மேலது.106:23-25

43. மேலது.105:30-36

44. மேலது.101:36-37

45. மேலது.101:16-17

46. மேலது.103:47-49

47. மேலது.105:39-40

48. மேலது.103:22-23

49. மேலது.103:50-54

50. மேலது.103:33-35

51. மேலது.102:22-24

52. மேலது.103:24-27, 106:26, 101:21-23

53. மேலது.103:28-29

54. மேலது.104:33-36

55. மேலது.101:27-29

56. மேலது.104:51-59

57. மேலது.103:72-73

58. மேலது.103:56-57

59. மேலது.102:25-27

60. மேலது.104:71-72

61. மேலது.103:37-39

62. மேலது.107:7-9

63. மேலது.105:50-52

64. மேலது.106:37-39

65. மேலது.105:58-59

66. மேலது.105:66-69

67. மேலது.104:63-64

68. மேலது.102:34-39

69. மேலது.104:73-76

70. மேலது.114:12-14

71. க.சுப்பிரமணியன், சங்ககாலச் சமுதாயம், ப.39

72. புறநா.340:6-9

73. பரி.10:26-32

74. மேலது.10:9-18

75. மேலது.10:41-52

76. மேலது.6:25-31

77. மேலது.20:15-19

78. குறுந்.258:2-4

79. பரி.11:51-53

80. மேலது.20:53-63

81. நெடுநல்.86-94

82. பட்டினப்..249-251

83. பரி.19:38-39

84. மேலது.19:13-14

85. மேலது.19:30-34

86. இளம்பூரணர் (உரை.ஆ.), தொல்-பொருள். நூற்.59

87. சே.செந்தமிழ்ப்பாவை, சங்கப்பாடல்களில் மரபு மாற்றங்கள், முனைவர் பட்ட ஆய்வேடு, ப.128

88. காமாட்சி சீனிவாசன், குறள்கூறும் சமயம். ப.6

89. நற்.73:2-4

90. குறுந்.263:1-8

91. முருகு.218

92. அகநா.156:13-17

93. குறுந்.362:3-7

94. அகநா.292:2-6

95. மேலது.242:8-12

96. முருகு.218-220

97. மேலது.228-244

98. அகநா.233:3-10

99. மேலது.309:1-9

100. அ.விசுவநாதன், சமுதாயச் சிந்தனைகள், பக்.75-76

101. புறநா.50:1-5

102. புறநா.362:3

103. ஐங்.443:1-5

104. புறநா.6

105. பரி.2:62

106. பட்டினப்..54-56

107. பரி.19:85-94

108. மேலது.335:9-10

109. புறநா.265:4-5

110. அகநா.35:7-10

# இயல் - 5

## சங்ககால மக்கள் பிறவாழ்வியல் கூறுகளில் விலங்குகள்

**5.1. விலங்குகளைப் பரிசு பெறுதல்**

5.1.1. யானைப் பரிசு

5.1.1.1. புலவர் வாழ்த்தும் யானைப்பரிசு பெறுதலும்

5.1.1.2. கலைஞர்கள் பெறும் யானைப் பரிசு

5.1.1.3. இரவலர் பெறும் யானைப் பரிசு

5.1.1.4. பெரியோர் பெறும் யானைப் பரிசு

5.1.2. குதிரைப் பரிசு

5.1.3. ஆநிரைப் பரிசு

5.1.4. பல் விலங்குகளைப் பரிசிலாகப் பெறுதல்

5.1.4.1. அரசர் பெறும் பல்விலங்குப் பரிசு

5.1.4.2 புலவர் பெறும் பல்விலங்குப் பரிசு

5.1.4.3. கலைஞர்கள் பெறும் பல்விலங்குப் பரிசு

5.1.4.4. இரவலர் பெறும் பல்விலங்குப் பரிசு

5.1.5. தேர்ப் பரிசு

**5.2. போக்குவரத்தில் விலங்குகள்**

5.2.1. தேரில் விலங்குகளின் பயன்பாடு

5.2.2. விலங்குகளை ஆராய்ந்து பூட்டுதல்

5.2.3. பெண் வேண்டி வருதல்

5.2.4. தேரில் வரைய வருதல்

5.2.5. பிரிந்தாரைச் சேரல்

5.2.6. தேரில் தலைவியைக் காண வருதல்

5.2.7. தலைவனின் பரத்தமை ஒழுக்கத்தில் தேரின் பயன்பாடு

5.2.8. விருந்தினர் தேரில் வருதல்

5.5.2.3. இசைக்கருவிகளில் விலங்குகளின் தோல் பயன்பாடு

5.5.2.3.1. பறை

5.5.2.3.2. தண்ணுமை

5.5.3. தோலாடை

5.5.4. தோற்படுக்கை விரிப்பு

5.5.5. தினை காய வைத்தல்

5.5.6. பரண் வேய்தல்

**5.6. நெய்யின் பயன்பாடு**

5.6.1 நெய்விளக்கு

5.6.2. கூந்தலுக்கு நெய்தடவுதல்

5.6.3. வேலுக்கு நெய்பூசுதல்

5.6.4. கதவிற்கு நெய்பூசுதல்

**5.7. தண்டனையில் விலங்குகளின் பயன்பாடு**

5.7.1. தண்டம்

5.7.2. யானைக்கிடுதல்

5.7.3. சிறைப்பிடித்தல்

5.7.4. தண்டனை பெறுதல்

**5.8. தெய்வத்துடன் தொடர்புபடுத்திக் கூறுதல்**

**5.9. விலங்குகள் மனிதன் இறப்பிற்கு வருந்துதல்**

# சங்ககால மக்கள் பிறவாழ்வியல் கூறுகளில் விலங்குகள்

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் நிலப்பிரிவுகளுக்கு ஏற்றவாறு சங்ககால மக்களின் வாழ்க்கைமுறை அமைந்திருந்தது. வேறுபட்ட இயற்கையான சூழ்நிலைகள் அமைந்த இடங்களில் வசித்த பழந்தமிழர் தம் நிலச்சூழ்நிலைக்கு ஏற்ப வாழ்க்கை நடத்தினர். அவர்களின் வாழ்க்கைக்கு உறுதுணையாக அமைந்தது விலங்குகள் ஆகும். விலங்குகளை உணவுக்காக வேட்டையாடிப் பயன்படுத்திய மக்கள், அதனைத் தொழில் செய்யவும், பண்பாட்டு நிலையிலும் பயன்படுத்தினர். இவை தவிர மக்கள் வாழ்க்கையின் பிற செயல்களிலும் விலங்குகள் ஈடுபடுத்தப்பட்டுள்ளன. எனவே உணவு, தொழில், பண்பாடு தவிர மக்களின் பிற வாழ்வியல் கூறுகளில் விலங்குகள் எவ்வாறு பயன்படுத்தப்பட்டன என்பதைப் பற்றி விளக்குவது இவ்வியலின் நோக்கமாகும்.

## 5.1. விலங்குகளைப் பரிசு பெறுதல்

சங்ககாலத்துப் புலவர்களும், கலைஞர்களும் தம் புலமைத்திறனைக் கொண்டு வாழ்க்கை நடத்தும் இயல்பினராய் விளங்கினர். புலவர்களுள் சிலர் உழவு, மருத்துவம், வாணிகம் முதலிய தொழில்களை மேற்கொண்டு வாழ்ந்து வந்தனர். ஏனையோர் வள்ளல் தன்மையுடைய வேந்தர்களிடத்தும், குறுநில மன்னர்களிடத்தும் பரிசில் பெற்று வாழ்ந்து வந்தனர். இவர்கள் அனைவரும் அவ்வள்ளல்களுடைய குணச்சிறப்பு, வீரச்சிறப்பு, ஆட்சிநலம் முதலியவற்றைப் புகழ்ந்து பாடிப்

பரிசில் பெற்று, அப்பொருள்களைக் கொண்டு தாமும், தம்சுற்றத்தாருமாய் வளமாய் வாழ்ந்து வந்தனர். அவ்வள்ளல்களும் தம்மைப் பாடி வரும் புலவர்கட்கு, "உணவுப் பொருள்கள், நல்ல ஆடைகள், அணிகலன்கள், யானை, தேர், குதிரை ஆகிய ஊர்திகள், விளைநிலங்கள், ஊர்கள்"[1] ஆகியவற்றை வேண்டிய அளவு கொடுத்துப் போற்றினர். "அரசர்கள் தமது ஆட்சிச் செல்வாக்கால் புலவர்களை அடக்காமல் அவர்களுக்கு முழு உரிமை கொடுததுப் பல்வேறு பொருட்களுடன் விலங்குகளையும் பரிசிலாக நல்கியுள்ளனர்."[2] இவற்றால் பரிசில் பெறுவோர் சிறப்புற்றிருந்தமை புலப்படும்.

சங்க மன்னர்கள் தம்மை நாடி வரும் புலவர்கட்கும், இரவலர்கட்கும் பல்வேறு பரிசில்களை வழங்கியுள்ளனர். இதில் விலங்குப் பரிசில்கள் குறிப்பிடத்தக்கன.

### 5.1.1. யானைப் பரிசு

பரிசிலர் பெறும் பரிசுகளில் குறிப்பிடத்தக்கது யானைப் பரிசு ஆகும். பரிசிலர் களிறுகளைப் பரிசாகப் பெற்றுச் சென்றதை, 'நாற்பத்தொரு' பாடல்கள் குறிப்பிடுகின்றன. இப்பரிசுகளைப் பெறுவோர் மக்களிடையே நன்மதிப்பைப் பெற்றவராகத் திகழ்ந்தனர்.

#### 5.1.1.1. புலவர் வாழ்த்தும், யானைப் பரிசு பெறுதலும்

பரிசுபெறும் புலவர், யானைகளைப் பரிசாகப் பெற மன்னர்களை வாழ்த்திப் பாடுவர். தான் யானைப் பரிசு பெற சோழன் செருப்பாழியெறிந்த இளஞ்சேட்சென்னி போர்க்களத்தில் வெற்றி பெற்றுப் புகழ்பெறவேண்டும்

எனப் பாராட்டிப் பாடியுள்ளார் ஊன்பொதிப்பசுங்குடையார்.[3] பெருந்தலைச் சாத்தனாரின் பாராட்டுரையைக் கேட்டுக் குமண வள்ளல் அப்புலவருக்குக் களிற்றைப் பரிசாக நல்கியதை,

"தாடாழ் படுமணி யிரட்டும் பூநுதல்
ஆடியில் யானை பாடுநர்க் கருகாக்
கேடி னல்லிசை வயமான் றோன்றலைப்
பாடி நின்றனெ னாகக் கொன்னே" (புறநா.165:6-9)

என்ற பாடலடிகளும் உணர்த்தும்.

தாம் பிறரைக் கூறும் புகழாகிய விதையால் பிறர் பொருள்களைப் பெறும் ஏருழவனுடைய கூத்தர்களுக்கு நன்னன் களிற்றுப் பரிசு வழங்கியிருக்கின்றனன்.[4] அம்பர்கிழார் அருவந்தையின் பகடு போன்றவற்றை வாழ்த்திப்பாடி, யானைப் பரிசு பெற்றுள்ளார் கல்லாடனார்.[5]

சில காரணங்களால் அரசர் பரிசில் நல்கக் காலம் தாழ்த்துவர். அந்நிலையில், அப்பரிசு யானைக் கோட்டிடை வைத்த கவளம் போலத் தமக்குக் கிடைக்கப் பெறும் எனப் புலவர்கள் இருமாப்புக் கொள்வர்.[6] ஆனால் அவ்வாறு பெறும் எத்தகைய பரிசானாலும் முகம்மாறித் தரும் பரிசுகளைப் புலவர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை. முகம்மாறித் தரும் களிற்றுப் பரிசை மறுத்து, குண்டுமணி அளவே ஆயினும் முகம் மலர்ச்சியுடன் தருவதை ஏற்றுக் கொள்வோம் என உறுதிப்படக் கூறுவாரும் உளர்.[7] இவற்றால் புலவர் தன்மானத்துடன் களிறுகளைப் பரிசாகப் பெற்றமை புலப்படும்.

நாள்தோறும் பரிசிலர் கண்டீரக் கோப்பெருநள்ளியின் நகரின் கண் களிறுகளைப் பரிசாகப் பெற்றதை வன்பரணர் குறிப்பிடுவர்.[8] இதனால் நாள்தோறும் புலவர்களுக்குப் பரிசு வழங்கும் வழக்கம் மன்னர்களிடையேயிருந்ததை உணரமுடிகின்றது.

நாஞ்சில் வள்ளுவன் நாட்டிற்கு ஔவையார், விறலியர் பலருடன் சென்றிருந்தார். அவர்கள் கீரையுடன் சமைத்துண்ணத் துவரையரிசியை மன்னனிடம் கேட்டனர். அவன் மலைபோலொரு களிறு சுமக்கும் அளவில் துவரையரிசியை ஏற்றி விடுத்தனன்.[9] அரசர்கள் களிற்றைப் பரிசு தரும்பொழுது சமையலுக்குண்டான பொருட்களையும் கொடுத்தனுப்பியுள்ளமை குறிப்பிடத்தக்கது.

ஆய் அண்டிரன் பரிசிலருக்கு வழங்க வானத்து விண்மீன்களின் தொகை போன்று எண்ணற்ற யானைகளை வைத்திருந்தனன்.[10] இத்தகைய அளவு கடந்த எண்ணிக்கையைக் கண்ணுற்று, யானை ஒரு சூலுக்கு ஒரு கன்று தான் ஈனும்; ஆனால் ஆய் அண்டிரன் தன்னை நாடி வரும் பரிசிலருக்குப் பல யானைகளை ஈகின்றனன்; இதனால் அவன் நாட்டிலுள்ள பிடியானை ஒரு சூலுக்குப் பத்துக் கன்றுகள் ஈனுமோ என வியந்து கூறுவர் ஏணிச்சேரிமுடமோசியார்.[11] இதனைப் போன்று குட்டுவன் ஆட்சியிலும் பரிசிலர் களிற்றுப் பரிசு பெறுவதற்கு ஏதுவாகிய பாட்டும், அதற்குண்டான வெற்றியும் மென்மேலும் நிகழ்ந்த வண்ணம் இருந்தது.[12]

### 5.1.1.2. கலைஞர்கள் பெறும் யானைப் பரிசு

சங்ககாலத்தில் பாணர் குலத்தினர் இரத்தல் தொழிலை மேற்கொண்டனர். இவர்கள் வள்ளல்களைக் கண்டு, ஆடிப்பாடி

மகிழ்வித்துப் பரிசுபெற்றுச் செல்வது வழக்கம். அவ்வகையில் தலையாலங்கானத்துச்செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் அவையில் ஆடிய பாணர்கள் மகிழும்படி, பல்யானைகளைப் பாண்டியன் பரிசாகக் கொடுத்ததை மாங்குடி மருதனார் விளக்குவர்.[13] பாணன் ஓய்மாநாட்டு நல்லியக் கோடனிடம் பரிசு பெற்று வந்தபின், தம் சுற்றத்தாரையும் யானைகளைப் பரிசு பெற வழிப்படுத்தியதை சிறுபாணாற்றுப்படை குறிப்பிடும்.[14] வல்வில் ஓரி பாணனின் சுற்றத்தாருக்கும் களிற்றுப் பரிசு நல்கியதை வன்பரணர் எடுத்துரைப்பர்.[15]

வேந்தர், படைநடத்திச்சென்று பிற நாட்டைப் போரில் வெல்வர். அப்போர்க்களத்தில் கைப்பற்றப்பட்ட பகைநாட்டு யானைகளைப் பரிசிலருக்குப் பரிசிலாக வழங்குவது மரபு.

பாணன் உலகமெல்லாம் சுற்றிவந்து தன் வறுமையைத் தீர்ப்பார் யார் எனப் புலம்பித் திரிந்தனன். அப்பாணனைக் கிள்ளி வளவனின் போர்க்களத்திற்குச் சென்றால் யானைகளைப் பரிசாகப் பெறலாம் என ஆலத்தூர் கிழார் ஆற்றுப்படுத்துவர்.[16] இதனைப் போன்று, பாணர்கள் களங்காய்கண்ணி நார்முடிச்சேரலைப் போர்க்களத்தில் புகழ்ந்துபாடி யானைகளைப் பரிசு பெற்றதைக் காப்பியாற்றுக் காப்பியனாரும் சுட்டுவர்.[17] இவற்றால் பாணர்கள் போர்க்களத்திற்குச் சென்று யானைகளைப் பரிசு பெற்றமை புலப்படும்.

போர்க்களத்தில் பகைவருடைய யானைகள் அணிந்த பட்டங்களைக் கொண்டு பொற்றாமரை செய்து பாணருக்கு வழங்குவது பண்டையோர் மரபு. இதனை மலையமான் திருமுடிக்காரியின் முன்னோரும் செய்ததை,

"ஒன்னார் யானை யோடைப்பொன் கொண்டு

பாணர் சென்னி பொலியத் தைஇ

வாடாத் தாமரை சூட்டிய விழுச்சீர்

ஓடாப் பூட்கை யுரவோன் மருக" (புறநா.126:1-4)

என்ற பாடலடிகள் உணர்த்தும். யானைகள் அணிந்த பட்டங்களைப் பரிசிலாகக் கொடுத்தமை பற்றி மேலும் இரு பாடல்கள் குறிப்பிடுகின்றன.[18] மன்னர்களின் இச்செயலை, "பண்டைத் தமிழரசன் பிறநாட்டைக் கொள்ளையிட்ட பொருட்களைக் கொண்டு கலையை வளர்க்கும் வள்ளலாகத் திகழ்ந்தான்"[19] எனத் திறனாய்வாளரும் வழிமொழிவர்.

வேந்தரின் அரண்மனைக்குப் பெண்யானையைப் பரிசில்பெறச் செல்லும் பாணர் அரண்மனை வாயிலில் ஒதுங்கி நின்று பெற்றதை மாமூலனார் விளக்குவர்.[20] இவற்றால் பாணர்கள் பெண் யானைகளையும் பரிசு பெற்றமை புலப்படும்.

இரவின் கடையாமத்தில் கடைவாயிலில் நின்று குன்றினைப் பாடுகின்ற பாணர்களுக்கு ஆய்எயினன் யானைகளைப் பரிசில்களாக வழங்கியுள்ளனன்.[21] இதனால் இரவுபகல் பாராமல் வள்ளல்கள் யானைப் பரிசு வழங்கியமை புலனாகும்.

பாணர்களைப் போன்று பொருநர்களும் வள்ளல்களைப் பாடிப் பரிசு பெற்றனர். இவர்கள் வேடம் புனைந்து நடிப்பர். அதனால், "ஒருவரைப்போல் வேடமிட்டுப் பாடுநரைப் பொருநர் என்றனர்."[22] இப்பொருநர் வள்ளல்களிடம் களிற்றையும், பிடியையும்,[23] களிறுகளையும் அதன் கன்றுகளையும்[24] பரிசாகப் பெறுவர். இவர்கள் மன்னர்களின் அரண்மனையை நாடிச் செல்வர். யானைகளைப் பரிசுபெறக் கருதிய

பொருநன், பறையுடன் அஃதையின் நாளோலக்கத்தின்கண் புகுந்ததை பரணர் குறிப்பிடுவர்.[25] இவற்றால் பொருநர் களிற்றைப் பரிசு பெற்றமை விளங்கும்.

அரசரிடம் பரிசில்பெறச்செல்லும் ஆண் கலைஞர்களின் குழுவில் பெண் கலைஞர்களும் இடம்பெறுவர். அப்பெண்களை 'விறலியர்' என்று குறிப்பிடுவர். பண்டை மன்னர்கள் பாணனுக்குக் களிற்றையும், விறலிக்குப் பிடியையும் பரிசிலாக வழங்கியுள்ளனர். ஆண் கலைஞர்களுடன் செல்லும் பெண் கலைஞர்களாகிய விறலியர் பெண் யானைகளைப் பரிசிலாகப் பெற்றதை பரணர் சுட்டுவர்.[26]

யானையின் கோடு மிகவும் முதிர்ந்த வழி அதன் நுனியில் முத்துண்டாகும். அத்தகைய முத்தைப் பிட்டங்கொற்றன் விறலிக்குப் பரிசாகக் கொடுத்ததை,

"சிறுகண் யானை வெண்கோடு பயந்த

ஒளிதிகழ் முத்தம் விறலியர்க் கீத்து" (புறநா.170:10-11)

என்ற பாடலடிகளில் உணர்த்துவர் உறையூர் மருத்துவர் தாமோதரனார். மேற்சுட்டியவற்றால் விறலியர் பெண் யானையையும், அதில் விளைந்த முத்தினையும் பரிசாகப் பெற்றுள்ளமை விளங்கும்.

'அகவன் மகளிர்' என்னும் குறிசொல்பவர் அஃகுதையிடம் பிடி யானையைப் பரிசிலாகப் பெற்றுள்ளமையை குறுந்தொகை குறிப்பிடும்.[27]

**5.1.1.3. இரவலர் பெறும் யானைப் பரிசு**

புலவர்கள், கலைஞர்கள் மட்டுமின்றி 'இரவலர்' என்னும் பொதுப்பெயரில் பரிசில் பெற்றோரும் உண்டு. இவர்களைப் பற்றிய குறிப்புப் பதினான்கு பாடல்களில் இடம்பெற்றுள்ளது.

இரந்து நிற்பவர் இரவலராவர். இவர்கள் மன்னரிடம் சென்று அவர்களைப் புகழ்ந்து பாடுவர். அவர்கள் கொடுக்கும் பரிசில்களைப் பெற்றுச் செல்வர். இரவலர்களுக்குக் களிறுகளையும், பிடிகளையும் மழை போன்று 'ஓய்மாநாட்டுநல்லியக்கோடனும்',[28] 'வல்வில்ஓரியும்'[29] வழங்கியமையை முறையே சிறுபாணாற்றுப்படை, புறநானூறு என்னும் நூல்கள் எடுத்துரைக்கும். போர்த்தலைவன் ஒருவன், புரவலர்கட்கு கொடுத்தற்குரிய கைப்பொருள் மிகவுடையனல்லனாயினும், தம்பால் வரும் இரவலர்கள் களிறும், தேரும் வேண்டினும் பகைவரிடம் உள்ளவற்றைத் தாம் வைத்திருத்தலைப் போன்று வழங்கும் விருப்பமுடைய வீரனாய் விளங்கியதை மாங்குடிக்கிழார் குறிப்பிடுவர்.[30] இதன்வழி, பண்டை மக்களின் கொடை வேட்கை வெளிப்படும்.

இரவலர்கள் மன்னனின் அரண்மனையைச் சென்றடைந்ததும் பரிசுகள் பெற்றுத் திரும்பிவிடவில்லை. அரண்மனையில் கண்தூக்கமின்றி பன்னாட்கள் நின்று பாடி யானையைப் பரிசாகப் பெற்றிருக்கின்றனர்.[31] புரவலர்கள், இரவலர்களில் கணவனுக்கன்றி அவர்தம் மனைவிக்கும் மடப்பிடியை வழங்கும் கொடைப்பண்பு மிக்கவராகத் திகழ்ந்தனர்.[32] தம்பாற் வரும் இரவலர் வல்லாராயினும், புதியோராயினும் யாவர் மாட்டும் களிற்றை வரையாது வழங்கும் வள்ளல் தன்மை கொண்டிருந்தனர்.[33] தம் பயன்பாட்டிற்கு வைத்திருந்த களிற்றையும் இரவலருக்கு வழங்கும் வள்ளல்களாகத் திகழ்ந்தனர்.[34] தம்மிடம் பரிசு பெற வரும் இரவலர்களை எதிர்பார்த்திருந்த வள்ளல்களும் உண்டு. ஆய் அண்டிரன் இரவலர் வரவை எதிர்பார்த்து யானைத்திரளைச் சேர்த்து வைத்திருந்ததைக் காரிக்கண்ணனார் விளக்குவர்.[35] மேலும், 'நன்னன்',[36] 'பாரி',[37]

'அஃகுதை',[38] 'பாண்டியன்',[39] 'வாட்டாறு எழினியாதன்'[40] போன்றோரும் இரவலர்கட்கு யானைகளைப் பரிசாக அளித்துள்ளனர். வேந்தர்கள் தம்மிடமிருந்த பொருளன்றித் தோற்ற பகைவர் திறையாகக் கொடுத்த யானைகளையும் இரவலருக்கு ஈந்துள்ளனர்.[41]

### 5.1.1.4. பெரியோர் பெறும் யானைப் பரிசு

மன்னர்களிடம் பெரியோர் யானைப் பரிசுபெற்றதாக இருபாடல்களில் குறிப்புளது. பெரியோர் என்பவர் சான்றோராக இருக்க இடமுண்டு. இப்பெரியோர்கள் கிள்ளிவளவனிடம் யானைகளைப் பரிசு பெற்றுள்ளனர்.[42] ஆய் அண்டிரனைப் போற்றும் பெரியோர் அவன் காடுகளில் உள்ள யானைகளை மிகவும் பெறுபவராக இருந்தனர் என்று உறையூர் ஏணிச்சேரிமுடமோசியார் குறிப்பிடுவர்.[43]

### 5.1.2. குதிரைப் பரிசு

பண்டை வேந்தர் குதிரைகளைப் பரிசு தந்துள்ளனர். இரவலருக்குக் காரி மன்னன் தன் நாட்டுடன் குதிரைகளையும்,[44] செங்குட்டுவன்தன் போர்க்களத்தை வாழ்த்திப்பாடும் பாணனுக்குக் குதிரைகளையும்[45] பரிசாகக் கொடுத்தமை இங்கு சுட்டத்தக்கது. பாணர்கள் பரிசிலாகப் பெற்ற குதிரைகளை ஓட்டிச் செல்லும்பொழுது, அதன் குளம்படிபட்டு மலைச்சாரலானது செப்பமானதை நற்றிணை விளக்கும்.[46] குதிரைகள் போருக்கும், போக்குவரத்திற்கும் பயன்படுத்தப்பட்டதால் மிகக் குறைந்த அளவே பரிசாகக் கொடுக்கப்பட்டுள்ளன. மேலும், குதிரைகள்

பிறநாடுகளிலிருந்து விலைக்குப் பெறப்பட்டதால் பரிசுப்பொருளில் குதிரை அதிகம் இடம்பெறவில்லை.

### 5.1.3. ஆநிரைப் பரிசு

ஏர்க்களம் பாடுவோருக்குச் சேக்களையும், போர்க்களம் பாடுவோர்க்குக் களிறுகளையும் வழங்குவது பண்டைய மரபு. பிட்டங்கொற்றன் புலவர்களுக்குத் தொழுவத்துடன் சேக்களையும், களிறுகளையும் வழங்கியதைப் புறநானூறு குறிப்பிடும்.[47]

பரிசில் பெற வருவோர் புலவர், பாணர், கூத்தர், பொருநர், விறலியர், அகவன்மகளிர், இரவலர், பெரியோர் எனப் பல்திறத்தினராவர். இவர்கள் மன்னரிடம் யானை, குதிரை, ஆநிரை போன்ற விலங்குகளைப் பரிசாகப் பெற்றுள்ளனர்.

### 5.1.4. பல்விலங்குகளைப் பரிசிலாகப் பெறுதல்

பரிசிலர், யானை, குதிரை, பசு போன்றவற்றைத் தனித்தனியாகப் பெற்றதோடு, பல விலங்குகளையும் ஒருசேரப் பரிசாகப் பெற்றுள்ளனர். இப்பரிசில்களை அரசர், புலவர், கூத்தர், பாணர், பொருநர், இரவலர், பெரியோர், போன்றோர் பெற்றுள்ளனர்.

#### 5.1.4.1. அரசர் பெறும் பல்விலங்குப் பரிசு

சங்ககாலத்தில் அரசர்கள் மக்களுக்கு விலங்குகளைப் பரிசுகொடுத்தனர். அதனைப்போன்று, மக்களும் அரசர்களுக்குச் சிறப்புப் பரிசாக விலங்குகளைக் கொடுத்துள்ளனர். நன்னனைக் காணச்சென்ற

கூத்துக் கலைஞர்கள் ஆமானினது குழவி, எண்குவின் குட்டி, வருடையின் ஏறு, தீர்வை, மரையானின் குழவி, யானையின் கோட்டில் முற்றிய முத்து போன்றவற்றைப் பரிசிலாக அம்மன்னனுக்குக் கொடுத்துள்ளனர்.[48]

### 5.1.4.2. புலவர் பெறும் பல்விலங்குப் பரிசு

புலவர்கள் தம் கவிபாடும் திறமையால் பல்வேறு விலங்குகளைப் பரிசாகப் பெற்றுள்ளனர். அவர்கள் பலபரிசு பெற்றமையைப் 'பத்துப்பாடல்கள்' குறிப்பிடுகின்றன. யானை, குதிரை, பசுத்திரள் போன்றவற்றையும் மண்தின்னும்படி மலையாய்க் கிடந்த பொருள்திரளோடு புலவர்களின் கைநிறையும்படி பேரணிகலன்களையும் நவிரமலையிலிருந்து நன்னன் வழங்கியுள்ளனன்.[49] காற்றைவிட வேகமாகச் செல்லும் தேரையும், களிற்றையும் தன்னை நாடி வந்த புலவருக்குக் கொடை வள்ளல் கொடுத்ததை கலித்தொகை குறிப்பிடுகின்றது.[50]

புரவலர்கள் பல்விலங்குகளைப் பரிசாகக் கொடுத்தும் அதனை ஏற்க மறுத்த புலவர்கள் அம்மன்னர்களின் அன்புள்ளத்தை மட்டுமே விரும்பியுள்ளனர். ஏணிச்சேரிமுடமோசியார் ஆய் அண்டிரனைக் காணச்சென்றார். அவரை வரவேற்ற ஆய், பல பரிசுகளை வழங்கினன். அதனை ஏற்காத முடமோசியார், கன்றுகளுடன் கூடிய யானைகளையும், குதிரைகளையும், குதிரைகள் பூட்டப்பட்ட தேரினையும் நான் வேண்டவில்லை; உன்னைக் கண்டுசெல்லவே வந்தேன் என்று மறுமொழி உரைத்தார்.[51] இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் போர்க்களத்தில் பகைவர்களின் யானைகளுடன் போரிட்டு வென்றனன். அவ்வெற்றியால்

வந்த களிறு, குதிரை, தேர் முதலியவற்றைப் புலவர் பெருமக்களுக்கு வழங்கி மகிழ்ந்தமையை பதிற்றுப்பத்து விளக்கும்.[52]

குமணன், பெருஞ்சித்திரனாரின் வேண்டுகோளை ஏற்று, அவருக்குப் பல்பரிசில் வழங்கினன்.[53] பரிசிலுடன் வந்த பெருஞ்சித்திரனார், தனக்குப் பரிசில் கொடுக்காமல் புறக்கணித்த இளவெளிமானின் காவல் மரத்தில், தான் பரிசிலாகப் பெற்ற யானையைக் கட்டி, அவனுக்குத் தம் பெருமையை உணர்த்தினர்.[54]

பண்டை மன்னர்கள் புலவரின் வறுமை கண்டு இகழ்ந்து நோக்காது, புரவலரின் தகுதியும், பெருமையும் கருதிப் பரிசு நல்கினர். இவ்வகையில் சேரமான்சிக்கற்பள்ளிதுஞ்சியசெல்வக்கடுங்கோவாழியாதன் குதிரைகளையும் ஆநிரைகளையும் குன்றுகட்பாலியாதனாருக்கு வழங்கியமை இவ்விடத்தில் சுட்டத்தக்கது.[55]

கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக்குமரனார், சோழிய ஏனாதி திருக்குட்டுவனைக் காணச் சென்றார். சிறிது நாள் தங்கியிருந்து தான் விடைபெறும் நாளைக் குறிப்பாகத் தெரிவித்தார் புலவர். அவன் யானை ஒன்றை ஒப்பனை செய்து நிறையப் பொன்னும் பொருளும் உடன் கொண்டுவரக் குமரனாருக்குப் பரிசில் அளித்தனன். யானையின் பெருமாண்பு கண்ட குமரனார் அதனை அணுகுவதற்கு அஞ்சி அதனைத் திருப்பி அனுப்பினர். தாம் பரிசாகக் கொடுத்த யானை திரும்பி வரக் கண்ட குட்டுவன், தான் தந்த வேழப்பரிசில் தம் வரிசை நோக்காச் சிறிதாமெனக் கருதிவிட்டார் போலும் இச்சான்றோர். வரிசையறியும் தரமில்லாது போனேனே என நாணி அவ்வேழத்தொடு பிறிதொரு பெருங்களிறு கொணரச் செய்து, அதனையும் முன்னே விடுத்ததைப்போல

ஒப்பனை செய்து புலவருக்கு விடுத்தனன். அவனுடைய செயலை அறிந்த குமரனார் பெருவியப்புக் கொண்டனர்.[56] புலவர் பெருமிதம் கொள்ளும் அளவிற்குப் புரவலர் விலங்குப் பரிசிலை நல்கியுள்ளனர்.

புலவர் தாம் வறுமையுற்றுத் துன்பமுற்றாலும் அரசர்கள் முறைமையறியாது செய்யும் பரிசில்களை வாங்க மறுத்துள்ளனர். சோழன் குராப்பள்ளித்துஞ்சிய பெருந்திருமாவளவன் முறைமையறியாது காலந்தாழ்த்தி வழங்கிய களிறு, குதிரை, தேர் முதலியவற்றைக் கோனாட்டுஎறிச்சிலூர்மாடலன்மதுரைக்குமரனார் மறுத்தமையை புறநானூறு விளக்கும்.[57] இவற்றால் புலவர்கள் மன்னர்களிடமிருந்து பல்விலங்குகளைப் பரிசிலாகப் பெற்றமையை அறிய இயலும்.

### 5.1.4.3 கலைஞர்கள் பெறும் பல்விலங்குப் பரிசு

வேந்தர்களைப் புகழ்ந்து பாடும் பாணர்கள் பல்விலங்குகளைப் பரிசாகப் பெற்றுள்ளனர். இதனை, கிள்ளி வளவனிடம் சென்ற பாணர்கள் அவனைக் கண்டபொழுதே தேர் பெற்றுத் திரும்பியமை,[58] நள்ளி பாணருக்கு நெடிய தேருடன் களிற்றையும் வழங்கியமை,[59] தொண்டைமான் இளந்திரையனிடம் சென்ற பாணர்கள் குதிரைகளுடன் யானைகளையும் பரிசிலாகப் பெற்றமை,[60] வேம்பி ஊரின் முசுண்டை எனும் அரசன், பாணர்களுக்கு ஏறு மற்றும் தேருடன், களிறும் பரிசிலாகக் கொடுத்தமை[61] போன்ற செய்திகள் நன்கு விளக்கும்.

பொருநர் பெறும் பரிசில்களின் இயல்பு தனிச்சிறப்பு வாய்ந்ததாக இருந்தது. கரிகாற்பெருவளத்தான் யானைக் கொம்பால் செய்த தாமரை முகையினையுடைய தேரில், பால் போன்ற நான்கு குதிரைகளைப் பூட்டித்

தன் கால்களால் ஏழடி பின்னே வந்து, பொருநர்களை அத்தேரில் ஏற்றிப் பல யானைகளையும் உடன் கொடுத்து அனுப்பினன் என்று முடத்தாமக்கண்ணியார் சுட்டுவர்.[62] இக்கருத்தைத் தழுவி, "உயர்குடிப் பிறந்தோர் நண்பர், பெரியோர் முதலியோரை வரவேற்கும் பொழுதும், வழிவிடும்பொழுதும் நிரலே ஏழடி எதிர் சென்று வரவேற்றலும், ஏழடி பின் சென்று வழிவிடுதலும் மரபாகும். இங்ஙனம் செய்தல் அவரை தம்மோடொத்தாராகவாதல், உயர்ந்தோராகவாதல் கருதியமையாகும்"[63] என்று குறிப்பிடுவர் பொ.வே. சோமசுந்தரனார். இதனால் பரிசில் பெறும் பொருநரைக் கரிகாற்பெருவளத்தான் தமக்கு நிகராகக் கருதியமை புலப்படும்.

### 5.1.4.4. இரவலர் பெறும் பல்விலங்குப் பரிசு

புரவலர்களிடம் சென்ற இரவலர்களும் பல்விலங்குகளைப் பரிசாகப் பெற்றுள்ளனர். அந்துவன் கீரன் கோடுடைய களிறுகளையும் பொற்கலனணிந்த குதிரைகளையும், பொன்னிழையணிந்த நெடிய தேர்களையும் இரவலருக்குக் கொடுத்ததைக் காவிட்டனார் குறிப்பிடுவர்.[64] தகடூர்எறிந்தபெருஞ்சேரல்இரும்பொறை பாசறையில் இருந்தபொழுது யானைக் கூட்டமுற்ற போர்ப்புண்களை ஆற்றி, அவற்றின் துயரத்தைப் போக்கி, முதலில் வந்து இரந்தவர்களுக்கு அவ்யானைகளையும், பிறகு வந்து ஈந்தவர்களுக்குக் குதிரைகளையும் வரையாது வழங்கியதை அரிசில்கிழார் விளக்குவர்.[65] இதனால் இரவலர்கள் பாசறைக்குச் சென்று விலங்குகளைப் பரிசிலாகப் பெற்றமை புலப்படும்.

அஞ்சி களிறு, குதிரை, தேர் ஆகியவற்றைப் பரிசிலாகக் கொடுக்க நாளோலக்கத்தில் நிறுத்தி வைத்திருந்தமை மன்னர்கள் இரவலர்களை எதிர்பார்த்திருந்ததை உணர்த்துகின்றது.[66]

தேர்த்தொழிலைச் செய்யும் தச்சர் தேரைச் செய்து முடித்தனர். அத்தேரில் பாணன் ஏறிப் பார்த்து ஓட்டி மிகவும் ஓட்டமுடையது என்று கூறினன். அதில் பூட்டப்பட்ட எருதின் வேகம் குதிரையின் வேகத்தைப் பின்னுக்குத் தள்ளியது. இத்தகைய சிறப்பையுடைய தேரையும், யானை, குதிரை, அணிகலன் முதலிய பரிசில்களையும் நல்கி, ஓய்மாநாட்டு நல்லியக்கோடன் இரவலர்களை அன்றே விடுத்துள்ளான்.[67]

போர்க்களத்திற்குச் சென்று பரிசில்பெறும் இரவலர்கள், குடக்கோ நெடுஞ்சேரலாதனும், சோழன்வேற்ப.்.றடக்கைபெருநற்கிள்ளியும் போரிட்டுப் போர்க்களத்தில் இருவரும் இறந்துபட்டபொழுது களிறுகளைப் பரிசிலாகப் பெற முடியாமல் வருந்தியுள்ளனர்.[68]

இரவலர்கள் தாம் விரும்பிக் கேட்கும் முன்னரே பன்னிரைகளையும், ஊர்ந்து செல்லுவதற்கேற்ற காளைகளையும் கொடுக்குமாறு புரவலர்கள் தம் ஏவலரைப் பணித்துள்ளனர்.[69] இரவலர்களை யார்என வினவாமல் அவர்கள் காட்டின அளவுடன் கொடுஞ்சியையுடைய நெடிய தேர்களையும், யானைகளையும் பாண்டியன் பரிசாகக் கொடுத்ததை மாங்குடிமருதனார் விளக்குவர்.[70]

கடியநெடுவேட்டுவனிடம் சென்றால் பரிசில்பெறுவது உறுதி என அறிந்த இரவலர், தேரொடு கோடுயர்ந்த களிற்றையும் பெறுதலின்றி மீளப் போவதில்லை எனச் சூளுரைத்துச் சென்றதைப் புறநானூறு குறிப்பிடும்.[71]

பாண்டியன் நெடுஞ்செழியன் விடியற்காலத் துயிலெடைநிலைபாடும் சூதர்க்குத் தேருடன் குதிரைகளையும் பலவாகக் கொடுத்துள்ளனன்.[72]

குதிரைப்படை, யானைப்படை, தேர்ப்படை போன்றவை போர்ப்பயிற்சி பெற்றதால், தாளவகைக்குத் தகுந்தாற்போல் நடந்து சென்றன. இத்தகைய அழியாத புதுவருவாயுடைய விலங்குகள் இரவலர்களுக்கு ஆய்அண்டிரனால் கொடுக்கப்பட்டதை குட்டுவன்கீரனார் விளக்குவர்.[73]

அரசர்கள் தம் அருணலம் பாடும் புலவருக்குக் குதிரையும், யானையும், பகைவரைக் கொன்ற தன் போர்க்களப் புகழ் பாடும் புலவருக்கு உருண்டு செல்லும் தேரையும், பொன்னரி மாலையைப் பாடினிக்கும், பொன்னால் செய்யப்பட்ட தாமரைப் பூவைப் பாணனுக்கும் அவரவர் வரிசையறிந்து வழங்கியுள்ளனர்.[74] இம்மன்னர்களைப் போன்று, 'சோழ மன்னன்',[75] 'இருப்பையூர்வீரான்',[76] 'ஆய்அண்டின்',[77] 'நன்னன் சேய் நன்னன்'[78] போன்றோரும் யானை, குதிரை, தேர் முதலிய பல்விலங்குகளைப் பரிசிலாக வழங்கியுள்ளனர்.

நாள்தோறும் கள்ளுண்டு மகிழ்ச்சியுடன் இருக்கும்பொழுது மன்னர்கள் கொடை வளங்குவர். அங்ஙனமின்றி மலையமான் திருமுடிக்காரி கள்ளுண்ணாமல் தேருடன் களிற்றை நல்கியதை,

"நாட்கள் ளுண்டு நாண்மகிழ் மகிழின்
யார்க்கு மெளிதே தேரீ தல்லே
தொலையா நல்லிசை விளங்கு மலையன்
மகிழா தீத்த விழையணி நெடுந்தேர்
பயன்கெழு முள்ளூர் மீமிசைப்
பட்ட மாரி யுறையினும் பலவே" (புறநா.123:1-6)

என்ற பாடல் விளக்கும். இதனை விளக்கவந்த ஔவை.சு. துரைசாமிப்பிள்ளை, "கொடை இயற்கைக் கொடை, செயற்கைக் கொடை என இருவகைப்படும். செயற்கையாவது, மதுவுண்ட மகிழ்ச்சியால் தன்னால் நல்கப்படும் பொருள்களின் அருமை நோக்கும் இயற்கையறிவிழந்து ஏற்குநர் ஏற்க வழங்குவது. இயற்கை, மது முதலியவற்றால் அறிவு நலங்குன்றாது ஏற்போர் வரிசையறிந்து நல்குவது"[79] என்று குறிப்பிடுவர். எனவே மதுவருந்தாத மலையமானிடம் பரிசில் பெறுவோர் பல்விலங்குகளைப் பரிசில் பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கது.

### 5.1.5. தேர்ப்பரிசு

ஒரு சில பாடலடிகளில் தேர் என்ற சொல் மட்டும் இடம்பெற்றிருக்கின்றது. ஆனால் அதில் பூட்டப்பட்ட விலங்கு பற்றிய குறிப்புக் காணப்படவில்லை. இருப்பினும் இரவலருக்குப் புரவலர்கள் பரிசில் வழங்கும்பொழுது வெறும் தேரை மட்டும் ஈந்திருக்க இடமில்லை. தேருடன் யானை, குதிரை போன்ற விலங்குகளில் ஏதாவது ஒன்றை உடன் வழங்கியிருப்பர். இதற்கு, தலைவன் ஒருவன், தன்னிடம் கொடையை விரும்பி வந்தோருக்குத் தேரைக் கொடுத்தது சான்றாகும்.[80] இதனைப்போன்று பரிசில் பெறுவோர் பல்விலங்குகளைப் பரிசிலாகப் பெற்றமை பற்றிய குறிப்புகள் 'முப்பத்தொன்பது' பாடல்களில் இடம்பெற்றுள்ளன.

சங்கப்பாடல்களில் விலங்குகளைப் பரிசிலாக நல்கியதைப் பற்றி 'எண்பத்தேழு' பாடல்களில் குறிப்புகள் காணப்படுகின்றன. இப்பரிசில்களை

'ஐம்பத்திரண்டு' புரவலர்கள் வழங்கியுள்ளனர். இவர்களில் ஆய்அண்டிரன் வழங்கிய கொடை 'ஒன்பது' பாடல்களில் சிறப்பித்து உரைக்கப்பட்டுள்ளது..

சங்ககாலத்தில் பரிசில் பெறுவோர் வறுமை காரணமாகவும், சிறப்புப் பரிசில் வேண்டியும் வள்ளல்களைத் தேடிச் சென்றுள்ளனர். புரவலரின் குறைந்த பரிசிலை மறுத்தபொழுது அவர்களின் தன்மான உணர்ச்சி வெளிப்படுகின்றது. புரவலர்கள் பரிசில் பெறுவோரைத் தக்க மரியாதை செய்து அனுப்பிவைத்துள்ளனர்.

அரசன் வறுமையுற்றுத் தன்னிடம் வருவோருக்கு யானைகளைப் பரிசளித்தனன். பரிசில் பெறுவோர் தமக்கும், தம்குடும்பத்திற்கும் உணவில்லாதபொழுது, தாம்பரிசிலாகப் பெற்ற யானைக்கு உணவிடுவது என்பது இயலாத செயல். எனவே தாம் மன்னரிடம் பெற்ற அளவற்ற பரிசில்களைச் சுமந்து செல்லவே இவ்யானை பயன்பட்டிருக்கக்கூடும் என்று கருதஇடமுண்டு.

## 5.2. போக்குவரத்தில் விலங்குகள்

தொடக்க காலத்தில் மனிதன் தன் கால்களால் நடந்து சென்றனன். காலப்போக்கில், "மனித அறிவு தனக்கும், சமுதாயத்திற்கும் பயன்படுமாறு ஊர்திகளைக் கண்டுபிடிக்கத் தொடங்கிய காலம் நாகரிக வளர்ச்சியின் ஒரு திருப்புமுனையாகும்"[81] என்பர் கா.மீனாட்சிசுந்தரம். தனிமனிதன் குடும்பமாக வாழத் தொடங்கியதும் தன்னை மட்டுமின்றி, தன்னைச் சார்ந்தோரையும் பாதுகாக்க வேண்டியவன் ஆனான். இடம்விட்டு இடம்பெயரும்பொழுது தாம் மட்டுமின்றித் தம் குடும்பத்தினரையும்

அழைத்துச் செல்ல வேண்டிய நிலை ஏற்பட்டது. எனவே ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குச் செல்ல ஊர்திகள் பயன்பட்டன. வணிகநிலை தொடக்கத்தில் பண்டமாற்றாக இருந்தது. பண்டங்களைக் கொண்டு செல்வதற்கும், திரும்பக் கொண்டு வருவதற்கும் விலங்குகள் பயன்பட்டன. இதனால், "மனிதனுக்குப் பொருட்களைக் கொண்டு செல்லவும், நீண்ட தூரம் செல்லவும் ஊர்திகள் தேவைப்பட்டன. ஆகவே, அவன் ஊர்திகளைக் கண்டுபிடித்தான்."[82] இடம்விட்டு இடம்பெயர ஊர்திகள் பயன்பட்டன. "மனிதர்கள் விலங்குகளின் மீது ஏறி அமர்ந்தும், விலங்குகள் இழுக்கும் வண்டிகளில் அமர்ந்தும் சென்றனர்"[83] என உரைப்பர் கா.மீனாட்சிசுந்தரம். இவற்றால் மக்கள் ஊர்திகளில் விலங்குகளைப் பூட்டிப் பயன்படுத்தியமை புலனாகும்.

### 5.2.1. தேரில் விலங்குகள் பயன்பாடு

சங்ககால மன்னர்களும் மக்களில் சிலரும் தேரை வைத்திருந்தனர். தேரில் விலங்குகளைப் பூட்டி ஊர்தியாகப் பயன்படுத்தினர். குதிரையைப் போர்த்தொழிலுக்குப் பயன்படுத்தியதொடு போக்குவரத்திலும் ஈடுபடுத்தினர். 'அதியன்',[84] 'வளவன்',[85] 'அழிசி',[86] 'பாண்டியன்',[87] 'ஊர்த்தலைவன்',[88] 'ஓரி',[89] 'பெரியன்',[90] 'மௌரியர்',[91] 'இளஞ்சேட்சென்னி',[92] 'நெடுமானஞ்சி'[93] போன்றோர் சிறந்த வளமான தேரை வைத்திருந்தனர்.

சங்ககாலத்தில் தேர் செய்யத் 'தச்சர்'[94] இருந்தனர். இத்தேரைச் செய்யும் பொருட்களும் பலவிதமாக இருந்தன. யானையின் கோட்டால் செய்த தேரை 'வெண்டேர்' என அழைத்தனர். தேர்ச்சக்கரத்தின் விளிம்புகள் பொன்னால் செய்யப்படுவதுமுண்டு.[95]

யானையின் கோட்டால் செய்யப்பட்ட தேரானது குன்றிலிருந்து விழும் அருவியைப் போலவும், காற்றை விட வேகமாகச் செல்லும் இயல்புடையதாகவும்,[96] அன்னப் பறவை பறத்தல் போல வேகமாகச் செல்லக் கூடியதாகவும்[97] விளங்கியது. இத்தகைய வெண்டேரில் யானையைப் பூட்டித் தலைவன் அறத்தொழில் செய்யச் சென்றதை,

"நறவினை வரைந்தார்க்கும் வரையார்க்கும் அவையெடுத்
தறவினை யின்புறூஉம் அந்தண ரிருவருந்
திறம்வேறு செய்தியின் நூல்நெறி பிழையாது
குழவியைப் பார்த்துறூஉந் தாய்போ லுலகத்து
மழைசுரந் தளித்தோம்பு நல்லூழி யாவர்க்கும்
மழையாது வருதனின் செம்மையில் தரவாய்ந்த
இழையணி கொடித்திண்தே ரினமணி யானையாய்
அறன்நிழ லெனக்கொண்டா யாய்குடை யக்குடைப" (கலித்.99:1-8)

என்ற பாடல் விளக்கும்.

### 5.2.2. விலங்குகளை ஆராய்ந்து பூட்டுதல்

மக்கள் தமது பயன்பாட்டிற்குத் தேவையான விலங்குகளை ஆராய்ந்து பெறுவது இயல்பு. பயிற்சி பெற்ற, சிறந்த, வேகமாகச் செல்லக் கூடிய குதிரைகளைத் தேர்ந்தெடுத்துத் தேரில் பூட்டுவர். இதனை, முல்லைநிலத்தில் பிடரி மயிரையுடைய குதிரைகளைப் பாணன் ஆராய்ந்து தேரில் பூட்டியமை,[98] நெய்தல் நிலத்தோர் பலசாதிக் குதிரைகளை ஒருங்கே பூட்டாமல் ஓரினக் குதிரைகளைத் தேர்ந்தெடுத்து ஒன்றாகப் பூட்டித் தேரைச் செலுத்தியமை[99] போன்ற செய்திகள் நன்கு

விளக்கும். குதிரைகளில் பல்வேறு இனங்கள் சுட்டப்பட்டிருப்பினும் அவற்றைப் பாடல்கள் வழிப் பிரித்துணர முடியவில்லை. புரவிநூல் கூறும் விதிப்படிக் காற்றைப்போல் விரைந்து செல்லும் நீண்ட தேர் இருந்தமையும் குறிப்பிடத்தக்கது.[100]

நெய்தல்நிலத்தில் நான்கு குதிரைகளை ஒருசேரப் பூட்டிப் பாகன் செலுத்தியதை அகநானூறு சுட்டுகின்றது.[101] செல்வத்திற் சிறந்த நெய்தல்நிலத் தேர் மறவனுடைய மகன், தலைவியைக் காண இரவில் இலக்கணம் அமைந்த தேர் ஏறி வந்தனன்.[102] குதிரை பூட்டிய தேர் மேடுபள்ளமுமாக உள்ள இடங்களில் ஓடினாலும் சிதைவின்றித் திண்ணமாக இருந்தது.[103] நெய்தல்நில மக்கள் தேர்களை அதிகமாகப் பயன்படுத்தியுள்ளனர்.

### 5.2..3. பெண்வேண்டி வருதல்

சங்ககாலத்தில், குதிரை பூட்டிய தேரைத் தம் மகளின் பாதுகாப்பிற்காக வைத்திருந்தனர்.[104] செல்வந்தர்கள் தேர் வைத்திருப்பதைப் பெருமையாகக் கருதினர். முல்லைநிலத் தலைவன் விரைந்து ஓடக் கூடிய குதிரை பூட்டிய தேர் வைத்திருந்ததை நற்றிணை குறிப்பிடும்.[105] தேர் வைத்திருந்த நெய்தல் நிலத் தலைவனை மகளிர் விரும்பியும்,[106] தேடியும்[107] வந்துள்ளமை சுட்டத்தக்கது. சங்க மக்களில் பெரும்பான்மையோர் விலங்குகள் பூட்டிய தேரையே போக்குவரத்திற்காகப் பயன்படுத்தியுள்ளனர்.

முதுகுடி மகளைப் பெண்வேண்டி வந்த வேந்தர், களிறு, மா போன்ற விலங்குகள் பூட்டிய தேரில் வந்தனர். அவ்விலங்குகளினால் தெருவழியும், துறையும் கலங்கியதை புறநானூறு எடுத்துரைக்கும்.[108]

### 5.2.4. தேரில் வரைய வருதல்

பழந்தமிழர் மணம்பேச வரும்பொழுது தேரேறி வருவதைச் சிறப்பாகக் கருதினர். களவுக் காலத்தில் ஏற்படும் அலருக்கு அஞ்சாமல் நெய்தல்நிலத் தலைவன் தேரேறி வந்து தலைவியை மணந்து கொள்ள வேண்டும் எனத் தோழியர் கருதியுள்ளனர்.[109] இதனை, தலைவியை வரைந்து கொள்ளத் தேரை விரைந்து செலுத்துக,[110] விரைவில் குதிரை பூண்ட தேரில் வருக,[111] புரவி பூண்ட தேரில் விரைந்து வருக[112] என்ற கூற்றுக்கள் மெய்ப்பிக்கும். குதிரை பூட்டிய தேரில் ஊரார் பலர் அறியத் தலைவன் வந்ததை,

"புள்ளுயிர்க் கொட்பின் வள்ளுயிர் மணித்தார்க்
கடுமாப் பூண்ட நெடுந்தேர்
நெடுநீர்ச் சேர்ப்பன் பகல்இவண் வரவே" (நற்.91:10-12)

எனும் பாடல் விளக்கும்.

மேலைச் செய்திகள் அனைத்தும் நெய்தல்நிலப் பாடல்களில் மட்டும் இடம்பெற்றுள்ளன. இவற்றால் நெய்தல்நில மக்கள் வரைதற் பொருட்டுக் குதிரை பூட்டிய தேரில் சென்றமை விளங்கும்.

### 5.2.5. பிரிந்தாரைச் சேரல்

கணவனும், மனைவியும் ஊடல் காரணமாகப் பிரிந்திருந்தனர். அவர்கள் ஒன்று சேரக் குதிரை பூட்டிய தேர் பயன்பட்டது. கண்ணகியைப் பிரிந்த பேகனிடம் குதிரை பூட்டிய தேரில் விரைந்து சென்று கண்ணகியின் துயர்நீக்க வேண்டும் என்று 'அரிசில்கிழார்'[113] 'பரணர்'[114] ஆகியோர் குறிப்பிடுவர். இதனைப் போன்று, பிரிந்து சென்ற தலைவன் விரைவில் தேரேறி வருவான் எனப் பலநாளும் தலைவி காத்திருந்தமையுமுண்டு.[115]

### 5.2.6. தேரில் தலைவியைக் காண வருதல்

சங்ககாலத் தலைவர்கள் தலைவியைக் காணும் பொருட்டுத் தேரில் வந்தனர். தேரைப் பாகர் நடத்தினர். குதிரைகள் பூண்ட தேரைப் பாகன் செலுத்தத் தலைவன் தலைவியை அடைந்ததை,

"கடும்பரி நன்மான் கொடிஞ்சி நெடுந்தேர்
கைவல் பாகன் பையென இயக்க
யாந்தற் குறுகின மாக" (அகநா.230:11-13)

என்ற அடிகள் உணர்த்தும். தேரைச் செலுத்தும் பாகன் தாற்று முள்ளால் குதிரையைத் தீண்டி வேகப்படுத்தியதை மருதனிளநாகனாரும்,[116] தேரானது மணிகள் ஒலிக்க மேட்டுநிலத்தில் விரைந்து சென்றதை ஔவையாரும் விளக்குவர்.[117]

இருவகைக்குறியிலும் தலைவன் தேரைச் செலுத்தித் தலைவியைக் காண வந்தனன். பகற்குறியில் தேரில் வரும் நெய்தல்நிலத் தலைவனைத் தோழியும், தலைவியும் மணற்திட்டு மீது ஏறிப்பார்த்ததை நற்றிணை

குறிப்பிடும்.[118] இரவுக்குறியில் தேரேறி வரும் தலைவனை 'உலோச்சனாரும்',[119] 'நம்பிகுட்டுவனும்'[120] பாடுவர். இக்குறியிடங்களுக்குக் குதிரையில் வரும் தலைவன் சிலநேரங்களில் தலைவியைப் பார்க்க இயலாது சென்று விடுவதுமுண்டு.[121]

பலநாட்களாக ஒருவழியில், ஒருகுறிப்பிட்ட இல்லத்திற்குச் சென்று பழகிய விலங்குகள் மீண்டும் அதே இடத்திற்குச் செலுத்துவாரின்றித் தாமே சென்றுவிடும். அவ்வகையில் ஒரு முல்லைநிலத்தலைவனின் தேரில் பூட்டப்பட்ட குதிரை, தலைவியைக் காணத் தலைவனை தானே வாயிலில் கொணர்ந்து நிறுத்தியமை இவ்விடத்தில் சுட்டத்தக்கது.[122]

ஊரார் அறியாமல் தலைவனும், தலைவியும் சந்தித்துக் கொள்வர். எனினும் சந்தேகம் கொண்ட மக்கள், அவ்வூருக்கு அடிக்கடி ஒருதேர் வந்து செல்வதன் காரணத்தை எண்ணிப் பழிச்சொல் கூறுவர்.[123] மேலும் அத்தேர் வந்து சென்ற அடிச்சுவடுகளைக் கண்டு அலர் எழுப்புவர்.[124] ஊரார் அலர் தூற்றிய காரணத்தினால் தலைவன் தேரேறித் தலைவியைக் காண வருதலை நிறுத்துவன்.[125] சிலவேளையில் இடியுடன் கூடிய மழையால் பாதுகாப்புக் கருதித் தேரில் செல்வதைக் கைவிட்டனர்.[126] ஊர் மக்களின் அலராலும், இயற்கைச் சீற்றத்தாலும் தேரில் தலைவியைக் காண வரும் தலைவனுக்குத் தடை ஏற்பட்டதைக் காணமுடிகின்றது.

நெய்தல்நிலத் தலைவன் கொடுஞ்சித் தேரேறி தலைவியைக் காண வந்து அவள் நாணும்படிச் சென்றதை குறுந்தொகை குறிப்பிடும்.[127] இவ்வாறு தலைவியைக் கண்டு செல்லும் வழியில் புலியின் ஒலியைக் கேட்ட தலைவன், தேரில் பூட்டப்பட்ட குதிரையை இழுத்துப் பிடிக்க அது பந்து போல மீண்டும் ஓடியது.[128]

வண்டுகள் ஒலிக்கும் வழியில் தேரின்மணி ஒலிக்க, தலைவியைக் காணத் தலைவன் தேரேறி வந்தனன்.[129] புள்ளின் ஒலியைத் தலைவி, தேரின் ஒலியோ எனக் கூறும்முன் தலைவன் அங்கு நின்றனன்.[130] இதனால் தலைவன் விரைந்து வருவதற்கு விலங்குகள் பயன்பட்டமை புலனாகும்.

களவு வெளிப்பட்டபின் தாய், தலைவியை இற்செறிப்பள். கடற்கரையோரத்தில் ஒருதலைவனின் தேர் பன்முறையும் வந்து செல்வதைக் கண்ட தாய், மகளை இல்லில் சிறை வைத்துப் பாதுகாத்தனள்.[131] இவ்வேளையில் பறவைகளின் ஒலிகூடத் தலைவிக்குத் தேரின் ஒலியாகக் கேட்டது.[132]

தலைவன், தலைவியைக் காணத் தேரேறிக் கடற்கரையோரம் வருவன். அவ்வாறு குதிரை பூண்ட தேரேறிச் சென்றபொழுது ‘நெய்தல் மலர்’,[133] ‘அடும்பின்கொடி’,[134] ‘வண்டற்பாவை’[135] போன்றவை அடிபட்டிருக்கின்றன. கடற்கரையோரத்தில் தேரை ஓட்டிச் செல்லும் பாகனைச் சுறாமீன் தாக்கியது. அதனால் தலைவன் வேறொரு தேரேறிச் சென்றனன்.[136]

தலைவன் தேரேறி வரும்பொழுது வழியில் தோன்றும் இன்பமான காட்சிகள் மனதை இன்புறுத்தும். இரலையுடன் பிணை துள்ளியாடுவதும்,[137] ஆண்மானோடு பெண்மான் தாவி ஓடுவதும்[138] தலைவனின் மனதில் இன்ப வேட்கை மிகுவித்துத் தேரை விரைந்து செலுத்தத் தூண்டிற்று. தேரேறி வரும் தலைவன் தாம் வரும் வழியில் வெள்ளத்தில் சிக்கியவர்களைக் காத்துள்ளனன்.[139]

தலைவியின் இல்லத்திற்கு இரவில் தேருடன் சென்றால் அயலர் விழிப்படைந்து அலர் எழக்கூடும் என்று கருதிய தலைவன் மலை போன்ற மணல்மேட்டின் மேல் தேரை நிறுத்திவிட்டுத் தலைவியைக் கண்டு சென்றனன்.[140] தலைவன் தான் ஏறிச் சென்ற தேரினைச் சேய்மைக் கண் நிறுத்திவிட்டுக் காலால் சிறிது தூரம் நடந்து சென்று தலைவியைச் சந்தித்ததுமுண்டு.[141]

களவு முற்றிய காலத்தில் உடன்போக்கு மேற்கொள்ளத் தலைவன் தேரேறி வந்தனன்.[142] சுறாமீனைப் பிடித்தலால் கிழிந்த வலையைப் பின்னும் பரதவர் பெற்ற மகள், தேரேறி வரும் தலைவனுக்கேயுரியவள் எனக் கூறுவள் தோழி. ஏனெனில் தேரேறி நாள்தோறும் வரும் அவனைத் தடுத்தல் என்பது இயலாத செயல் எனக் கருதினர்.[143] தேரில் வந்த தலைவனைக் கண்டபின் தலைவியின் பசலை நோயும் நீங்கியிருக்கின்றது.[144] தலைவன் தலைவியைக் காண தேரில் வந்த குறிப்புகள் நெய்தல்திணைப் பாடல்களில் அதிகம் இடம்பெற்றுள்ளன. இவற்றால் நெய்தல்நிலத்தில் தேரின் பயன்பாடு அதிகம் என்பதை அறிய இயலும்.

### 5.2.7. தலைவனின் பரத்தமை ஒழுக்கத்தில் தேரின் பயன்பாடு

பரத்தையரில் இற்பரத்தை, சேரிப்பரத்தை, காதற்பரத்தை என மூன்று வகையினர் உண்டு. இப்பரத்தையரை நாடித் தலைவன் செல்வதற்குக் குதிரை பூட்டிய தேர் பயன்பட்டுள்ளது. தலைவன் பரத்தையரின் இல்லத்திற்குச் செல்லும்பொழுது, பாணனும்,[145] பாகரும்[146] தேரை ஓட்டிச் செல்வர். தலைவன் தானே தேரை ஓட்டிச்

செல்வதுமுண்டு.[147] சிலவேளைகளில் பரத்தையரைத் தேரில் ஏற்றித் தலைவனின் இல்லத்திற்கும் கொண்டு வருவர்.[148] பாணர், பரத்தையரை ஏற்றி வரும் தேரைத் தெய்வமாக வணங்குவர்.[149] தலைவன் பொருட்டுப் பாணர் பரத்தையரைத் தேரில் கொணர்ந்து அதற்கு ஈடாகத் தேரில் பொருளை ஏற்றிச் செல்வர்.[150] பலகாலம் பரத்தையரைத் தேடிச் சென்று வெறுப்படைந்த தலைவன், தேரேறித் தலைவியின் இல்லத்தில் வந்து காத்துக் கிடந்தனன்.[151] மேற்சுட்டியவற்றால் தலைவனின் பரத்தமை ஒழுக்கத்திற்குத் தேர் பெரிதும் பயன்பட்டமை புலனாகும்.

### 5.2.8. விருந்தினர் தேரில் வருதல்

சங்ககால மக்கள் விருந்தினராகச் செல்லும்பொழுது தேரில் சென்றுள்ளனர். அங்ஙனம் தேரில் வந்த விருந்தினர்களை எதிர்கொள்ளுகையில் தலைவி புலவியை மறந்திருந்ததை,

"விரியுளைக் கலிமான் தேரொடு வந்த
விருந்தெதிர் கோடலின் மறப்பல் என்றும்" (கலித்.75:16-17)

என்ற அடிகள் புலப்படுத்தும். இதனால் பண்டை மக்களின் செல்வ வளம், பண்பாடு போன்றவை புலனாகும்.

### 5.2.9. தேரில் வினைமேற்கொள்ளுதல்

தலைவன் தலைவியை வினையின் பொருட்டுப் பிரிந்து செல்வன். அதற்குத் தேர் பயன்பட்டுள்ளது. பொருள் தேடச் செல்லும் தலைவன் எல்லா இலக்கணமும் பொருந்திய குதிரை பூட்டிய தேரில் புறப்பட்டுச் சென்றதை நற்றிணை எடுத்துரைக்கின்றது.[152] வேந்தன் கட்டளைப்படி

வினைமேற்கொண்ட தலைவன் தேரேறி வேற்றூருக்குச் செல்வதும்,[153] தேரேறி போருக்குச் செல்வதும்[154] சுட்டத்தக்கது. வினை மேற்கொள்ளும் தலைவனுக்கு உதவியாகப் பாகன் தேரை விரைந்து செலுத்துவன்.[155]

பனிக்காலத்தில் குதிரை பூட்டிய தேரில் வினைமேற்கொண்ட தலைவன்,[156] கார்காலத்தில் வினைமுடித்துத் தேரில் திரும்புவன்.[157] தலைவன் தலைவியை விட்டுப் பிரிந்து செல்வதால் தலைவியின் நலம் கெடும். குதிரை பூட்டிய தேரில் சென்ற நெய்தல்நிலத் தலைவனொடு தலைவியின் நலமும் உடன்சென்று பின் அவனுடன் திரும்பி வந்ததாக அம்மூவன் குறிப்பிடுவர்.[158]

வினையின் பொருட்டுத் தலைவனுக்காகத் தேரை ஓட்டிச் சென்ற பாகன் மீண்டும் தேரை விரைந்து இல்லம் நோக்கி ஓட்டி வருவன்.[159] அந்நிலையில் குதிரையைத் தாற்றுக் கோலால் தீண்டியும்,[160] கடிவாளத்தை வலிந்து பிடித்துச் செலுத்தியும் வருவன்.[161] பாகனின் தாற்றுக் கோலால் குத்தப்பட்ட குதிரைகள் அளவுகடந்த வேகத்தில் செல்ல, பாகன் அதன் கடிவாளத்தைப் பிடித்து இழுத்து மெதுவாகச் செல்லக் குறிப்பித்தமை பற்றிய குறிப்பு அகநானூற்றில் உள்ளது.[162]

தலைவன் வினைமுடித்துத் திரும்பி வருகின்றபொழுது பாகனை விரைந்து ஓட்டக் கூறுவன். தலைவன், தலைவியைக் காணும் விருப்பத்தாலும்,[163] தலைவியின் வருத்தம் நீங்கவும்,[164] செல்ல வேண்டிய ஊர் தூரத்தில் இருந்தமையாலும்,[165] நீண்ட நாள் பிரிவின் காரணமாகவும்,[166] தாமதித்தால் தலைவியை இரந்து நிற்க வேண்டியும்,[167] தலைவி மகிழ்ச்சி கொள்ளவும்,[168] தலைவி நலம் பெறவும்[169] தேரை ஓட்டும் பாகனை விரைந்து செலுத்தக் கூறினன். இவ்வாறு விரைந்து

செல்கின்ற குதிரைகளின் வேகம் 'நீர்வீழ்ச்சியுடனும்,'[170] 'காற்றுடனும்,'[171] 'பறவையுடனும்'[172] ஒப்பிட்டு உரைக்கப்பட்டுள்ளன.

பனிக்காலத்தில் சென்ற தேர்கள் கார்காலத்தில் திரும்பியபொழுது வழிகள் மறைந்து காணப்பட்டது. அதனால் மரஞ்செடிகொடிகளை அகற்றித் தேர் செல்லப் புதிய வழிகளை ஏற்படுத்தினர்.[173]

தேர் வரும் வழியில் பிற உயிரினங்களும் வாழும். அவ்வுயிரினங்களுக்கு இடையூறு ஏற்படாமல் தேரைச் செலுத்தக் கருதினர். முல்லைநிலத்தில் குதிரைகளை மணிகள் கட்டிய தேரில் பூட்டி வரும்பொழுது சோலையில் உள்ள வண்டுகள் மயங்குமென அஞ்சி, மணிகளின் நாவை ஒலியாமற் கட்டி வந்தனர்.[174] குதிரை பூட்டிய தேரின் விரைந்த ஒலி கேட்டால் பெண்மானுடன் இணையும் ஆண்மானின் கூட்டம் நிகழாது எனக் கருதிக் குதிரையைத் தாற்றுக் கோலால் குத்தாமல் மெதுவாகச் செலுத்துவர்.[175] கடற்கரையின் ஓரத்தில் தான் ஊர்ந்து வருகின்ற தேரின் ஆழியில் நண்டுகள் சிக்காதவாறு தேரைத் தலைவன் செலுத்துவன்.[176] இவற்றால் வினைமுடித்த தலைவன், தேரில் வருகையில், வழியில் பிறஉயிரினங்களைத் துன்பப்படுத்தாமல், இரக்க உணர்வு உடையவனாகத் திகழ்ந்தமை சுட்டத்தக்கது.

பொதுவாக வினைமுடித்து மகிழ்வுடன் திரும்பும்பொழுது இன்பமான காட்சியைக் கண்டு செல்ல மனம் விரும்புவதியல்பு. அவ்வகையில் தலைவன் ஆண்மானும், பெண்மானும் இன்பமுடன் தங்கும் வழியில் தேரைச் செலுத்தியதை அகநானூறு குறிப்பிடும்.[177] வினைமுடித்துத் திரும்பிவரும் முல்லைநிலத் தலைவன், தான் வரும்வழியில் இரலையின் பெண்மான் தன்குட்டியுடன் கூட்டத்தினின்று ஓட, அதனைத் தேடும்

ஆண்மானின் காட்சியைக் கண்டனன். ஆண்மானைப் போல அவனும் தலைவியையும், புதல்வனையும் தேடி அடையத் தேரை விரைந்து செலுத்தினன்.[178] முல்லைநில வழியில் இரலைமான் பெண்மானை நோக்கும் காட்சியும் தலைவனின் மனதிற்கு இன்பமூட்டியிருக்கின்றது.[179]

நீண்ட தொலைவிலிருந்து திரும்பிவரும் தலைவன், இரலை தன் பெண்மானுடன் தங்கியிருக்கும் சோலையில் தன் தேரொடு தங்கியமையும்,[180] குதிரையைப் பிணைப்பு விடுத்து இளைப்பாற்றி, சுரவழியில் தங்கியிருந்து சென்றமையும்[181] உண்டு.

வழியில் தலைவன் தங்கிச்செல்வதாலும், பிறகாரணங்களாலும் தலைவியின் இல்லம் அடையக் காலதாமதமாகும். அதனால் தலைவன் பாகனை முன்னமே சென்று தலைவியிடம் அவன் வரவைக் கூறும்படி வேண்டுவன். முல்லைநெறியில் தவளையின் ஒலியால் தேரில் கட்டிய மணியின் ஒலியைத் தலைவி கேட்க முடியாது என்பதால் தலைவன் வரும் செய்தியைக் கூறுமாறு இளையோரை ஏவினன்.[182] அவ்வாறு சென்று தலைவிக்கு ஆறுதல் கூறும் பாகன் தவறாமல் தனது தேரை அங்கு காண்பான் எனத் தலைவன் குறிப்பிட்டனன்.[183] இங்ஙனம் குறிப்பிட்டபடித் தலைவன் தேரிலேறிச் சென்று இல்லத்தை அடைந்ததால் தலைவியும், செவிலியும் துயர்நீங்கினர்.[184]

அரச ஆணையின்படி போருக்குத் தேரில் சென்ற தலைவன், யானைப்படைகளையுடைய வேந்தன் போரை முடித்துக்கொண்டதாலும்,[185] போர் முடிந்து அரசன் விடைகொடுத்ததாலும்[186] இயல்பாக வேகமாகச் செல்லும் குதிரையை மேலும் விரையச் செலுத்தி மீண்டு வந்தனன். இவ்வாறு போர்மேற்சென்ற தலைவன் ஒருவன் போர் முடிந்தது என்று

கருதிப் புறப்படத் தயாரானான். ஆனால் அரசன் மீண்டும் போரைத் தொடர்ந்ததால் தேரில் பூட்டப்பட்ட குதிரையை நினைத்துத் தலைவன் வருந்தினன்.[187] அரசனின் இச்செயலை அறிந்த தலைவி, பகைவரை எதிர்த்துப் பாசறைக்கண் இருத்தல் மன்னருக்கு இயல்பு; ஆனால் போர்வீரனாகிய தன் தலைவன், தேரேறிக் குறித்த பருவத்தில் வராதது ஏன் என வினவுகின்றனள்.[188] எனவே, தலைவியின் வருத்தம் நீங்க, அன்று மாலையே தலைவிக்கு விருந்தாகும் பொருட்டு, விரைந்து தேரைச் செலுத்த வேண்டும் எனத் தலைவன் விரும்பினன்.[189] போருக்குச் சென்ற தலைவன் குறித்த காலத்தில் வராததால், பாணன் குதிரை பூட்டிய தேரில் ஏறிச் சென்று தான் அழைத்து வருவதாகக் கூறினன்.[190]

வெற்றி பெற்ற தலைவன் பாசறையில் தேரில் ஏறி அமர்ந்தனன். தலைவியை நினைத்து வந்தபொழுது தேரினை நிறுத்திப் பாகன் இறங்குக என்றனன். அதற்குத் தலைவன் தேரில் காற்றைப்போலக் குதிரைகளைப் பூட்டினாயோ அல்லது மனதைப் பூட்டினாயோ என வியந்து, பாகனைப் பாராட்டித் தன் வீட்டிற்குள் அழைத்துச் சென்றனன். அவனுடைய மனைவி அவனுக்கு விருந்து படைத்தனள்.[191] இதன்வழி விரைந்து தேரோட்டும் பாகனின் திறமும், அதற்குத் துணைநின்ற குதிரையின் திறமும் வெளிப்படுகின்றது.

தலைவன் பொருள் தேடவும், போரின் பொருட்டும் தேரில் சென்று திரும்பியதைப் பற்றி 'ஐம்பது' பாடல்கள் குறிப்பிடுகின்றன. இதில் 'முப்பத்தாறு' பாடல்கள் தலைவன் முல்லைநில வழியாகத் தேரில் வந்தமையையே குறிப்பிடுகின்றன. கார்காலத்தில் முல்லைநிலத்தில் ஏற்படும் இன்பச் சூழ்நிலையே இதற்குக் காரணமாகும்.

### 5.2.10. போக்குவரத்தில் அத்திரி

சங்ககாலத்தில் அத்திரி என்னும் கோவேறு கழுதை மக்கள் பயணிக்கும் வாகனமாக விளங்கியது. இரவில் அத்திரி பூட்டிய தேரில் வந்த தலைவனைத் தலைவி தங்கிச் செல்லக் கூறியமையும்,[192] தலைவியைக் காண கோவேறு கழுதை பூட்டிய தேரில் சென்ற தலைவன் உப்பங்கழியில் சென்றதால், அக்கழுதைக்கு காலில் சுறாமுள் தைத்துத் துன்பப்பட்டமையும்,[193] தலைவியைக் காணவரும் தலைவனின் தேரில் பூட்டப்பட்ட கோவேறு கழுதையின் குளம்பினடியில் இறால்மீன்கள்பட்டு இறந்தமையும்,[194] மக்கள் நீராடச்சென்றமையும்[195] தேரில் அத்திரியின் பயன்பாட்டை விளக்கும். “மன்னர்களும், தலைவர்களும், செல்வந்தர்களும் ஏறிச்செல்வதற்குக் குதிரைகள் போதிய அளவின இன்றி அரிதாயிருந்த காலத்தில் குதிரை போன்று உயர்ந்ததும், வலிமையும், ஓடும்திறனும் பெற்றதுமான ஒருவகைக் கழுதையைப் பயன்படுத்தினர். கோக்களும், தலைவர்களும் ஏறிச் செல்லப் பயன்படுத்திய காரணத்தால் அத்திரி பின்னாளில் கோவேறு கழுதை எனப் பெயர் பெற்றிருத்தல் வேண்டும்”[196] என்பர் தி.முத்துக்கண்ணப்பர். காவிரியில் புனலாடச்சென்ற கோவலன் அத்திரியில் சென்றமையும் இவ்விடத்தில் சுட்டத்தக்கது. அத்திரியை நெய்தல்நில மக்கள் மட்டுமே போக்குவரத்திற்காகப் பயன்படுத்தியமை குறிப்பிடத்தக்கது.

### 5.2.11 போக்குவரத்தில் விலங்குகளுக்கு ஏற்பட்ட இடையூறுகள்

போக்குவரத்தில் பயன்படுத்தப்பட்ட விலங்குகளுக்குப் பல்வேறு இன்னல்கள் ஏற்பட்டுள்ளன. அலைகொணர்ந்து வீசிய முத்துகள்

குதிரையின் கால்களில் குத்தியமை,[197] சேற்றுடன் கலந்த சகதியில் தேர் புதைந்தமை,[198] குதிரை பூட்டிய தேர் மணலில் புதைந்தமை[199] போன்ற செய்திகள் இதனை விளக்கும்.

### 5.2.12. தேர் என்ற தனிச்சொல்

சங்ககாலத்தில் யானை, குதிரை, எருது, அத்திரி போன்ற விலங்குகள் மட்டுமே போக்குவரத்திற்குப் பயன்படுத்தப்பட்டன. இவ்விலங்குகளைத்தான் தேரிலும், வண்டியிலும் பூட்டியுள்ளனர். ஆனால் சில பாடலடிகளில் 'தேர்' என்ற தனிச்சொல் மட்டும் இடம்பெற்றுள்ளது. இத்தேர் என்னும் சொல் சுட்டப்படும் இடத்தில் பயன்படுத்தப்பட்ட விலங்கு பற்றிய குறிப்புகள் இடம்பெறவில்லை. இத்தேர் எனும் தனிச்சொல், தலைவன் ஒரு வினையை முடித்துத் தலைவியை நினைந்து விரைவில் திரும்பி வரும்நிலையிலும்(ஐங்.483:2-3), தலைவியுடன் சேர வேண்டும் என்னும் நோக்கத்தோடும் (நற்.221:6-7) வரும் இடங்களிலும் குறிக்கப்பெற்றுள்ளது. போக்குவரத்தில் பயன்படுத்தப்பட்ட விலங்குகளில் குதிரையைத் தவிர மற்ற விலங்குகள் விரைந்து செல்ல உதவா. நீண்ட தூரம் விரைந்து செல்லக் குதிரையே பெரிதும் பயன்பட்டது. எனவே, போக்குவரத்தில் தேர் என்று தனியாகக் குறிப்பிடப்படும் இடங்களில் குதிரை பயன்படுத்தப்பட்டது எனக் கருத இடமுண்டு.

### 5.3. பொழுதுபோக்கில் விலங்குகள்

சங்ககாலத் தமிழர் விலங்குகளைச் சண்டையிட வைத்து, அதனைக் கண்டு மகிழ்ந்துள்ளனர். ஆனேறும், மரையானும் கூடிப்

போரிட்டன. அதனைப் போன்று எருமைஏறுகளும் தம்முள் பொருதன. ஆரவாரங்களுடன் விலங்குகள் போரிடும் இக்காட்சியை மக்கள் கண்டுகளித்ததை,

"இனத்திற் றீர்ந்த துளங்கிமி னல்லேறு
மலைத்தலை வந்த மரையான் கதழ்விடை
மாறா மைந்தி னூறுபடத் தாக்கிக்
கோவலர் குறவரோ டொருங்கியைந் தார்ப்ப
வள்ளிதழ்க் குளவியுங் குறிஞ்சியுங் குழைய
நல்லேறு பொரூஉங் கல்லென் கம்பலை" (மலைபடு.330-335)

என்னும் அடிகள் விளக்கும். இவ்விலங்குகள் போரிடுதலைக் கோவலரும், குறவரும் ஒருங்கிருந்து கண்டு களித்துள்ளனர். சங்ககால மக்கள் ஆட்டுகிடாய்களையும் போரிடவைத்து மகிழ்ந்துள்ளனர்.[200] புலியும், களிறும் மலையில் போரிட்டது. கோபம் கொண்ட இவ்விலங்குகளால் ஏற்படும் துன்பத்திற்கு அஞ்சாமல் குறவரின் இளமைந்தர்கள் உயர்ந்த பாறையின் உச்சியில் ஏறி தொண்டகப் பறையை ஒலிப்பித்துக் இதனைக் கண்டு களித்தமையை நற்றிணை குறிப்பிடும்.[201]

### 5.3.1. கழைக்கூத்தில் குரங்குகள்

குழலொலிப்ப, வாச்சியங்கள் முழங்கக் கயிற்றின் மேல் நடக்கும் கழைக்கூத்து நடந்து கொண்டுஇருந்தது. முறுக்குண்ட புரியையுடைய வலிய கயிற்றினைப் பற்றி செம்முக மந்தியின் குட்டி ஆடிக்கொண்டிருந்தது. அதனைக் கண்ட குறச்சாதியரின் இளமகள் பாறையின் பக்கத்திலுள்ள மூங்கிலின் மேலேறி நின்று தாளத்தைக்

கொட்டியதை நற்றிணை விளக்கும்.[202] தற்காலத்திலும் குரங்கு வித்தை காட்டும் விலங்காகப் பயன்படுவது குறிப்பிடத்தக்கது.

## 5.4. விளையாட்டில் விலங்குகள்

விளையாட்டு என்பது மனதிற்கு இன்பம் தரும் செயலாகும். விளையாட்டால் உவகை கிடைக்கும் என்பதை,

"செல்வம் புலனே புணர்வு விளையாட்டென்று
அல்லல் நீத்த உவகை நான்கே" (தொல்.1205)

என்ற தொல்காப்பிய நூற்பா விளக்கும். "விளையாட்டென்பது, சிரமமின்றி இலேசாகச் செய்கின்ற வேடிக்கையான மகிழ்ச்சி நிறைந்த செயல்"[203] என்று விளக்கம் தருவர் சு.சிவகாமசுந்தரி. இதனால் மனதிற்கு மகிழ்வு தருவது விளையாட்டு என்பதை உணரமுடியும். சங்கத் தமிழர் மனமகிழ்வு வேண்டி விலங்குகளுடன் விளையாடி உள்ளனர்.

### 5.4.1. யானையுடன் விளையாடுதல்

சிறுவர்கள் விலங்குகளுடன் விளையாடுவதில் விருப்பம் உடையவர் ஆவர். சிறுகுடி மனைகளில் வாழும் மறவருடைய புதல்வர்கள், முன்றிலில் விழும் விளாங்கனிகளை ஓடிச் சென்று எடுத்தனர். அதேசமயத்தில் புறத்தே காவற்காட்டில் வாழும் பிடியினை ஈன்ற இளங்கன்றுகளும் ஓடிவந்து அவ்விளவின் கனியை எடுத்து உண்டன.[204] இதனால் யானைக்கன்றுகளும், சிறுவர்களும் ஒன்று கூடித் திரிந்ததை அறியஇயலும்.

முற்காலத்தில் குறவர்களின் குழந்தைகளோடு விளையாடி மகிழ்ச்சியை விளைவித்த யானைக்கன்று, பிற்காலத்தில் அவர்க்குரிய தினையை உண்டு துன்பத்தை விளைவித்ததை,

"முழந்தா ளிரும்பிடிக் கயந்தலைக் குழவி
நறவுமலி பாக்கத்துக் குறமக ளீன்ற
குறியிறைப் புதல்வரொடு மறுவந் தோடி
முன்னா ளினிய தாகிப் பின்னாள்
அவர்தினை மேய்தந் தாங்கு" (குறுந்.394:1-5)

என்ற பாடல் உணர்த்தும். ஊரிலுள்ள சிறுபிள்ளைகள் வெள்ளிய கோடுடைய களிறு நீராடும் நீர்த்துறையின்கண் சென்று அக்களிற்றை எளிதாக நீராட்டி விளையாண்டதை புறநானூறு குறிப்பிடும்.[205]

### 5.4.2. ஆட்டுடன் விளையாடுதல்

சங்கால மக்கள் தம் இல்லங்களில் ஆடுகளை வளர்த்து வந்தனர். மன்றத்தில் வெள்ளாட்டின் வெள்ளைநிறக்குட்டி ஆத்தித் தழையைத் தின்று சிறுவர்களோடு குதித்து விளையாடியதை மதுரை மருதனிளநாகனார் விளக்குவர்.[206]

### 5.4.3. சிறுதேரில் ஆமான்கன்றைப் பூட்டுதல்

விளையாட்டில் ஆர்வமிக்க சிறுவர்கள் தாம் உருட்டி விளையாடும் சிறுதேரில் விலங்குகளைப் பூட்டி மகிழ்வர். ஆமானின் இளங்கன்றைச் சேங்கன்றாகப் பூட்டி விளையாடியதை,

"கொடுங்கோட் டாமா னடுங்குதலைக் குழவி

புன்றலைச் சிறாஅர் கன்றெனப் பூட்டும்" (புறநா.319:10-11)

என்ற அடிகள் விளக்கும். சங்ககாலச்சிறுவர்கள் பெரியோர் ஊர்ந்து செல்லும் பெரியதேரை ஊர்ந்து இன்புறாவிடினும் அத்தேரை நினைந்து, விலங்குகள் பூட்டிய சிறுதேரை இழுத்து அப்பெரியோர் இன்பத்தைப் பெற்றுள்ளனர்.[207] ஆநிரைகளில் ஒன்றான ஆமான் எனும் விலங்கு மலைப்பகுதிகளில் வாழ்பவையாக இருந்தாலும் மலையையொட்டிய நிலப்பகுதியிலும் சிறிதளவு காணப்பட்டமையை இச்செய்தி உணர்த்துகின்றது.

**5.4.4. குரங்குடன் விளையாடுதல்**

குரங்குகளைக் காண்பதில் சிறுவர் முதல் பெரியவர் வரை அனைவரும் விருப்பம் கொள்வர். உப்புவணிகர் எருது பூட்டிய வண்டியில் உப்பு விற்கச் சென்றபொழுது தாம் வளர்த்த செம்முகமந்தியையும் உடன் வண்டியில் அழைத்துச் சென்றனர். உப்பு வணிகர் தம்பிள்ளைகளைப் போலவே வளர்த்த அம்மந்தி அவர்களின் மகவுடன் தானும் கிலுகிலுப்பை ஆட்டி விளையாடியதைச் சிறுபாணாற்றுப்படை குறிப்பிடுகின்றது.[208]

**5.4.5. எருமை மீது அமர்ந்து விளையாடுதல்**

சிறுவர்கள் எருமை மீது ஏறி அமர்ந்து விளையாடுவர். இக்காட்சி சேய்மையிலிருந்து பார்ப்பவருக்கு உருண்டைக் கல்லின் மீது மந்தி இருப்பது போன்று தோற்றமளித்ததை,

"நகுவரப் பணைத்த திரிமருப் பெருமை

மயிர்க்கவின் கொண்ட மாத்தோல் இரும்புறம்

சிறுதொழில் மகாஅர் ஏறிச் சேணோர்குத்

துறுகல் மந்தியில் தோன்றும் ஊரன்" (அகநா.206:3-6)

என்ற பாடல் விளக்கும். இன்றும் நாட்டுப்புறத்தில் எருமைகளை மேய்ச்சலுக்கு ஓட்டிச்செல்லும் சிறுவர்கள் அதன் மீது அமர்ந்து செல்வது சுட்டத்தக்கது.

சங்ககாலச் சிறுவர்கள் யானை, ஆடு, ஆமான், குரங்கு, எருமை போன்ற விலங்குகளுடன் விளையாடியுள்ளனர். பெரியவர்கள் விலங்குகளின் விளையாட்டைக் கண்டு மகிழ்ந்துள்ளனர்.

### 5.5. விலங்குகளின் உறுப்புக்கள் பயன்பாடு

தொடக்க காலந்தொட்டு மனிதவாழ்வில் விலங்குகள் முக்கியப் பங்காற்றியுள்ளன. மனிதனின் செயல்பாடுகளில் விலங்குகள் ஈடுபடுத்தப்பட்டன. அவன் வாழ்வின் பல காலகட்டங்களிலும் விலங்குகள் உதவி செய்தமை குறிப்பிடத்தக்கது. சங்ககால மக்கள் விலங்குகளின் இறைச்சியை உணவிற்குப் பயன்படுத்தினர். இதனைப்போன்று விலங்களின் பிற உறுப்புக்களும் மக்களுக்குப் பெரிதும் பயன்பட்டன.

#### 5.5.1. யானைக்கோடு

யானை இருந்தாலும் ஆயிரம்பொன், இறந்தாலும் ஆயிரம்பொன் என்று குறிப்பிடுவர். யானையின் விலைமதிப்பற்ற கோட்டின் பயன்பாடு கருதியே இப்பழமொழி தோன்றியிருக்க இடமுண்டு. இக்கருத்திற்கேற்பச்

சங்ககாலத்தில் யானையின் பயன்பாடு அதிகமாக இருந்தது. இவ்யானை உடல்உழைப்பால் மட்டுமின்றி, இறந்தபின்பு தன் உறுப்புக்களாலும் பயனளித்தன. அவ்வகையில் யானையின்கோடு முதன்மை பெற்று விளங்குகின்றது.

### 5.5.1.1. கோட்டுலக்கை

சங்ககால மகளிர் நெல் குற்றுவதற்கு யானைக்கோட்டை உலக்கையாகப் பயன்படுத்தினர். இதனை,

"கொல்யானைக் கோட்டால் வெதிர்நெற் குறுவாநாம்" (கலித்.42:7)

என்ற அடி விளக்கும். முத்து நிறைந்த யானைக் கொம்பால் செய்யப்பட்ட உலக்கையால் சந்தன மரத்தில் செய்த உரலில் இட்ட தினைக்கதிரைக் குத்தி அரிசியாக்கியதை,

"நகைமொழி நல்லவர் நாணு நிலைபோல்
தகைகொண்ட ஏனலுள் தாழ்குரல் உரீஇ
முகைவளர் சாந்துரல் முத்தார் மருப்பின்
வகைசால் உலக்கை வயின்வயின் ஓச்சி" (கலித்.40:2-5)

என்ற அடிகள் உணர்த்தும். சங்ககால மகளிர் மூங்கில் நெல்லைப் பாறையில் உருவான உரலில் இட்டு, யானைக் கொம்பினால் செய்யப்பட்ட உலக்கையைக் கொண்டு குற்றி, சேம்பினது இலையாலான சுளகால் புடைத்ததை கலித்தொகை விளக்கும்.[209]

ஐவன வெண்ணெல்லைப் பாறையாகிய உரலில் இட்டுப் புலியைக் கொன்ற யானையின் கோட்டாலான உலக்கையால் குத்தியதை,

"வேங்கை தொலைத்த வெறிபொறி வாரணத்

தேந்து மருப்பின் இனவண் டிமிர்பூதுஞ்

சாந்த மரத்தின் இயன்ற உலக்கையால்

ஐவன வெண்ணெல் அறையுரலுட் பெய்திருவாம்" (கலித்.43:1-4)

என்னும் பாடல் விளக்கும்.

தினைக்கதிர், மூங்கில்நெல், ஐவனநெல் ஆகியவற்றை யானைக்கோட்டால் குத்தி அரிசியாக்கி உள்ளனர். இவை குறிஞ்சி நிலத்திற்குரிய உணவுப்பொருளாகும். இச்செய்திகள் குறிஞ்சிக்கலியில் மட்டும் பாடப்பட்டுள்ளன. யானை குறிஞ்சிநில விலங்காகதலால் இதன் கோட்டால் நெல்குற்றிச் சங்க மக்கள் உண்டிருப்பது இயல்பானதாகும்.

**5.5.1.2. தந்தக் கட்டில்**

யானையின் தந்தம் விலை உயர்ந்ததாகும். இதன் மதிப்புக் கருதி இவற்றைக் கட்டில் கால்கள் செய்யப் பயன்படுத்தினர். தகடூர் எறிந்த பெருஞ்சேரலிரும் பொறையுடன் போரிட வந்த பிறநாட்டு வேந்தர்களின் யானைகளை, நாணேற்றி அம்பு எய்தனர். விழுந்துபட்ட யானையின் உயிர்போமளவு கதறக்கதற அதன் கோட்டினை அறுத்தனர். அக்கோட்டினால் தெய்வத்தன்மை பொருந்திய கட்டிலைச் செய்துள்ளனர். இதனை,

"நின்னொடு வாரார் தந்நிலத் தொழிந்து

கொல்களிற் றியானை யெருத்தம் புல்லென

வில்குலை யறுத்துக் கோலின் வாரா

வெல்போர் வேந்தர் முரசுகண் போழ்ந்தவர்

அரசுவா வழைப்பக் கோடறுத் தியற்றிய

அணங்குடை மரபிற் கட்டின்மே லிருந்து" (பதிற்.79:9-15)

என்ற பாடல் உணர்த்தும். பகைவரின் யானையாதலால் உயிருடன் துடிக்கும்பொழுது வீரம் கருதி அதன்கோட்டை அறுத்துள்ளனர். மேலும் ஒரு போர்க்களத்தில் யானைகள் அதிரப் போர் செய்தலால் அதன் மருப்புத் தானே விழுந்துவிட்டது. அத்தந்தத்தை எடுத்தவந்த தச்சர்கள் தம் கூரிய உளியால் அதனை இருபுறமும் சமமாக்கி, அதில் சிங்கம், புலி போன்ற பல ஓவியங்களைப் பதித்தனர். பின் கட்டில்களுக்குக் கால்களாகப் பயன்படுத்தினர்.[210] மன்னர் உறங்கும் கட்டிலின் கால்கள் யானைத் தந்தத்தால் செய்யப்பட்டமை குறிப்பிடத்தக்கது.

### 5.5.1.3. தந்தத் துலாக்கோல்

பண்டைத் தமிழர் தந்தத்தால் துலாக்கோல் செய்து பயன்படுத்தியுள்ளனர். சோழன் குளமுற்றத்துச் துஞ்சிய கிள்ளிவளவன், யானையின் வெள்ளிய கோட்டைக் கடைந்து தயாரித்த துலாக்கோலினைக் கொண்டு புகழுக்காக வேண்டி அல்லாமல் இயல்பாகவே பொருள்களை இரவலர்களுக்கு நிறுத்துக் கொடுத்ததை,

"புறவி னல்லல் சொல்லிய கறையடி

யானை வான்மருப் பெறிந்த வெண்கடைக்

கோனிறை துலாஅம் புக்கோன் மருக

ஈதனின் புகழு மன்றே சார்தல்" (புறநா.39:1-4)

என்பர் மாறோக்கத்து நப்பசலையார். யானைக்கோட்டின் பெருமதிப்புக் கருதி அதில் துலாக்கோல் செய்துள்ளனர்.

### 5.5.1.4. வாளின் கைப்பிடி

போர்க்களத்தில் போரிட வீரர்கள் வாளைப் பயன்படுத்துவர். அவ்வாளின் கைப்பிடியானது யானைத்தந்தத்தால் செய்யப்பட்டிருந்தது வழிப்பறி மேற்கொள்வோரும் வாளைப் பயன்படுத்துவதுண்டு. பாலைநிலத்து வழிகளில் வம்பலர், யானைக் கொம்பைக் கடைந்து வாளுக்கு வெள்ளிய ஆசாகப் பொருத்தி அதனைத் தம் தோளில் மாட்டித் திரிந்ததை பெரும்பாணாற்றுப்படை சுட்டும்.[211]

### 5.5.1.5. யாழுக்கு ஆப்பு

யாழ் என்னும் நரம்புக் கருவியை உறுதியான மரத்தால் செய்தனர். அதற்குரிய ஆப்பாக யானைத் தந்தத்தைச் செதுக்கிப் பொருத்தியுள்ளனர். களாம்பழம் போன்ற கரிய நிறமுடைய பேரியாழுக்கு நுண்ணிய துளைகளை இடுவர். அத்துளைகளில் சுள்ளாணிகளைப் புதைப்பதற்கு ஆப்பாக யானையின் வெண்கோட்டைப் பயன்படுத்தினர்.[212] இதனால் இசைக்கப்படும் இசையொலி இனிமையாக இருந்தது. சங்கத்தமிழர் இசையின் இனிமையும், கோட்டின் உறுதியும் கருதி யானைத் தந்தத்தை ஆப்பாகப் பொருத்தியுள்ளனர்.

### 5.5.1.6. கழங்கும், வட்டும் செய்தல்

கழங்காடுதல் என்பது ஒருவகை விளையாட்டு. இயற்கையில் கிடைத்த காய்களைக் கொண்டு எறிந்தும், எடுத்தும் உயரத் தூக்கிப் போட்டும் பிடித்தாடுவர். “பெண்கள் தங்களது இல்லங்களின் பின்புறத்திலும், மரநிழலிலும், மேன்மாடங்களிலும் அமர்ந்து கழங்கு

ஆடியுள்ளனர். கைக்குள் அடக்கக் கூடிய கழங்குக் காய்கள் விளையாட்டில் பயன்படுத்தப்பட்டுள்ளன”[213] என்று குறிப்பிடுவர் சு.சிவகாமசுந்தரி. கழங்குகள் யானையின் கோட்டால் செய்யப்பட்டிருந்ததை,

“கோடுகடை கழங்கின் அறைமிசைத் தாஅம்” (அகநா.135:1)

என்ற அடி விளக்கும்.

வட்டாடுதல் என்பது, “உருண்டு செல்வதற்கு வசதியாக வட்ட வடிவமாக அமைக்கப்பட்ட வட்டுகளை அதாவது காய்களை உருட்டி விளையாடுவது”[214] ஆகும். இவ்வட்டாட்டத்திற்குப் பயன்படுத்தப்படும் பொருள்களும் பல்திறத்தன. யானையின் கோட்டால் வட்டு செய்ததை,

“கோட்டுவட் டுருவின் புலவுநாறு முட்டை” (அகநா.160:6)

என்ற அடி உணர்த்தும். இதனால் விளையாடப் பயன்படுத்தப்படும் பொருட்களும் யானைக் கோட்டால் செய்யப்பட்டமை புலனாகும்.

சங்ககாலத்தில் யானை போராற்றுவதில் சிறந்து விளங்கியது. இதன் கோடானது உலக்கை, கட்டில்கால், துலாக்கோல், வாளின் கைப்பிடி, ஆப்பு, கழங்கு,வட்டு போன்ற பொருட்கள் செய்யப் பயன்பட்டமை சங்ககால மக்களின் வாழ்வியலில் யானை பெற்ற பங்கினை நன்கு விளக்கும்.

### 5.5.2. விலங்குகளின் தோல் பயன்பாடு

விலங்குகளின் உடல் உறுப்புகளில் மிகவும் பெரியது தோலாகும். இத்தோல் சங்ககால மக்களின் பல்வேறு பயன்பாட்டிற்கு உதவியது.

### 5.5.2.1. வாளுக்கு உறை

வீரர்கள் தமது வாளைப் பாதுகாப்புடன் வைத்திருப்பதற்குத் தோலாலான உறையைப் பயன்படுத்தியுள்ளனர். பல்யானைச் செல்கெழுகுட்டுவன் புலியைக் கொன்று அதன்தோலை எடுத்து வாளுக்கு உறை செய்தனன். அவ்வுறையில் இருந்து எடுக்கப்பட்ட வாளை ஏந்திப் பகைவரைக் கொன்றனன் என்பர் பாலைக்கௌதமனார்.[215] இதன்வழி, புலியின் தோலால் வாளுறை செய்யப்பட்டமை விளங்கும்.

### 5.5.2.2. முரசு கட்டுதல்

சங்ககாலத்தில் மன்னர்களின் அனைத்து அறிவிப்புக்களையும் வெளியிட முரசு பெரிதும் பயன்பட்டது. இதனால் முரசு தனிக்கட்டிலில் வைத்துப் போற்றப்பட்டது. இத்தகைய முரசின் மேல்பகுதி தோலால் கட்டப்பட்டது. இத்தோலும் கூரிய கொம்புகளை உடைய இரண்டு ஏறுகளைத் தம்முள் போரிட வைத்து அவற்றுள் வெற்றி பெற்ற ஏற்றின் தோலையுரித்து மயிர்களையாது கட்டப்பட்டதாகும். இதனை,

> "மண்கொள வரிந்த வைந்நுதி மருப்பின்
> அண்ண னல்லே றிரண்டுடன் மடுத்து
> வென்றதன் பச்சை சீவாது போர்த்த
> திண்பிணி முரச மிடைப்புலத் திரங்க" (புறநா.288:1-4)

என்னும் பாடலடிகள் விளக்கும்.

> "கொல்லேற்றுப் பைந்தோல் சீவாது போர்த்த
> மாக்கண் முரச மோவில கறங்க" (மதுரைக்.732-733)

"ஓடா நல்லேற் றுரிவை தைஇய

ஆடுகொண் முரசம் இழுமென முழங்க" (அகநா.334:1-2)

என்பனவற்றால் எருதின் தோல் மட்டுமே முரசுகட்டப் பயன்படுத்தப்பட்டமை புலனாகும். இதன் விரிவும், அகலமும், உறுதியும் கருதி முரசிற்குப் பயன்படுத்தியுள்ளனர்.

### 5.5.2.3. இசைக்கருவிகளில் விலங்குகளின் தோல் பயன்பாடு

பண்டைக் காலத்தில் பாணர், கூத்தர், பொருநர், விறலியர் போன்ற இசைக்கலைஞர்கள் மன்னரைக் கண்டு பாடிப் புகழ்ந்து பரிசு பெற்றனர். அவர்களின் பாட்டிற்கேற்ப இசைக்கருவிகள் இசைக்கப்பட்டன. இவ்விசைக் கருவிகள் விலங்குகளின் தோலால் செய்யப்பட்டிருந்தன.

#### 5.5.2.3.1. பறை

கூத்துக் கலைஞர்கள் தங்கள் ஆட்டத்திற்குப் பற்பல இசைக்கருவிகளைப் பயன்படுத்துவர். இவர்களைப் போன்றே குரவைக் கூத்தாடுபவர்களும் பறை எனும் கருவியை முழக்கிக் கூத்தாடியுள்ளனர். இப்பறைக் கருவியை வடிவமைக்க மான் தோல் பயன்பட்டுள்ளது. குறவர் தம்பெண்டிரோடு கூடி நறவைக் கள்ளைக் குடித்து மான் தோலால் கட்டிய சிறுபறை கல்லென்னும் ஓசைபட ஒலிக்க, உச்சி மலையில் குரவைக் கூத்தாடியதை மலைபடுகடாம் விளக்கும்.[216] மான்தோலின் நெகிழ்வுத் தன்மையால் பறையில் இனிய ஓசை எழும்பியது. அதனால் மானின் தோலால் பறை கட்டியுள்ளனர்.

### 5.5.2.3.2. தண்ணுமை

தோற்கருவிகளில் ஒன்றாகத் தண்ணுமை விளங்குகின்றது. இத்தண்ணுமை எருதின் தோலால் கட்டப்பட்டுள்ளது. இதனை,

"மல்லன் மன்றத்து மதவிடை கெண்டி

மடிவாய்த் தண்ணும்மை நடுவட் சிலைப்ப" (பெரும்பாண்.143-144)

என்ற அடிகள் உணர்த்தும். இசைக்கருவிகள் கட்ட மான், எருது போன்ற விலங்குகளின் தோல் பயன்பட்டுள்ளன.

### 5.5.3. தோலாடை

சங்ககாலத்தில் நெசவுத் தொழில் சிறந்து விளங்கியது. பருத்தி ஆடைகள் உற்பத்தி செய்யப்பட்டன. ஆயினும் அலங்காரம் கருதி விலங்குத் தோலாடையைப் பண்டைத்தமிழர் அணிந்துள்ளனர்.

மானிலக்கணம் தெரிந்தாரைக் கொண்டு மான்தோலைப் பெற்றுவந்தனர். அதன் உட்புறத்துத் தசையைக் களைந்து ஏனை அழுக்குகளையும் போக்கி எஞ்சி நின்ற ஒளிவீசுகின்ற தோலை வட்டமாக அறுத்தனர். அதன் விளிம்பில் இனமாகச் சேரக் கட்டினர். பின் கூர்மையான ஊசியால் தொழில் வல்லவன் உட்புறத்து மணிகளைப் பதித்து அழகுற அணி செய்தனன். இத்தோலாடையைத் தகடூர் எறிந்த பெருஞ்சேரலிரும்பொறையின் தேவி அணிந்திருந்ததைப் பதிற்றுப்பத்து விளக்கும்.[217]

சங்ககாலத்தில் யாகஞ்செய்வோர் கலைமானின் தோலை மேலாடையாகப் போர்த்துக் கொண்டுள்ளனர். சோனாட்டுப் பூஞ்சாற்றூர்ப்

பார்ப்பான் கௌணியன் விண்ணந்தாயன் வேள்வி செய்ய வேண்டிப் புறப்பட்டபொழுது அவனது மனைவி காட்டுநிலத்து வாழும் புல்வாய்க் கலையின் தோலை அவனது பூணூலின்மீது சிறந்து தோன்ற இட்டதை,

"வினைக்கு வேண்டி நீபூண்ட
புலப்புல்வாய்க் கலைப்பச்சை
சுவற்பூண்ஞான் மிசைப் பொலிய" (புறநா.166:10-12)

என்ற பாடல் விளக்கும்.

புலியின் தோலைக் கவசமாக அணிந்து போரிட்ட சோழன் முடித்தலைக் கோப்பெருநற்கிள்ளியை,

"புலிநிறக் கவசம் பூம்பொறி சிதைய
எய்கணை கிழித்த பகட்டெழின் மார்பின்
மறலி யன்ன களிற்றுமிசை யோனே" (புறநா.13:2-4)

என்று பாராட்டுவர் உறையூர் ஏணிச்சேரிமுடமோசியார்.

யாகம் செய்வோர் மேன்மை கருதி மானின் தோலையும், போரிடுவோர் வீரம் கருதி புலியின் தோலையும் ஆடையாக அணிந்துள்ளனர். இவற்றால் சங்கத்தமிழர் தம் ஆடையாக விலங்குகளின்தோல் பயன்பட்டமை புலனாகும்.

### 5.5.4. தோற்படுக்கை விரிப்பு

தந்தத்தால் செய்த கால்களை உடைய கட்டிலில் படுத்துறங்கிய சங்கத்தமிழர் விலங்குகளின் தோலைப் படுக்கையின் மேல் விரிப்பாகப் பயன்படுத்தியுள்ளனர்.

காய்வெடித்துப் பஞ்சுநீண்டாற்போன்று கோடுள்ள அணிலும், எலியும் திரியும் மேட்டுநிலத்தில் எய்ப்பன்றி முதுகு போன்றுள்ள கூரை வீட்டில் மான் தோலில் பிள்ளையுடன் எயிற்றி படுத்திருந்ததைப் பெரும்பாணாற்றுப்படை விளக்கும்.[218] ஒரு தலைவன், பாணருக்கும் பிறருக்கும் பொருளை மிகத்தந்து உறங்குதலை மேற்கொள்ள விரும்பினன். அதனால் மான்தோல் இருந்தாலும் பிற ஓலைப்பாய் இருந்தாலும் விரைவில் கொடுக்க வேண்டியதை வேம்பற்றூர்க் குமரனார் பாடுவர்.[219] குழையாலே வேய்ந்த குடியிலிருக்கும் இளையோர் மான்தோல் படுக்கையில் படுத்திருந்தனர்.[220] குறத்தியரின் தந்தையர், தாம் வேட்டையாடிய புலியின் தோலினை விரித்துப் படுத்தமையை அகநானூறு குறிப்பிடும்.[221]

ஆட்டின் தோலும் படுக்கை விரிப்பாகப் பயன்பட்டுள்ளது. ஆட்டுத்தோலில் செய்யப்பட்ட தோற்படுக்கையில் தங்கியிருந்து இடையர் ஆட்டுமந்தையைப் பிற விலங்குகள் கவர்ந்து செல்லாதபடிக் காத்து வந்துள்ளனர்.[222] இதனைப் போன்று செம்மறியாடுகளையும் வெள்ளாடுகளையும் தொழுவத்தில் காவல் காக்க முதியவன் ஆட்டுக்கிடாயின் தோலில் படுத்துறங்கியதைப் பெரும்பாணாற்றுப்படை எடுத்துரைக்கின்றது.[223] ஆடுமேய்ப்போராகிய இடையர் என்னும் முல்லைநிலமக்கள் மட்டும் ஆட்டுத்தோல் படுக்கையைப் பயன்படுத்தியுள்ளனர். இது முல்லைநிலத்தில் ஆடுகள் மிகுதியாக வளர்க்கப்பட்டமையை விளக்கும்.

சங்கத் தமிழர் தம் படுக்கை விரிப்பாக மான், புலி, ஆடு போன்றவற்றின் தோல்களைப் பயன்படுத்தியுள்ளமை சுட்டத்தக்கது.

### 5.5.5. தினை காய வைத்தல்

உணவு தானியங்களைக் காயவைத்துப் பயன்படுத்துவது மக்களின் வழக்கமாகும். சங்ககால மக்கள் மான் தோலில் தினையைக் கொட்டிக் காயவைத்ததை,

"மானதட் பெய்த வுணங்குதினை வல்சி" (புறநா.320:10)

என்ற அடி விளக்கும்.

### 5.5.6. பரண் வேய்தல்

தினைப்புனக்காவலில் ஈடுபடுவோர் தாம் தங்குவதற்குப் பரண் அமைப்பர். குறவர்கள் களிற்று யானையினின்று தம்மைக் காத்துக் கொள்ளச் சந்தன மரத்தால் செய்த கால்களை நட்டுப் புலித்தோலால் வேய்ந்த காட்டுப்பரணைக் கட்டியதை,

"வேங்கைஅம் குவட்டிடைச் சாந்தில் செய்த
களிற்றுத்தப்பு அஞ்சாப் புலியதள் இதணத்து"(நற்.351:6-7)

என்ற அடிகளில் மதுரைக் கண்ணத்தனார் விளக்குவர்.

## 5.6. நெய்யின் பயன்பாடு

சங்ககால மக்களின் உணவில் நெய் பெரும் பங்கு பெற்றது. பிற வாழ்வியற் கூறுகளிலும் அவர்கள் நெய்யைப் பயன்படுத்தியுள்ளனர்.

### 5.6.1. நெய்விளக்கு

சங்ககால மக்கள் இரவில் இருட்டைப் போக்க விளக்குகளை ஏற்றியுள்ளனர். அவ்விளக்கு எறிய நெய்யைப் பயன்படுத்தியுள்ளனர். சங்க மகளிர் மாலைக் காலத்தில் நெய்விளக்கு ஏற்றியதை,

"கயலே ருண்கட் கனங்குழை மகளிர்
கைபுனை யாக நெய்பெய்து மாட்டிய
சுடர்துய ரெடுப்பும் புன்கண் மாலை" (குறுந்.398:3-5)

"கையேந் தையக னிறையநெய் சொரிந்து
பருஉத்திரி கொளீஇய குரூஉத்தலை நிமிரெரி" (நெடுநல்.102-103)

என்னும் பாடலடிகள் விளக்கும்.

சங்ககாலத்தில் தலைவன் வரவுக்காக மாலையில் நெய்விளக்கேற்றி வைத்துக் காத்திருந்தமை,[224] பாலைநில இல்லத்தில் நெய்விட்டு எரியவைத்த விளக்கின் சுடரொளி மிகுந்து ஒளிவீசியமை,[225] நடப்பட்ட நடுகல்லுக்கு விடியற்காலத்துப் பலியைப் படைத்து, நல்ல நீராட்டி, நெய்விளக்கேற்றியதால் அவ்விளக்கிலிருந்து எழுந்த மேகம் போன்ற புகை தெருவெங்கும் வீசி மணந்தமை,[226] இரும்பாற் செய்த தகளியில் நெய் தோய்ந்த திரியைக் கொளுத்தி, நெல்லையும் மலரையுஞ் சிதறி இல்லுறை தெய்வத்தை வணங்கியமை[227] போன்ற செய்திகள் நெய்விளக்கு ஏற்றப்பட்டமையை நன்கு உணர்த்தும்.

இரவில் கூத்தாடுவதற்கு வெளிச்சம் தேவைப்படும். அவ்வேளையில் நெய்விளக்கேற்றி வெளிச்சத்தை ஏற்படுத்தியுள்ளனர். பழமையான

மாளிகைகளையுடைய ஊர்களில் நெய்விளக்குப் பேரொளியில் விறலியர் கூத்தாடியதைப் பதிற்றுப்பத்து விளக்கும்.[228]

வீரர்கள் இரவில் அரண்மனையைக் காவல் காப்பர். சோனகர், விளக்கு நிறையும்படி நெய் வார்த்து அணையாமல் பாதுகாவல் செய்வர். மேனோக்கி எரியும் விளக்கை நெய்வற்றிய பொழுதும், ஒளிமங்கின பொழுதும் நெய்வார்த்துத் தூண்டி இருள் நீங்கும்படி செய்து பாண்டியனைப் பிறர் அணுகாமல் வீரர்கள் காவல் புரிந்ததை நெடுநெல்வாடை விளக்கும்.[229]

பாசறையிலும் நெய்விளக்குப் பயன்பட்டது. பாசறையில் நெய் ஊற்றப்பட்ட திரியை எங்குங் கொளுத்தி நடுயாமத்தில் அரசனையும் படைகளையும் காவல் புரிந்ததை முல்லைப்பாட்டு குறிப்பிடும்.[230]

சங்ககாலத்தில் மன்னனின் அரண்மனை, பாசறை, தெய்வம் உறையும் கோவில், மக்கள் வாழும் இல்லம், கூத்தாடுமிடம் ஆகிய இடங்களில் நெய்விளக்கு எறிக்கப்பட்டுள்ளது. நெய்யின் நறுமணம், பெருமை, நன்மை கருதி மக்கள் நெய்யை விளக்கிற்குப் பயன்படுத்தியுள்ளனர்.

### 5.6.2. கூந்தலுக்கு நெய் தடவுதல்

கூந்தலின் வளர்ச்சிக்கும், நறுமணத்திற்கும் சங்ககால மகளிர் நெய் தடவியுள்ளனர். மகளிர் பின்னுதல் அளவில் முடித்திட வேறு ஒப்பனை செய்யாது, கொண்டையில் நெய் தடவப் பெற்றுத் தாழும் குழலினைச் சேரக் கட்டியமையும்,[231] பெண் யானையின் பெரிய கையினைப் போன்ற கூந்தலைச் சேரக் கட்டி நெய்பூசியதால் கூந்தல் நறுநாற்றமுடையதாக

விளங்கியமையும்,[232] கூந்தலுக்கு நெய்பூசி மெருகூட்டியதால் கரிய நிறமாகத் தோன்றிக் காட்சியளித்தமையும்[233] மகளிர் தம் கூந்தலுக்கு நெய் பூசியதை விளக்கும்.

### 5.6.3. வேலுக்கு நெய்பூசுதல்

இரும்பால் செய்யப்பட்ட வேல் துருப்பிடிக்காமல் இருக்கவும், பளபளக்கவும் நெய் பூசுவர். தொண்டைமானின் கூரிய நுனியையுடைய வேலுக்கு நெய்பூசி மெருகூட்டியதைப் புறநானூறு விளக்கும்.[234]

### 5.6.4. கதவிற்கு நெய்பூசுதல்

கதவிற்கு நெய்பூசுவதால் அக்கதவு கருத்துத் திண்ணிய செருவினையுடையதாக விளங்கியது.[235] பண்டைத்தமிழர் வாயிற் கதவில் தெய்வம் உறையும் என்ற நம்பிக்கையால் நெய்யைப் பூசியுள்ளனர்.[236] இன்றும் கதவுகளுக்கு நெய்பூசுவது குறிப்பிடத்தக்கது.

## 5.7. தண்டனையில் விலங்குகளின் பயன்பாடு

குற்றங்களை அறநூலுக்கு மாறானது, அரசியலுக்கு மாறானது, தெய்வத்திற்கு மாறானது என மூவகைப்படுத்துவர். இம்மூவகைக் குற்றங்களையும் செய்பவர்களுக்கு வழங்கப்படும் தண்டனையானது, "தண்டம், மானக்கேடு, வேதனைப்பாடு, சிறை, வேலைநீக்கம், கொலை"[237] என அறுவகைப்படுத்தப்பட்டுள்ளன.

### 5.7.1. தண்டம்

சங்ககால மக்கள் அரசனிடம் தாம் செய்த தவறுக்குத் தண்டனை பெற்றனர். அத்தண்டனைக்கு ஈடாக விலங்குகளைத் தண்டமாகக் கொடுக்க முன்வந்துள்ளனர்.

நன்னன் ஒரு பெண்ணுக்கு அளித்த மரணதண்டனைக்கு ஈடாக, அப்பெண்ணின் தந்தை அவளது நிறைக்கேற்ப பொன்னால் செய்த பாவையும், எண்பத்தொரு களிற்று யானைகளும் தண்டமாகக் கொடுக்க முன்வந்ததைக் குறுந்தொகை குறிப்பிடும்.[238] இதனால் மரணதண்டனைக்கு ஈடாகக் களிறுகளைத் தண்டமாகக் கொடுக்கும் வழக்கம் இருந்தமையை அறியஇயலும்.

### 5.7.2. யானைக்கிடுதல்

கிள்ளிவளவன் தன் பகைவனான மலையமானைப் பழிவாங்கும் பொருட்டு, அவன் மக்களைக் கொலையானைக் காற்கீழிட்டுக் கொலை செய்ய முயற்சித்தமையை கோவூர்கிழார் குறிப்பிடுவர்.[239] இதனால் கொலைத் தண்டனையை நிறைவேற்ற யானைகள் பயன்படுத்தப்பட்டுள்ளமை புலனாகும்.

### 5.7.3. சிறைப்பிடித்தல்

போரில் வெற்றி பெற்ற மன்னன் தோல்வியடைந்த மன்னனின் யானைகளைச் சிறைப்பிடித்துள்ளனன். பெண்ணைக் கொன்று பெரும்பழியைத் தேடிக் கொண்ட நன்னன், போர்த்தொழிலில் வல்ல பிண்டனின் யானைப் படையை வென்றனன். பின், பிண்டனின் உரிமை

மகளிரைப் பற்றி அவர்களின் தலையினின்றும் மயிர்க்கற்றைகளை மழித்தனன். அம்மயிர்க்கற்றைகளைக் கயிறாகத் திரித்து அப்பிண்டனின் யானைகளைச் சிறைபிடித்து வந்ததாகப் பரணர் குறிப்பிடுவர்.[240] பகைவர்களின் யானையைப் பெண்களின் கூந்தலினால் கட்டிச் சிறைபிடித்தமை அம்மன்னனை இழிவுபடுத்தவேயாகும். தற்காலத்துக் காவல்துறையினால் சுட்டுக் கொல்லப்பட்ட சந்தனக் கடத்தல் வீரப்பனிடமிருந்து கைப்பற்றப்பட்ட நாய், கர்நாடகச் சிறையில் அடைக்கப்பட்டமை இவ்விடத்தில் சுட்டத்தக்கது.

### 5.7.4. தண்டனை பெறுதல்

விலங்குகளை வளர்த்து வந்த பாதுகாவலர் அவ்விலங்குகளினால் தண்டனை பெற்றுள்ளனர். கோசர்களின் வயலில் ஆ புகுந்து மேய்ந்தது. இவ்வுண்மையை மறைக்காமல் கோசரிடம் மிஞிலியின் தந்தை கூறினன். எனினும் கோசர்கள் ஆ புகுந்து பயிரைத் தின்ற குற்றத்திற்காக அவனது கண்களைக் குருடாக்கி விட்டதாக இரு அகநானூற்றுப் பாடல்களில் குறிப்பு இடம்பெற்றுள்ளது.[241] இவற்றால் தம்முடைய விலங்குகளுக்காகப் பாதுகாவலர் தண்டனை பெற்றமை புலனாகும்.

## 5.8. தெய்வத்துடன் தொடர்புபடுத்திக் கூறுதல்

சங்கத் தமிழர் விலங்குகளைத் தம்வாழ்வியலில் பயன்படுத்தியது மட்டுமின்றி, தாம் வணங்கும் தெய்வங்களோடும் தொடர்புபடுத்தியுள்ளனர். தெய்வங்களின் வாகனமாக விலங்குகள் விளங்கியமை பற்றிப் புலவர்கள் மொழிந்துள்ளனர். அவ்வகையில் யானை முருகனுக்கு வாகனமாகவும்,[242]

பலதேவனுக்குக் கொடியாகவும்,[243] நான்முகனுக்குக் குதிரைபூட்டிய தேர்வாகனமாகவும்[244] கூறப்பட்டுள்ளமை இவ்விடத்தில் சுட்டத்தக்கது. சங்ககாலச் சான்றோர் விலங்குகளின் மேல் இருந்த அன்பு, ஈடுபாடு காரணமாகத் தெய்வங்களுடன் தொடர்புபடுத்திக் கூறியுள்ளனர்.

## 5.9. விலங்குகள் மனிதன் இறப்பிற்கு வருந்துதல்

விலங்குகளின் வளர்ச்சிக் கூறுகளே மனித வளர்ச்சியாகும். அதனால்தான் மக்கள் வாழ்க்கையில் விலங்குகள் முக்கியப் பங்கு பெறுகின்றன. சங்ககாலத்தில் வாழ்ந்த புலவர்களும் தம் கண்ணில் பட்ட, செவிவழிப்பட்ட விலங்குகளைத் தம் பாடல்களில் வடித்துக் கூறியுள்ளனர். புலவர்கள் விலங்குகளைப் பற்றிக் கூறியிருக்கும் தன்மையை, "விலங்குகளைப் பற்றிப் பாடியிருக்கும் புலவர்களின் கற்பனைத் திறனை மூன்று வகையாகப் பிரிக்கலாம். அவை முறையே, அவைகளின் வாழ்க்கையை அப்படியே காட்டுதல், மனித வாழ்க்கையின் நிகழ்ச்சியை அவற்றிற்கு ஏற்றிக் காட்டுதல், மக்கள் வாழ்வைக் காட்டுதல் என்பவையாகும். மூன்றாவதாகிய மக்கள் வாழ்வைக் காட்டுதல் இயற்கையுடன் இலங்கி இன்பம் பயக்கும் தன்மையுடையதாய் விளங்கும்"[245] என உரைப்பர் அ.திருமலை முத்துச்சாமி. இக்கூற்று சங்ககால மக்களின் வாழ்வில் விலங்குகள் ஒன்றிணைந்து வாழ்ந்த கருத்தைப் புலப்படுத்துகின்றது.

மனிதனுக்கு விலங்குகளோடு நெருங்கிய தொடர்பு உண்டு. மனிதன் தன் வாழ்வின் ஒவ்வொரு படிநிலையிலும் விலங்குகளோடு தொடர்பு கொண்டே வாழ்கின்றான். எனவே மனிதனுக்குத் துன்பம் வருகின்றபொழுது

அதனை முதலில் உணர்ந்து கொள்பவை விலங்குகளே. தம்மைப் பேணிக்காத்த மாந்தரஞ்சேரலிரும்பொறை இறந்தபொழுது, வலிமையுடைய யானை, கையை நிலத்திலிட்டு வைத்து வருந்தியது. காற்றுப் போலும் இயல்புடைய குதிரைகள் கதியின்றிக் கிடந்து வருந்தின. இதனை,

"மைந்துடை யானை கைவைத் துறங்கவும்
திண்பிணி முரசங் கண்கிழிந் துருளவும்
காவல் வெண்குடை கால்பரிந் துலறவும்
காலியற் கலிமாக் கதியின்றி வைகவும்
மேலோ ருலக மெய்தின னாகலின்" (புறநா.229:18-22)

என்ற பாடல் விளக்கும்.

இன்றைக்கும் இல்லத்தில் உள்ளோர் இறந்துவிட்டால் அவர்தம் வளர்ப்பு விலங்குகள் கண்ணீர் விட்டு அழுவதாக மக்கள் உரைப்பது இவ்விடத்தில் சுட்டத்தக்கது.

சங்ககால மக்கள் விலங்குகளையும், அவற்றின் உறுப்புக்களையும் பயன்படுத்திய நிலை அவர்களின் வாழ்வில் விலங்குகள் பங்குபெற்ற இடத்தை நன்கு விளக்கும்

## தொகுப்புரை

சங்ககால மக்களின் வாழ்வின் பல்வேறு கூறுகளில் விலங்குகள் பேரிடம் பெற்றன. விலங்கைப் பரிசில் வழங்குவதும், பெறுவதும் சிறப்பாகக் கருதப்பட்டது. யானை, குதிரை, ஆநிரை போன்றவை பரிசில் கொடுக்கும் விலங்குகளாக விளங்கின. அரசனுக்கு ஆமான், எண்கு, வருடை, தீர்வை, மரையான் முதலிய விலங்குகள் சிறப்புப் பரிசிலாகக் கொடுக்கப்பட்டுள்ளன.

புலவர், பாணர், கூத்தர், பொருநர், விறலியர், அகவன் மகளிர், இரவலர், பெரியோர், போன்றோர் விலங்குகளைப் பரிசிலாகப் பெற்றுள்ளனர். இவர்கள் அனைவரும் களிற்றைப் பரிசிலாகப் பெற்றமை குறிப்பிடத்தக்கது. ஆண்கள் களிற்றையும், பெண்கள் பிடியையும் பெரும்பான்மை பரிசிலாகப் பெற்றுள்ளனர்.

சங்ககாலத்தில் ஆட்சியாளர்களும், தலைமக்களும், நிலமக்களும் போக்குவரத்திற்குத் தேரைப் பெரிதும் பயன்படுத்தினர். இதற்கு அத்திரி, ஆநிரை, குதிரை, யானை போன்ற விலங்குகள் மிகவும் பயன்பட்டுள்ளன.

பெண்வேண்டி வந்தோரும், வரைய வந்தோரும், விருந்தினர்களும் விலங்குகள் பூட்டிய தேரில் வந்துள்ளனர். தலைமக்களும், நிலமக்களும் தத்தம் தலைவியரைக் காணத் தேரில் வந்து சென்றனர். தலைவன் மனமகிழ்விற்காகப் பரத்தையரைத் தேரில் ஏற்றி வந்தமையும் குறிப்பிடத்தக்கது.

சங்ககால மக்கள் ஆனேறு-மரையான், ஆட்டுக்கிடாய், யானை போன்ற விலங்குகளைப் போரிடவிட்டுக் கண்டுகளித்துள்ளனர்.

விலங்குகள் உடல் உழைப்பாலன்றித் தம் உறுப்புக்களாலும் பண்டைத் தமிழருக்குப் பயனளித்துள்ளன. யானைக்கோடு, நெல் குற்றும் உலக்கை, கட்டில்கால், துலாக்கோல், வாளுக்குக் கைப்பிடி, யாழுக்கு ஆப்பு, கழங்கு, வட்டு போன்ற பல்வேறு பொருட்கள் செய்யப் பயன்பட்டுள்ளது.

விலங்குகளின் தோல் இசைக்கருவிகள் செய்வதற்கும், ஆடைகளாகவும், படுக்கைவிரிப்புகளாகவும், பலவகைகளில் பயன்பட்டுள்ளது.

சங்கமக்கள் விளக்கு ஏற்ற நெய்யைப் பயன்படுத்தியுள்ளனர். கோயில், அரண்மனை, பாசறை, இல்லம் எனப் பல இடங்களில் நெய்விளக்கு வெளிச்சத்தைக் கொடுத்துள்ளது. விலங்குகள் தெய்வங்களின் வாகனமாகச் சுட்டப்பட்டமை மக்களின் வாழ்வில் அவை பெற்ற பேரிடத்தை நன்கு விளக்கும்.

## சான்றெண் விளக்கம்

1. ஆ.பூவராகம்பிள்ளை, புலவர் பெருமை, ப.122
2. இராம.பெரியகருப்பன், பரிசில் வாழ்க்கை, ப.110
3. புறநா.370:19-20
4. மலைபடு.60
5. புறநா.385:1-3, 390:22-23
6. மேலது.101:4-8
7. மேலது.159:22-25
8. மேலது.148:3-4
9. மேலது.140.5-8
10. மேலது.129:5-6
11. மேலது.130.1-5
12. பதிற்.47:1-2
13. மதுரைக்.219
14. சிறுபாண்.140-145
15. புறநா.153:7-9
16. மேலது.69:7-11
17. பதிற்.40:24-31
18. புறநா.234:8-11, 233.2-3, 326:14-15
19. பொ.திரிகூடசுந்தரம், சங்ககால வீரம், ப.16
20. அகநா.311:1
21. அகநா.208:1-5

22. தமிழண்ணல், புதியநோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, ப.149

23. மதுரைக்.99-102, புறநா.371:20-21

24. பொருந.119-129

25. அகநா.76:3-5

26. பதிற்.43:22-25

27. குறுந்.298:5-7

28. சிறுபாண்.123-126

29. புறநா.153:2-5

30. மேலது.313:1-7

31. மேலது.177:1-3

32. மேலது.151:3-6

33. மேலது.142:4-6

34. மேலது.127:1-3

35. நற்.237:7-8

36. அகநா.152:11-12

37. மேலது.303:8-10

38. மேலது.113:3-4

39. ஐங்.55:1-2

40. புறநா.396:30

41. பதிற்.66:6-9

42. புறநா.373:29-30

43. மேலது.131:2-4.

44. சிறுபாண்.91-95

45. பதிற்.43:27-28

46. நற்.185:3-7

47. புறநா.171:8-11

48. மலைபடு.492-531

49. மேலது.571-583

50. கலித்.50:15-17

51. புறநா.135:1-20

52. பதிற்.20:10-20

53. புறநா.161:10-20

54. மேலது.162:4-7

55. மேலது.387:20-26

56. மேலது.394:6-18

57. மேலது.197:1-4

58. புறநா.69:16-18

59. அகநா.238:11-14

60. பெரும்பாண்.27-28

61. அகநா.249:2-9

62. பொருந.159-171

63. பொ.வே.சோமசுந்தரனார்(உரை.ஆ), பொருநராற்றுப்படை, ப.52

64. புறநா.359:13-16

65. பதிற்.76:1-9

66. நற்.381:7-9

67. சிறுபாண்.256-260

68. புறநா.368:1-12

69. மேலது.399:28-32

70. மதுரைக்.746-752

71. புறநா.205:12-14

72. மதுரைக்.223-224

73. புறநா.240:1-3

74. மேலது.361:5-13

75. நற்.379:7

76. மேலது.350:4

77. மேலது.167:2-5

78. மலைபடு.399-400

79. ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை (உரை.ஆ), புறநானூறு, ப.264

80. கலித்.42:20-21

81. கா.மீனாட்சிசுந்தரம், தமிழ்நாட்டு வரலாறு, சமுதாய ஊர்திகள் (கட்), ப.140

82. மேலது.ப.141

83. மேலது.ப.141

84. புறநா.290:1-2

85. மேலது.228:10-11, 226:6

86. நற்.190:3-4

87. நற்.298:9, அகநா.175:10

88. குறுந்.61:4-5, நற்.131:7-9

89. குறுந்.199:2-3

90. அகநா.100:11-12

91. புறநா.175:6

92. மேலது.203:6

93. மேலது.206:6

94. புறநா.87:3-4

95. குறுந்.227:1-4

96. மேலது.189:1-5

97. மேலது.205:2-5

98. ஐங் .488:3-4

99. அகநா.80:10-13, 20:15-16

100. மேலது.314:8-11

101. மேலது.400:5-19

102. ஐங்..104:3-4

103. குறுந்.128:2

104. குறிஞ்சிப்.20

105. நற்.121:8-9

106. ஐங்.137:2

107. குறுந்.114:2

108. புறநா.345:1-7

109. கலித்.136:18-20

110. கலித்.135:19-20, 121:23, 124:20-21, அகநா.66:7-10, நற்.78:7-11

111. கலித்.126:20-22

112. மேலது.133:18-19

113. புறநா.146:10-11,

114. மேலது.145:2-4

115. கலித்.127:10-11

116. நற்.21:4-5

117. மேலது.394:4

118. மேலது.235:6-10, 307:1

119. மேலது.149:6-10

120. மேலது.145:9-11

121. மேலது.187:4-6

122. மேலது.361:3-7

123. மேலது.203:1-11

124. மேலது.191:5-7

125. மேலது.311:11

126. ஐங் .428:1-2

127. குறுந்.212:1-3

128. நற்.249:5-7

129. மேலது.323:9-11

130. மேலது.267:9-12

131. ஐங் .186:3-5

132. நற்.178:6-10, 287:9-10, கலித்.126:6-9

133. குறுந்.336:3-6

134. நற்.338:2-3

135. அகநா.320:10-14

136. மேலது.190:5-17

137. முல்லைப் .97-103

138. குறுந்.250:1-4

139. ஐங்.367:1-5

140. குறுந்.345:1-3

141. அகநா.360:11-14, நற்.349:1-4

142. ஐங்.200:1-2

143. நற்.207:3-8

144. ஐங் .101:4-5

145. கலித்.70:17-18

146. அகநா.146:5-7

147. குறுந்.45:1-3, கலித்.98:4-5, 66:2-4, 66:23-25, 69:12-13, 71:9-10, ஐங்.52:4, 62:3-4, நற்.150:2-9

148. கலித்.70:16-20

149. மேலது.88:18-19

150. நற்.210:1-6

151. ஐங்.5:5-6

152. நற்.130:1-5

153. குறுந்.242:5-6, ஐங்.485:3-4

154. நற்.161:7, 81:15, அகநா.48:20-22

155. ஐங்..484:2-3

156. நற்.367:11-12

157. அகநா.334:11-15, ஐங் .468:1-5, நற்.181:9-12

158. ஐங்..134:1-3.

159. நற்.19:6, கலித்.50:19

160. அகநா.104:3-7

161. மேலது.354:6-8

162. மேலது.160:9-11

163. ஐங்..360:3-5, அகநா.244:12-13, நற்.221:6-7

164. ஐங்..422:1-4

165. அகநா.9:15-17

166. நற்.42:11-12

167. ஐங்..425:2-4

168. மேலது.487:2-3

169. அகநா.34:10-18

170. ஐங்..465:1-4

171. கலித்.33:30-31, முருகு.82, மதுரைக்.435-440, 384-391,

குறுந்.311:1-4

172. கலித்.35:22-20, ஐங்.481:3-4, 486:3-4, 489:4-5, அகநா.64:1-3

173. அகநா.69:6-12, குறுந்;.400:4-5

174. அகநா.4:8-13

175. மேலது.134:7-14, 234:9-11

176. நற்.11:6-9

177. அகநா.154:8-12

178. நற்.242:5-10

179. அகநா.74:9-12

180. குறுந்.338:1-4, அகநா.2:7

181. புறநா.141:3-5

182. நற்.42:4-5

183. ஐங்..477:4-5

184. மேலது.102:3-4, 490:3-4

185. மேலது.498:3-5

186. மேலது.483:2-3

187. மேலது.449:1-3

188. மேலது.451:1-2

189. மேலது.482:1-4

190. மேலது.474:2-5

191. அகநா.384:1-11

192. மேலது.120:10-13

193. மேலது.350:6-9

194. நற்.278:7-8

195. பரி.10:16

196. தி.முத்துகண்ணப்பர், சங்க இலக்கியத்தில் நெய்தல்நிலம், ப.142

197. அகநா.130:9-11

198. நற்.63:8-11, நெடுநல்.177-180, அகநா.140:12-14

199. நற்.135:7-9, 140:5-7

200. பட்டினப்..69-77

201. நற்.104:1-7

202. மேலது.95:1-7

203. சு.சிவகாமசுந்தரி, சங்க இலக்கிய விளையாட்டுக் களஞ்சியம், ப.4

204. புறநா.181:1-3

205. மேலது.94:1-5

206. அகநா.104:7-13

207. குறுந்.61:1-3

208. சிறுபாண்.50-62

209. கலித்.41:1-3

210. நெடுநல்.115-130

211. பெரும்பாண்.71-72

212. மலைபடு.24-29

213. சு.சிவகாமசுந்தரி, சங்க இலக்கிய விளையாட்டுக் களஞ்சியம், ப.53

214. மேலது.ப.105

215. பதிற்.24:2-5

216. மலைபடு.320-322

217. பதிற்.74:3-17

218. பெரும்பாண்.83-90

219. புறநா.317:3-7

220. மதுரைக்.310-311

221. அகநா.58:1-6

222. மலைபடு.418-420

223. பெரும்பாண்.147-154

224. நற்.3:6-9

225. அகநா.17:20-22

226. புறநா.329:2-5

227. நெடுநல்.42-43

228. பதிற்.47:3-8

229. நெடுநல்.101-107

230. முல்லைப் .47-50

231. அகநா.73:1-2

232. மேலது.177:3-5

233. புறநா.147:6

234. மேலது.95:2-9

235. மதுரைக்.354

236. நெடுநல்.86

237. தேவநேயப்பாவாணர், பழந்தமிழர் அரசியல் கோட்பாடுகள், பக்.127-128

238. குறுந்.292:1-5

239. புறநா.46:5-6

240. நற்.270:8-11

241. அகநா.262:1-12, 196:8-12

242. பதிற்.11:5-7, 11:6, பரி.17:49, 19:28, 21:1-2, 5:2, முருகு.82,247

243. பரி.1:4-5

244. மேலது.5:22-23

245. அ.திருமலை முத்துச்சாமி, இலக்கியத்தில் விலங்குகளும் பறவைகளும், ப.6

# முடிவுரை

விலங்கிலிருந்து பரிணாம வளர்ச்சி பெற்றவன் மனிதன். அம்மனிதன் பகுத்தறிவு பெற்று வளர்ச்சியடைந்ததன்பின், தன் அடிப்படைத் தேவைகளை நிறைவு செய்வதற்கு விலங்குகளைப் பயன்படுத்தினான். அவ்வகையில் சங்ககால மக்களின் வாழ்க்கையில் விலங்குகள் பெற்ற இடத்தை சங்க இலக்கியம் நன்கு வெளிப்படுத்துகின்றது.

தொல்காப்பியத்தில் விலங்கைக் குறிக்க மா, விலங்கு என்ற பொதுச்சொற்கள் இடம்பெற்றுள்ளன. மரபியலில் இருபத்தைந்து விலங்குகளின் பெயர்கள் தொல்காப்பியரால் சுட்டப்பெற்றுள. எனினும் இன்ன திணைக்கு இன்ன விலங்குகள் என வரையறுக்கப்படவில்லை.

தொல்காப்பியத்தில் சுட்டப்பட்ட இருபத்தைந்து விலங்குகள், தொல்காப்பியம் சுட்டாத இருபத்தொரு விலங்குகள் என மொத்தம் நாற்பத்தாறு விலங்குகள் சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ளன.

சங்ககால விலங்குகளில் நிலவாழ்விலங்குகள் நாற்பத்தொன்று. நீர்வாழ்விலங்குகள் இரண்டு. நீர்நில வாழ்வன ஒன்று. பறக்கும் விலங்குகள் இரண்டாகும். இவ்விலங்குகள் அனைத்தும் சங்ககால மக்களின் வாழ்வியலில் இரண்டறக் கலந்துள்ளன.

சங்ககாலத்தில் ஒருநிலத்தில் காணப்பட்ட விலங்குகள் பிறிதொரு நிலத்திலும் இடம்பெற்றுள்ளன. இதற்கு இவ்விலங்குகள் இடம்விட்டு இடம்பெயர்தலே காரணமாகும். அவ்வாறின்றி அவை வாழும்

சூழ்நிலைக்கேற்ப ஒருநிலத்தில் மட்டும் வாழும் விலங்குகளும் இடம்பெற்றுள்ளன.

சங்க இலக்கியத்தில் விலங்குகளின் தோற்றம், வாழும் சூழல் ஆகியன விரிவாகப் பாடப்பட்டுள்ளன.

ஆளி, அத்திரி போன்றவை கலப்பின விலங்காகும். ஆளி சிங்கத்தின் சிற்றினமாகும். அத்திரி ஆண்கழுதைக்கும், பெண்குதிரைக்கும் பிறந்த விலங்காகும்.

வாவல், பறக்கும் பாலூட்டி விலங்கைச் சார்ந்தது. இவ்வாவலின் ஒரு வகையாக அசுணம் விளங்குகின்றது.

சங்க இலக்கியத்தில் கரடி, காட்டுப்பூனை, கீரி, சிங்கம், வௌவால் போன்ற பெயர் வழக்குகள் இடம்பெறவில்லை. இவை வேறு பெயர்களால் அழைக்கப்பட்டுள்ளன.

ஆன் என்பது பெண்பாற்சொல். ஆனேறு என்பது ஆண்பாற்சொல். ஆன்கன்று என்பது இவற்றின் இளமைப்பெயராகும். எனவே ஆநிரை என்பது இவ்விலங்கின் கூட்டத்தைக் குறிக்கும் பொதுச்சொல்லாகும்.

கவரி என்னும் விலங்கு வாழும் சூழ்நிலை, உடலமைப்பு ஆகியவற்றால் ஆநிரையில் ஒன்றாக விளங்கியுள்ளது.

புலியும் ஆளியும் உணவுக்காக வேட்டையாடும்பொழுது தம் வலப்பக்கம் வீழ்ந்த இரையையே உண்ணும் என்பது இவ்விலங்குகளின் வலிமை கருதிக் கூறப்பட்டதாகும்.

புலியின்மீது மக்களுக்கு இருந்த அச்சத்தின் காரணமாக, பூக்கள் நிறைந்த வேங்கை மரத்தின் தோற்றத்தையும், பாறைமீது விழுந்துள்ள வேங்கைப் பூக்களையும் கண்டு புலிபுலி என்று கூறியுள்ளனர்.

தற்காலத்தில் அசுணமும், ஆளியும் அழிந்துவிட்டன. இவற்றைப்போல பிற விலங்குகளும் அழிவுக்குள்ளாகி வருகின்றன. இவ்விலங்குகள் பாதுகாக்கப்படவேண்டியது இன்றியமையாததாகும்.

சங்ககால மக்கள் விலங்குகளின் இறைச்சியையும் அவற்றின்வழி கிடைத்த உணவுப்பொருட்களையும் உணவாகக் கொண்டுள்ளனர்.

ஆ, எருமை, வெள்ளாடு, துருவை, மரையான் போன்ற ஐந்து விலங்குகளின் பாலை உணவாகப் பயன்படுத்தினர்.

வெள்ளாடு, துருவை, புல்வாய், நவ்வி, மரையான், உழை, கடமா, களிறு, முயல், முளவுமா, கேழல், ஆமான், ஆநிரை, கன்று போன்ற பதினான்கு விலங்குகளின் இறைச்சியை உண்டுள்ளனர்.

பாலுடனும், தயிருடனும் பிற உணவுப் பொருட்களைக் கலந்து உட்கொண்டுள்ளனர். விலங்குகளின்வழி கிடைத்த உணவுப்பொருளான பால், தயிர், மோர், வெண்ணெய், நெய் போன்றவற்றை அதிகமாக உண்டுள்ளனர்..

சங்ககால மக்கள் உடல்திறன், பெறவேண்டியும், வெப்பத்தைக் குறைக்கவும் பால், தயிர், மோர், வெண்ணெய் போன்ற உணவுப் பொருட்களை உண்டுள்ளனர்.

சங்ககால மக்கள் வழிச்சொல்வோருக்கு இறைச்சி உணவு படைத்தமை, அவர்தம் விருந்தோம்பல் பண்பை விளக்குவதாகும்.

அரசர்கள் தம்மை நாடிவரும் இரவலர், புலவர், கலைஞர் போன்றோருக்கு ஊன் உணவு அளித்துள்ளனர்.

பண்டைத் தமிழர் திருமணத்திலும் இறைச்சி உணவாகப் படைக்கப்பெற்றுள்ளது.

சங்ககாலத்தில் அரசன் முதல் கடைநிலை மக்கள் வரை அனைவரும் இறைச்சி உணவை விரும்பி உண்டுள்ளனர்.

சங்ககால மக்கள் வாழும் சூழ்நிலைக்கேற்ப நடைமுறை வாழ்க்கையும், தொழிலும் அமைந்திருந்தன. இவர்கள் தொழில் மேற்கொள்ள விலங்குகள் உதவின.

குறிஞ்சிநில மக்கள் வேட்டைத்தொழிலை மிகுதியாகச் செய்து வந்தனர். மக்களின் தொழில்சார் வாழ்க்கை முதன்முதல் குறிஞ்சி நிலத்தில் தொடங்கியதும் இவ்விலங்கு வேட்டைக்கு முக்கியக் காரணமாகும்.

சங்ககால மக்கள் எண்கு, எலி, குரங்கு, கேழல், நரி, நீர்நாய், புலி, மான், முயல், முளவுமா, யானை போன்ற பதினொரு விலங்குகளைப் பற்பல முறைகளில் நாயின் உதவியுடன் வேட்டையாடியுள்ளனர். இவ்விலங்குகளை உணவிற்காகவும், ஏதம் கருதியும் வேட்டையாடியுள்ளனர்.

சங்கத்தமிழர் வளர்ப்பு விலங்குகளாக ஆடு, ஆநிரை, எருமை போன்றவற்றை மேய்த்து வந்தனர். முல்லைநிலத்தில் ஆநிரைகள் மிகுதியாக இருந்தமையால் அந்நிலமக்கள் மேய்த்தல் தொழிலில் ஈடுபட்டுள்ளனர்.

வேளாண்மையாகிய உழவுத்தொழிலுக்கு எருது, எருமை போன்ற விலங்குகள் பயன்பட்டன. ஐந்நில மக்களில் மருதநிலத்தோரே இவ்விலங்குகளைக் கொண்டு மிகுதியாக உழவுத்தொழிலைச் செய்துள்ளனர்.

சங்ககால அரசர்கள் பகைவரை இழிவுபடுத்தும் நோக்குடன் அவர்களின் விளைநிலைங்களைக் கழுதைஏர் கொண்டு உழுது பாழ்படுத்தியுள்ளனர். ஆநிரை, எருமை போன்றவை கடாவிடப் பயன்பட்டுள்ளன.

நெய்தல் நில மக்கள் எருது, குதிரைபூட்டிய வண்டியில் உப்பு, நெல் போன்ற பண்டங்களை ஏற்றிக்கொண்டு சென்று வணிகத் தொழில் செய்துள்ளனர்.

பாலைநிலத்தில் உணவுப்பண்டங்களை சுமந்துசெல்லக் கழுதைகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

வெட்சி வீரர்கள் பகை நாட்டைக் கைப்பற்றும் நோக்குடன் ஆநிரைகளைக் கவர்ந்து வந்துள்ளனர். மானங்காத்தல் பொருட்டு, கரந்தை வீரர்கள் ஆநிரை மீட்கப் போரிட்டு இறந்ததால் அவர்களுக்கு நடுகல் நடப்பட்டன.

போர்த்தொழிலில் யானை, குதிரை போன்ற விலங்குகள் பயன்பட்டன. போரிட இயலாத மன்னர்கள், யானை, குதிரை, ஆநிரை போன்றவற்றைத் திறையாகச் செலுத்தியுள்ளனர்.

சங்ககால மக்கள் ஆநிரை, ஆமான், எருமை, ஆடு, யானை, குதிரை, புலி, மான் போன்ற விலங்குகளைப் பராமரித்துப் பாதுகாத்து வந்துள்ளனர்.

பாலைநிலத்தில் வறட்சி காரணமாக விலங்குகள் நீரின்றி வருந்தியபொழுது ஆநிரைகளுக்கு நீர்தேடிக் கொடுத்தமை இவ்விலங்குகளின் பயன்பாடு கருதியாகும்.

இறைச்சி விற்பனை நிலையத்தில் ஆடு, ஆநிரை, மான் போன்ற விலங்குகளின் இறைச்சிகள் விற்கப்பட்டன.

விலங்குகளின்வழி கிடைத்த உணவுப் பொருட்களான மோர், வெண்ணெய், நெய் போன்றவையும் விற்கப்பட்டன.

சங்ககால மக்கள் பல்வேறு தொழில்களைச் செய்ய விலங்குகள் உறுதுணையாக இருந்துள்ளன.

பண்பாடு என்பது நாகரிகத்தின் அடுத்த கட்ட வளர்ச்சியாகும். நாகரிகம் பெற்ற தமிழர் பண்பட்டவர்களாகத் திகழ விலங்குகள் உதவின.

சங்ககாலத்தில் ஏறுதழுவித் திருமணம் செய்துகொள்ளும் முறை இருந்தது. ஏறு தழுவுதல் வீரத்தின் வெளிப்பாடாகவும், ஆண்மையின் குறியீடாகவும் விளங்கியது. அவ்வகையில் தமிழர் பண்பாட்டுடன் ஏறு இரண்டறக் கலந்துள்ளமை புலனாகும்.

சங்ககால மக்கள் நீராடச்செல்ல எருது, அத்திரி பூட்டிய வண்டிகளும், யானை, குதிரை பூட்டிய தேர்களும் பயன்பட்டன. இவ்வூர்திகள் தெய்வங்களை வழிபடச் செல்லவும் உதவியுள்ளன.

சங்ககால மக்கள் வேள்வி செய்யப் பசுக்கள் வாங்கியுள்ளனர். பசுக்களின் நெய் வேள்விப்பொருளாகப் பயன்படுத்தப்பட்டது.

சங்கமகளிர் தம் வாழ்க்கைத் துணை நன்கு அமையவேண்டும் என்ற நம்பிக்கையில் யானை உட்கொண்ட கவளத்தை உண்டுள்ளனர்.

சங்ககால மக்கள் அரசர், போர்வீரன் ஆகியோருக்கு நடுகல் நட்டு அதற்கு ஆடுகளைப் பலியிட்டு வழிபாடு செய்தமை இன்றைய சிறுதெய்வவழிபாட்டின் முன்னோடியாய்த் திகழ்கின்றது.

தெய்வங்களுக்கு ஆடு, ஆநிரை ஆகியவற்றைப் பலியிடும் முறை சங்ககால மக்களின் பண்பாட்டை எடுத்துக்காட்டுகின்றது. இவர்கள் விலங்குப் பயன்பாட்டின்வழி பண்பட்ட மனிதர்களாகத் திகழ்ந்தனர்.

சங்ககால அரசர்களிடம் புலவர்களும், இரவலர்களும், கலைஞர்களும் விலங்குகளைப் பரிசு பெற்றுள்ளனர்.

அரசர்கள் பரிசிலாக வழங்கிய யானை, பரிசிலர் பெற்ற செல்வங்களைக் கொண்டுசெல்லப் பயன்பட்டன. பரிசிலர் ஆநிரை, குதிரை போன்றவற்றையும் பரிசிலாகப் பெற்றுள்ளனர்.

சங்ககால மக்கள் அரசனுக்கு யானை, குதிரை, ஆநிரை, ஆமான், எண்கு, வருடை, தீர்வை, மரையான் போன்ற விலங்குகளைச் சிறப்புப் பரிசாக வழங்கியுள்ளனர்.

பழந்தமிழர் ஓரிடத்திலிருந்து பிறிதோரிடத்திற்குச் செல்ல ஆநிரை, யானை, குதிரை, அத்திரி போன்ற விலங்குகள் ஊர்தியாகப் பயன்பட்டன. இது இவ்விலங்குகளின் உழைப்புத் திறனை விளக்குகின்றது. இப்பயணத்தின்பொழுது விலங்குகளுக்குப் பல்வேறு இடையூறுகளும் ஏற்பட்டுள்ளன.

சங்ககால மக்களின் விளையாட்டிலும், பொழுதுபோக்கிலும் விலங்குகள் இடம்பெற்றமை மக்களின் அனைத்து நிலைகளிலும் விலங்குகள் பெற்ற பேரிடத்தை விளக்கும்.

யானைக்கோடு, விலங்குகளின் தோல் போன்ற பிற உறுப்புக்களும் மக்களின் பல்வேறு பயன்பாட்டிற்கு உதவின.

மக்களின் இரவு வாழ்க்கை இருளை நெய்விளக்குச் சுடரொளி அகற்றியுள்ளது. சங்க மகளிர் கூந்தலை வளர்க்க நெய் பூசியுள்ளனர்.

நீதிமன்ற வழக்குகளில் தண்டத்திற்கு ஈடாக யானைகள் கொடுக்கப்பட்டன. பகைவர்களுக்கு யானைகளின்வழி தண்டனை கொடுத்துள்ளனர். பகைவர்களின் யானைகளைச் சிறைப்படுத்தியும் உள்ளனர். இவை விலங்குகளின் தனிச்சிறப்பை உணர்த்துவனவாகும்.

சங்ககால மக்களின் வாழ்வில் ஒன்றிணைந்து வாழ்ந்த விலங்குகளைச் சங்கப் புலவர்கள் தெய்வத்துடன் தொடர்புபடுத்திக் கூறியுள்ளமை போற்றத்தக்கது.

சங்க மக்கள் பண்பட்ட, நாகரிக வாழ்க்கை வாழ்ந்ததை அவர்தம் விலங்குப் பயன்பாடு நன்கு விளக்கும்.

## புறத்தேர்வாளரின் மதிப்பீட்டறிக்கையின்படியான விளக்கங்கள்

சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ள பல்வேறு உயிரினங்களுள் பறவைகள் பற்றிய குறிப்புகள் குறிப்பிடத்தக்கனவாகும். அவற்றால் சங்ககால மக்கள் தம் வாழ்வில் பறவைகள் சிறப்பிடம் பெற்றிருப்பது புலனாகும்.

**1. அன்னம் :**

அன்னம் என்ற பறவை தூய வெண்மை நிறமானது. இது கடற்கரைக் கழிகளில் துழாவியதை,

"நெடுங்கழி துழைஇய குறுங்கால் அன்னம்
அடும்பமர் எக்கர் அஞ்சிறை உளரும்
தடவுநிலைப் புன்னைத் தாதணி பெருந்துறை"

(அகநா : 320 : 18 – 20)

என்ற பாடலடிகள் உணர்த்தும். கடற்கரை மணலில் இறகுகளைக் கோதுவதாகவும்[1], மழைக்காலத்தில் மிக விரைவாக வானில் பறப்பதாகவும்[2], கூறப்பட்டுள்ளது.

அன்னத்தின் கால்கள் மிகக் குறுமையானவை. இதன் கால்களின் விரல்கள் இடையே மடிப்புடைய சவ்வுத்தோல் உள்ளது. இதனைத் 'துதிக்கால்'[3] என்று ஐங்குறுநூறு கூறுகின்றது.

---

[1] நற். 73 : 6 – 9

[2] குறுந். 205 : 1 – 2

[3] ஐங். 106 : 2 – 3

பருவகாலங்களுக்கேற்ப அன்னப்பறவைகள் தமிழ்நாட்டிலிருந்து பிற இடங்களுக்குப் பறந்து செல்லும். அவ்வகையில் இமயமலைக்குப் பறந்து சென்றதை நற்றிணையும்[4], புறநானூறும்[5] குறிப்பிடும்.

அன்னப்பறவையின் வயிற்றடியிலிருந்த தூவியை அதன் மென்மைக்காகப் படுக்கையணைகளில் பயன்படுத்தினர். இதனை,

"மெல்லிதின் விரிந்த சேக்கை மேம்படத்
துணைபுண ரன்னத் தூநிறத் தூவி
யிணையணை மேம்படப் பாயணை யிட்டு" (நெடுநல். 131 – 133)

"இணைபட நிவந்த நீலமென் சேக்கையுட்
டுணைபுண ரன்னத்தின் றூவிமெல் லணையசைஇ"
(கலித். 72 : 1 – 2)

என்ற பாடலடிகள் புலப்படுத்தும்.

அன்னப்பறவைகள் தூய வெண்மைக்கு எடுத்துக்காட்டாக உரைக்கப்பட்டுள்ளன. இதன் தூவிகளைச் சங்க கால மக்கள் பஞ்சணைகளாகப் பயன்படுத்தியுள்ளனர்.

**2. அன்றில் :**

அன்றில் பனைமரங்களில் வாழும் பறவையினத்தைச் சார்ந்தது. இப்பறவையில் ஆண், பெண் ஆகிய இரண்டில் ஒன்று பிரிந்தால் மற்றொன்று உயிர் வாழாது. இதனை,

---

[4] நற். 356 : 1 – 6

[5] புறநா. 67 : 1 – 4

"ஒன்றில் காலை அன்றில் போலப்

புலம்புகொண்டு உறையும் புன்கண் வாழ்க்கை"

(நற். 124 : 1 – 2)

என்ற பாடலடிகள் புலப்படுத்தும்.

கடற்கரையில் உள்ள பனை மரத்தில் அன்றில் கூடுகட்டி வாழும். இதனை,

"..........................................எல்லி

மனைசேர் பெண்ணை மடல்வாய் அன்றில்

துணையொன்று பிரியினுந் துஞ்சா காணெனக்"

(அகநா. 50 : 10 – 12)

"செக்கர் தோன்றத் துணைபுணர் அன்றில்

எக்கர்ப் பெண்ணை அகமடல் சேரக்"

(அகநா. 260 : 6 – 7)

என்ற பாடலடிகள் விளக்கும். இப்பறவை சிறு கோல்களால் அடர்ந்த மரங்களில் எவரும் எளிதில் காணமுடியாத இலை, மட்டை முதலிய மறைவான சூழலில் கூடுகட்டி வாழும்.[6]

கடற்கரைக் கழி ஓரங்களிலும், கடற்கரை ஊர்களிலும் மனிதர் இடையூறு செய்யாவிடில் உள்ளூர் மரங்களிலும் கூடுகட்டி வாழும் தன்மை வாய்ந்தது. இதனை,

"பெண்ணை ஓங்கிய வெண்மணற் படப்பை

அன்றில் அகவும் ஆங்கண்

[6] குறுந். 301 : 1 – 5

சிறுகுரல் நெய்தலெம் பெருங்கழி நாட்டே”

(அகநா. 120 : 14 – 16)

என்ற பாடல் உணர்த்தும்.

கடவுளுக்குரிய பனை மரத்திலும், பொது மன்றத்திலிருந்த பனையிலும் இப்பறவை கூடுகட்டி வாழ்வதை,

“கடவுள் மரத்த முள்மிடை குடம்பைச்
சேவலொடு புணராச் சிறுகரும் பேடை
இன்னாது உயங்குங் கங்குனும்”

(அகநா. 270 : 12 – 14)

“தொன்றுஉறை கடவுள் சேர்ந்த பராரை
மன்றப் பெண்ணை வாங்குமடற் குடம்பைத்
துணைபுணர் அன்றில் உயவுக்குரல் கேட்டொறும்”

(நற். 303 : 3 – 5)

என்ற பாடலடிகள் உணர்த்தும்.

அன்றிலின் குரல் அழுவது போலவும் ஏங்குவது போலவும் இருக்கும்.

“ஏங்குவயி ரிசைய கொடுவா யன்றில்
ஓங்கிரும் பெண்ணை யகமட லகவ”

(குறிஞ்சிப். 219 – 220)

என்ற அடிகளில் அன்றிலின் வளைந்த வாய் சுட்டப்பட்டுள்ளது.

அன்றிலின் தலை செம்மை நிறமாகவும், செம்பூப்போலவும் இருப்பதை,

"நெருப்பி னன்ன செந்தலை யன்றில்

இறவி அன்ன கொடுவாய்ப் பெடை யொடு

தடவி னோங்குசினைக் கட்சியிற் பிரிந்தோர்" (குறந். 160 : 1 – 3)

என்ற பாடலடிகள் புலப்படுத்தும்.

ஒருவரையொருவர் பிரியாதிருப்பதற்கு அன்றிலின் வாழ்க்கை சான்று காட்டப்படுகின்றது.

**3. ஆந்தையினங்கள்:**

ஆந்தை என்ற பெயர் சங்க இலக்கியத்தில் இடம் பெறவில்லை. இப்பெயரை உரையாசிரியர்களே தம் உரைகளில் பெரிதும் பயன்படுத்துகின்றனர். எனவே, ஆந்தை என்ற பெயர் பிற்கால வழக்கு என்பது புலனாகும். இது இவ் இனப் பறவைகளுக்குப் பொதுப்பெயராகப் பயன்படுத்தப்படுகின்றது.

**3.1 கூகை:**

கூகை இடிந்த கட்டிடங்களிலும், நெற்களஞ்சியங்களிலும் காணப்படும் ஒருவகை ஆந்தையாகும். இது மஞ்சளும் வெண்மையும் கலந்த நிறத்தோடு காணப்படும்.

கூகை, இல்லெலியை உணவாகக் கொள்ளும் என்பதை,

"திங்கள் கல்சேர்பு கணையிருள் மடியின்

இல்எலி வல்சி வல்வாய்க் கூகை

கழுதுவழங் கியாமத் தழிதகக் குழறும்

வளைக்கட் சேவல் வாளாது மடியின்" (அகநா. 122 : 12 – 15)

என்ற பாடலடிகள் உணர்த்தும். இது வெள்ளை எலியையும் உணவாகக் கொள்ளும். இதனை

"எம்மூர் வாயில் ஒண்டுறைத் தடைஇய
கடவுள் முதுமரத்து உடனுறை பழகிய
தேயா வளைவாய்த் தெண்கண் கூருகிர்
வாய்ப்பாறை அசாஅம் வலிமுந்து கூகை
மையூன் தெரிந்த நெய்வெண் புழுக்கல்
எலிவான் சூட்டொடு மலியப் பேணுதும்" (நற். 83 : 1 – 6)

என்பர்.

கூகை, ஊன் உணவை விரும்பி உண்ணும் என்பதால் கொழுத்த பச்சை இறைச்சித் துண்டை ஓரிடத்தில் பதுக்கி வைத்துப் பின்னர் வைத்த இடம் தெரியாது தேடிக் கவலையுடன் கத்தியதை,

"ஒழுகை யுய்த்த கொழுவில் பைந்துணி
வைத்தலை மறந்த துய்த்தலைக் கூகை
கவலை கவற்றுங் குராலம் பறந்தலை" (பதிற். 44 : 17 – 19)

என்று பதிற்றுப்பத்து உரைக்கும்.

முதிய மரத்தில் உள்ள பொந்திலிருந்து குரலிடும் கூகையை,

"நிலம்பக வீழ்ந்த வலங்கற் பல்கவர்
முதுமரப் பொத்திற் இதுமென வியம்பும்
கூகைக் கோழி யானாத்
தாழிய பெருங்கா டெய்திய ஞான்றே" (புறநா. 364 : 10 – 13)

என்று புறநானூறு குறிப்பிடும்.

பகலிலும் கூகை கத்தும். ஞாயிறு மறையாத நண்பகலில் கூகை குழறினதை,

"உணவில் வறுங்கூட் குள்ளகத் திருந்து
வளைவாய்க் கூகை நண்பகற் குழறவும்"

(பட்டினப். 267 – 268)

என்ற அடிகள் சுட்டும். கூகையின் குரலைக் 'குழறும்'[7] என்று குறுந்தொகை குறிப்பிடும். கூகையின் தலையைத் 'துய்த்தலை'[8] என்பர். கூகைக்கு வளைந்த வாயும் கூரிய நகங்களும் இருக்கும்.[9]

கூகையின் கண்களை 'வளைகண்'[10] 'தெண்கண்'[11] 'கழல்கண்'[12] என்று குறிப்பிடுவர்.

கள்ளி நிறைந்த சுடுகாட்டில் கூகை இறந்தவர்களைக் கூப்பிட்டதை,

"பொத்த வறையுட் போழ்வாய்க் கூகை
சுட்டுக் குவியெனச் செத்தோர்ப் பயிருங்
கள்ளியம் பறந்தலை" (புறநா. 240 : 7 – 9)

என்ற பாடலடிகள் விளக்கும்.

---

7 குறுந். 153 : 1

8 பதிற். 44 : 18

9 நற். 83 : 16

10 அகநா. 122 : 15

11 நற். 83 : 3

12 பதிற். 22 : 35

### 3.2 குரால்:

குரால் என்பது ஆந்தை வகையுள் ஒன்று. குரால்கூகை என்ற பெயர் இருபெயரொட்டுப் பெயராக வந்து குராலாகிய கூகை என்று பொருள்படும். இங்கு குரால் சிறப்புப் பெயராகவும் கூகை பொதுப் பெயராகவும் வருகின்றது.

குரால் என்ற வகை ஆந்தையினப் பறவை சிறிய ஊரின் அருகில் மரத்தில் இருக்கும் என்றும் பெரிய அடிமரத்தையுடைய வேம்பின் கொம்பில் இருக்குமென்றும் அகன்ற நெடிய தெருவில் சதுக்கத்துள்ளோர் பயப்படும்படிக் கூகையோடு சேர்ந்து குழறும் என்றும் கூறுவர். இதனை,

"புலாஅற் கையர் பசா வாயர்
ஓராஅ உருட்டுங் குடுமிக் குராலொடு
மராஅஞ் சீறூர் மருங்கில் தூங்கும்" (அகநா. 265 : 18-20)

"பராரை வேம்பின் படுசினை யிருந்த
குராஅல் கூகையும் இராஅ இசைக்கும்" (அகநா. 218 : 7 - 8)

"மணன்மலி மூதூர் அகல்நெடுந் தெருவின்
கூகைச் சேவல் குராலோடு ஏறி
ஆரிருஞ் சதுக்கத்து அஞ்சுவரக் குழறும்
அணங்குகால் கிளரும் மயங்கிருள் நடுநாள்" (நற். 319 : 3 - 6)

என்ற பாடலடிகள் உணர்த்தும். கூகைக்குத் தலையில் குடுமி போன்று இருத்தலை,

“நெடுநகர் வீழ்ந்த கரிகுதிர்ப் பள்ளிக்

குடுமிக் கூகை குராலொடு முரல” (மதுரைக். 169-170)

என்ற அடிகள் புலப்படுத்தும்.

**3.3 குடிஞை**

குடிஞை என்பதற்குப் பேராந்தை எனப் பொருள் கூறுவர் உ.வே.சா. இது ஆந்தையினத்தில் பெரியதாக இருக்க இடமுண்டு.[13] பொன் செய்கின்ற தட்டான் ஊதுகுழல் கொண்டு தணலை ஊதும்போது பூம்பூம் என்ற ஓசை எழுப்புவது போலப் பேராந்தையின் குரலோசை இருந்ததை,

“மரத்தலை மணந்த நனந்தலைக் கானத்து

அலந்தலை நெமையத்து இருந்த குடிஞை

பொன்செய் கொல்லனின் இனிய தெளிர்ப்ப” (நற். 394 : 1-3)

என்ற பாடலடிகள் விளக்கும்.

குடிஞையின் ஓசையொடு மிகுந்த ஒற்றுமையிருப்பதால் குடிமருள் ‘தீங்குரல்’[14] ‘கடுந்துடி இரட்டும்’,[15] ‘உருள்துடி மகுளியின் பொருள் தெரிந் திசைக்கும்’[16] என்று குறிப்பிட்டனர்.

தானியத்தை அரைக்கும் திரிகை எழுப்பும் ஓசைபோலச் சேட்புலத்து இருந்த குடிஞையின் மென்குரல் மெதுவாக வந்து ஒலிக்கும். இதனை,

---

[13] உ.வே.சா.(உ.ஆ), புறநானூறு, ப. 549.

[14] புறநா. 570 : 6

[15] புறநா. 170 : 6

[16] அகநா. 19 : 4

"திரிவயின் தெவிட்டுஞ் சேட்புலக் குடிஞைப்

பைதல் மென்குரல் ஐதுவந் திசைத்தொறும்"

(அகநா. 283 : 6-7)

என்ற பாடலடிகள் உணர்த்தும்.

குடிஞை வெகுண்டு எழுப்பும் குரலோசை மலையின்மேல் உருளும் கல் செய்யும் ஓசைபோல இருத்தலை,

"உருத்தெழு குரல குடிஞைச் சேவல்

புல்சாய் விடரகம் புலம்ப வரைய

கல்லெறி இசையின் இரட்டும் ஆங்கண்"

(அகநா. 89 : 3 – 5)

என்னும் பாடலடிகள் விளக்கும்.

குடிஞை, புலிதுஞ்சு நெடுவரையிலும்,[17] நெடுமால் வரையிலும்[18] புல்சாய் விடகரகத்திலும்,[19] துறுகல்லடுக்கத்திலும்[20] வாழும்.

காட்டில் இருந்த குடிஞையின் குரல் உழிஞ்சில் மரக்கவட்டில் இருந்த பெட்டைப் பருந்தின் குரலோடு ஒருங்கு இசைக்கும்.[21] ஆகுளிப் பறையின் கண்ணில் விரலை ஊன்றித் தேய்த்துச் செய்யும் பூம்பூம்

---

[17] புறநா. 170 : 5 – 7

[18] அகநா. 9 : 13

[19] அகநா. 89 : 3 – 5

[20] ஐங். 291 : 1 – 2

[21] புறநா. 370 : 5 – 8

ஓசைபோலத் திருப்பித் திருப்பி ஒலிக்கும் குடிஞையை மலைபடுகடாம் குறிப்பிடும்.[22]

ஆந்தையினங்களாகிய கூகை, குரால், குடிஞை ஆகியவை சுட்டப்படுகின்றன. இவை இறைச்சிகளை விரும்பி உண்டன. இவை மக்களுக்கு அச்சத்தை ஏற்படுத்தியுள்ளன.

**4. இதல்:**

இதல் என்ற பறவை, காட்டுக்கோழியைப் போன்றும், கவுதாரியைப் போன்றும் தோற்றமளிக்கும். இதன் உடல் செம்மை கலந்த பருப்பு நிறமாக இருக்கும். வெள்ளையும் சிவப்பும் கலந்த வளைந்த வரிகள் உடலின்மேல் காணப்படும். இதற்குக் கண்களைச் சுற்றி வட்டமான சிவந்த தோல்பகுதி உண்டு. அந்தச் சிவந்த பகுதியில் துவிகள் இல்லை. ஆதனால் இதனை, 'மணிக்கண் பேடை'[23] என்றழைத்தனர். புதரிலும் செடிகொடி அடர்ந்த குறுங்காடுகளிலும் இப்பறவை காணப்பட்டது.[24] குறிஞ்சி நிலத்தில் இருந்த வீட்டின் முற்றத்தில் காயப்போட்ட தினையைக் கானக்கோழியோடு இதலும் கவர்ந்துண்டதைப் புறநானூறு சுட்டும்.[25]

இதலுக்குக் காலின் பின் விரல்களுக்குமேல் கூரிய முட்கள் காணப்படும். ஆண் பறவைக்கு இரண்டு முதல் நான்கு வரை முட்கள் காணப்படும். இந்த முட்கள் தளவின் சிவந்த அரும்புபோல இருப்பதை,

---

[22] மலைபடு. 140 – 141

[23] அகநா. 387 : 10

[24] அகநா. 133 : 4, 387 : 9

[25] புறநா. 320 : 9 – 11

"புதன்மிசைத் தளவின் இதன்முட் செந்நனை

நெருங்குகுலைப் பிடவமொடு ஒருங்குபிணி அவிழக்"

(அகநா. 23 : 3 – 4)

என்ற பாடலடிகள் உணர்த்தும். இம்முட்கள் கூர்மையானதாக இருத்தலால், 'கூர்முள் செங்கால் சேவல்'[26] என்றும் அழைப்பர். வரிப்புறமும், நுண்பொறி அணிந்த எருத்தும் கூறப்பட்டுள்ளதால் இதன் தோற்றத்தை அறிய இயலும். இதனை,

"பயிலரிற் கிடந்த வேட்டு விளி வெரீஇ

வரிப்புற விதலின் மணிக்கட் பேடை

நுண்பொறி அணிந்த எருத்திற் கூர்முட்

செங்காற்சேவற் பயிரும் ஆங்கண்"

(அகநா. 387 : 9-12)

என்ற பாடலடிகள் விளக்கும்.

**5.1 எழால்:**

எழாலின் ஆண் பறவைக்குப் போத்து என்ற சொல் பயிலும் என்று தொல்காப்பியர் குறிப்பிடுவர்.[27] இதனை வல்லூறு என்றும் சுட்டுவர்.

குன்றுகளிலும் மலைகளிலும் குறுங்காடுகளிலும் இது காணப்படும். வானத்தில் வட்டமிட்டுப் பறந்து கொண்டிருக்கும்பொழுது இரையாகும் பறவையைக் கண்டால் மேலேயிருந்து விரைவாகச் செங்குத்தாக விழுந்து அடித்து மோதிக் கவர்ந்துவிடும்.

---

[26] அகநா. 387 : 11 – 12

[27] தொல்பொருள். மரபு. 44

எழால் எற்றுதல் குறிக்கப்பட்டக் காட்டுச் சேவல் பாதுகாப்பைத் தேடும். அவ்வாறு தேடித் தூறில் தனியாக ஓடிப்போகி வன்னிலத்தினைச் சார்ந்து ஒழியும். அவ்விடத்தில் பழைய அம்பலத்தில் ஆக்கள் நிறைந்திருந்த சிறுகுடிக்கண் வாழ்வோர் துறந்த பெரிய மனையின் இறப்பில் ஒருபுறம் தனிமையாக நெட்டுயிர்க்கும் என்பதை,

"நிழலறு நனந்தலை யெழிலேறு குறித்த
கதிர்த்த சென்னி நுணங்கு செந்நாவின்
விதிர்த்த போலும் அந்நுண் பல்பொறிக்
காமர் சேவல் ஏமஞ் சேப்ப
முளியரில் புலம்பப் போகி முனாஅது
முரம்படைந் திருந்த மூரி மன்றத்
ததர்பார்த் தல்கும் ஆகெழு சிறுகுடி
யுறையுநர் போகிய வோங்குநிலை வியன்மனை
யிறைநிழ லொருசிறைப் புலம்பயா வுயிர்க்கும்"(அகநா. 103 : 1 - 9)

என்ற பாடலடிகள் விளக்கும்.

வங்கா என்ற பறவையின் ஆண் எழால் தாக்கி வீழ்ந்துவிட்டதால் அதனுடைய பேடை பல தடைவ குறுகிய குரல்விட்டுக் கத்தியதை,

"வங்காக் கடந்த செங்காற் பேடை
எழாலுற வீழ்ந்தெனக் கணவற் காணாது
குழலிசைக் குரல குறும்பல வகவும்
குன்றுகெழு சிறுநெறி யரிய வென்னாது" (குறுந். 151 : 1 – 4)

என்ற பாடலடிகள் புலப்படுத்தும்.

## 5.2 குடுமி எழால்

கழுகும் வல்லூறும் கலந்ததைப் போன்று, கழுகைவிட வலிமையான பறவையைப் பதிற்றுப்பத்து 'குடுமி எழால்'[28] என்று குறிப்பிடும்.

போர்க்களத்தில் இறந்த மாவும் மாக்களுமுடைய பிணங்களை உண்ணப்போன பொறிந்த புள்ளிகளுடன் கூடிய கழுத்தையுடைய எருவைப்பெடையின் சேவலைக் 'குடுமி எழால்' அடித்துத் தாக்கியதை,

"மாவு மாக்களும் படுபிணை முணீஇயர்
பொறித்த போலும் புள்ளி யெருத்திற்
புன்புற வெருவைப் படைபுணர் சேவல்
குடுமி யெழாலொடு கொண்டுகிழக் கிழிய
நிலமிழி நிவப்பி னீணிரை பலசுமந்த" (பதிற். 36 : 7 – 11)

என்ற பாடலடிகள் சுட்டும்.

வல்லூறு என்று அழைக்கப்படும் எழால் இறந்த பிணங்களை உண்ணும் பறவையாகச் சுட்டப்பட்டுள்ளது.

## 6. கணந்துள்:

'கணந்துள்' என்ற பறவையை,

"பார்வை வேட்டுவன் படுவலை வெரீஇ
நெடுங்கால் கணந்துளம் புலம்புகொள் தெள்விளி
சுரஞ்செல் கோடியர் கதுமென இசைக்கும்" (நற். 212 : 1 – 3)

என்றும்,

---

[28] பதிற். 36 : 10

"ஆற்றய லிருந்ஷத இருந்தோட் டஞ்சிறை

நெடுங்காற் கணந்து ளாளறி வுறீஇ

ஆறுசெல் வம்பலர் படைதலை பெயர்க்கும்

மலையுடைக் கான நீந்தி

நிலையாப் பொருட்பிணிப் பிரிந்திசி னோரே" (குறுந். 350 : 4 – 8)

என்றும் இரு பாடல்கள் சுட்டும். கணந்துட் பறவைக்குக் கால்கள் நீளம் என்பதை 'நெடுங்கால்' என்று இவ் இருபாடல்களும் குறிப்பிடுகின்றன. இவற்றில் கணந்துள் பறவை ஓசையிடுவது குறிப்பாகக் கூறப்பட்டுள்ளது. வேட்டுவன் பார்வையாக ஒரு பறவையை வைத்து வலையை விரித்துள்ளதைக் கண்டறிந்த கணந்துள் பறவை தனிமை தோன்றத் தெள்ளிய அழைப்புக் குரலிடுகின்றது. வழியில் செல்லும் வழிப்போக்கர்களுக்கு ஆறலைப்போர் பதுங்கியிருப்பதை அறிவிப்பதற்குக் குரலிடுவதாகவும் கூறப்பட்டுள்ளது. இம்முறையாகச் சுரத்திலும் அரிய வழிகளிலும் மலையுடைக் கானங்களிலும் ஆள்வரவைக் கண்டு, வேட்டுவன் வலையைக் கண்டு பயந்து அறிவிக்கும் பறவை 'ஆள் காட்டிக் குருவியாக' இருக்க இடமுண்டு.

### 7.1. கழுகு:

கழுகுகள் காக்கையோடும் பிணந்தின்னிக் கழுகோடும் கூறப்பட்டுள்ளன.[29] கழுகு, இறந்த விலங்குகளையும் கழிவுப் பொருள்களையும் உண்ணும் பண்புடையது.

---

[29] ஐங். 314 : 2

இலையில்லாத யாமரத்தின் கவட்டில் இருந்த குஞ்சுகளுக்கு வயவர் கொன்றுபோட்ட மக்களின் கண்களைக் கொண்டு சென்று உமிழ்ந்து ஊட்டியதை,

"இலையில் வோங்கிய நிலையுயர் யாஅத்து
மேற்கவட் டிருந்த பார்ப்பினங் கட்குக்
கல்லுடைக் குறும்பின் வயவர் வில்லிட
நிணைவரிக் குறைந்த நிறத்த வதர்தொறுங்
கணவிர மாலை யிடூஉக்கழிந் தன்ன
புண்ணுமிழ் கழுகின் கான நீந்திச்
சென்றா ரென்பிலர் தோழி வென்றி யோடு"

(அகநா. 31 : 5 – 12)

என்ற அகநானூற்றடிகள் விளக்கும்.

### 7.2 பருந்து:

பருந்திற்குக் கரிய சிறகு இருப்பதை,

"கூதிர்ப் பருந்தி னிருஞ்சிற கன்ன
பாறிய சிதாரேன் பலவுமுதற் பொருந்தி" (புறநா. 150 : 1 – 2)

என்ற பாடலடிகள் விளக்கும்.

மழைக்காலத்தில் நனைந்த சிறகும் கூதிர்காலத்துச் சிறகும் கலைந்து கிடக்கும் என்றும் அதனால் கிழிந்த துணிபோல மண்தின்ற ஆடைபோல இருக்கும் என்றும் கூறுவர்.[30]

---

[30] பதிற். 12 : 19 – 20

இதன் தலையில் ஒரு பகுதி வெண்மையாகவும் மறுபகுதி சாம்பல் நிறமாகவும் இருக்கும். அதனால், 'வெண்டலைப் பருந்து'[31] 'புன்புறச் சேவல்'[32] என அழைப்பர்.

பருந்து உன்ன மரத்திலும்,[33] உழிஞ்சில் மரத்திலும்,[34] ஓமை மரத்திலும்[35] உயவுவதாகவும் பேடையைப் பயிர்வதாகவும் கூறப்பட்டுள்ளது.

பருந்துச் சேவல் தனியாகப் பயிர்வதை,

"வளைவாய்ப் பருந்தின் வள்ளுகிர்ச் சேவல்
கிளைதரு தெள்விளி கெழுமுடைப் பயிரும்"

(அகநா. 363 : 13 – 14)

என்றும், தன் துணையை அழைப்பதை,

"கருங்கா லோமை யேறி வெண்டலைப்
பருந்துபெடை பயிரும் பாழ்நாட் டாங்கட்" (அகநா. 117 : 6 – 7)

என்றும் குறிப்பிடுவதை அறிய இயலும்.

போர்க்களத்தில் கிடந்த உதிரம் தோய்ந்த நிறம்பெயர்ந்த மாலையைத் தனக்கு இரையென்று கருதிப் பருந்து ஆராய்ந்ததை,

---

[31] அகநா. 117 : 6 – 7

[32] மலைபடு. 147

[33] புறநா. 3 : 23

[34] புறநா. 370 : 7

[35] ஐங். 321 : 2

"மறங்கெழு போந்தை வெண்டோடு புனைந்து

நிறம்பெயர் கண்ணிப் பருந்தூ றளப்ப" (பதிற். 15 : 31 – 32)

என்று பதிற்றுப்பத்து சுட்டும்.

இரத்தந் தோய்ந்த மாலையை ஊன் என்று மயங்கி, பருந்து எடுத்துச் சென்றதை,

"வெருவரு குருதியொடு மயங்கி உருவுகரந்

தொறுவாய்ப் பட்ட தெரிய லூன் செத்துப்

பருந்து கொண் டுகப்பயாங் கண்டனம்

மறம்புகன் மைந்தன் மலைந்த மாறே" (புறந். 271 : 5- 8)

என்ற புறநானூற்றுப்பாடலடிகளும் புலப்படுத்தும்.

மழைத் தூறலில் பூத்த செங்காந்தட் பூவை ஊன் என்று கருதியெடுத்துச் சென்று பின்னர் அது ஊன் இல்லையென்று தெரிந்து கீழே போட்டதை மலைபடுகடாமும் விளக்கும்.[36]

யானை, ஓமை மரத்தைக் குத்தியதால் புண் போன்றிருந்த சிவந்த அடிமரத்தை ஊன் என்று கருதி அதற்குப் பருந்து வந்ததாக அகநானூறு கூறியுள்ளது.[37]

**எருவை:**

இதன் தலை சிறகில்லாமல் மொட்டையுடன் காணப்படும். மேலும், தலை சிவந்து காணப்படும். எருவையின் சிவந்த செவி, போர்க்

---

[36] மலைபடு. 145 – 148

[37] அகநா. 397 : 11 – 13

களத்தில் வீரரது புண்ணை ஆராய்தற்கு இரவில் வைத்த விளக்குபோல் தோன்றும். இதனை,

"அத்தக் கேழல் அட்ட நற்கோள்
செந்நாய் ஏற்றை கம்மென ஈர்ப்பக்
குருதி யாரும் எருவைச் செஞ்செவி
மண்டம ரழுவத் தெல்லிக் கொண்ட
புண்தேர் விளக்கின் மலையிறந் தோரே"

(அகநா. 111 : 10 – 15)

என்ற பாடலடிகள் உணர்த்தும்.

ஊன் துண்டைப் பதித்தாற்போல எருவையின் தலையில் செஞ்செவியுள்ளதை,

"நீளெரி பரந்த நெடுந்தா ளியாத்துப்
போழ்வளி முழங்கும் புல்லென் உயர்சினை
முடைநசை இருக்கைப் பெடைமுகம் நோக்கி
ஊன்பதித் தன்ன வெருவரு செஞ்செவி
எருவைச் சேவல் கரிபுசிறை தீய
வேனில் நீடிய வேயுயர் நனந்தலை" (அகநா. 51 : 2 – 7)

என்ற பாடலடிகள் விளக்கும். மேலும்,

"பொறித்த போலும் வானிற எருத்தின்
அணிந்த போலுஞ் செஞ்செவி எருவை
குறும்பொறை எழுந்த நெடுந்தாள் யாஅத்து
அருங்கவட் டுயர்சினைப் பிள்ளை யூட்ட

விரைந்துவாய் வழுக்கிய கொழுங்கண் ஊன்தடி

கொல்பசி முதுநரி வல்சி யாகும்”

(அகநா. 193 : 5 – 10)

என்று செஞ்செவியுடைய எருவை தன் பிள்ளைகளுக்கு உணவூட்டிய செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது. இரத்தம் போன்ற சிவந்த செவியுடைய எருவையை ஐங்குறுநூறும் குறிப்பிடுகின்றது.[38]

இதன் உடல் கரியதாய் இருக்கும். சிறகும் கருமையாய் இருக்கும். இதனை, ‘கரிபு சிறை’[39] ‘இருஞ்சிறை’[40] என்பது உணர்த்தும். எருவை மற்ற பறவைகளைக் காட்டிலும் பெரியதாகும். அதனால் இதனைப் ‘பெருந்தலை எருவை’[41] என்றனர்.

“உழுஞ்சிலங் கவட்டிடை யிருந்த பருந்தின்

பெடைபயிர் குரலொ டிசைக்கு மாங்கட்

..........................................

இனத்தடி விராய வரிக்குட ரடைச்சி

அழுகுரல் பேய்மக ளயரக் கழுகொடு

செஞ்செவி யெருவை திரிதரும்

அஞ்சுவரு கிடக்கைய களங்கிழ வோயே”

(புறநா. 370 : 7 – 15)

---

[38] ஐங். 355 : 1 – 3

[39] அகநா. 51 : 6

[40] அகநா. 297 : 17

[41] அகநா. 97 : 7

என்னும் பாடலடிகளில் பருந்து, கழுகு, எருவை போன்றவை தனித்தனியே கூறப்பட்டுள்ளன. இதன்வழி எருவையானது பருந்தோ கழுகோ அன்று என்பது தெளிவாகும். எருவையைப் பற்றிய பெரும்பான்மையான பாடல்கள் அது பிணத்தை உண்பதாகவே குறிப்பிட்டுள்ளன.

கொன்று போட்ட மக்களின் பிணத்தைத் தின்னும் எருவை அப்பிணத்தின் தலையைத் தோண்டி உண்ணக் குழுமி, கண்ணை எடுத்துப் பேடைக்குச் சொரிந்ததை,

"கொடுமரம் பிடித்த கோடா வன்கண்
வடிநவில் அம்பின் ஏவ லாடவர்
ஆளழித் துயர்த்த அஞ்சுவரு பதுக்கைக்
கூர்நுதிச் செவ்வாய் எருவைச் சேவல்
படுபிணப் பைந்தலை தொடுவன குழீக
மல்லன் மொசிவிரல் ஏற்றி மணிகொண்டு
வல்வாய்ப் பேடைக்குச் சொரியும் ஆங்கண்"

(அகநா. 215 : 9 – 15)

என்ற பாடலடிகள் உணர்த்தும்.

இக்கழுகு, பிணத்தைத் தின்பதற்காக நரிகளுடன் சண்டையிடுவதுண்டு. எருவை தன் பிள்ளைக்கு ஊட்டும்போது வழுக்கி விழுந்த ஊன் தடியை முதுநரி உணவாகக் கொள்வதை,

"பொருகளத் தொழிந்த குருதிச் செவ்வாய்ப்
பொறித்த போலும் வானிற எருத்தின்
அணிந்த போலுஞ் செஞ்செவி எருவை

குறும்பொறை எழுந்த நெடுந்தாள் யாஅத்து
அருங்கவட் டுயர்சினைப் பிள்ளை யூட்ட
விரைந்துவாய் வழுக்கிய கொழுங்கண் ஊன்தடி
கொல்பசி முதுநரி வல்சி யாகும்"

(அகநா. 193. 4 – 10)

என்ற பாடலடிகள் புலப்படுத்தும்.

கணநரியொடு நிணத்தை அருந்தும் செஞ்செவி எருவை குழுமியிருந்ததைப் புறநானூறும்,[42] அகநானூறும்[43] குறிப்பிடும்.

நெருப்புப் போன்ற செவியையுடைய எருவைச் சேவலை ஆட்டிய நிணத்தை விரும்பும் முதுநரியை,

"வம்பலர் தொலைந்த அருஞ்சுரக் கவலை
..............................................
அழல்போல் செவிய சேவல் ஆட்டி
நிழலொடு கதிக்கும் நிணம்புரி முதுநரி
பச்சூன் கொள்ளை மாந்திவெய்து உற்று
தேர்திகழ் வறும்புலந் துழைஇ பெறாஅ
அஞ்சுவரு கவலை வருதலின் வருந்திய" (நற். 352 : 3 – 10)

என்ற பாடலடிகள் விளக்கும். எருவை படுமுடை நசையுடன் கூடிய வாழ்க்கையுடையது என்பதை,

"படுமுடை நசைஇய வாழ்க்கைச் செஞ்செவி

---

[42] புறநா. 373 : 37 – 39

[43] அகநா. 375 : 6 – 9

யெருவைச் சேவ லீண்டுகிளை பயிரும்

வெருவரு கான நீந்திப் பொருள் பரிந்து"

(அகநா. 161 : 7 – 9)

என்ற பாடலடிகள் உணர்த்தும்.

**பாறு:**

கழுத்தில் மயிரற்ற காரீய நிறமான கழுத்தையுடைய கழுகும் உண்டு. இதன் தலையும் கழுத்தும் உரித்துவிட்டது போன்று வெறும்தோலோடு தோற்றமளிக்கும். எருவைக்கு இறகின்றிச் சிவந்து காணப்படுமிடத்தில் இந்தக் கழுகிற்கு மயிரற்றுக் கருமை நிறமாக உள்ளது. இதனை, 'பாறு'[44] என்று குறிப்பிடுவர்.

இந்தக் கழுகு சில குறிப்பிட்ட மரங்களில் வழக்கமாக உட்காரும். இவ்வாறு தங்கும் மரங்களில் நெடுங்காலம் இந்தக் கழுகு எச்சமிட்டு வந்தால் அவை விரைவில் பட்டுப்போய்விடும். இதனை,

"பாறுபடப் பறைந்த பன்மாறு மருங்கின்

வேறுபடு குரல வெவ்வாய்க் கூகையொடு

பிணந்தின் குறுநரி நிணந்திகழ் பல்ல

பேஎய் மகளிர் பிணைந்தழூஉப் பற்றி" (புறநா. 359 : 1 – 4)

என்ற பாடலடிகள் உணர்த்தும்.

பாறு தங்கிய இடம் பாழிடமாகும். இதனை,

---

[44] அகநா. 247 : 12

"நச்சுவர நிரப்ப லோம்புமதி யச்சுவரப்

பாறிறை கொண்ட பயந்தலை மாறுதகக்

கள்ளி போகிய களரி மருங்கின்" (புறநா. 360 : 14 – 16)

என்ற பாடலடிகள் புலப்படுத்தும்.

கொல்லப்பட்ட முடைநாற்றமடிக்கும் மனிதனின் பிணத்தின் பக்கத்தில் தோண்டுவதற்கு இடம் இல்லாது முதிய பாறு ஒன்று இருந்ததை நற்றிணை குறிப்பிடும்.[45] பாறுகள் குறுநரியொடு பிணத்தைப் பற்றியிழுப்பதைப் புறநானூறு சுட்டும்.[46]

கழுகினங்கள் இறந்த மக்களின் பிணத்தை உண்டுள்ளன. மரங்களில் தொடர்ந்து அமர்வதால் அம்மரம் பாழ்பட்டுள்ளது.

**8. காக்கை:**

காக்கை சங்க இலக்கியத்தில் சிறுவெண் காக்கை, கடலங்காக்கை என்று சுட்டப்படுகின்றது. இவற்றில், "சிறுவெண் காக்கை, கடலங் காக்கை என்பன நீர்ப்பறவைகளாகும். காக்கையினத்தைச் சேர்ந்தவையல்ல"[47] என்பர் பி.எல்.சாமி.

காக்கையினத்தில் ஊர்க்காக்கை, அண்டங்காக்கை என்ற இருவகையுண்டு. ஊர்க்காக்கை உடல் கரியதாகவும், கழுத்து, சாம்பல் நிறமாகவும் காணப்படும். அண்டங்காக்கை உடல் முழுதும் கருமையாகக்

---

[45] நற். 329 : 2 – 6

[46] புறநா. 359 : 1 – 4

[47] பி.எல்.சாமி. சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், ப.274

காணப்படும். அண்டங்காக்கையை மணிக்கட் காக்கை,[48] கருகட்காக்கை,[49] கருங்காக்கை,[50] கானக்காக்கை[51] என்று சுட்டுவர்.

சங்க காலத்தில் இரத்தங் கலந்த சோற்றைக் கடவுளுக்குப் பலியிடும்பொழுது அதனை அண்டங்காக்கைகள் உண்டன. அதனால் அதனைப் 'பலியுண் காக்கை'[52] என்றனர். இந்த அண்டங் காக்கைகள் காடுகளில் இறந்த விலங்குகளின் பிணத்தை விரும்பும்.[53]

சங்க காலத்தில் காக்கை விருந்தைக் கரைந்தழைக்கும் என்ற நம்பிக்கை மக்களிடையே நிலவியது. இதனை,

"மறுவி றூவிச் சிறுகருங் காக்கை
அன்புடை மரபினின் கிளையோடாரப்
பச்சூன் பெய்த பைந்நிண வல்சி
பொலம்புனை கலத்திற் தருகுவென் மாதோ" (ஐங். 391 : 3 – 4)

"எழுகலத் தேந்தினுஞ் சிறிதென் றோழி
பெருந்தோ ணெகிழ்த்த செல்லற்கு
விருந்துவரக் கரைந்து காக்கையது பலியே" (குறுந். 210 : 4 – 6)

---

48 அகநா. 327 : 15

49 பதிற். 30 : 39

50 பெரும்பாண். 184

51 புறநா. 342 : 1

52 நற். 281 : 4

53 அகநா. 319 : 1 – 5, 327 : 15 – 16

என்ற பாடலடிகள் உணர்த்தும். விருந்துவரக் கரையும் காக்கையைப் பாடினமையால் காக்கை பாடினியார் என்றொரு புலவர் பெயர் பெற்றார். சங்க கால மக்கள் காக்கைக்கு உணவளித்தமை அக்கால மக்களின் பண்பாட்டுநிலையை எடுத்துக்காட்டுகின்றது.

**9. கானக்கோழி:**

கானக்கோழி என்பது காட்டுக் கோழியைக் குறிக்கும். இது காடுகளில் வாழும் தன்மை வாய்ந்தது. "இவை அடர்ந்த காடுகளிலும் குறுங்காடுகளிலும் காணப்படும். காடுகளிலேயே காணப்படுவதால் கானக்கோழி, கான வாரணம் என்றழைக்கப்பட்டது."[54]

வீட்டுக்கோழி, காட்டுக்கோழி, நீர்க்கோழி என்ற மூன்று வகைகள் காணப்படுகின்றன. இதனை,

"மனைக்கோழிப் பைம்பயிரினனே
குானக்கோழிக் கவர்குரலொடு
நீர்க்கோழிக் கூய்ப்பெயர்க் குந்து" (புறநா. 395 : 9 – 11)

என்ற பாடலடிகள் உணர்த்தும். "மனைக்கோழி என்பது காட்டுக்கோழி இனத்தில் ஒருவகையை வீட்டில் வளர்த்துப் பழக்கியதாகும். நீர்க்கோழி, காட்டுக்கோழியோடு எந்தவகைத் தொடர்பும் உடையதன்று. முற்றிலும் வேறு இனமாகும்."[55]

---

[54] பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், ப. 177

[55] மேலது. ப. 177

காட்டுக்கோழியைக் ‘கானவாரணம்’[56] என்று நற்றிணை குறிப்பிடும். இவை மலையிலும் காடுகளிலும் அருகில் உள்ள சிற்றூர்களிலும் பழகி வாழும். குறத்தி மான்தோலில் உணக்கிய தினையைக் கானக்கோழி கவர்ந்துண்டதை,

"மானதட் பெய்த வணங்குதினை வல்சி

கானக் கோழியோ டிதல் கவர்ந் துண்டென"

(புறநா. 320 : 10 – 11)

என்ற அடிகள் புலப்படுத்தும். இவை காடருகே வயல்களிலும் மேயும். காட்டுக்கோழி, பழங் கொல்லையில் மேய்தலை நற்றிணை குறிப்பிடும்.[57]

காட்டுச்சேவல் விடியற்காலையில் கூவி தினைப் புனங்காப்போரை எழுப்பியதை,

"வட்ட வரிய செம்பொறிச் சேவல்

ஏனல் காப்போ ருணர்த்திய கூஉம்

கானத் தோர்நின் றெவ்வர் நீயே" (புறநா. 28 : 8 – 10)

என்ற பாடலடிகள் விளக்கும்.

உருக்கின நெய்யைப் பாலில் தெளித்ததுபோல நுண்ணிய பல் பொறிகளையுடைய அழகு நிறைந்த காட்டுக்கோழியின் தோற்றத்தை,

"உருக்குறு நறுநெய் பால்விதிர்த் தன்ன

அரிக்குரல் மிடற்ற அந்நுண் பல்பொறிக்

காமரு தகைய கான வாரணம்

---

[56] நற். 21 : 3

[57] நற். 386 : 6 – 10

பெயனீர் போகிய வியனெடும் புறவிற்

புலரா வீர்மணன் மலிரக் கெண்டி

நாளிரை கவர மாட்டித்

தன்பேடை நோக்கிய பெருந்தகு நிலையே"

(நற். 21 : 1 – 7)

என்ற பாடல் விளக்கும். இதன் செம்மை கலந்த வட்டப் பொறிகளை,

"வட்ட வரியச் செம்பொறிச் சேவல்" (புறநா. 28 : 8 – 10)

என்ற அடி உணர்த்தும்.

'ஒண்பொறி எருத்து'[58] 'பொறிகிளர் சேவல்'[59] 'பல்பொறிக் கான வாரணம்'[60] எனவும் உணர்த்தும்.

கானக்கோழியும், மனைக்கோழியும் ஒன்றிணைந்து காணப்பட்டதை,

"கானவர் மருதம் பாட வகவர்

நீனிற முல்லைப் ப.்.றிணை நுவலக்

கானக்கோழி கதிர்குத்த

மனைக்கோழி தினைக் கவர" (பொருந. 220 – 223)

என்ற பொருநராற்றுப்படை அடிகள் விளக்கும்.

கானக்கோழி காட்டில் வாழ்ந்துள்ளது. இதனை வேட்டையாடிச் சங்க கால மக்கள் உணவாகக் கொண்டிருக்க இடமுண்டு.

---

58 குறுந். 242 : 2

59 புறநா. 28 : 8

60 நற். 21 : 2 – 3

**(10) கிளி:**

கிளிகள் பெரும்பாலும் குறிஞ்சி நிலத்துப் பறவையாகக் கூறப்பட்டுள்ளன. இக்கிளிகள் தினைகவரும் செய்திகள் மிகுதியாக இடம் பெற்றுள்ளன.

கிளிகள் புனத்தில் தினை கவர்வதையும் தலைவி தினை காத்தலையும் குறிஞ்சித் திணைப் பாடல்கள் கூறுகின்றன. இக்கிளிகளைச் சிறுகிளி என்றும் குறுகிளி என்றும் குறிப்பிடுவர். இதனை,

"பூக்கெழு தொடலை நுடங்க வெழுந்தெழுந்து
கிள்ளைத் தெள்விளி யிடையிடை பயிற்றி
யாங்காங் கொழுகா யாயி னன்னை
சிறுகிளி கடித றோற்றா ளிவளெனப்" (அகநா. 28 : 9 – 12)

"ஏனற் செந்தினைப் பாலார் கொழுங்குரல்
குறுகிளி கடிகஞ் சென்றும்" (நற். 288 : 8 – 9)

"தந்தை வித்திய மென்தினை பைபயச்
சிறுகிளி கடிதல் பிறக்கியா வணதே" (நற். 306 : 1 – 2)

"பெரும்புனல் கவருஞ் சிறுகிளி ஓப்பி" (நற். 368 : 1)

"மென்றினை நுவணையுண்டு தட்டையின்
ஐவனச் சிறுகிளி கடியு நாட" (ஐங். 285 : 1 – 2)

"தோடுதலை வாங்கிய நீடுகுரற் பைந்தினை

பவளச் செவ்வாய்ப் பைங்கிளி கவரும்"

(நற். 317 : 3 – 4)

என்ற பாடலடிகள் விளக்கும்.

கிளிக்குச் செந்தார் இருப்பதை,

"பைந்தாட் செந்தினைக் கொடுங்குரல் வியன்புனம்

செந்தார்க் கிள்ளை நம்மொடு கடிந்தோன்" (அகநா. 242 : 5 – 6)

என்ற பாடலடிகள் உணர்த்தும். "கிளியின் ஆணிற்கு மட்டுமே இந்தச் செந்தார் உண்டு. பெட்டைக்குக் கிடையாது"[61] என்பர்.

வானில் காணப்படும் இருமுனையும் சேராத வானவில்லைப் போன்று பச்சை மாலையைக் கழுத்தில் அணிந்த செவ்வாய்ச் சிறுகிளியை,

"எய்யா வரிவில் அன்ன பைந்தார்ச்

செவ்வாய்ச் சிறுகிளி சிதைய வாங்கிப்

பொறைமெலிந் திட்ட புன்புறப் பெருங்குரல்

வளைசிறை வாரணங் கிளையொடு கவர

ஏனலும் இறங்குபொறை உயிர்த்தன பால்நான்"

(அகநா.192 : 4 – 8)

என்ற பாடலடிகள் விளக்கும்.

கிளியின் மூக்கு சிவப்பாய் இருப்பதால் 'பவளச் செவ்வாய்ப் பைங்கிளி'[62] என்றனர். மொச்சையின் மலர் இரு பாகங்களுடன் கூடி கிளி

---

[61] பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், ப. 245

[62] நற். 317 : 4

மூக்குப் போல இருக்கும்.[63] மாவினது காய்போல கிளி இருந்ததை அகநானூறு குறிப்பிடும்.[64]

இக்கிளிகள் பெரும்பாலும் தோட்டங்களிலும் சிறுகாடுகளிலும் கூட்டமாகக் காணப்படும். உழவுத் தொழிலுக்கு மிகவும் ஊறு விளைவிக்கும். கிளிகள் தினைகவர்தலையும், அவரைக்காயை உண்பதையும்,

"மென்றினை நுவணை யுண்டு தட்டையின்
ஐவனச் சிறுகிளி கடியு நாட" (ஐங். 285 : 2 – 3)

"காய்த்த அவரைப் படுகிளி கடியும்" (ஐங். 286 : 2)

என்ற அடிகள் புலப்படுத்தும்.

கிளி வேப்பம் பழத்தை வாயில் கௌவி எடுத்துச் செல்லுதல் புதுநாண் செலுத்திய பொற்காசுபோல இருப்பதை,

"உள்ளார் கொல்லோ தோழி கிள்ளை
வளைவாய்க் கொண்ட வேப்ப வொண்பழம்
புதுநா ணுழைப்பா னுதிமான் வள்ளுகிர்ப்
பொலங்கல வொருகா சேய்க்கும்
நிலங்கரி கள்ளியங் காடிறந் தோரே" (குறுந். 67 : 1 – 5)

என்ற பாடல் உணர்த்தும்.

கிளி தேடிச் சேர்த்த உணவைச் சேகரித்து வைக்கும். இது மருவிய அகன்ற புனத்தில் மரப்பொதும்பின்கண் வைத்த பெரிய கதிரை,

---

[63] குறுந். 240 : 1 – 2

[64] அகநா. 37 : 7 – 8

"ஒலியிருங் கதுப்பி னாயிழை கணவன்

கிளிமரீஇய வியன்புனத்து

மரனணி பெருங்குர லனைய னாதலின்

நின்னை வருத லறிந்தனர் யாரே" (புறநா. 138 : 8 – 11)

என்பது குறிப்பிடும்.

தளிர் இலை போன்ற நிறமுடைய கிளி இனிதாகப் பெற்றெடுத்த வளராத பிள்ளையினை,

"தளிரியற் கிள்ளை யினிதினி னெடுத்த

வளராப் பிள்ளைத் தூவி" (அகநா. 324 : 3 – 4)

என்ற பாடலடிகள் விளக்கும்.

சங்க காலத்தில் செந்தார்க்கிளியை வீட்டில் வைத்துப் பழக்கினர். இக்கிளியைப் பேசவும் பழக்கினர். இதனை,

"துணையொடு திளைக்குங் காப்புடை வரைப்பிற்

செந்தார்ப் பைங்கிளி முன்கை யேந்தி

யின்றுவர லுரைமோ சென்றிசினோர் திறத்தென"

(அகநா.34 : 13 – 15)

"விளிகுவை கொல்லோ நீயே கிளியெனச்

சிறிய மிழற்றுஞ் செவ்வாய்ப் பெரிய" (அகநா. 126 : 17 – 18)

என்ற பாடலடிகள் சுட்டும்.

பார்ப்பனர் வீடுகளிலும் கிளியை வளர்த்து மறையைக் கூறப் பயிற்றுவித்தனர்.[65]

கிளிகள் மக்கள் விளைவித்த கதிரை உண்டு சேதப்படுத்தியிருக்கின்றது. இருப்பினும் அக்கிளிகளை இல்லத்தில் வளர்த்து அதற்குப் பேசவும், மறை ஓதவும் கற்றுக் கொடுத்துள்ளனர்.

**11. குயில்:**

குயிலில் ஆண்பறவை கருமையாக விளங்கும். பெண் பறவை கரும்பழுப்பு நிறமாக, வெள்ளைப் புள்ளிகளுடனும் வரிகளுடனும் காணப்படும். 'கருங்குயில்',[66] 'மணிநிற இருங்குயில்'[67] என்று குயிலின் நிறம் வருணிக்கப்படுகின்றது. குயிலின் கண் சிவந்து காணப்படும். அதனால் இதனை, 'செங்கண் இருங்குயில்'[68] என்றனர். 'பூங்கண் இருங்குயில்'[69] என்றும் குறிப்பிட்டனர்.

குயிலின் கண்ணையும் அதன் அளவையும் தோற்றத்தையும் நிறத்தையும்,

"குயிற்கண் ணன்ன குரூஉக்காய் முற்றி
மணிக்கா சன்ன மானிற இருங்கனி
உகாஅ மென்சினை உதிர்வன கழியும்" (அகநா. 293 : 6 – 8)

என்ற பாடலடிகள் விளக்கும்.

---

65 புறநா. 198 : 25

66 அகநா. 229 : 19

67 அகநா. 25 : 6

68 நற். 224 : 5

69 நற். 243 : 4

குயில்கள் எப்போதும் அடர்ந்த கொம்புகளின் இலைகளின் உள்ளே காணப்படும். ஆற்றங்கரையில் இருந்த மருத மரச்சூழலிலும், காஞ்சி மரப் பொழிலிலும் கூவுவதை,

"அற்சிர நீங்கிய அரும்பத வேனில்
அறலவிர் வார்மணல் அகலியாற் றடைகரைத்
துறையணி மருது தொகல்கொள வோங்கிக்
கவிழ்தளிர் அணிந்த இருஞ்சினை மாஅத்
திணர்ததை புதுப்பூ நிரைத்து பொங்கர்ப்
புகைபுரை அம்மஞ் சூர
நுகர்குயில் அகவும் குரல்கேட் போர்க்கே"(அகநா. 97 : 17 – 23)

என்பர்.

குயில் சில மரங்கள் பூக்கும்பொழுது அப்பூவில் உள்ள தேனைக் குடிக்கும். இதனை,

"இனையல் என்றி தோழி சினைய
பாசரும் பீன்ற செம்முகை முருக்கினப்
போதவிழ் அலரி கொழுதித் தாதருந்து
அத்தளிர் மாஅத்து அலங்கன் மீமிசைச்
செங்கண் இருங்குயில் நயவரக் கூஉம்
இன்னிள வேனிலும் வாரார்
இன்னே வருதும் எனத்தெளித் தோரே" (அகநா. 229 : 15 – 21)

என்ற பாடல் சுட்டும்.

பொழிலில் புதுப்பூவைக் குயில் குடைந்து உதிர்த்ததால் விழுந்த பூவிதழ்களை,

“செல்புன லுழந்த சேய்வரற் கான்யாற்றுக்
கொல்கரை நறும்பொழிற் குயில்குடைந் துதிர்த்த
புதுப்பூஞ் செம்மல் குடிப்புடை நெறித்து” (சிறுபாண். 3 – 5)

என்ற அடிகள் புலப்படுத்தும்.

வேனில் காலத்தில் குயில்கள் புணர்வதற்குக் கூவுவதை,

“புணர்ந்தீர் புணர்மி னோவென இணர்மிசைக்
செங்கண் இருங்குயில் எதிர்குரல் பயிற்றும்
இன்பவேனிலும் வந்தன்று நம்வயின்
பிரியல மென்று தெளித்தோர் தேஎத்து
இனியெவன் மொழிகோ யானே கயன்ற” (நற். 224 : 4 – 8)

என்ற பாடல் விளக்கும். குயில்கள் புணர்வுக் காலத்தில் அடிக்கடி கூவுவதை, ‘ஆனாது அகவும்’[70] என்று கலித்தொகை குறிப்பிடும்.

குயில்கள் கூவும் ஓசை மக்களுக்கு இன்பமளித்துள்ளது. மேலும், மலர்களில் உள்ள தேனை உண்டுள்ளது.

**12. குருகு:**



குருகு என்பது சிறப்புப் பெயராகவும், பொதுப்பெயராகவும் வழங்கப்படுகின்றது. “சங்க இலக்கியத்தில் வெண்குருகின் மூன்று வகைகள் சுட்டப்பட்டுள்ளன. அவை கருங்கால் வெண்குருகு, வெள்ளாங் குருகு, சிறு வெள்ளாங் குருகு ஆகியனவாகும். இவற்றைத் தற்காலத்தில்

[70] கலித். 92 : 64

காட்டு மக்கள் பெரிய வெள்ளைக் கொக்கு, நெடலி, சிறிய வெள்ளைக் கொக்கு என்றழைக்கின்றனர்."[71]

குருகுகள் வரிசையாகப் பறந்து செல்வதை,

"கார்மழை முன்பிற் கைபரிந் தெழுதரும்
வான்பறைக் குருகி னெடுவரி பொற்பக்
கொல்களிறு மிடைந்த ப.்.றோற் றொழுதியொடு
நெடுந்தேர் நுடங்கு கொடி யவிர்வரப் பொலிந்து"

(பதிற். 83 : 1 – 4)

என்று படைகளின் அணியொடு ஒப்பிட்டுரைப்பர். நற்றிணைப் பாடல்களும் இச்செய்தியை எடுத்தியம்புகின்றன.[72]

குருகு இனத்தில் ஒன்றாகக் கருங்கால் வெண் குருகு சுட்டப்படுகின்றது. கருங்கால் வெண்குருகு தனியாகக் குளத்திலும்[73] கழிகளிலும்[74] உப்புடைப் பாத்தியிலும்[75] திரியும்.

கருங்கால் வெண்குருகு தன் கிளையுடன் மேய்ந்ததை,

"வளைநீர் மேய்ந்து கிளைமுதற் செலீஇ
வாப்பறை விரும்பினை ஆயினும் தூச்சிறை
இரும்புலா அருந்துநின் கிளையொடு சிறிதிருந்து
கருங்கால் வெண்குரு கெனவ கேண்மதி" (நற் : 54 : 1 – 4)

---

71 பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், ப. 51.

72 நற். 159 : 4 – 5, 369 : 1 – 2

73 குறுந். 325 : 56

74 நற். 67 : 6

75 நற். 67 : 4

என்ற பாடலடிகள் விளக்கும். "கருங்கால் வெண்குருகு என்ற பெயர் பல புலவர்களால் அப்படியே பல பாடல்களில் கையாளப்பட்டுள்ளது. ஆதலின் அப்பெயர் குருகினத்தில் ஒரு குறிப்பிட்ட பறவை வகையைக் குறிப்பிடுகின்றது என்பதை அறியலாம். கரிய காலையும் வெண்மை நிறத்தையும் இப்பறவையைத் தெரிந்து கொள்ளப் பயன்படுத்திய அறிகுறிகளாகத் கொள்ளலாம்."[76]

வெண்குருகினை, "வெள்ளாங் குருகு, சிறுவெள்ளாங் குருகு என்ற இரு வெண்குருகு வகைகளும் சொல்லப்பட்டுள்ளன. வெண்குருகு இனத்திற்கு உடற்சிறகுகள் தூய வெள்ளையாக இருக்கும்",[77] என்று குறிப்பிடுவர் பி.எல்.சாமி. ஐங்குறுநூறில் வெள்ளாங் குருகு என்ற தலைப்பில் வரும் பத்துப்பாடல்கள் வெண்குருகு பற்றியனவாகும்.[78]

புன்னை மரத்தின் கிளைகளில் வெண்குருகுகள் வாழ்வதை,

"கருங்கோட்டுப் புன்னைக் குடக்குவாங்கு பெருஞ்சினை
விருந்தின் வெண்குருகு ஆர்ப்பின்" (நற். 167 : 1 – 2)

என்ற பாடலடிகள் விளக்கும். மீனையும் நண்டையும் உண்டதை,

"இனமீன் ஆர்ந்த வெண்குருகு மிதித்த
வறுநீர் நெய்தல் போல" (நற். 183 : 9 – 10)

---

[76] பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், ப. 36.

[77] பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், ப. 38

[78] பொ.வே. சோமசுந்தரனார் (உ.ஆ.) ஐங்குறுநூறு, ப. 190

"வேப்புநனை யன்ன நெடுங்கண் ணீர் ஞெண்டு

இரைதேர் வெண்குருகு அஞ்சி அயலது"

(அகநா. 176 : 8 – 9)

என்ற பாடலடிகள் புலப்படுத்தும்.

"வெண்குருகினத்தில் மிக நெடியதைக் கருங்கால் வெண்குருகு என்றும் நடுத்தரமான உயரமுடையதை வெள்ளாங்குருகு என்றும் சிறியதைச் சிறுவெள்ளாங்குருகு என்றும் சங்க நூல்கள் அழைக்கின்றன"[79] என்ற கருத்து சிறு வெள்ளாங் குருகு பற்றிக் குறிப்பிடுவதை உணரமுடியும். சிறு வெள்ளாங்குருகின் வெண்மை நிறத்தினையும் மீன்களைப் பிடித்து உண்பதையும் நற்றிணை எடுத்துரைக்கின்றது.[80]

குருகினங்கள் மூன்று வகைப்படுத்தப்பட்டுள்ளன. அக்குருகுகள் பல்வேறு மரங்களில் வாழ்வதும், மீன்களை உண்பதும் இயல்பாக உள்ளன.

### 13. குறும்பூழும் சிவலும்

காடையைக் 'குறும்பூழ்'[81] என்றும், கவுதாரியைப் 'பூழ்'[82] 'சிவல்'[83] என்றும் சங்கப்புலவர்கள் சுட்டியுள்ளனர்.

---

[79] பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், ப. 38

[80] நற். 70 : 1 – 9

[81] பெரும்பாண். 205

[82] குறுந். 68 : 1

[83] பட்டிணப். 77

குறும்பூழ் வன்புலத்தில் பயிர்விளையும் வயலில் காணப்படும். தினையை விரும்பி உண்ணும்.[84] பூழி மண்ணை விடியற்காலை வெயிலில் குறும்பூழ்ச்சேவல் தன் பெடையோடு கிளறிக் கொண்டிருந்ததை,

"கடுங்கண் யானை நெடுங்கை சேர்த்தி
முடங்குதாள் உதைத்த பொலங்கெழு பூழி
பெரும்புலர் விடியல் விரிந்துவெயில் எறிப்பக்
கருந்தார் மிடற்ற செம்பூழ்ச் சேவல்
சிறுபுன் பெடையொடு குடையும் ஆங்கண்" (அகநா. 63 : 4 – 8)

என்ற பாடலடிகள் உணர்த்தும். குறும்பூழ் மங்கிய சிவப்பு நிறமுடையது. ஆதலின் குறும்பூழைச் 'செம்பூழ்'[85] என்றும் அழைத்தனர். மேலும் காடைச் சேவலின் கழுத்தினடியில் தொண்டையில் இருக்கும் பட்டைகள் வரை வளையம் போலக் காதுவரை நீண்டிருப்பதும் குறிப்பிடத்தக்கது.

காடையின் குஞ்சு வெண்மையும் மஞ்சளும் கலந்த நிறமாக உருண்டு திரண்டு காணப்படும். இதனை,

"வண்ணக் கடம்பின் நறுமலர் அன்ன
வளரிளம் பிள்ளை தழீஇக் குறுங்காற்
கறையணற் குறும்பூழ் கட்சிச் சேக்கும்
வன்புல மிறந்த பின்றை" (பெரும்பாண். 202 – 205)

என்ற அடிகள் புலப்படுத்தும்.

---

[84] ஐங். 469 : 1 – 2

[85] அகநா. 63 : 7

காடையின் இறைச்சியை மிகச் சுவையுடையதாகக் கருதுவதுபோல் இதனை வலையிட்டுப் பிடித்தல் வழக்கமாக உள்ளது. யானையை வேட்டையாடச் சென்றவன், ஊழ்வலியால் யானையைப் பெறுவதுமுண்டு. குறும்பூழ் வேட்டைக்குச் சென்றவன் வெறுங்கையோடு திரும்புவதுமுண்டு. இதனை,

"யானை வேட்டுவன் யானையும் பெறுமே
குறும்பூழ் வேட்டுவன் வறுங்கையும் வருமே"

(புறநா. 214 : 4 – 5)

என்ற பாடலடிகள் விளக்கும். வேட்டையாடி நெய்யில் கனிந்து வெந்த குறும்பூழை அரிய உணவாகக் கொண்டனர்.[86]

காடைகளைப் போர் செய்யப் பழக்குவது சங்ககால மக்களின் வழக்கமாக இருந்தது. காடையை ஒருவன் கையில் வைத்துப் பழக்க வேண்டும். இவ்வாறு பழக்கப்பட்ட காடை போர் செய்வதை,

"குறும்பூழ்ப்போர் கண்டேம் அனைத்தல்ல தியாதும்
அறிந்ததோ இல்லைநீ வேறோர்ப் பது
குறும்பூழ்ப்போர் கண்டமை கேட்டேன் நீயென்றும்
புதுவன ஈகை வளம்பாடிக் காலிற்
பிரியாக் கவிகைப் புலையன்றன் யாழின்
இருத்த செவிசாய்த் தினியினிப் பட்டன
ஈகைப்போர் கண்டாயும் போறிமெய் எண்ணில்
தபுத்த புலர்வில புண்"          (கலித். 95 : 6 – 13)

---

[86] குறுந். 389 : 1 – 2

என்ற பாடலடிகள் விளக்கும். குறும்பூழைப் போர்க்குப் பொருத்துபவனை, இயக்குபவனை இயக்கன் என்று கலித்தொகை உரை கூறுவது இவ்விடத்தில் சுட்டத்தக்கது.[87]

குறும்பூழ் என்ற பெயர் பூழ் என்ற பறவையை விடக் குறியது என்ற பொருளில் வழங்கியதாகத் தெரிகின்றது. “கவுதாரியும் காடையும் உருவிலும் நிறத்திலும் மிகவும் ஒத்துள்ளதால் பூழ் என்றும் குறும்பூழ் என்றும் பெயரிட்டனர்.”[88]

‘பூழ்’ என்ற கவுதாரிக்குப் ‘பொறிப்புறம்’[89] இருப்பதைப் புறநானூறு சுட்டுகின்றது. கவுதாரிக்கு மேற்புறம் வளைவான சிறுசிறு வரிகள் குறுக்கிலும் நெடுக்கிலும் காணப்படும். உழுந்துச் செடியின் காம்பு இளஞ்சிவப்பாக இருப்பது போன்று பூழின் கால்கள் இருந்ததை,

“பூழ்க்கா லன்ன செங்கா லுழுந்தின்
ஊழ்ப்படு முதுகா யுழையினங் கவரும்” (குறுந். 68 : 1-2)

என்ற அடிகள் உணர்த்தும்.

வரகு விளையும் வறண்ட நிலத்தில் அரிகாலில் கருப்பை எலியொடு போரிடும் கவுதாரியை,

“வன்பாலாற் கருங்கால் வரகின்
அரிகாற் கருப்பை யலைக்கும் பூழின்
அங்கட் குறுமுயல் வெருவ வயல” (புறநா. 384 : 4 - 6)

---

87 நச்சினார்க்கினியர் (உ.ஆ.), கலித்தொகை, ப. 284

88 பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், ப. 210

89 புறநா. 321 : 1

என்ற பாடலடிகள் விளக்கும்.

பன்றி, கோழி, ஆடு ஆகியவற்றுடன் புறச்சேரியில் கவுதாரியும் வளர்க்கப்பட்டதை,

"பறழ்ப்பன்றிப் பல்கோழி

யுறைக் கிணற்றுப் புறச்சேரி

மேழகத் தகரொடு சிவல்விளை யாடக்" (பட்டினப். 75 – 79)

என்ற அடிகள் சுட்டும்.

காடை, கவுதாரி இறைச்சியின் சுவை மிகுதி காரணமாக அவற்றை வேட்டையாடி மக்கள்தம் உணவில் சேர்த்துக்கொண்டனர். இவை பொழுதுபோக்கிற்காகவும் பயன்படுத்தப்பட்டுள்ளன.

### 14.1 நாரை:

நாரை என்பது நீர்நிலைகளில் காணப்படும் பறவைகளில் ஒன்றாகும். இதன் கால்கள் வளைந்து நீண்டு பெரியதாகக் காணப்படும்.[90] எனவே இது 'தடந்தாணாரை'[91] என்று அழைக்கப்பெற்றது. இதனை, "தட என்ற சொல் பெருமைப் பொருளுடையதால் பெரிய நீண்ட காலையுடைய நாரை என்று பொருள் கொள்வதே பொருத்தமானது"[92] என்பர் பி.எல்.சாமி.

---

[90] குறுந் 349 : 1 – 3

[91] பதிற். 349 : 1 – 3

[92] பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், ப. 7

இப்பறவை கடற்கரைக் கழிகளிலும்,[93] பொய்கைகளிலும்,[94] மருதநிலத்துக் கழனிகளிலும்,[95] பழனங்களிலும்[96] காணப்படும். புன்னை,[97] ஞாழல்,[98] பனை[99] போன்ற மரங்களில் தங்கி வாழும்.

நாரை நீர்நிலைகளின் அருகில் நின்று கொண்டு இருக்கும். தன்னருகில் மீன்கள் வருகின்றபொழுது அதனைத் தன் மூக்கினால் குத்திப் பிடிக்கும். இதனை,

"நீளிரும் பொய்கை யிரைவேட் டெழுந்த
வாளை வெண்போத்து உணீஇய நாரைதன்
அடியறிவு உறுதல் அஞ்சிப் பைப்பயக்
கடியிலம் புகூஉங் கள்வன் போலச்
சாஅய் ஒதுங்குந் துறைகேழ் ஊரனொடு"

(அகநா. 276 : 1 – 9)

என்னும் பாடலடிகள் உணர்த்தும்.

நாரை தன்னுடைய குஞ்சுகளுக்கு இரைகொணர்ந்து கொடுப்பதை,

"பாடிமிழ் பனிக்கடல் துழைஇப் பெடையோடு
உடங்கிரை தேருந் தடந்தாள் நாரை

---

[93] குறுந். 166 : 1 – 3

[94] புறநா. 209 : 4

[95] புறநா. 354 : 4 – 5

[96] ஐங். 70 : 1, நற். 127 : 1 – 2

[97] அகநா. 100 : 11 – 14, 190 : 7 – 8

[98] அகநா. 240 : 1 – 3

[99] அகநா. 360 : 16 – 17

ஐய சிறுகண் செங்கடைச் சிறுமீன்

மேக்குயர் சினையின் மீமிசைக் குடம்பைத்

தாய்ப்பயிர் பிள்ளை வாய்ப்படச் சொரியும்

கானலம் படப்பை ஆனா வண்மகிழ்ப்" (நற். 91 : 3 – 8)

என்னும் பாடலடிகள் விளக்கும்.

நாரையின் மார்புப் பக்கத்திலும் பின்பக்கத்திலும் இறகுகளில் மிகச் சிறிய நுண்ணிய தூவிகளுக்கு மூங்கிலின் உள்ளே காணப்படும் மென்மையான தொலியை உவமிப்பர். இதனை,

"ஆடமை ஆக்கம் ஐதுபிசைந்து அன்ன

தோடமை தூவித் தடந்தாள் நாரை

நலனுணப் பட்ட நல்கூர் பேடை

கழிபெயர் மருங்கின் சிறுமீன் உண்ணாது

கைதையம் படுசினைப் புலம்பொடு வதியும்" (நற். 178 : 1 – 5)

என்பது உணர்த்தும்.

நாரையின் வகையான செந்நாரையை,

"காணிய சென்ற மடநடை நாரை

பதைப்ப வொழிந்த செம்மறுத் தூவி" (ஐங். 156 : 2 – 3)

என்ற பாடலடிகள் குறிப்பிடுகின்றன. "செம்மறுவுடைய தூவியுடைய நாரையென்று கூறுவதால் உடலில் பெருமளவு சாம்பல் நிறமாகவும் சிறிதளவு செம்மை நிறமாகவும் மார்பில் காணப்படும் செந்நாரை என்று கொள்ளவேண்டும்"[100] என்பர்.

---

[100] பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், ப. 13

நாரையின் குரல் பிளிறுதல் போன்று ஒலிக்கும். இதனை,

"தண்ணுமை வெரீஇய தடந்தாள் நாரை
செறிமடை வயிரிற் பிளிற்றிப் பெண்ணை
அகமடற் சேக்குந் துறைவன்" (அகநா. 40 : 14 – 16)

என்ற பாடலடிகள் புலப்படுத்தும். இவற்றால் நாரையையும் அதன் வகைகளையும் அறிய இயலும்.

## 14.2 கொக்கு:

மாரிக்காலத்தில் சுண்ணாம்பு பூசிய ஈரமான சுவர் பழுப்பு நிறமாகிக் காணப்படுவது போன்றும்,[101] மாரிக் காலத்து ஆம்பல் பூவின் இதழ்கள் வெண்மை நிறத்தை இழந்து பழுப்பாக மழுங்கித் தோன்றுவது போன்றும்,[102] முதியவளின் நரைத்த கூந்தலைப் போன்றும்[103] கொக்கின் நிறம் காணப்படும்.

கொக்கு தன் கழுத்தைச் சுருக்கிக் குனிந்து குறுகி உட்கார்ந்திருக்கும் தன்மையை, 'கூரற் கொக்கு'[104] என்று அகநானூறு குறிப்பிடுகின்றது. இந்த நிலையில் இதன் உடல் நிறத்தில் வெண்மை தெரியாது. சாம்பல் கலந்த பழுப்பு நிறந்தான் தெரியும். இதனால் ஆம்பலின் முகைக்கு ஒப்பிட்டனர்.[105] இனஞ்சேருங் காலத்தில் குடுமி

---

[101] அகநா. 346 : 2 – 3

[102] குறுந். 117 : 1 – 2

[103] புறநா. 277 : 1 – 2

[104] அகநா. 346 : 3

[105] நற் 380 : 1 – 2

போன்ற மூன்று அல்லது நான்கு தூவிகள் கொக்கின் தலையில் தோன்றும். இதனை,

"குடுமிக் கொக்கின் பைங்கால் பேடை" (அகநா. 290 : 1)

என்பர் நக்கீரர்.

கொக்கின் கால்விரல் நகங்கள் நெல்லின் சோறுபோல் இருக்கும். நீண்டு மெல்லியதாய் காணப்படும்.[106] இதன் கால்கள் பசிய நிறமாக இருப்பதை,

"பைங்காற் கொக்கின் மென்பறைத் தொழுதி

யிருங்களி பரந்த ஈர வெண்மணல்" (நெடுநல். 15 – 16)

"பைங்காற் கொக்கின் நிரைபறை யுகப்ப" (அகநா. 120 : 3)

என்ற பாடலடிகள் புலப்படுத்தும்.

உழவர்கள் நெல் வயல்களுக்குத் தண்ணீர் பாய்ச்சச் செய்த அணையின் மேல் தேங்கி வழியும் கடிய நீரினைக் கொக்கு நோக்கியிருக்கும்.[107] இவ்வாறு நீர்மடைகளில் பொறுமையாக நெடுநேரம் மீனிற்காக நீரைப் பார்த்துக் கொண்டிருக்கும் கொக்கை, 'பார்வல் கொக்கு'[108] என்று பதிற்றுப்பத்து குறிப்பிடுகின்றது.

கொக்கு ஆரல்மீனின் முட்டையை இரையாகக் கொள்ளும். இதனை,

"பைங்காற் கொக்கின் பகுவாய்ப் பிள்ளை

மென்சேற் றடைகரை மேய்ந்துண் டதற்பின்

---

[106] நற். 258 : 5 – 6, புறநா. 398 : 25, புறநா. 395 : 36

[107] அகநா. 346 : 2 – 11

[108] பதிற். 21 : 26 – 29

ஆர லீன்ற வையவி முட்டை

கூர்ந லிறவின் பிள்ளையொடு பெறூஉம்"

(புறநா. 342 : 7 – 10)

என்ற பாடலடிகள் உணர்த்தும்.

கொக்கு கூடுகட்டி அதன் பிள்ளைகட்கு இரை கொடுப்பதை,

"கொழுந்சுளைப் பலவின் பயங்கெழு கவாஅன்

செழுங்கோள் வாங்கிய மாச்சினைக் கொக்கின்

மீன்குடை நாற்றந் தாங்கல்செல் லாது

துய்த்தலை மந்தி தும்மும் நாட" (நற். 326 : 1 – 4)

"குடுமிக் கொக்கின் பைங்கால் பேடை

இருஞ்சேற்று அள்ளல் நாட்புலம் போகிய

கொழுமீன் வல்சிப் புன்தலைச் சிறாஅர்

நுண்நாண் அவ்வலைச் சேவல் பட்டென

அல்குறு பொழுதின் மெல்கிரை மிசையாது

பைதற் பிள்ளை தழீஇ ஒய்யென

அங்கட் பெண்ணை யன்புற நரலுஞ்" (அகநா. 290 : 1 – 7)

என்ற பாடல்கள் விளக்கும்.

கொக்கைத் தோலுரித்துப் பார்க்குங்கால் அதன் முதுகு உயர்ந்தும் கழுத்து சுருங்கியும் கூனிக் குறுகிக் காணப்படும்.[109] கொக்கு என்ற பெயர்

[109] கலித். 94 : 17 – 18

இதன் கொக்கி போன்ற வளைந்த கழுத்தின் காரணமாக வந்ததென்று தெரிகின்றது.[110]

### 15. நீர்ப்பறவைகள்:

சங்க காலத்தில் நீரருகில் வாழ்ந்த சில பறவைகள் காணப்படுகின்றன. இவை வீட்டுக் கோழியைப் போன்று உருவமுடையன. நீரில் நன்றாக நீந்தக் கூடியன. குளங்களிலும் குட்டைகளிலும் ஓரத்தில் உள்ள நாணல் முதலிய புற்புதர்களிலும் மறைந்து வாழும் தன்மை கொண்டன.

### 15.1 நீர்க்கோழி:

நீரருகில் வாழும் கோழி வகைகளுள் ஒன்று நீர்க்கோழி. இது வீட்டுக் கோழியைப் போன்று உருவமுடையது. நீரில் நன்றாக நீந்தக் கூடியது. இது புற்புதர்களில் அடிக்கடி ஓசையிட்டுக் கொண்டிருப்பதை,

"மனைக்கோழிப் பைம்பயி ரினனே
கானக் கோழிக் கவர்குரலொடு
நீர்க்கோழிக் கூய்ப்பெயர்க் குந்து"

(புறநா. 395 : 9 – 11)

என்ற அடிகள் விளக்கும்.

110 பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், ப. 21.

## 15.2. கம்புட் கோழி:

கம்புள் என்பதற்கு ஐங்குறுநூற்றின் பழைய உரையிலும்,[111] நிகண்டுகளிலும்[112] சம்பங்கோழி என்ற பெயர் சுட்டப்பட்டுள்ளது. சம்பங்கோழி என்ற பெயர் இன்னும் இப்பறவைக்கு வழங்குகின்றது. இதனைக் கானாங்கோழி என்றும் நாட்டு மக்கள் அழைப்பர். "சம்பங்கோழி என்ற பெயர் கம்புள் கோழி என்ற பெயரிலிருந்து மாறி வந்ததாகக் கருதலாம். சண்புக்குள் காணப்பட்ட கோழி சம்பங்கோழி என்று நாட்டு மக்கள் வாயில் மாறிற்று. சண்பில் இருந்த கோழியும் சண்பங்கோழி, சம்பங்கோழி எனப்பட்டது. ஆதலின் கண்பு + புள் என்பதே கம்புள் ஆயிற்று"[113] என்பர்.

## 15.3. சணப்பங்கோழி:

சம்பங்கோழியை, "வெண்ணுதல் கம்புள்"[114] என்று ஐங்குறுநூறு குறிப்பிடுகின்றது. இதற்கு வெண்மையான தலையும் மார்பும் தெளிவாகத் தெரிவதால் வெண்ணுதல் கம்புள் என்று கூறப்பட்டது. கம்புளின் மேற்புறம் கரிய நரைத்த நிறமாக இருக்கும். கம்புள் பழனத்துள்ளும், கழனியுள்ளும், பொய்கையிலும், நீர்த்துறைகளிலும் காணப்படும்.[115]

---

[111] ஆசிரியர் குழு, ஐங்குறுநூற்றின் பழைய உரை, ப. 85.

[112] ஆசிரியர் குழு, ஆசிரிய நிகண்டு, ப. 368

[113] பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், ப. 133.

[114] ஐங். 85 : 1

[115] ஐங். 60 : 1 – 2

நீர் நிறைந்த காலத்தில் இவை வயல்களில் வாழும். நெற்கதிர்களையும் தின்னும். கம்புள் வாச்சியக்காரனைப்போல் ஒலித்துக் கொண்டிருக்கும்.[116] அதனால் இதன் குரலை, 'அரிக்குரல்'[117] என்றனர். ஒரே ஓசையை அடிக்கடி தொடர்ந்து வெளியிடுவதால் அரிக்குரல் எனப்பட்டது.

முட்டையிடும் காலத்தில் தனது பெடையை ஓயாது குரலிட்டு அழைத்துக் கொண்டிருக்கும். இதனை, "பயிர்ப்பெடையகவும்'[118] என்று ஐங்குறுநூறு குறிப்பிடுகின்றது. நீர்த்துறையில் கம்புள் முட்டையிடும் 'தண்ணடை'[119] என்று புறநானூறு குறிப்பிடும்.

பசுமையான இலைகளையும், கொடிகளையும் சேர்த்துக் கூடுகட்டி முட்டையிடும். இதனை வள்ளைக் கொடியில் உலாவிய கம்புள் சேவல்[120] என்பதால் உணரமுடியும். கம்புள் இணையாகக் காணப்படுவதால் சேவல் பற்றிய குறிப்பு இடம்பெற்றுள்ளது.

## 15.4. நீலக்கோழி:

நீலநிறமான நீர்க்கோழி போன்ற ஒரு பறவை நீலக்கோழியாகும். இதன் உடல் நீலநிறமாகவும் நீண்ட கால்கள் சிவந்த நிறமாகவும் இருக்கும். நீண்ட விரல்கள் காணப்படும். இதன் கால்களின் நகத்தைக் கூருகிர் என்றழைப்பர். நீர்க்கோழிபோல நீலக்கோழியும் அடிக்கடி

---

116 அகநா. 356 : 3 – 4

117 ஐங். 85 : 1 – 2

118 ஐங். 60 : 1

119 புறநா. 297 : 8

120 மதுரைக். 253 – 255

ஓசையிட்டுக் கொண்டிருக்கும். நீலச்சேவல் சூலுற்ற தன் பேடையை விரும்பி அழைக்கும். இதற்குச் சிவந்த கண்களிருக்கும். இதனை,

"நீருறை கோழி நீலச்சேவல்
கூருகிர்ப் பேடை வாயாஅ மூர" (ஐங். 51 : 1 – 2)

"புலவுக்கய லெடுத்த பொன்வாய் மணிச்சிரல்
வள்ளுகிர் கிழித்த வடுவாழ் பாசடை
முள்ளரைத் தாமரை முகிழ்விரி நாட்போது
கொங்குகவர் நீலச் செங்கட் சேவன்
மதிசே ரரவின் மானத்தோன்று
மருதஞ் சான்ற மருதத் தண்பனை" (சிறுபாண். 181 – 186)

என்ற பாடலடிகள் புலப்படுத்தும்.

## 15.5. சிறுவெண் காக்கை:

இது கடல் நீர்ப்பரப்பில் மிதந்து கொண்டு நீண்டநேரம் தங்கும். வானத்தில் எழும் மீன்களைப்போலக் கடல் பரப்பில் கடல்நீர் முதுகில் தோயச் சிறுவெண்காக்கைகள் ஆடும். இதனை,

"சிறுவெண் காக்கை பலவுடன் ஆடுந்
துறைபுலம்பு உடைத்தே தோழி பண்டும்"

என்ற பாடலடிகள் விளக்கும்.

சிறுவெண் காக்கையைக், "கடற்காக்கை'[121] என்று நற்றிணை குறிப்பிடும். இதற்குச் சிவந்த வாயலகு உண்டு.[122]

சிறிது வெண்மையுடைய காக்கையென்ற பொருளில் சிறுவெண் காக்கையென்று அழைக்கப்பட்டது. பனிக்காலத்திலும்[123] பனிவிழும் கழிகளிலும்[124] துழாவி உணவு தேடும்.

சிறுவெண் காக்கை பற்றிய பத்துப்பாடல்கள் ஐங்குறுநூற்றில் காணப்படுகின்றன.[125] இதனால் இப்பறவை சங்க காலத்தில் மிகுதியாக வாழ்ந்தமை புலனாகும்.

இவை கடற்கரை மரங்களான புன்னையிலும் ஞாழலிலும், கடற்கரைப் பொதும்பிலும் தங்கும் இயல்புடையன.

கடற்காக்கை நீந்தி இரைதேடுவதுண்டு. சில சமயம் பறக்கும்பொழுது கடற்பரப்பில் எறிந்து இரையைப் பற்றுவதுண்டு. இதனை,

"பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
துறைபடி யம்பி யகமனை யீனும்" (ஐங். 168 : 1 – 2)

என்ற அடிகள் புலப்படுத்தும்.

---

121 நற். 272 : 1

122 குறுந். 334 : 1

123 குறுந். 334 : 3

124 குறுந். 246 : 3

125 பொ.வே. சோமசுந்தரனார், ஐங்குறுநூறு, ப. 209

**15.6. சிரல்:**

சிரல் என்பது மீன்கொத்திப் பறவையாகும். நீலமும் பச்சையும் கலந்த நிறமுடைய மீன்கொத்தியை, 'மணிச்சிரல்'[126] என்று பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுகின்றது.

காற்று வலிமையுடன் அடித்தலால், நறிய பல நிறப் பூக்கள் மணலில் வரித்திருப்பது மீன் கொத்தியின் சிறகுகள்போல இருப்பதை,

"வளைசினை யுதிர்த்தலின் வெறிகொள்பு தாஅய்ச்
சிரற்சிற கேய்ப்ப வறற்கண் வரித்த
வண்டு ணறுவீ துமித்த நேமி" (அகநா. 324 : 9 – 11)

என்ற பாடல் விளக்கும்.

மீன் கொத்தியின் வாய் சிவந்து காணப்படுதலை, 'பொன்வாய் மணிச்சிரல்'[127] என்பது சுட்டும். தளவின் அரும்பு நீண்டு சிவந்து கூர்மையாக இருக்கும். அதனைப் போன்று சிரலின் வாய் இருந்ததை,

"படுமழை பொழிந்த பாறை மருங்கில்
சிரல்வா யுற்ற தளவிற் பரலவற்" (நற். 61 : 7 – 8)

"பணிவளர் தளவின் சிரல்வாய்ச் செம்முகை
ஆடு சிறைவண் டழிப்ப" (ஐங். 447 : 2 – 3)

என்ற பாடலடிகள் புலப்படுத்தும்.

---

[126] பெரும்பாண். 314

[127] சிறுபாண். 181

திருக்கள்ளியின் நுனியில் காணப்படும் முள்ளோடு கூடிய சதைப் பற்றான உருண்டையான முறுக்கின் தண்டு மீன்கொத்தியின் தலையைப் போன்று இருப்பதை,

"பரல்தலை போகிய சிரல்தலைக் கள்ளி

மீமிசைக் கலித்த வீநறு முல்லை" (நற். 169 : 4 – 5)

என்ற அடிகள் சுட்டும்.

சிரல்பறவை மீன்களைக் கொத்திச் சென்று உண்பதைப் பல பாடல்கள் புலப்படுத்துகின்றன. காஞ்சி மரத்தின் கொம்பில் ஏறி நிலை காணமுடியாத ஆழமான குட்டத்தை நோக்கி நெடிய நேரம் காத்திருந்து கயல்மீனை எடுத்துச் சென்ற பொன்வாயையுடைய மணிபோன்ற சிரல் கிழித்து வடுவாக்கிய பசிய இலையைப் பற்றிச் சிறுபாணாற்றுப்படை குறிப்பிடுகின்றது.[128]

கயத்தில் மூழ்கிச் சிரல் எழுகின்றபொழுது அதன் அலகு வெட்டுப் புண்களைத் தைக்கும் காலத்தில் இரத்தம் தோய்ந்த ஊசியைப் போன்றிருப்பதை,

"மீன்நேர் கொட்பிற் பனிக்கய மூழ்கிச்

சிரல் பெயர்ந் தன்ன நெடுவெள் ளூசி

நெடுவசி பரந்த வடுவாழ் மார்பின்" (பதிற். 5 : 2 – 4)

என்ற பாடல் உணர்த்தும்.

[128] சிறுபாண். 179 – 182

மரக்கிளையில் நெடிதிருந்து பார்த்து எறிந்து மீன் பிடித்தல் சிரலின் வழக்கமாகும். இறாலை வயிறு நிறைய அருந்திய சிறுசிரல் மருத மரத்தின் தாழ்ந்த கொம்பில் உறங்குவதை,

"ஊர்க்குறு மகளிர் குறுவழி விறந்த
வராஅல் அருந்திய சிறுசிரல் மருதின்
தாழ்சினை யிறங்குந் தண்டுறை யூரன்"

(அகநா. 286 : 5 – 7)

என்ற பாடல் விளக்கும்.

பறக்க முடியாத முதிய மீன்கொத்தி மரக்கிளையிலிருந்து மீனைப் பிடிக்கமுடியாததால் நீரிலிருந்த தாமரை இலையில் மெதுவாக நகர்ந்து சென்று மீனைப் பிடிப்பதை அகநானூறு எடுத்துரைக்கும்.[129] இதன்வழி மீன்கொத்திப் பறவையின் தோற்றத்தையும் உணவுண்ணும் முறையையும் அறிய இயலும். இவ்வகையில் நீரருகில் வாழும் பறவைகள் தன் உணவுத் தேவையை நிறைவு செய்து கொள்கின்றன.

**16. புறா:**

சங்கப் பாடல்களில் நான்குவகைப் புறாக்கள் பற்றிய செய்திகள் குறிப்பிடப்பட்டுள்ளன. அவை மாடப்புறா, மணிப்புறா, தவிட்டுப்புறா, சாம்பல்புறா என்பனவாகும்.[130]

---

[129] அகநா. 106 : 1 – 8

[130] பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், ப. 158

### 16.1. மாடப்புறா:

மாடப்புறாவினை வீட்டில் வளர்த்தனர். மாடப்புறாவின் பொதுமையான நிறம் கருநீலமாகும். நீலநிறத்தைக் கருமை என்றழைப்பது சங்கநூல் வழக்கு. அதனால் கருமையான புறா என்ற பொருளில் 'இரும்புறா'[131] என்று அகநானூறு குறிப்பிடுகின்றது.

கொல்லன் இரும்பை அடித்த ஓசைக்குப் பயந்து புறா இனிய துயிலை நீங்கியதை,

"கருங்கைக் கொல்லன் இரும்புவிசைத் தெறிந்த
கூடத் திண்ணிசை வெரீஇ மாடத்து
இறையுறை புறவின் செங்காற் சேவல்
இன்றுயில் இரியும் பொன்துஞ்சு வியனகர்"

(பெரும்பாண். 437 – 440)

என்ற அடிகள் விளக்கும். மேலும், 'மனையுறை புறவின்'[132] என்று நற்றிணையும், நெடுநல்வாடையும் குறிப்பிடுகின்றன. இதன்வழி வீட்டில் புறாக்கள் வளர்க்கப்பட்டமை புலனாகும்.

சங்க காலத்தில் செங்கல்லால் கட்டிய கோயில்களில் இப்புறாக்கள் வாழ்ந்ததை அகநானூறு சுட்டுகின்றது.[133] ஆதலால் இதனைக் கோயில்புறா என்று அழைத்தனர்.[134] இன்றும் அனைத்து மதத்தினர் கோயில்களிலும் மாடப்புறா வளர்க்கப்படுவது இவ்விடத்தில் சுட்டத்தக்கது.

---

131 அகநா. 307 : 14

132 நற். 162 : 1, நெடுநல். 45

133 அகநா. 307 : 11 – 15, 287 : 6 – 9

134 பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், ப. 159

மாடப்புறாவின் குரலை முரல்குரல் என்றும், துணையை அழைப்பதற்குப் பயிரும் என்றும் நற்றிணை கூறுகின்றது.[135] வீட்டுப்புறா மன்றில் இரைதேடி உண்பதை நெடுநல்வாடை குறிப்பிடும்.[136]

## 16.2. மணிப்புறா:

இதன் கழுத்தின்மேல் கறுப்பும் வெள்ளையுமாகப் புள்ளிகள் காணப்படுவதால் மணிப்புறா என்றழைத்தனர். உடலில் வெள்ளைப் புள்ளிகள் உள்ளதால் புள்ளிப்புறா என்றும் அழைப்பர்.[137] மணிப்புறா நீர்நிலைகளில் உள்ள செழிப்பான இடங்களில் காணப்படும்.

பாழடைந்த ஊரில் செங்கல்லால் கட்டிய மாடத்தின் விட்டம் வீழ்ந்து விட்டதால் மணிப்புறா மாடத்தை விட்டுச் சென்றதை,

"ஊரெழுந்து உலறிய பீரெழு முதுபாழ்
முருங்கை மேய்ந்த பெருங்கை யானை
வெரிந் ஓங்கு சிறுபுறம் உரிஞ ஒல்கி
இட்டிகை நெடுஞ்சுவர் விட்டம் வீழ்ந்தென
மணிப்புறாத் துறந்த மரஞ்சோர் மாடம்"

(அகநா. 167 : 10 – 14)

என்ற பாடல் விளக்கும்.

---

[135] மேலது, ப. 160.

[136] நெடுநல். 45 – 48

[137] பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், ப. 159

### 16.3. தவிட்டுப்புறா:

மழையற்ற கள்ளிக் காடுகளிலும் மிகவும் வறட்சியான பாலை போன்ற நிலங்களிலும் தவிட்டுப் புறா காணப்படும்.

தவிட்டுப் புறாவிற்குக் கழுத்தின் இரு புறத்திலும் கருமையும் செம்மையும் கலந்த பொறிகளும் புள்ளிகளும் வளையம் போன்று இருக்கும்.[138] இப்புறாக்கள் பெரும்பான்மை கள்ளிச் செடியில் காணப்படும். பொரிந்த காலையுடைய கள்ளியின் கவட்டிலிருந்து கூவினதைக் குறுந்தொகை குறிப்பிடும்.[139]

களர் நிலத்தில் ஓங்கி வளர்ந்த கவை முள்ளுடைய கள்ளியில் சுள்ளிகள் கொண்டு கட்டிய கூட்டில் முட்டையிட்டு இளைத்துப்போன பெட்டைப் புறாவிற்கு, மன்னர்கள் அழித்துப் பாழான இடத்தில் கிடைத்த உகுந்த நெல்லைக் கொண்டுவந்த ஊட்டும் சேவலைப் பற்றி நற்றிணை விளக்கும்.[140]

தவிட்டுப் புறாக்கள், வரிமரல் வாடும் குறும்பொறை நிறைந்த சுரம், பாம்பின் உரிந்த தோல்போலச் சூடான ஆவி அலை பறக்கும் நிலம்,[141] மழை மறந்த இடம்,[142] வெயில்காயும் நீளிடை,[143] வெந்துகள் இயவு,[144]

---

[138] குறுந் 154 : 5

[139] குறுந். 154 : 1 – 5

[140] நற். 384 : 1 – 6

[141] அகநா. 57 : 6 – 10

[142] குறுந். 174 : 1 – 4

[143] நற். 314 : 9 – 12

[144] நற். 66 : 1 – 5

கள்ளிக்களரி[145] போன்ற இடங்களில் வாழ்வதைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன.

உகாய் மரத்தின் மிளகு பெய்தது போன்ற காரமான சுவையுடைய காயைக் கொத்தி உண்டதை நற்றிணை கூறும்.[146]

### 16.4. சாம்பல் புறா:

கள்ளிக்காட்டிலும் வேலமரக் காட்டிலும் கண்ட புறாக்களை 'கானப்புறா'[147] என்பர். "சாம்பல் புறாவும் தவிட்டுப்புறாவும் வேல மரச் சூழலில் காணப்படும்.[148]

வேல மரத்தில் சிலம்பி வலைந்த வலையைக் கண்டு வேடன் போட்ட வலையென்று மயங்கிச் சாம்பல் புறாக் கூட்டம் உட்காரப் பயந்ததை,

"பொறித்த போலும் புள்ளி யெருத்திற்
புன்புறப் புறவின் கணநிரை யலற
வலந்தலை வேலத் துலவை யஞ்சினைச்
சிலம்பு கோலிய வலங்கற் போர்வையில்" (பதிற். 4 : 32 – 35)

என்ற பாடலடிகள் புலப்படுத்தும். இதனை நற்றிணையும் எடுத்துரைக்கும்.[149] இதன்வழி நான்கு வகைப்புறாக்களின் வாழ்க்கை முறையை

---

[145] நற். 384 : 1 – 6

[146] நற். 66 : 1 – 6

[147] நற். 189 : 2

[148] பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், ப. 166

[149] நற். 189 : 7 – 10

அறிந்துகொள்ள இயலும். சங்க கால மக்கள் இறைச்சியின் பொருட்டும், பொழுதுபோக்கின் பொருட்டும் இல்லத்தில் புறாக்களை வளர்த்து வந்தனர்.

**17. மயில்:**

காட்டு மயில், வீட்டு மயில், பழனமயில் ஆகிய மூன்று வகை மயில்கள் சங்க இலக்கியங்களில் சுட்டப்படுகின்றன.

பழன மஞ்ஞை ஊர்களினருகில் மக்களுடன் பழகிய மயிலென்று கருத இடமுண்டு. பழனமஞ்ஞை தானாக உதிர்ந்த தோகைகளைக் கழனியில் வாழ்ந்த உழவர் நெல் கதிரொடு தொகுத்ததை,

"பழன மஞ்ஞை யுகுத்த பீலி

கழனி யுழவர் சூட்டொடு தொகுக்கும்" (புறநா. 13 : 10 – 11)

என்ற அடிகள் புலப்படுத்தும்.

சங்க காலத்தில் மயில்களை வீட்டில் வளர்த்து வந்தனர். இதனை,

"இல்வழங்கு மடமயில் பிணிக்குஞ்

சொல்வலை வேட்டுவ னாயினன் முன்னே" (புறநா.252 : 4 – 5)

என்ற பாடலடிகள் தெளிவாக்கும்.

கான மஞ்ஞை எனப்பட்ட காட்டுமயில் காடுகளில் வாழ்வன. மூங்கிற் காடுகளிலும் வேங்கை மரச் சூழலிலும் தங்கின.[150] காட்டு மயில்கள் இனமாகவும், கணமாகவும் வாழுமென்பதை,

"இனமயில் அகவும் கார்கொள் வியன்புனத்து" (அகநா. 334 : 13)

"மயிலினம் பயிலும் மரம்பயில் கானம்" (அகநா. 344 : 6)

என்ற அடிகள் புலப்படுத்தும்.

---

[150] குறுந். 249 : 1 – 3

மயிலின் காலில் உள்ள ஐந்து விரல்கள் நொச்சியின் ஐந்து பிரிவுடைய இலை போலிருப்பதை,

"மயிலடி அன்ன மாக்குரல் நொச்சியும்" (நற். 305 : 2)

"மயிலடி யிலைய மாக்குர னொச்சி" (நற். 115 : 5)

என்ற அடிகள் சுட்டும்.

காயாம்பூவின் பூ நீல நிறமாக இருக்கும். மயிலின் கழுத்தும் ஒளிவிடும் நீல நிறமாக இருக்கும். காயாவின் பூக்களுடன் கூடிய கொம்பை மயிலின் கழுத்திற்கு ஒப்பிட்டதை,

"புல்லென் காயாப் பூக்கெழு பெருஞ்சினை
மென்மயி லெருத்திற் றோன்றும்" (குறுந். 183 : 5 – 6)

"விரவுப் பொறி மஞ்ஞை வெரீஇ யரவின்
அணங்குடை யருந்தலை பைவிரிப் பவைபோற்
காயா மென்சினை தோயநீடிப்
ப..றுடுப் பெடுத்த விலங்குகுலைக் காந்தள்"

(அகநா. 108 : 12 – 15)

"கருநனைக் காயாக் கணமயி லவிழ" (சிறுபாண். 165)

"மணிபுரை எருத்தின் மஞ்ஞை போலநின்" (நற். 264 : 4)

என்ற பாடலடிகள் விளக்கும்.

மயிலின் தலையில் இருக்கும் குடுமி வாகை மரத்தின் கோலுடைய பூவிற்கு ஒப்பிடப்படுகின்றது. மயிலின் தலையிலும் கோல்கள் உண்டு. அதனைப் போன்ற வாகைப் பூ கோலுடையதாக இருக்கின்றது. கோலின் நுனியில் குஞ்சம்போல் வாகைப் பூவிற்கும் மயிலிற்கும் இருப்பதை,

"குமரி வாகைக் கோலுடை நறுவீ

மடமாத் தோகைக் குடுமியிற் றோன்றும்

கான நீளிடைத் தானு நம்மொடு" (குறுந். 347 : 2 – 4)

என்ற பாடல் உணர்த்தும். இதனை, 'மணிப்பொறி குடுமி'[151] என்று நற்றிணை விளக்கும். மயிலின் வாலான தோகையைப் 'பீலி'[152] என்றழைப்பர்.

மயில் தோகை விரித்தாடும். பின் தோகையைச் சுருக்கி நடந்து வரும். இதனை,

"கலிமயிற் கலாவங் கால்குவித் தன்ன

ஒலிமென் கூந்தல் கமழ்புகை கொளீஇத்" (புறநா. 146 : 8 – 9)

என்ற அடிகள் உணர்த்தும். மயில் ஒலி நெடும்பீலியைப் பின்னால் தூக்கி வருவதை,

"ஒலிநெடும் பீலி துயல்வர இயலி

ஆடுமயி லகவும்நாட னம்மொடு" (குறுந். 264 : 2 – 3)

என்று குறுந்தொகை குறிப்பிடும். மயில்கள் பாறையில் வெயில்காயும் குணமுடையன. இதனை,

"வேங்கை தந்த வெற்புஅணி நன்னாள்

பொன்னின் அன்ன பூஞ்சினை துழைஇக்

கமழ்தாது ஆடிய கவின்பெறு தோகை

பாசறை மீமிசைக் கணங்கொள்பு ஞாயிற்று

---

[151] நற். 357 : 5

[152] நற். 262 : 1 – 2, குறுந். 110 : 3 – 4

உறுகதிர் இளவெயில் உண்ணும் நாடன்" (நற். 396 : 3 – 7)

"அருவி யார்க்கும் அணங்குடை நெடுங்கோட்டு
ஞாங்கர் இளவெயில் உணீஇய ஓங்குசினைப்
பீலி மஞ்ஞை பெடையோ டாடுங்" (நற். 288 : 1 – 3)

என்ற பாடலடிகள் சுட்டும்.

மழையில் நனைந்த மயில் பின் தன் தோகையை உலர்த்தியதை,

"சோணுறத் தோன்றுங் குன்றத்துக் கவாஅன்
பெயலுழந்து உலறிய மணிப்பொறிக் குடுமிப்
பீலி மஞ்ஞை ஆலுஞ் சோலை" (நற். 357 : 4 – 6)

என்ற பாடல் விளக்கும்.

வானம் இடிஇடிக்கும்பொழுது அதன்எதிர் மஞ்ஞை ஏங்கிக் குரலிட்டதாகவும், இடியின் அதிர்குரல் கேட்டு மயில் கூட்டமாகக் கூவினதாகவும் குறுந்தொகையும்,[153] நற்றிணையும்[154] விளக்கும். மயில் கார்காலத்தில் அகவுவதை அகநானூறு சுட்டும்.[155]

கானமஞ்ஞை கட்சியில் சென்று தங்கும்.[156] "கட்சி என்ற சங்க கால சொல்வழக்கு விலங்குகள், பறவைகள் ஆகியவற்றின் உரிமையிடத்தைக் குறிக்கின்றது.[157]

---

[153] குறுந். 194 : 3 – 4

[154] நற். 248 : 7 – 8

[155] அகநா. 392 : 16 – 18

[156] நற். 226 : 1 – 5

[157] பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், ப. 196.

மயில்கள் ஒழுங்காகக் கூடுகட்டுவதில்லை. சில சமயங்களில் தரையைக் கிளறி முட்டையிடும். இதன் அடிப்படையில் பாறையில் முட்டையிட்டதாகக் குறுந்தொகை குறிப்பிடும் செய்தி இவ்விடத்தில் சுட்டத்தக்கது.[158]

மயிலின் பார்வை ஊடுருவிச்செல்லுதல்போல் இருப்பதால், 'போல்கண்'[159] என்றனர். வயல்களில் விளையும் நெல், தினை முதலியவற்றை உண்டு அழிவு செய்யும்.[160]

சங்க காலத்தில் மயிலின் பீலியைச் சமயச் சடங்குகளுக்குப் பயன்படுத்தினர். வேலிலும், வில்லிலும், முரசிலும் செருகி வைத்தல் பண்டை வழக்கம். இதனை,

"நெய்தல் உருவின் ஐதிலங் ககலிலைத்
தொடையமை பீலிப் பொலிந்த கடிகை
மடையமை திண்கரை மாக்காழ் வேலொடு"

(அகநா. 119 : 11 – 13)

என்ற பாடல் விளக்கும்.

பீலியை இரண்டாக வகிர்ந்து முருகனின் செருப்புக்கு வாராக அமைத்ததைப் பரிபாடல் சுட்டும்.[161]

---

[158] குறுந். 38 : 1 – 3

[159] குறுந். 391 : 7

[160] புறநா. 344 : 1 – 3, அகநா. 105 : 1 – 5

[161] பரி. 21 : 7

மேற்சுட்டிய கருத்துக்கள் மயிலின் தோற்றத்தையும், வாழும் சூழ்நிலையையும், உணவுமுறைகளையும் நன்குணர்த்தும். மயிலை அழகின் பொருட்டு இல்லத்தில் வளர்த்து வந்தனர்.

**18. மலையுறைக் குருவி:**

மலையில் கூட்டமாக வாழும் குருவியினத்தை மலையுறைக் குருவி என்று அழைப்பர்.

"குன்றத் திறுத்த குரீஇயினம் போல
அம்புசென் றிறுத்த வரும்புண் யானை" (புறநா. 19 : 8 – 9)

என்ற புறநானூற்று அடிகளில் மலையுறைக் குருவி கூறப்பட்டுள்ளது. குன்றத்தே சேர்ந்த குரீஇயினம் யானைமேல் தைத்திருந்த அம்புகள் போலக் காணப்பட்டதாகப் புறநானூறு குறிப்பிடுவது இங்கு சுட்டத்தக்கது.

மலையில் வாழும் பிற குருவிகளைப் பற்றியும் சங்கப் பாடல்கள் குறிப்பிடுகின்றன.

"..........................................மாமலைப்
பரீஇ வித்திய வேனற்
குரீஇ யோப்புவாள் பெருமழைக் கண்ணே" (குறுந். 72 : 3 – 5)

"உளைக்குரற் சிறுதினை கவர்தலிற் கிளையமல்
பெருவரை யடுக்கத்துக் குரீஇ ஓப்பி" (அகநா. 388 : 4 – 5)

"உரைசால் வண்புகழ்ப் பாரி பறம்பில்
நிரைபறைக் குரீஇயினங் காலைப் போகி
முடங்குபுறச் செந்நெற் றரீயர் ஓராங்கு

இரைதேர் கொட்பின வாகிப் பொழுதுபடப்

படர்கொண் மாலைப் படர்தந் தாங்கு"(அகநா. 303 : 10 – 14)

"அருவி யார்ப்பமுத் தணிந்தன வரை

குருவி யார்ப்பக் குரல்குவிந்தன தினை" (பரி. 18 : 46 – 47)

என்ற பாடல்களில் குறிப்பிடப்படும் குருவியினம் இன்னதென உணரமுடியவில்லை. இவையும் மலையில் ஒருவகைக் குருவியினமாக இருக்க வாய்ப்புண்டு.

**19. மனையுறைக் குருவி:**

மனையுறைக் குருவி தற்காலத்தில் ஊர்க்குருவி அடைக்கலாங் குருவி என்றழைக்கப்படும். பறவைகளில் இது மிகவும் சிறியது. இக்குருவி வீடுகளின் இறப்புகளிலும் இடுக்குகளிலும் வாய்ப்பான இடங்களிலெல்லாம் கூடு கட்டும்.

ஊர்க்குருவி காய்ந்த ஆம்பல் பூவின் சாம்பல் நிறத்தையொத்த இறக்கைகளைக் கொண்டிருத்தலை,

"ஆம்பற் பூவின் சாம்ப லன்ன

கூம்பிய சிறகர் மனையுறைக் குரீஇ

முன்றி லுணங்கன் மாந்தி மன்றத்

தெருவினுண் டாது குடைவன வாடி

இல்லிறைப் பள்ளித்தம் பிள்ளையொடு வதியும்"

(குறுந். 46 : 1 – 5)

என்ற பாடல் விளக்கும். ஊர்க்குருவியின் சேவலுக்குத் தாடையிருப்பதைக் ‘காரணல்’[162] என்று குறிப்பிடுவர்.

இக்குருவியினத்தில் ஆணும் பெண்ணும் பொதுவாகச் சாம்பல் நிறமாக உள்ளன. ஊர்க்குருவியின் முட்டை புன்னையின் பெரிய பூ மொட்டுப் போன்று இருப்பதாகவும், புன்னை மொட்டு விரிந்தால் எப்படியிருக்குமோ அதனைப்போன்று ஊர்க்குருவி முட்டை உடைந்து காணப்பட்டதாகவும் கூறுவர்.[163]

ஊர்க்குருவியின் குஞ்சுகளை நெறிகிளர்ந்த ஈங்கைப் பூவின் தோற்றத்திற்கு ஒப்பிட்டனர்.[164]

ஊர்க்குருவி வீடுகளில் கழிவாகப் போடப்பட்ட உணவுப் பொருள்கள், நெல், புல்லரிசி முதலிய தானியங்களைக் கொத்தித் தின்று வாழும். வீட்டு முற்றத்தில் காயப்போட்டிருந்த உணங்கலைத் தின்றதாகவும் தெருவினில் குப்பையைக் குடைந்ததாகவும் குறுந்தொகை குறிப்பிடும்.[165]

இணைசேரும் காலத்தில் சேவல்குருவி மதர்த்த நடைபோட்டு இறகுகளை விரித்து உலர்த்திப் பேடையைக் களிப்பிக்கும். இது ‘துள்ளுநடைச் சேவல்’[166] என்பதால் புலனாகும்.

---

[162] நற். 181 : 1

[163] நற். 231 : 6 – 7

[164] நற். 181 : 1 – 9

[165] குறுந். 78 : 1 – 5

[166] குறுந். 46 : 1 – 5

**20. முதுகுறைக் குருவி (தூக்கணாங் குருவி):**

சங்க காலத்தில் மிகுந்த அறிவுடைய குருவியாகக் கருதப்பட்ட தூக்கணாங் குருவிக்கு, 'முதுக்குறை குரீஇ'[167] என்று பெயரிட்டழைத்தனர். தூக்கணாங் குருவியின் கூடு நடுவே பானை போல உருண்டிருந்தாலும் ஒரு பக்கமாக ஒருக்கணித்து இருக்கும். இதனை, 'ஒரு சிறைக் கொளீஇய'[168] என்ற தொடர் விளக்கும். நடுப்பாகம் வலம்புரிச் சங்கு போன்றும் அத்தோடு குழாய் போன்று அமைந்த வாய்ப்புறமும் சேர்ந்து உள்ளது.

தூக்கணாங் குருவியின் கூடு ஓலை, இலை நார்களால் பின்னப்பட்டது. இக்கூட்டில் நாரிழை எங்கு தொடங்கி எங்கு முடிகின்றது என்பதைக் கண்டுபிடிப்பது முடியாத செயல். தலைவனுக்கும் தலைவிக்கும் உள்ள தொடர்பையும் அன்பையும் உணராத ஊரார் மயங்கிப் பலவாறு அவர் கூறும் மயக்கத்தினை, குருவியின் கூட்டில் நாரிழைகள் பின்னியிருந்த மயக்கம் போலிருந்ததாகக் குறுந்தொகை உவமித்துக் காட்டும்.[169]

தூக்கணாங் குருவி முயன்று செய்த குடம்பை மனிதர்கூடக் கையினால் செய்யமுடியாது. ஆதலின் முதுக்குறைக்குரீஇ என்றழைத்து இதன் அறிவைப் போற்றியுள்ளனர்.

---

[167] நற். 366 : 9

[168] புறநா. 225 : 12

[169] குறுந் 374 : 5 – 7

இது மூங்கில் கழையில் கூடுகட்டுவதாகக் கூறப்பட்டுள்ளது[170] தூக்கணாங் குருவிக்கூடு தொங்கிக் கொண்டிருப்பதைத், 'தூங்கி ஒற்றும்'[171] என்று அழைப்பர். "தூங்கிக் கிடக்கும் கூட்டைக் கட்டும் குருவியைத் தூக்கணாங் குருவி என்று அழைத்தனர்."[172] இதன்வழி தூக்கணாங் குருவியின் வாழ்க்கை நிலை புலப்படும்.

**21. வானம்பாடி:**

வானத்தில் வட்டமிட்டுப் பாடும் பறவையை வானம்பாடி என்றழைப்பர். வானம்பாடி மழைக்காக ஏங்கிப்பாடும். அதனால் மழை பொழியுமென்பதை,

"வானம் பாடி வறங்களைத் தானா

தழிதுளி தலைஇய புறவிற் காண்வர" (ஐங். 418 : 1 – 2)

என்ற பாடலடிகள் விளக்கும்.

வானம்பாடி பாடியும் மேகம் அருளாது மழைபெய்யவில்லை. இதனை,

"யானெவன் செய்கோ தோழி பொறிவரி

வானம் வாழ்த்தி பாடவும் அருளாது

உறைதுறந் தெழிலி நீங்கலிற் பறையுடன்

மரம்புல் லென்ற முரம்புயர் நனந்தலை"

(அகநா. 67 : 1 – 4)

---

170 நற். 366 : 7 – 12

171 நற். 366 : 10

172 பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், ப. 260

என்ற பாடலடிகள் புலப்படுத்தும். வானம்பாடியை 'துளிநசைப்புள்'[173] என்று புறநானூறு குறிப்பிடும்.

வறட்சி மிக்க காலத்தில் மழைத்துளிக்கு அலையும் புள் என்று கலித்தொகை சுட்டும்.[174]

பாடும் பறவைகளில் வானம்பாடி மிகவும் புகழ்பெற்றதாகும். இது நிலத்தில் வாழும் பறவையாகும். சில காலங்களில் வானம்பாடி நிலத்திலிருந்து செங்குத்தாக மேலே எழும்பி உயரச் சென்று வானில் ஒரு புள்ளிபோலத் தோன்றிப் பறந்து கொண்டே இனிய பாட்டைப் பொழிகின்றது. "பொதுவாக நிலத்தில் வாழும் இந்தப்பறவை சில காலங்களில் வானிற்குச் சென்று உயரத்தில் பாடுவதால் இதை வானத்தைப் பாடும் பறவை என்றழைத்தனர்."[175] 'வானம் வாழ்த்தி',[176] 'மிசைபாடும்புள்'[177] எனவும் சுட்டப்படுகின்றது. வானத்தை வாழ்த்துதலால் 'தற்பாடிப்புள்'[178] எனவும் அழைப்பர்.

## 22. புலம்பெயர்புள்:

பறவைகள் குளிர்காலத்தில் நாட்டுக்கு நாடு இடம்பெயர்வது வழக்கம். குளிர்காலத்தில் வேறு நாட்டிற்குச் செல்லும் பறவைகள்

---

[173] புறநா. 198 : 25

[174] கலித். 46 : 20 – 21

[175] பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், ப. 253

[176] அகநா. 67 : 2

[177] கலித். 46 : 20

[178] பட்டினப். 3

வெயிற்காலத்தில் தம் நாட்டிற்குத் திரும்பி விடும். இவற்றை, 'புலம்பெயர் புள்' என்பர். "நீர்ப்பறவைகளில் சில விருந்தினராக வருவதாகச் சங்க நூல்கள் கூறியுள்ளன. அவற்றை 'வம்பப்புள்' என்றும் அழைத்துள்ளனர்."[179]

விருந்தின் வெண்குருகு மேற்குப்பக்கம் வாங்கிய புன்னையின் பெருங்கொம்பில் ஓசை செய்து கொண்டிருந்ததை,

"கருங்கோட்டுப் புன்னைக் குடக்குவாங்கு பெருஞ்சினை
விருந்தின் வெண்குருகு ஆர்ப்பின் ஆஅய்
வண்மகிழ் நாளவைப் பரிசில் பெற்ற
பண்ணமை நெடுந்தேர்ப் பாணியின் ஒலிக்கும்"

(நற். 167 : 1 – 4)

என்ற பாடலடிகள் விளக்கும். வம்பநாரை கடற்கரைப் புன்னையில் சேர்ந்திருந்ததாகக் குறுந்தொகை குறிப்பிடுகின்றது.[180]

பொறையாற்றின் கடற்கரை முற்றத்திலிருந்து புன்னைக் கானலில் வம்பநாரை இனமாக இருந்து ஒலித்ததாக அகநானூறு கூறியுள்ளது.[181] விருந்து என்ற சொல் புதுமை என்ற பொருளைக் குறிக்கும்.

பறவைகள் வெளிநாடு செல்வதைப் புலம்பெயர் புள் என்று அழைத்தனர். இதனை,

"அழாஅம் உறைதலும் உரியம் பராரை
அலங்கல் அஞ்சினைக் குடம்பை புல்லெனப்

---

[179] பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், ப. 360

[180] குறுந். 256 : 3 - 6

[181] அகநா. 100 : 12 – 15

புலம்பெயர் மருங்கில் புள்ளெழுந் தாங்கு
மெய்யிவ ணொழியப் போகி அவர்
செய்வினை மருங்கில் செலீஇயரென உயிரே”

(அகநா. 113 : 23 – 27)

என்ற பாடலடிகள் புலப்படுத்தும். புலம்பெயர்தல் என்பது பல்வேறு நாட்டுக்குச் செல்லுதல் என்று பொருள்படும்.

சங்க காலத்தில் புதுப்புள் வருவதனையும் பழம்புள் போவதனையும்,

“புதுப்புள் வரினும் பழம்புட் போகினும்
விதுப்புற வறியா வேமக் காப்பினை” (புறநா. 20 : 18 – 19)

என்ற புறப்பாடல் விளக்கும். புதுப்புள்ளாக வரும் பறவைகளின் புகலிடத்தை,

“நாடுவறம் கூர நாஞ்சில் துஞ்சக்
கோடை நீடிய பைதறு காலைக்
குன்றுகண் டன்ன கோட்ட யாவையும்
சென்றுசேக் கல்லாப் புள்ள உள்ளில்
என்றூழ் வியன்குளம் நிறைய வீசப்
பெரும்பெயல் பொழிந்த ஏம வைகறைப்
பல்லோர் உவந்த உவகை எல்லாம்
என்னுட் பெய்தந் தற்றே சேணிடை”

(அகநா. 43 : 5 – 12)

என்ற பாடலடிகள் புலப்படுத்தும்.

நாடுவிட்டு நாடு செல்லும் பறவைகளினால் ஒவ்வொரு நாட்டுச் சுற்றுலா மையமும் விரிவடைகின்றது. இப்புலம்பெயர் புள்ளினால் மக்கள் பொழுதுபோக்கி மகிழ்கின்றனர்.

**23. வீட்டுப் பறவைகள்:**

காட்டுக் கோழியிலிருந்த வீட்டுக் கோழியைப் பிரித்துணரவே மனைக்கோழி என்றனர். இது நெருப்பு எரிவது போன்ற நெருங்கிய கழுத்து மயிர் உடையது ஒன்பதை,

"வாரா வளவை யாயிழை கூர்வா
யழலகைந் தன்ன காமர் துதைமயிர்
மனையுறை கோழி மற்றுடைச் சேவற்
போர்புரி யெருத்தம் போலக் கஞலிய
பொங்கழன் முருக்கி னொண்குரல் மாந்திச்
சிதர்சிதர்ந் துகுத்த செவ்வி வேனில்"

(அகநா. 277 : 13 – 18)

என்ற பாடலடிகள் விளக்கும். போர்புரி எருத்தம் இருப்பதாகக் கூறப்பட்டிருப்பதால் இந்தச்சேவல் போர்ச் சேவலாக இருக்க இடமுண்டு.

கோழியின் தாடையின் கீழ் இலைபோன்று இருதோல்கள் சிவப்பு நிறத்தில் தொங்கும். இதனை, 'அணல் தாழ்பு'[182] என்பர். அணல் என்றால் தாடையைக் குறிக்கும். தாடையிலிருந்து தாழ்ந்து இருப்பதால் அணல்தாழ்பு என்றனர். பரணர் இதனைக் 'கொடிறு'[183] என்பர்.

---

[182] அகநா. 187 : 14

[183] அகநா. 367 : 10

கோழியைக் காட்டுப் பூனை பிடித்துத் தின்னும். பெட்டைக் கோழி வேலியில் பதுங்கி வந்த காட்டுப் பூனையைக் கண்டு தன் குஞ்சுகளைத் தொகுத்துக் கத்தியதை,

"மனையுறை கோழிக் குறுங்காற் பேடை
வேலி வெருகின் மாலை யுற்றெனப்
புகுமிட னறியாது தொகுபுடன் குழீஇய
பைதற் பிள்ளைக் கிளைபயிர்ந் தாஅங்"

(குறுந். 139 : 1 – 4)

என்ற பாடலடிகள் புலப்படுத்தும்.

கோழியின் நாகிளம் பேடை வேலியில் காட்டுப் பூனையைக் கண்டு உயிர் நடுங்கி அரற்றியதை,

"ஊர்முது வேலிப் பார்நடை வெருகின்
இருட்பகை வெரீஇய நாகிளம் பேடை
உயிர்நடுக் குற்றுப் புலாவிட் டரற்ற" (புறநா. 326 : 1 – 3)

என்பது விளக்கும்.

கோழியைப் போரிடப் பழக்கி வெற்றி விளையாட்டு நிகழ்த்துவர். குப்பைக் கோழியின் தனிப்போரைப் பற்றி,

"உய்த்தனர் விடாஅர் பிரித்திடை களையார்
குப்பைக்கோழித் தனிப்போர் போல
விளிவாங்கு விளியி னல்லது
களைவோ ரிலையா னுற்ற நோயே" (குறுந். 305 : 5 – 8)

என்பர் குப்பைக் கோழியார்.

பொதுவாக சங்ககால மக்கள் பறவையினங்களை இறைச்சியின் பொருட்டு வேட்டையாடியுள்ளனர். அதனை இல்லத்தில் அழகின் பொருட்டு வளர்த்து வந்துள்ளனர். சங்க கால மக்கள் வாழ்வில் இப்பறவையினங்கள் இரண்டறக் கலந்த நிலை காணப்படுகின்றது.

# துணைநூற்பட்டியல்

## முதன்மைச் சான்றாதாரங்கள்

### இலக்கியநூல்கள்

1. சாமிநாதையர்.உ.வே.(உரை.ஆ.) குறுந்தொகை மூலமும் உரையும், மூன்றாம் பதிப்பு, கபீர்அச்சுக் கூடம், சென்னை - 1955.

2. மேலது. பரிபாடல் மூலமும் பரிமேலழகருரையும், உ.வே.சா.நூல்நிலையம், பெசன்ட் நகர், சென்னை - 1995.

3. சாமிநாதையர்.உ.வே.(ப.ஆ.) கலித்தொகை நச்சினார்க்கினியர் உரை, கழகப் பதிப்பு, 154, டி.டி.கே.சாலை, சென்னை - 1998.

4. மேலது. புறநானூறு மூலமும் உரையும், ஏழாம்பதிப்பு, உ.வே.சா.நூல்நிலையம், சென்னை - 1974.

5. மேலது. பத்துப்பாட்டு மூலமும் நச்சினார்க்கினியர் உரையும், ஏழாம்பதிப்பு, உ.வே.சா.நூல்நிலையம், சென்னை - 1974.

6. சோமசுந்தரனார்.பொ.வே. (உரை.ஆ.) ஐங்குறுநூறு, மறுபதிப்பு, கழக வெளியீடு, சென்னை - 1966.

7. துரைசாமிப்பிள்ளை.ஔவை.சு. (உரை.ஆ.) புறநானூறு - 1-200 பாடல்கள், மறுபதிப்பு, கழக வெளியீடு, சென்னை - 1967.

8. மேலது. புறநானூறு 201-400 பாடல்கள், மறுபதிப்பு, கழக வெளியீடு, சென்னை - 1962.

9. மேலது. பதிற்றுப்பத்து மூலமும் விளக்கவுரையும், கழக வெளியீடு, சென்னை - 1968.

10. மேலது. நற்றிணை மூலமும் விளக்கவுரையும் - 1 முதல் 200 வரை, அருணா பப்ளிகேஷன்ஸ், சென்னை - 1966.

11. மேலது. நற்றிணை மூலமும் விளக்கவுரையும் - 201 முதல் 400 வரை, அருணா பப்ளிகேஷன்ஸ், சென்னை - 1968.

12. நாராயணசாமிஐயர்(உரை.ஆ.) நற்றிணை நானூறு, கழக வெளியீடு, சென்னை - 1952.

13. வேங்கடசாமிநாட்டார்(உரை.ஆ.) அகநானூறு, கழக வெளியீடு, சென்னை - 1961.

## துணைமைச் சான்றாதாரங்கள்

**இலக்கண நூல்கள்**

14. சுந்தரமூர்த்தி.கு.(ப.ஆ.) தொல்காப்பியம் எழுத்ததிகாரம், இளம்பூரணர் உரை, கழக வெளியீடு, சென்னை - 1953.

15. மேலது. தொல்காப்பியம் சொல்லதிகாரம், இளம்பூரணர் உரை, கழக வெளியீடு, சென்னை - 1953.

16. மேலது. தொல்காப்பியம் பொருளதிகாரம்,
இளம்பூரணர் உரை,
கழக வெளியீடு, சென்னை - 1953.

17. சுப்பிரமணியன்.ச.வே.(தெ.உரை.) தொல்காப்பியம்,
மணிவாசகர் பதிப்பகம்,
9/7, சிங்கர் தெரு, பாரிமுனை,
சென்னை - 1999.

18. நாற்கவிராசநம்பி நம்பியகப்பொருள்,
கழகப் பதிப்பு, சென்னை - 1963.

19. பேராசிரியர்(உரை.ஆ.) தொல்காப்பியம் பொருளதிகாரம்,
கழகப் பதிப்பு, சென்னை - 1959.

**திறனாய்வு நூல்கள்**

20. அறவாணன்.க.ப. அற்றைநாட் காதலும் வீரமும்,
மெய்யப்பன் தமிழாய்வகம்,
53, புதுத்தெரு, சிதம்பரம் - 2002.

21. ஆறுமுகம்.அ. சங்க இலக்கியத்தில் குடும்பம்,
உடைமை, அரசு,
பாவேந்தர் பதிப்பகம்,
திருமழபாடி - 1994.

22. ஆறுமுகம்.அ. நாட்டுப்புற இலக்கியமும் பண்பாடும்,
தேன்தமிழ்ப்பதிப்பகம், சேலம் - 1984.

23. இராகவையங்கார்.மு ஆராய்ச்சித் தொகுதி,
பாரி நிலையம், சென்னை - 1976.

24. இராகவையங்கார்.ரா தமிழ் வரலாறு,
அண்ணாமலைப் பல்கலைக்கழக
வெளியீடு, சிதம்பரம் - 1941.

25. இராசமாணிக்கனார்.மா. பத்துப்பாட்டாராய்ச்சி,
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை - 1970.

26. இராசாராம்.சு. சங்க இலக்கியத்தில் நடைமுறை
வாழ்க்கை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 2007.

27. இராமலிங்கம்.அரங்க. சங்க இலக்கியத்தில் வேந்தர்,
ஐந்திணைப் பதிப்பகம்,
சென்னை - 1987.

28. காமாட்சி சீனிவாசன் குறள் கூறும் சமயம்,
திருக்குறள் ஆய்வக வெளியீடு,
மதுரைக் காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை - 1979.

29. கிருட்டிணன்.அ. பழந்தமிழர் பண்பாட்டியல்,
மணிவாசகர் பதிப்பகம்,
55, லிங்கித் தெரு, சென்னை - 1992.

30. கோவிந்தன்.க. பண்டைத் தமிழர் போர்நெறி,
வள்ளுவர் பண்ணை, சென்னை -1965.

31. கௌமாரீஸ்வரி (ப.ஆ.) திருக்குறள் (பரிமேலழகர் உரை),
சாரதா பதிப்பகம்,
ஜி-4, சாந்தி அப்பார்ட்மெண்ட்ஸ்,
இராயப்பேட்டை, சென்னை - 2003.

32. சசிவல்லி.வி.சி. பண்டைத் தமிழர் தொழில்கள்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
தரமணி, சென்னை - 1989.

33. சாமி.பி.எல். சங்க இலக்கியத்தில் விலங்கின
விளக்கம்,
கழகப்பதிப்பு, சென்னை - 1970.

| | | |
|---|---|---|
| 34. | மேலது. | கம்பன் காவியத்தில் உயிரினங்கள் ஓர் அறிவியல் விளக்கம், கம்பன் கழகம், புதுச்சேரி - 1975. |
| 35. | சாமிநாதையர்.உ.வே(வெ.ஆ) | சிலப்பதிகார மூலமும் அரும்பதவுரையும் அடியாருக்கு நல்லார் உரையும், கபீர் அச்சுக்கூடம், சென்னை - 1960. |
| 36. | சாம்பசிவனார்.ச. | தமிழ் இலக்கியத்தில் நெய்தல்திணை, வளவன் வெளியீடு, 59, மேல ஆவணி மூலவீதி, மதுரை - 1979. |
| 37. | சிவகாமசுந்தரி.சு. | சங்க இலக்கிய விளையாட்டுக் களஞ்சியம், நியூசெஞ்சுரி புக் ஹவுஸ், 41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், சென்னை - 1995. |
| 38. | சுப்பிரமணியன்.கா | சங்ககாலச் சமுதாயம், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிட், இண்டஸ்ட்ரியல் எஸ்டேட், சென்னை - 1993. |
| 39. | ஜெகநாதன்.கி.வ. | வீரர் உலகம், மணிவாசகர் நூலகம், சிதம்பரம் - 1966. |
| 40. | தட்சிணாமூர்த்தி.அ. | தமிழர் பண்பாடும் நாகரிகமும், யாழ் வெளியீடு, மேற்கு அண்ணாநகர், சென்னை - 1994. |
| 41. | தமிழண்ணல் | புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, மீனாட்சி புத்தக நிலையம், 48/11&12, தானப்பமுதலி தெரு, மதுரை - 2002. |

42. திருகூடசுந்தரம்.பொ. சங்ககால வீரம்,
ஸ்ரீபாபுஜி பதிப்பகம், சென்னை - 1966.

43. திருமலைமுத்துசுவாமி.அ இலக்கியத்தில்விலங்குகளும்
பறவைகளும்,
அவ்வை நூலகம், 4/141, பிராட்வே,
சென்னை - 1959.

44. தேவநேயப்பாவாணர்.ஞா. பழந்தமிழர் அரசியல் கோட்பாடுகள்,
மாணிக்க வாசகப் பதிப்பகம்,
மதுரை - 1970.

45. தேவநேயன்.ஞா. பழந்தமிழாட்சி,
கழகப் பதிப்பு, சென்னை - 1972.

46. தேவநேயன்.ஞா. பண்டைத் தமிழர் நாகரிகமும்
பண்பாடும்,
நேசமணி பதிப்பகம், காட்பாடி,
சென்னை - 1967.

47. நச்சினார்க்கினியர்(உரை.ஆ) சீவகசிந்தாமணி,
கழகப் பதிப்பு, சென்னை - 1957.

48. நமச்சிவாயம்.சே. தமிழர் உணவு,
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,
அடையாறு, சென்னை - 1981.

49. நாயர்.எஸ்.எம். அழிவுக்கு இலக்காகி இருக்கும்
இந்திய விலங்குகளும் அவற்றைப்
பாதுகாக்கும் முறைகளும்,
நேஷனல் புக் டிரஸ்ட் இந்தியா,
ஏ.5, கிரீன் பார்க், புதுதில்லி - 1992.

50. பக்தவத்சலபாரதி.சீ. பண்பாட்டு மானிடவியல்,
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை - 1990.

51. பரமசிவானந்தம்.அ.மு. சமுதாயமும் பண்பாடும், தமிழ்க்கலைப்பதிப்பகம், சென்னை - 1972.

52. பூவராகம்பிள்ளை.ஆ. புலவர் பெருமை, நேஷனல் பப்ளிஷிங் கம்பெனி, 6, கொண்டி செட்டி தெரு, சென்னை - 1951.

53. பெரியகருப்பன்.இராம. பரிசில் வாழ்க்கை, பாரி நிலையம், சென்னை - 1977.

54. மாணிக்கம்.வ.சுப. தமிழ்க் காதல், மெய்யப்பன் தமிழாய்வகம், 53, புதுத்தெரு, சிதம்பரம் - 2002.

55. மாணிக்கம்.வ.சுப. சிந்தனைக் களங்கள், மணிவாசகர் நூலகம், சிதம்பரம் - 1975.

56. மீனாட்சிசுந்தரம்.தெ.பொ. தமிழும் பிற பண்பாடும், பாரி நிலையம், சென்னை - 1963

57. முத்துச்சாமி.அ. சங்க இலக்கியத்தில் ஆயர், இராணி பதிப்பகம், 21/16, பீட்டர்ஸ் சாலைக் குடியிருப்பு, இராயப்பேட்டை, சென்னை - 1993.

58. முத்துக்கண்ணப்பர்.தி. சங்க இலக்கியத்தில் நெய்தல்நிலம், பாரி நிலையம், 59, பிராட்வே, சென்னை - 1978.

59. வசந்தகுமார்.இரா. அறிவியல் கண்ணோட்டத்தில் சங்க இலக்கிய விலங்குகள், எம்.கலைவாணண் பதிப்பகம், 26, முதல் தளம், ஜோசப் காலனி, ஆதம்பாக்கம், சென்னை - 2002.

60. வரதராசன்.மு. பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, பாரி நிலையம், சென்னை - 1979.

61. வரதராசன்.வெ. தமிழரின் ஒப்பனைக் கலைத்திறன், தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர் - 1986.

62. விசுவநாதன்.அ. பாரதநூல்களின் திறனாய்வு, தென்னிந்திய அச்சகம், காரைக்குடி - 1979.

63. மேலது. தமிழ்ச்சிந்தனைகள், மங்கைப் பதிப்பகம், அருள் இல்லம், காரைக்குடி – 1989.

64. மேலது. சமுதாயச் சிந்தனைகள், மங்கைப் பதிப்பகம், அருள் இல்லம், காரைக்குடி – 1996.

65. வெள்ளைவாரணன்.க. தமிழ் இலக்கிய வரலாறு, பாரி நிலையம், சென்னை - 1963.

66. வேங்கடசாமி.மயிலை.சீனி பண்டைத் தமிழர் வாணிகம், நியூசெஞ்சுரி புக்ஹவுஸ், சென்னை - 1974.

67. வேங்கடசாமிநாட்டார்.ந.மு. (உரை.ஆ.) சிலப்பதிகாரம், கழக வெளியீடு, சென்னை - 1963.

68. வேங்கடராமச்செட்டியா.செ. பழந்தமிழ் நூல்களில் உயிர்வகைகள், பாரி நிலையம், சென்னை - 1960.

69. வையாபுரிப்பிள்ளை.எஸ். தமிழர் பண்பாடு, தமிழ்ப் புத்தகாலயம், சென்னை - 1974.

## நிகண்டுகள்


70. காங்கேயர் — உரிச்சொல் நிகண்டு, கழகப் பதிப்பு, சென்னை - 1971.

71. சொக்கலிங்கம்.வீ.(ப.ஆ) — ஆசிரிய நிகண்டு, சரஸ்வதிமகால் நூல்நிலையம், தஞ்சாவூர் - 1975.


## அகராதிகள்


72. ஆசிரியர் குழு — க்ரியாவின் தற்காலத் தமிழகராதி, 9/1-24, கிழக்குத் தெரு, திருவான்மியூர், சென்னை - 1997.

73. மேலது. — தமிழ் அகராதி, சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை - 1938.

74. கழகப்புலவர் குழுவினர் — கழகத் தமிழ் அகராதி, கழக வெளியீடு, 154,டி.டி.கே. சாலை, சென்னை - 2002.

75. வையாபுரிப்பிள்ளை.எஸ். (ப.ஆ.) — தமிழ்ப் பேரகராதி தொகுதி-ஐந்து, சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை - 1982.


## கலைக்களஞ்சியம்


76. ஆசிரியர் குழு — கலைக்களஞ்சியம் தொகுதி-ஒன்று, தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை - 1954.

**வாழ்வியற்களஞ்சியம்**

77. ஆசிரியர் குழு | வாழ்வியற்களஞ்சியம் தொகுதி-ஐந்து, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர் - 1987.

**இதழ்கள் & நாளிதழ்கள்**

78. ஆசிரியர் குழு | தமிழ்ப்பொழில் (இதழ் 5:36), கரந்தைத் தமிழ்ச்சங்கம், தஞ்சாவூர் – 2002.

79. மணாளன்.அ | தினகரன் இணைப்பிதழ்,(31.07.2005), ஆடுகள் வளர்ப்பு(கட்), மதுரை - 2005.

80. தினமலர் நாளிதழ் | 17.08.2005.

81. தினத்தந்தி நாளிதழ் | 19.03.2005.

**கட்டுரை, ஆய்வுக்கோவை**

82. மீனாட்சிசுந்தரம்.கா. | தமிழ்நாட்டு வரலாறு, சமுதாய ஊர்திகள் (கட்), தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை - 1983.

83. மோகன்.இரா. மற்றும் பிறர் (ப.ஆ.) | இந்தியப்பல்கலைக்கழக தமிழாசிரியர் மன்றம், 37-வது கருத்தரங்க ஆய்வுக்கோவை - தொகுதி 4, மதுரைக் காமராசர் பல்கலைக்கழகம், மதுரை - 2006.

**ஆய்வேடுகள்**

84. செந்தமிழ்ப்பாவை.சே. சங்கப் பாடல்களில் மரபு மாற்றங்கள், முனைவர்பட்ட ஆய்வேடு, அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி - 1998.

85. தேவதாசு.செ. பழந்தமிழ் இலக்கியத்தில் தமிழர் உணவுப் பொருட்கள், முதுகலை ஆய்வேடு, கேரளப் பல்கலைக்கழகம், திருவனந்தபுரம் - 1990.

**ENGLISH BOOKS**

86. SrinivasaRao.H The Book of Indian Animals, Journal of the Bombay Natural History Society, Bombay - 1957.

87. Subramaniam.N History of TamilNadu, Koodal Publishers, Madurai - 1972.

# பின்னிணைப்பு -1
# தொல்காப்பியர் கால விலங்குகள்

| | | | |
|---|---|---|---|
| 1. அணில் | - | மூவரி அணில் | (1505) |
| 2. ஆடு | - | | (1511) |
| 3. ஆநிரை | - | ஆநிரை | (1514) |
| | - | பெற்றம் | (1541) |
| | - | ஆ | (1519) |
| கவரி | - | | (1516) |
| 4. எருமை | - | | (1515,1519) |
| 5. எலி | - | | (1505) |
| 6. ஒட்டகம் | - | | (1517) |
| 7. கழுதை | - | | (1514) |
| 8. குதிரை | - | | (1511,1514,1158) |
| 9. குரங்கு | - | குரங்கு | (1512,1521) |
| | - | முசு | (1521) |
| | - | ஊகம் | (1521) |
| 10. கேழல் | - | | (1507) |
| 11. நரி | - | | (1508) |
| 12. நாய் | - | | (1507) |
| 13. புலி | - | | (1507) |
| 14. மான் | - | புல்வாய் | (1511) |
| | - | நவ்வி | (1511) |
| | - | உழை | (1511) |
| | - | மரை | (1515) |
| | - | கடமை | (1514,1520) |
| 15. முயல் | - | | (1507) |
| 16. மூங்கா | - | | (1505) |
| 17. யானை | - | | (1514,1158) |
| | - | குஞ்சரம் | (1518) |
| 18. வெருகு | - | | (1505) |

# பின்னிணைப்பு -2
# தொல்காப்பியர் கால இருபத்தைந்து விலங்குகளின் இளமைப் பெயர்கள்

| | | | |
|---|---|---|---|
| 1. அணில் - மூவரி அணில் | - | குட்டி | (1505), பறழ்(1506) |
| 2. ஆடு | - | மறி | (1511) |
| | - | குட்டி | (1512) |
| 3. ஆநிரை | - | கன்று | (1514) |
| | - | குழவி, | (1519) |
| | - | ஆ | (1519) |
| கவரி | - | கன்று | (1516) |
| 4. எருமை | - | கன்று | (1515), குழவி (1519) |
| 5. எலி | - | குட்டி | (1505), பறழ் (1506) |
| 6. ஒட்டகம் | - | கன்று | (1517) |
| 7. கழுதை | - | கன்று | (1514) |
| 8. குதிரை | - | மறி | (1511) |
| | - | குட்டி | (1512) |
| | - | கன்று | (1514) |
| 9. குரங்கு | - | குட்டி | (1512), மகவு (1513) |
| | - | பிள்ளை | (1513), பறழ் (1513) |
| | - | பார்ப்பு | (1513), குழவி (1521) |
| முசு | - | குழவி | (1521) |
| ஊகம் | - | குழவி | (1521) |
| 10. கேழல் | - | குருளை | (1507), குட்டி (1509) |
| | - | பறழ் | (1509), பிள்ளை(1510) |
| 11. நரி | - | குருளை | (1508), குட்டி (1509) |
| | - | பறழ் | (1509), பிள்ளை(1510) |
| 12. நாய் | - | குருளை | (1507), குட்டி (1509) |
| | - | பறழ் | (1509) |
| 13. புலி | - | குருளை | (1507), குட்டி (1509) |
| | - | பறழ் | (1509), பிள்ளை(1510) |
| 14. மான் - புல்வாய் | - | மறி | (1511), குட்டி (1512) |
| - நவ்வி | - | மறி | (1511), குட்டி (1512) |
| - உழை | - | மறி | (1511), குட்டி (1512) |
| - மரை | - | கன்று | (1515), குழவி (1519) |
| - கடமை | - | கன்று | (1514) |
| 15. முயல் | - | குருளை | (1507), குட்டி (1509) |
| | - | பறழ் | (1509), பிள்ளை(1510) |
| 16. மூங்கா | - | குட்டி | (1505), பறழ் (1506) |
| 17. யானை | - | கன்று | (1514), குழவி(1518) |
| | - | குஞ்சரம் | (1518) |
| 18. வெருகு | - | குட்டி | (1505), பறழ் (1506) |

## பின்னிணைப்பு -3
## தொல்காப்பியர் கால பதினான்கு விலங்குகளின் ஆண்பாற் பெயர்கள்

| | | |
|---|---|---|
| 1. ஆடு | - | ஆண்(1550), மோத்தை(1547), தகர் (1547) |
| | - | உதள்(1547), அப்பர்(1547), ஏற்றை (1549) |
| 2. ஆநிரை | - | ஆண் (1550), ஏறு(1531), ஏற்றை(1549), போத்து(1541), |
| கவரி | - | ஆண்(1550), ஒருத்தல்(1537), ஏறு(1538), ஏற்றை(1549) |
| 3. எருமை | - | ஆண்(1550), ஒருத்தல்(1537), ஏறு(1539), போத்து(1541), ஏற்றை(1541),கண்டி(1568) |
| 4. குதிரை | - | சேவல்(1568) |
| 5. குரங்கு | - | ஆண்(1550), கடுவன்(1568),ஏற்றை(1549) |
| முசு | - | ஆண்(1550), கலை(1546),ஏற்றை(1549) |
| ஊகம் | - | ஆண்(1550), ஏற்றை(1549) |
| 6. கேழல் | - | ஆண்(1550), களிறு(1536), ஒருத்தல்(1536), ஏற்றை(1549), ஏறு(1538), ஏனம்(1568) |
| 7. புலி | - | ஆண்(1550), ஒருத்தல்(1535), ஏறு(1538), ஏற்றை(1549) |
| 8. மான்-புல்வாய் | - | ஆண்(1550), ஒருத்தல்(1535), ஏறு(1538), ஏற்றை(1549), போத்து(1541), இரலை(1544), கலை(1544) |
| உழை | - | ஏறு(1538), கலை(1545),ஏற்றை(1549) |
| 9. யானை | - | ஆண்(1550), களிறு(1533), ஒருத்தல்(1536), ஏற்றை(1549) |
| 10. வெருகு | - | பூசை(1568) |

# பின்னிணைப்பு -4
# தொல்காப்பியர் கால பதினெட்டு விலங்குகளின் பெண்பாற் பெயர்கள்

1. ஆடு - மூடு(1564), கடமை (1564)

2. ஆநிரை - ஆ(1560), நாகு(1562)

   கவரி - பிணை(1557)

3. எருமை - ஆ(1560), நாகு(1562)

4. ஒட்டகம் - பெட்டை(1552)

5. கழுதை - பெட்டை(1552)

6. குதிரை - பெட்டை(1552)

7. குரங்கு - மந்தி(1567)

   முசு - மந்தி(1567)

   ஊகம் - மந்தி(1567)

8. கேழல் - பிணவு(1558), பிணவல் (1559), பாட்டி(1565)

9. நரி - பாட்டி (1566)

10. நாய் - பிணவு (1558), பிணவல் (1559) ,பாட்டி(1565)

11. மான்

   புல்வாய் - பிணை(1557),பிணவு(1558),பிணவல் (1559)

   நவ்வி - பிணை(1557)

   உழை - பிணை(1557)

   மரை - பெட்டை (1552), ஆ (1560), நாகு(1562)

12. யானை - பிடி (1551)

# பின்னிணைப்பு -5
# தொல்காப்பியத்தில் குறிப்பிடப்படாது சங்கஇலக்கியத்தில் சுட்டப்பட்ட விலங்குகள்

**நிலவாழ்விலங்குகள்**

1. அணில் - வெளில்
2. அத்திரி
3. அரி
4. ஆடு - செம்மறி, வெள்ளாடு, வருடை
5. ஆநிரை - ஆமா
6. ஆளி
7. எண்கு
8. எலி - இல்லெலி, வெள்ளெலி, கருப்பைஎலி
9. குரங்கு - கருங்கலை
10. நாய் - செந்நாய், கோணாய்
11. புலி - வரிப்புலி, பொறிப்புலி, புள்ளிப்புலி
12. முளவுமா

**நீர்வாழ்விலங்குகள்**

13. திமிங்கிலம் - பெருமீன், பனைமீன்.

**நீர்நிலவாழ்விலங்கு**

14. நீர்நாய்

**பறக்கும் விலங்குகள்**

15. அசுணம்
16. வாவல்

# பின்னிணைப்பு — 6

## சங்ககால விலங்குகள்

### அணில் (4) - (7)

1. **குறுந்தொகையில் அணில் (2)**
   1. 41:4 அணில்
   2. 49:1 அணில்
2. **அகநானூற்றில் அணில் (2)**
   3. 12:7 வெளில்
   4. 109:6 வெளில்
3. **புறநானூற்றில் அணில் (2)**
   5. 246:4 அணில்
   6. 307:4 வரி அணில்
4. **பெரும்பாணாற்றுப்படையில் அணில் (1)**
   7. 85 அணில்

### அத்திரி (3) - (4)

1. **நற்றிணையில் அத்திரி (1)**
   1. 278:7 கணைக்கால் அத்திரி
2. **பரிபாடலில் அத்திரி (1)**
   2. 10:16 அத்திரி
3. **அகநானூற்றில் அத்திரி (2)**
   3. 120:10 அத்திரி
   4. 350:6 கணைக்கால் அத்திரி

### அரி (8) — (15)

1. **நற்றிணையில் அரி (2)**
   1. 112:4 அரிமா
   2. 257:9 கடுமா
2. **ஐங்குறுநூற்றில் அரி (1)**
   3. 500:5 வயமான்
3. **பதிற்றுப்பத்தில் அரி (3)**
   4. 12:5 அரிமான்
   5. 75:2 வயமான்
   6. 88:15 அரிமான்
4. **கலித்தொகையில் அரி (4)**
   7. 13:17 விலங்குமான்
   8. 15:1 அரிமா
   9. 86:32 கோண்மா
   10. 103:18 அரிமா

**5. அகநானூற்றில் அரி (2)**
11. 73:13 வயமான்
12. 102:1 உளைமான்

**6. புறநானூற்றில் அரி (1)**
13. 71:1 மடங்களிறு

**7. பெரும்பாணாற்றுப்படையில் அரி (1)**
14. 448 வயமான்

**8. பட்டினப்பாலையில் அரி (1)**
15. 298 அரிமா

## ஆடு (15) – (63)

**1. நற்றிணையில் ஆடு (8)**
1. 47:9 மறி
2. 83:5 மையூன்
3. 169:6 துருவு
4. 192:4 துருவு
5. 251:8 பலிபெறு கடவுள்
6. 266:3 ஆடுடை இடைமகன்
7. 321:1 புன்மயிர்ப்புருவை
8. 322:12 பலி

**2. குறுந்தொகையில் ஆடு (5)**
9. 163:2 சிறுதலை வெள்ளை
10. 221:2 மையினம்
11. 221:4 ஆடுடை இடைமகன்
12. 263:1 மறிக்குரலறுத்து
13. 362:4 சிறுமறி

**3. ஐங்குறுநூற்றில் ஆடு (2)**
14. 238:1 வயத்தகர்
15. 238:2 குரூமயிர்ப்புருவை

**4. பதிற்றுப்பத்தில் ஆடு (2)**
16. 12:17 மையூன்
17. 78:13 ஆடு

**5. பரிபாடலில் ஆடு (1)**
18. 5:62 வெள்யாட்டெழின்மறி

**6. கலித்தொகையில் ஆடு (7)**
19. 103:47 புல்லினம்
20. 107:2 புல்லினத்தாயர்
21. 110:1 புல்லினத்தாயர்
22. 111:5 புல்லினம்
23. 113:7 புல்லினம்
24. 113:9 புல்லினம்
25. 115:4 புல்லினம்

7. அகநானூற்றில் ஆடு (10)

26. 35:9 துரூஉப் பலி
27. 94:6 மறித்துரூஉ
28. 101:4 தகர் மருப்பு
29. 104:9 வெள்ளாட்டு வெண்மறி
30. 156:14 வெள்ளைநால்செவிக்கிடாய்
31. 242:18 மறியுயிர்
32. 274:4 துருவு
33. 292:4 மறிகொலைப்படுத்தல்
34. 331:3 ஆடு
35. 394:13 யாடு

8. புறநானூற்றில் ஆடு (12)

36. 33:21 மைவிடை
37. 54:12 சிறுதலைஆயமொடு
38. 96:7 மையூன்
39. 113:1 மைவிடை
40. 197:10 மறி
41. 261:8 மையூன்ஓசை
42. 286:1 வெள்ளைவெள்யாட்டு
43. 324:9 வெள்ளைமறுவாய்
44. 364:4 மைவிடை
45. 366:18 விடை
46. 366:23 விடை
47. 383:20 வெண்மறி

9. திருமுருகாற்றுப்படையில் ஆடு (2)

48. 218 மறி
49. 232 கொழுவிடை

10. பொருநராற்றுப்படையில் ஆடு (1)

50. 103 துருவை

11. சிறுபாணாற்றுப்படையில் ஆடு (1)

51. 197 கருமறி

12. பெரும்பாணாற்றுப்படையில் ஆடு (4)

52. 147 மறி
53. 151 அதள்
54. 153 துருவை
55. 326 தகர்

13. மதுரைக்காஞ்சியில் ஆடு (1)

56. 754 மை

14. பட்டினப்பாலையில் ஆடு (2)

57. 71 தகர்
58. 141 தகர்

**15. மலைபடுகடாமில் ஆடு (5)**

59. 217 துருவு
60. 414 தகர்வெள்ளை
61. 416 பால்யாட்டின்நிரை
62. 419 மெய்யுறி
63. 441 வெண்மறி

## வருடை (7) – (11)

**1. நற்றிணையில் வருடை (2)**

1. 119:7 வருடை
2. 359:8 வருடை

**2. குறுந்தொகையில் வருடை (2)**

3. 187:1 வருடைமான்மறி
4. 187:2 தீம்பால்

**3. ஐங்குறுநூற்றில் வருடை (1)**

5. 287:1 குறுங்கால்வருடை

**4. கலித்தொகையில் வருடை (3)**

6. 43:14 வருடைமான்
7. 50:4 வருடை
8. 50:21 வருடைநன்மான்

**5. அகநானூற்றில் வருடை (1)**

9. 378:6 வரைவாழ் வருடை

**6. பட்டினப்பாலையில் வருடை (1)**

10. 139 வருடை

**7. மலைபடுகடாமில் வருடை (1)**

11. 503 வருடை

## ஆளி (5) – (7)

**1. நற்றிணையில் ஆளி (1)**

1. 205:2 ஆளிநன்மான்

**2. அகநானூற்றில் ஆளி (3)**

2. 78:1 ஆளி
3. 252:2 ஆளி
4. 381:1 ஆளிநன்மான் ஒருத்தல்

**3. பொருநராற்றுப்படையில் ஆளி (1)**

5. 139 வாளிநன்மா னணங்குடைக் குருளை

**4. பெரும்பாணாற்றுப்படையில் ஆளி (1)**

6. 258 ஆளி

**5. குறிஞ்சிப்பாட்டில் ஆளி (1)**

7. 252 ஆளி

## ஆநிரை (17) - (320)

### 1. நற்றிணையில் ஆநிரை (22)

| | | |
|---|---|---|
| 1. | 37:2 | ஓரான் |
| 2. | 69:7 | நல்லான் |
| 3. | 92:6 | பயநிரை |
| 4. | 100:8 | பல்லான்நெடுநிரை |
| 5. | 125:9 | எருது |
| 6. | 171:5 | ஊரான்கன்று |
| 7. | 179:1 | ஈற்றுஆ |
| 8. | 213:2 | கன்று |
| 9. | 213:4 | குழவிசேதா |
| 10. | 240:8 | ஆன் |
| 11. | 264:8 | ஆ |
| 12. | 290:2 | கன்றுடை புனிற்றா |
| 13. | 290:3 | பகடு |
| 14. | 291:8 | இனநிரை |
| 15. | 291:9 | பல்லான் |
| 16. | 310:9 | கன்று |
| 17. | 315:4 | நல்லெருது |
| 18. | 343:3 | ஆ |
| 19. | 354:9 | நிரை |
| 20. | 359:1 | சிறுகோட்டுச்சேதா |
| 21. | 359:3 | கன்று |
| 22. | 363:1 | பல்லா |

### 2. குறுந்தொகையில் ஆநிரை (28)

| | | |
|---|---|---|
| 23. | 27:1 | கன்று |
| 24. | 27:2 | நல்லான்தீம்பால் |
| 25. | 64:1 | பல்லா |
| 26. | 64:3 | கன்று |
| 27. | 80:6 | முனையான் பெருநிரை |
| 28. | 86:5 | ஆன் |
| 29. | 104:3 | ஆ |
| 30. | 108:2 | கறவைக்கன்று |
| 31. | 117:4 | எருது |
| 32. | 131:5 | ஓரேர்உழவன் |
| 33. | 132:4 | நல்லாகுழவி |
| 34. | 190:6 | நல்லேறு |
| 35. | 190:7 | பல்லான் |
| 36. | 204:3 | முற்றா |
| 37. | 210:2 | பல்லா |
| 38. | 224:4 | குராலான் |
| 39. | 241:3 | கன்று |

40. 260:7 கன்றிலோரா
41. 275:3 ஏறுடையினத்து
42. 275:4 நல்லான்
43. 295:4 ஓரான்
44. 317:1 நல்லேறு
45. 344:4 ஏற்றல்
46. 344:5 பார்வார்பு குழவி, நிரை
47. 358:6 பல்லான்கோவலர்
48. 363:1 நல்லேறு
49. 388:4 நிரை
50. 391:1 ஒருத்தல்

**3. ஐங்குறுநூற்றில் ஆநிரை (5)**

51. 87:1 பல்லான்,
52. 271:3 பல்பசு
53. 445:3 நல்லேறு, நாகு
54. 476:3 பல்லான் கோவலர்
55. 493:1 ஏறு

**4. பதிற்றுப்பத்தில் ஆநிரை (15)**

56. 13:2 ஏறு
57. 13:6 மூதா
58. 21:20 பல்லான்
59. 21:21 பல்லா
60. 22:15 ஆகெழு
61. 27:13 நல்லெருது
62. 58:16 பல்பகடு
63. 62:13 பல்லா
64. 67:15 மருப்பினிருங் கண்மூரி
65. 71:13 ஏறு
66. 71:14 கன்று
67. 71:17 ஆன்பயம்
68. 77:11 ஆ
69. 78:14 ஆ
70. 89:5 பல்லானிரை

**5. பரிபாடலில் ஆநிரை (2)**

71. 10:16 அகவரும் பாண்டியும்
72. 20:17 பாண்டி

**6. கலித்தொகையில் ஆநிரை (88)**

73. 20:22 ஏறு
74. 20:23 பிணை
75. 65:12 முதுபகடு
76. 81:36 கன்று
77. 81:37 ஆ
78. 101:9 ஏறு

| | | |
|---|---|---|
| 79. | 101:16 | நோக்கஞ்சான் |
| 80. | 101:21 | காரி |
| 81. | 101:27 | வெள்ளை |
| 82. | 101:36 | களிறு |
| 83. | 102:9 | நல்லேறு |
| 84. | 102:28 | ஏற்று |
| 85. | 102:29 | ஏறுடை |
| 86. | 103:5 | பல்லான், விடை |
| 87. | 103:12 | வெண்காற்காரி |
| 88. | 103:16 | கோடணிசேய் |
| 89. | 103:17 | புகலேறு |
| 90. | 103:23 | ஏறு |
| 91. | 103:24 | ஏற்றம் |
| 92. | 103:28 | ஏற்றின் |
| 93. | 103:34 | புகலேறு, பிணரெருத்து |
| 94. | 103:38 | ஏறு |
| 95. | 103:40 | விடை |
| 96. | 103:48 | வெள்ளேறு |
| 97. | 103:51 | சே |
| 98. | 103:57 | ஏறு |
| 99. | 103:63 | கொல்லேறு |
| 100. | 103:65 | கொலையேறு |
| 101. | 103:72 | கொலையேறு |
| 102. | 104:8 | வெள்ளை |
| 103. | 104:10 | காரி |
| 104. | 104:12 | குரால் |
| 105. | 104:14 | சே |
| 106. | 104:19 | வெள்ளேறு |
| 107. | 104:21 | காரி |
| 108. | 104:31 | ஏறு |
| 109. | 104:35 | வெள்ளை எருத்து |
| 110. | 104:42 | எழிலேறு |
| 111. | 104:48 | புகலேறு |
| 112. | 104:51 | ஏறு |
| 113. | 104:60 | ஏறு |
| 114. | 104:63 | கொலை ஏறு |
| 115. | 104:71 | கொலையேறு |
| 116. | 104:73 | கொலையேறு |
| 117. | 104:74 | காரி |
| 118. | 105:10 | காரி |
| 119. | 105:12 | செம்மறுவெள்ளை |
| 120. | 105:4 | குரால் |
| 121. | 105:16 | கடுஞ்சினப்புகர் |

122. 105:18 வெண்காற்சே
123. 105:31 எருது
124. 105:32 ஏறு
125. 105:39 செங்காரி
126. 105:44 வெள்ளேறு
127. 105:47 ஏறு
128. 105:51 நல்லேறு
129. 105:56 கொல்லேறு
130. 105:68 செங்காரிகோட்டிடை
131. 106:9 நல்லேற்றினம்
132. 106:13 ஏறு
133. 106:15 ஏற்றை
134. 106:22 ஏறு
135. 106:23 ஏறு
136. 106:26 ஏறு
137. 106:31 ஏறு
138. 106:36 கொலையேறு
139. 106:38 கொல்லேறு
140. 106:40 போரேற்
141. 104:43 கொல்லேறு
142. 107:3 கொல்லேறு, கோவினத்தார்
143. 107:4 பல்லேறு
144. 107:8 புகரேறு
145. 108:33 கன்று
146. 108:48 ஏறு
147. 109:4 ஏறு
148. 110:13 கன்று
149. 110:14 நாகு
150. 110:23 கன்று
151. 112:12 கன்று
152. 113:10 நல்லினம்
153. 113:9 நல்லேறு
154. 113:20 பல்லான் இனநிரை
155. 116:1 கன்று
156. 116:6 நாகு
157. 116:8 கன்று
158. 116:14 ஏற்று
159. 119:10 கன்று
160. 150:13 ஏறு

**7. அகநானூற்றில் ஆநிரை (75)**

161. 9:20 கன்று
162. 14:9 நல்லான்
163. 17:13 உமணர் பகடு

| | | |
|---|---|---|
| 164. | 30:6 | பகடு |
| 165. | 35:5 | முனையாத் தந்து |
| 166. | 37:3 | கடாவிட்டடித்தல் |
| 167. | 37:11 | பகடு |
| 168. | 41:5 | பகடு |
| 169. | 49:5 | கடுங்கட்கறவை |
| 170. | 54:9 | பயனிரை |
| 171. | 56:11 | புனிற்றா |
| 172. | 63:13 | பலவுடன் கறவை |
| 173. | 63:20 | கடுங்கண்சேக்கொள் |
| 174. | 64:11 | ஏறு |
| 175. | 64:14 | கன்று |
| 176. | 64:12 | மடநாகு |
| 177. | 64:15 | ஆபூண் |
| 178. | 67:6 | நிரை |
| 179. | 79:6 | படுமணியாயம் |
| 180. | 79:7 | சேதா |
| 181. | 87:2 | கன்றுவாய் |
| 182. | 97:4 | நிரை |
| 183. | 101:8 | நிரைபுறத்தடிபுதை |
| 184. | 101:10 | கன்றுடை |
| 185. | 101:11 | இனந்தலை |
| 186. | 103:7 | ஆ |
| 187. | 105:15 | ஏற்றினந்தரூஉம் |
| 188. | 107:15 | பகடு |
| 189. | 113:17 | விடைவேற்றா |
| 190. | 114:15 | இனம் |
| 191. | 129:12 | கொழுப்பா |
| 192. | 131:7 | நாளா |
| 193. | 131:8 | சேட்படர்கன்று |
| 194. | 140:14 | பகடு |
| 195. | 156:4 | மூதா |
| 196. | 159:3 | பகடு |
| 197. | 159:7 | பல்ஆன்நெடுநிரை |
| 198. | 168:5 | நல்ஆன் |
| 199. | 173:10 | பகடு |
| 200. | 191:7 | பகடு |
| 201. | 213:6 | ஏறுடைப் பெறுநிரை |
| 202. | 214:10 | விடை |
| 203. | 214:12 | ஆ |
| 204. | 225:7 | இனநிரை |
| 205. | 239:5 | பல்ஆ |
| 206. | 249:13 | நாகா |

207. 249:7 ஏறு
208. 253:8 ஏரா
209. 253:13 இனந்தலைநல்லேறு
210. 253:14 எருத்தந்
211. 253:17 கன்றுடைப்பெருநிரை
212. 262:2 பகடு
213. 262:4 ஆ
214. 264:5 பல்லான்நிரை
215. 265:12 இன்சிலை எழிலேறு
216. 269:3 ஏறுநடை இனநிரை
217. 291:3 ஏறுடை, ஆயத்து இனம்
218. 293:12 குழவி
219. 295:8 பகடு
220. 309:2 பயநிரை
221. 309:5 கொழுப்பா
222. 311:10 மழவிடை
223. 321:7 இனநிரை
224. 329:7 பகடு
225. 338:18 புனிற்றான்
226. 341:7 நல்லேறு
227. 354:4 கறவைப்பல்லினம்
228. 367:3 மூதேறு
229. 369:24 ஓரா
230. 377:11 பயனிரைக்கவர்தல்
231. 381:7 கற்றுரி
232. 393:5 கால்தொகு பொங்கழி
233. 393:18 நிரைபல
234. 399:8 பெருநிரை
235. 399:11 பல்லான்

**8. புறநானூற்றில் ஆநிரை (50)**

236. 9:1 ஆ
237. 34:1 ஆன்
238. 102:1 எருது
239. 125:7 பகடு
240. 138:1 ஆனினம்
241. 152:27 ஆ
242. 204:7 ஆ
243. 224:14 பயனிரை
244. 230:1 கன்றமயராயம்
245. 257:8 புல்லாரினநிரை
246. 258:7 பெருநிரை
247. 259:1 ஏறுடை பெருநிரை
248. 260:13 நெடுநிரை

| | | |
|---|---|---|
| 249. | 260:18 | கன்றுடைப்பல்லான் |
| 250. | 260:19 | நிரையொடு |
| 251. | 261:11 | பல்லா |
| 252. | 261:13 | நாகு |
| 253. | 261:15 | நிரை |
| 254. | 262:5 | நிரை, |
| 255. | 263:5 | பல்லாத்திரள் |
| 256. | 264:4 | கன்றொடு |
| 257. | 264:5 | கறவை |
| 258. | 265:4 | பல்லான்கோவலர் |
| 259. | 269:10 | பல்லானினநிரை |
| 260. | 275:8 | கன்றமர் கறவை |
| 261. | 279:6 | பெருநிரை |
| 262. | 288:8 | நல்லேறு |
| 263. | 289:2 | பல்லெருத்துத்துள்ளும் நல்லெருது |
| 264. | 302:8 | காளை |
| 265. | 307:9 | பகடு |
| 266. | 309:4 | கொல்லேறு |
| 267. | 322:1 | காளை |
| 268. | 323:2 | மூதாகன்று |
| 269. | 325:5 | நிரையா |
| 270. | 327:1 | எருது |
| 271. | 339:1 | பல்லா |
| 272. | 355:2 | கன்று |
| 273. | 366:13 | பகடு |
| 274. | 383:4 | பகடு |
| 275. | 385:2 | பகடு |
| 276. | 386:6 | ஆன்பயன் |
| 277. | 386:12 | பல்லாயத்தான் |
| 278. | 387:11 | பலபகடு |
| 279. | 387:24 | நிரை |
| 280. | 388:11 | பகடேற்றம் |
| 281. | 390:1 | அறவைநெஞ்சத்தாயர் |
| 282. | 390:22 | பகடு |
| 283. | 391:4 | பகடு |
| 284. | 395:2 | பகடு |
| 285. | 399:29 | பகடு |
| 286. | 399:31 | பன்னிரை |

**9. பொருநராற்றுப்படையில் ஆநிரை (1)**

| | | |
|---|---|---|
| 287. | 151 | நீற்றா |

**10. சிறுபாணாற்றுப்படையில் ஆநிரை (2)**

| | | |
|---|---|---|
| 288. | 55 | பகடு |
| 289. | 190 | பகடு |

11. பெரும்பாணாற்றுப்படையில் ஆநிரை (11)

290. 62 நிரை
291. 65 பல்லெருது
292. 141 ஆ
293. 145 எருத்து
294. 176 கன்றமர்நிரை
295. 185 தொழுவுடை
296. 198 பகடு
297. 210 காரேறு
298. 238 பகடு
299. 243 பகட்டாவீன்ற குழவி
300. 325 பகடு, கறவை

12. முல்லைப்பாட்டில் ஆநிரை (1)

301. 13 கன்று

13. மதுரைக்காஞ்சியில் ஆநிரை (5)

302. 94 பகடு
303. 157 ஆ
304. 173 நல்லேர்
305. 259 பகடு
306. 732 கொல்லேறு

14. நெடுநெல்வாடையில் ஆநிரை (3)

307. 4 ஏறுடையினநிரை
308. 10 கறவை
309. 11 கன்று

15. குறிஞ்சிப்பாட்டில் ஆநிரை (4)

310. 135 புகல்வின்
311. 136 ஆகாண்விடை
312. 218 கன்று
313. 235 துணைபுணரேறு

16. பட்டினப்பாலையில் ஆநிரை (2)

314. 52 பகடு
315. 201 நல்லான், பகடு

17. மலைபடுகடாமில் ஆநிரை (5)

316. 330 நல்லேறு
317. 339 கன்று, கடா
318. 409 ஆன்
319. 469 எருது
320. 573 பெருநிரை

## ஆமான் (10) - (19)

1. **நற்றிணையில் ஆமான் (3)**
   1. 57:1 தடங்கோட்டமான், மாநிரை
   2. 57:2 கன்று
   3. 165:1 ஆமான்
2. **குறுந்தொகையில் ஆமான் (2)**
   4. 322:1 ஆமா, குளவி
   5. 363:3 வரையா
3. **பதிற்றுப்பத்தில் ஆமான் (1)**
   6. 30:10 செங்கோட்டாமா
4. **அகநானூற்றில் ஆமான் (2)**
   7. 238:6 ஆமான்
   8. 238:7 ஆமான் ஏறு
5. **புறநானூற்றில் ஆமான் (5)**
   9. 117:4 மகவை
   10. 117:5 ஆமா
   11. 319:10 ஆமா
   12. 319:11 கன்றுங்
   13. 323:1 ஆமான் குழவி
6. **திருமுருகாற்றுப்படையில் ஆமான் (2)**
   14. 314 கருங்கோட்டாமான்
   15. 315 நல்லேறு
7. **சிறுபாணாற்றுப்படையில் ஆமான் (1)**
   16. 177 ஆமான்
8. **மதுரைக்காஞ்சியில் ஆமான் (1)**
   17. 293 ஆமா
9. **குறிஞ்சிப்பாட்டில் ஆமான் (1)**
   18. 253 ஆமான்
10. **மலைபடுகடாமில் ஆமான் (1)**
   19. 500 ஆமான் குழவி

## கவரிமா (3) - (6)

1. **பதிற்றுப்பத்தில் கவரிமா (3)**
   1. 11:20 கவரி
   2. 43:1 கவரி
   3. 90:36 கவரி
2. **புறநானூற்றில் கவரிமா (2)**
   4. 132:4 கவரி,
   5. 132:6 பிணை
3. **நெடுநல்வாடையில் கவரிமா (1)**
   6. 91 நெடுமயிர்எகினம்

## எண்கு (5) - (27)

**1. நற்றிணையில் எண்கு (4)**

| | | |
|---|---|---|
| 1. | 125:1 | எண்கு, ஏற்றை |
| 2. | 192:5 | எண்கு |
| 3. | 325:1 | எண்கின், ஏற்றை |
| 4. | 336:10 | எண்கினம் |

**2. அகநானூற்றில் எண்கு (20)**

| | | |
|---|---|---|
| 5. | 8:2 | பெருங்கை ஏற்றை |
| 6. | 15:18 | வன்கை எண்கு |
| 7. | 72:4 | பெருங்கை ஏற்றை |
| 8. | 81:1 | உளியம் |
| 9. | 88:14 | உளியம் |
| 10. | 95:9 | ஈனல் எண்கு |
| 11. | 112:1 | எண்கு |
| 12. | 149:4 | பெருங்கை எண்கு |
| 13. | 171:9 | ஏற்றை |
| 14. | 171:15 | பெருங்கை எண்கு |
| 15. | 201:16 | பெருங்கை எண்கு ஏற்றை |
| 16. | 201:17 | குருளை |
| 17. | 201:18 | பிணவொடு |
| 18. | 247:4 | எண்கு |
| 19. | 257:21 | பிள்ளை எண்கு |
| 20. | 267:8 | எண்கின் ஈரினம் |
| 21. | 275:12 | குருளை எண்கு |
| 22. | 277:8 | சிறுகட்பன்றி |
| 23. | 307:10 | பெருங்கை எண்கினம் |
| 24. | 331:3 | ஈனல் எண்கு |

**3. திருமுருகாற்றுப்படையில் எண்கு (1)**

| | | |
|---|---|---|
| 25. | 313 | உளியம் |

**4. குறிஞ்சிப்பாட்டில் எண்கு (1)**

| | | |
|---|---|---|
| 26. | 252 | உளியம் |

**5. மலைபடுகடாமில் எண்கு (1)**

| | | |
|---|---|---|
| 27. | 501 | எண்கு, குருளை |

## எருமை (11) - (47)

**1. நற்றிணையில் எருமை (10)**

| | | |
|---|---|---|
| 1. | 60:2 | எருமை |
| 2. | 80:1 | எருமை, கார்ஆன் |
| 3. | 80:2 | கன்று |
| 4. | 80:3 | மாக்கள் |
| 5. | 120:1 | எருமை, குழவி |

6. 260:1 கருந்தாள்எருமை
7. 271:1 இரும்புனிற்றுஎருமை, குழவி
8. 330:1 தடமருப்பு எருமை, இரும்போத்து
9. 340:6 பகடு
10. 391:4 காரான்

**2. குறுந்தொகையில் எருமை (4)**

11. 181:3 காரான்,
12. 181:4 குழவி
13. 261:3 செங்கட்காரான்
14. 279:1 திரிமருப்பெருமை

**3. ஐங்குறுநூற்றில் எருமை (12)**

15. 3:2 பகடு
16. 91:1 எருமை நீலவிரும்போத்து
17. 92:1 கருங்கோட்டெருமை
18. 93:1 எருமை நல்லேறு
19. 94:1 தடங்கோட்டெருமை
20. 94:2 துணை
21. 95:1 கருங்கோட்டெருமை
22. 96:1 அணிநடை யெருமை
23. 97:2 கருந்தாளெருமைக்கன்று
24. 98:1 தடங்கோட்டெருமை
25. 99:2 எருமை
26. 100:2 எருமை

**4. பதிற்றுப்பத்தில் எருமை (2)**

27. 13:4 எருமையினிரை
28. 71:4 பகடு

**5. கலித்தொகையில் எருமை (3)**

29. 105:58 கோட்டினம்
30. 114:11 எருமைப்பெடை
31. 147:38 எருமை

**6. அகநானூற்றில் எருமை (9)**

32. 46:1 செங்கட்காரான்
33. 56:3 கருங்கோட்டெருமை
34. 91:15 தடமருப்பெருமை
35. 100:16 எருமை
36. 146:1 அண்ணல் ஏஎறு
37. 146:3 மடக்கண்எருமை மாண்நாகு
38. 165:5 எருமை நல்ஆன்
39. 206:3 திரிமருப்பெருமை
40. 316:3 எருமை முதுபோத்து

**7. புறநானூற்றில் எருமை (2)**

41. 5:1 எருமை
42. 297:2 நெடுமா

**8. சிறுபாணாற்றுப்படையில் எருமை (1)**
43. 42 கயவாயெருமை
**9. பெரும்பாணாற்றுப்படையில் எருமை (1)**
44. 165 எருமைநல்லான் கருநாகு
**10. பட்டினப்பாலையில் எருமை (1)**
45. 14 எருமை, குழவி
**12. மலைபடுகடாமில் எருமை (2)**
46. 472 செங்கண்ணெருமை ஒருத்தல்
47. 523 எருமை

### எலி (5) - (12)

**1. நற்றிணையில் எலி (1)**
1. 83:6 எலி
**2. குறுந்தொகையில் எலி (1)**
2. 107:3 இல்லெலி
**3. அகநானூற்றில் எலி (2)**
3. 122:13 இல்லெலி
4. 133:2 வெள்ளெலி
**4. புறநானூற்றில் எலி (7)**
5. 190:3 எலி
6. 211:19 இல்லெலி
7. 237:17 எலி
8. 321:5 கோட்டெலி
9. 322:3 கருப்பை
10. 324:7 கருப்பை
11. 384:5 கருப்பை
**5. பெரும்பாணாற்றுப்படையில் எலி (1)**
12. 85 கருப்பை

### ஒட்டகம் (2) - (2)

**1. அகநானூற்றில் ஒட்டகம் (1)**
1. 245:18 கடுங்கால் ஒட்டகம்
**2. சிறுபாணாற்றுப்படையில் ஒட்டகம் (1)**
2. 154 ஒட்டகம்

### கழுதை (4) - (9)

**1. பதிற்றுப்பத்தில் கழுதை (1)**
1. 25:4 கழுதை
**2. அகநானூற்றில் கழுதை (5)**
2. 89:12 கழுதை நிரை

3. 207:5 கழுதை
4. 337:6 உமணர்
5. 337:7 கணநிரை
6. 343:12 நெடுஞ்செவிக்கழுதை

**3. புறநானூற்றில் கழுதை (2)**

7. 15:2 கழுதைப் புல்லினம்
8. 392:9 கழுதைப் புல்லினம்

**4. பெரும்பாணாற்றுப்படையில் கழுதை (1)**

9. 80 கழுதை

## குதிரை (18) - (394)

**1. நற்றிணையில் குதிரை (62)**

1. 8:9 திண்டேர்
2. 10:5 கொடித்தேர்
3. 11:7 ஆழி
4. 14:11 கடுமான்
5. 19:6 நெடுந்தேர்
6. 21:5 தேர்
7. 42:5 மணியொலி
8. 45:5 கடுந்தேர்ச்செல்வன்
9. 58:11 ஓடுதேர், மாவே
10. 63:9 இவுளி
11. 78:9 பொலம்படைக்கலிமா
12. 78:11 தேர்மணிக்குரல்
13. 81:3 மான்வினைப்புரவி
14. 81:5 தேர்
15. 91:11 கடுமா, நெடுந்தேர்
16. 121:8 கலிமா
17. 121:9 வண்பரி
18. 130:1 மான்தேர்
19. 131:7 நற்றேர்
20. 135:9 புரவித்தேர்
21. 139:9 தேர்
22. 140:6 நெடுந்தேர்
23. 145:11 தேர்
24. 149:9 கடுமாநெடுந்தேர்
25. 149:10 தேர்
26. 150:7 கலிமா
27. 161:7 கவிகுளம்பு
28. 167:3 நெடுந்தேர்
29. 178:6 தேர்

